

# திருவாசகம்

## புலியூர்க் கேசிகன்

### தெளிவுரை



அப்பர் புத்தக நிலையம்

மக்கள் பதிப்பு:

மணிவாசகப் பெருமான்
அருளிச் செய்த

# திருவாசகம்

*தெளிவுரை :*

புலியூர்க் கேசிகன்

அப்பர் புத்தக நிலையம்

1621. தெற்கு ராஜ வீதி • தியாகராய நகர்
தஞ்சாவூர் சென்னை-17.

வெளியீடு எண்: 1.
முதற் பதிப்பு: சனவரி, 1963
பதிப்புரிமை: உரையாசிரியருக்கு
விலை: சென்னையில் ரூ. 3. 00
" வெளியூரில் ரூ. 3. 15

## இறைஞ்சுவோம்!

தேனூறும் வாசகங்கள்
அறுநூறும் திருக்கோவை
நானூறும் அமுதூற
மொழிந்தருளும் நாயகனை
வானூறும் கங்கைநிகர்
மாணிக்க வாசகனை
யானூறு படாதவகை
இருபோதும் இறைஞ்சுவனே.

(செவ்வந்திப் புராணம்)

மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், சென்னை-2.

நேமத்தான்பட்டி

## அமரர் பழ. கி. கிருஷ்ணன்

அவர்களின் நினைவாக

## இந்நூலினைப் படைக்கின்றோம் !

தவநெறியே பலர்க்குதவும் தகைமை யாகத்
    தனவணிக குலமுவக்கத் தரணி தோன்றிச்
சிவநெறியாம் பெருநெறியே நின்ற செம்மல்
    சீர்மைபெறு பண்பிற்கோர் திலகம் அன்னார்
பவநெறிகள் அணுவளவும் பற்றுத் தூயோர்
    பலர்புகழும் கிருஷ்ணரவர் நினைவே யாகச்
சிவநெறிக்கோர் மணிமொழியாம் வாச கத்தைத்
    தெளிவுரையோ டுலகுகொளப் படைக்கின் றோமே!

தஞ்சாவூர்,
சனவரி, 1,
1963

அப்பர் புத்தக நிலையத்தார்

# திருவாசகம் தெளிவுரை

மணிவாசகப் பெருமானின் திருவாசகத் தேறல் சைவ மெய்யன்பர்கட்கும் தமிழறிந்தார் யாவர்க்கும் பேரானந்தக் களிப்பினைத் தருகின்ற ஓர் ஒப்பற்ற தமிழ்ச்செல்வமாகும். இதனையறிந்த தமிழ்ச் சான்றோர்கள் திருவாசகத் தேனை அனைவரும் இன்புறுதற்கு உதவியாகப் பற்பல விளக்க நூல்களையும் அமைத்தருளினார்கள். அவர்களின் மரபினை ஒட்டியே, இந்நாளைய தமிழன்பர் அனைவரும் எளிதாகப் பெற்றுத் திருவாசகத் தேன்சுவையினை அருந்தித் திளைப்பதற்கு உதவும் வண்ணம், இந்தத் திருவாசகத் தெளிவுரையோடும் கூடிய மக்கள் பதிப்பும் வெளி வருகின்றது.

பெரும்பெயர் மதுரையின் அருகேயுள்ள திருவாதவூரிலே தோன்றிக், கல்வி நலத்தாற் சிறப்புற்று, மதுரை மன்னனான அரிமர்த்தனனுக்கு அமைச்சராக விளங்கிய அறிவுச்செம்மல் திருவாதவூரர் ஆவார். அவனால், 'தென்னவன் பிரமராயன்' என்ற சிறப்புப் பட்டம் பெற்றுத், தென்னகமெல்லாம் சீரும் சிறப்பும் தமிழறமும் செவ்விதாக நிலவுவதற்கான வகையிலே அமைச்சியற்றிப், புகழோடும் வாழ்ந்தவரும் திருவாதவூரர் ஆவார்.

இந்நாள், 'ஆவுடையார் கோயில்' என்ற பெயருடன் வழங்கும் திருப்பெருந்துறை, அக் காலத்துப் பெரியதொரு துறைமுகப் பட்டினமாகவும் இருந்தது. அவ்விடத்தே, வெளிநாட்டினின்றும் குதிரைகள் பல விற்பனைப் பொருட்டாக வந்துள்ள செய்தி கேட்டுத், தன் படைப் பெருக்கத்தினுக்கு வேண்டிய குதிரைகளை வாங்கிவருமாறு பாண்டியன் பணிக்கப், பொன்னுடனும் அங்குச் சென்றனர் வாதவூரர்.

திருப் பெருந்துறையிலே, இறையவன், குருந்த மரத்தடியிற் குருபரனாக எழுந்தருளிவந்து சிவஞானத்தை நல்கத்

தம்மையும் தாம் வந்த பணியினையும் மறந்தவராகச், சிவன் புகழினைப் பாடிச், சிவநேயத்திலே ஒன்றுபட்டுக், குருபரனாக வந்த அவனாலேயே 'மாணிக்க வாசக'ரெனும் திருப்பெயரும் சூட்டப்பெற்றனர் இவர். பின்னர், திருப் பெருந்துறையில் தாம் குதிரைகொள்வதற்காகக் கொணர்ந்திருந்த பொன்னைப் பயன்படுத்தித் திருக்கோயிற் பணிசெய்தலினும் இவர் ஈடுபட்டனர்.

பாண்டியன் இந்தச் செய்தியறிந்து, குதிரைகளுடன் வருமாறு பணிக்கச், சிவபிரானின் ஆணைப்படி, ஆவணி மூல நாளிற் குதிரைகளுடன் வருவதாகச் செய்தி போக்கினர். இறைவனும் நரிகளைக் குதிரைகளாக்கிப் பாண்டியனிடம் குறித்த நாளிலே தானே சென்று ஒப்புவித்து மீண்டனன். அன்றிரவே, அவை மீளவும் நரிகளாகிக் காடு நோக்கிப் போய்விட, மன்னனும் மணிவாசகரை வைகைச் சுடுமணலின்மேல் முதுகில் கல்லேற்றி நிறுத்தினான்.

அன்பர்படும் துயருக்கு இரங்கிய ஆலவாய்ப் பெருமான், வையை நதியைப் பெருக்கெடுத்துவரச் செய்ய, வெள்ளம் களரயுடைத்துப் பெருகி ஓடிற்று. குடிகளைக் கரையடைக்குமாறு அரசாணையும் எழுந்தது. அப்போது, முதியளான வந்தி யென்னும் பிட்டு வாணிச்சியின் பொருட்டாகச் சிவபிரானே கூலியாளாக வந்து, மண் சுமக்காது ஓடியாடித் திரியப், பாண்டியன் வெகுண்டு பிரம்பால் அவர் முதுகிலேயும் அடித்தனன். அந்த அடி எல்லார் முதுகிலும் அப்போது பட்டது. அரசன், சிவபிரானின், திருவிளையாடலை உணர்ந்து அவரைப் பணிந்தான். மணிவாசகரைத் தன் பிழைபொறுத்து அருளுமாறும் வேண்டினான்.

அவரும், அதன்பின், தம் அமைச்சுப் பதவியை நீத்துப், பல திருத்தலங்களையும் வணங்கியவாறே சிவத்தொண்டில் ஈடுபட்டனர். தில்லையில் ஊமைப்பெண்ணைப் பேசுவித்தும், புத்தரை வாதில் வென்றும் சிவநெறிக்கு ஆக்கந் தேடினர்.

சிவபெருமான் அந்தணக் கோலத்தோடு ஒருநாள் மணிவாசகரிடம் சென்று, திருவாசகத்தினை முழுமையும் ஓதச் செய்து, திருக்கோவையாரையும் சொல்லச் செய்து, அவற்

றைச் சுவடியிலே எழுதிக்கொண்டவனுக, 'மாணிக்கவாசகன் சொல்ல அழகிய சிற்றம்பலம் உடையான் எழுதியது' எனக் கைச்சாத்தும் இட்டுக், கனகசபையின் பஞ்சாக்கரப் படியிலே அச் சுவடியை இட்டும் மறைந்தனன்.

மறுநாட் காலையில், சுவடிகண்ட தில்லைவாழ் அந்தணர்கள் வியப்பிலே மூழ்கியவராகப், பாடற் பொருளைச் சொல்லியருளுமாறு மணிவாசகரை வேண்ட, அவரும், தில்லைக் கூத்தனைச் சுட்டி, 'இவரே பொருள்' எனக் காட்டி விட்டுத் திருவடிச் சோதியில் இரண்டறக் கலந்தனர்.

மணிவாசகப் பெருமானின், இத்தகைய சிவநெறிச் செழுமைவாய்ந்த செய்யுட்களே திருவாசகப் பெருநூல் ஆகும். இதனைத் தெளிவுரையோடு அமைக்கும் பணியிலே என்னையும் ஈடுபடுத்திய அப்பர் புத்தக நிலையத்தார்க்கு என் நன்றி உரியதாகும். இந்த முதற்பதிப்பினை அழகுற வெளியிட்ட அவர்கள், சீரும் சிறப்பும் செல்வமும் பெற்றுச், சிறந்த தமிழ்ப் பணியினை மென்மேலும் தொடர்ந்து ஆற்றித் திகழ்வார்களாக! மற்றும், இதனை வெளியிடுவதில் என்னுடன் ஒத்துழைத்த மெட்ரோபாலிடன் அச்சகத்து அன்பர்கள் அனைவருக்கும், பிற நண்பர்கள் பலருக்கும் என் அன்பும் நன்றியும் என்றும் உரியதாகும்.

தமிழ் அன்பர்களும் இதனைப் பெருவிருப்புடன் வாங்கிக் கற்று, இன்பச் செவ்வியனராகிக் களிப்பார்கள் என நம்புகின்றேன்.

வாழ்க தமிழ் ! வளர்க தமிழறம் !

**புலியூர்க் கேசிகன்**

## திருவாசகச் சிறப்பு

வலமமு உயரிய நலமலி கங்கை
நதிகலை சேர்ந்த நற்கரு ணைக்கடல்
முகந்து உலகுவப்ப உகந்த மாணிக்க
வாசகன் எனுமொரு மாமழை பொழிந்த
திருவா சகமெனும் பெருநீர் ஒழுகி
ஓதுவார் மனமெனும் ஒண்குளம் புகுந்து
நாவெனும் மதகின் நடந்து கேட்போர்
செவியெனும் அடையிற் செவ்விதிற் செல்லா
உளமெனும் நிலம்புக வூன்றிய அன்பாம்
வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறும் முத்தி மெய்ப்பயன் தருமே. 1

நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ!
மனநின்று உருக்கும் மதுரவாசக!
கலங்குறு புலநெறி விளங்குறு வீர!
திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை யேனும் உணரான் அஃதான்று
கைகளோ முறிபடும் கைகள் காணிற்
கண்களோ வொன்று காலையிற் காணும்
மாலையி லொன்று வயங்கித் தோன்றும்
பழிப்பி னென்று விழிப்பி னெரியும்
ஆயினுந் தன்னை நீ புகழ்ந் துரைத்த
பழுதில் செய்யுள் எழுதினன் அதனால்
புகழ்ச்சி விருப்பன் போலும்!
இகழ்ச்சி அறியா என்பணி வானே! 2

# திருவாசகப் பெருமை

## நேரிசை வெண்பா

வள்ளுவர்நூல், அன்பர் திருவாசகம், தொல்காப்பியமே
தெள்ளு பரிமேலழகன் செய்தவுரை,—ஒள்ளியசீர்த்
தொண்டர்புராணம், தொகைச் சித்தி, ஓராறுந்
தண்டமிழின் மேலாந் தரம். 1

தேவர் குறளும், திருநான் மறைமுடிவும்,
மூவர் தமிழும், முனிமொழியும்,—கோவை
திருவாசகமுந், திருமூலர் சொல்லும்,
ஒருவாசகம் என் றுணர். 2

## நேரிசை ஆசிரியப்பா

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்தது என்குவீர் ஆயின்
வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசகம் இங் கொருகால் ஓதிற்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியில் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்ப ராகுநர் அன்றி
மன்பதை உலகின் மற்றையர் இலரே. 3

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே
வாசகம்; அதற்கு வாச்சியம்
தூசணி நுண்மருங்குல் தோகை இடத்தவனே. 4

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நிழல்வா யுண்ட நிகரிலா னந்தத்
தேன்தேக் கெறியுஞ் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
யாவரும் ஓதும் இயற்கைத் தாதலின்
பொற்கலம் நிகர்க்கும் பூசுரர் நான்மறை
மட்கல நிகர்க்கும் மதுர வாசகம்
ஓதின் முத்தி உறுபயன்
வேத மோதின் மெய்ப்பயன் அறமே. 5

செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூர் அன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே. 6

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

மாசறு மணிபோற் பன்னுள் வாசக மாலை சாத்திப்
பூசனை செய்து பன்னுட் புண்ணிய மன்று ளாடும்
ஈசன தடிக்கீழ் எய்தி ஈறிலா அறிவா னந்தத்
தேசொடு கலந்து நின்றார் சிவனருள் விளக்க வந்தார். 7

---

# திருவாசக உண்மை

தேசுறு மாணிக்கமெனச் சிறந்த திருவாசகத்தில்
பேசு திருச் சிவபுரா ணத்துஅகவற் பெருமை சொலில்
ஈசர்தமக்கு இயல்பான திருநாமம் முதலெவையும்
மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற அருட்குறிப்பாம். 1

புகழ்பெருகுஞ் செய்கையெல்லாம் புகலகவல் ஒன்றுகுந்
திகழ்திருவண் டப்பகுதித் திருவகவல் செப்பியது
தகுசிருட்டி திதியொடுக்கஞ் சாற்றுதிரோ தம்பொதுவாய்
அகலமுறத் தேர்ந்திடவே அருளியநற் பொருளாகும். 2

முத்திபெறு நெறியறியும் மொழிபோற்றித் திருவகவல்
சத்தியஞா னந்தருதே சிகர்மோகஞ் சதகமதாம்
மித்தையுல கினையகற்றி விடாமலெனை யாண்டருளென்று
அத்தரறிந் திடநீத்தல் விண்ணப்பம் அறைந்ததுவாம். 3

மலவிருளுற்று உறங்காமன் மன்னுபரி பாகரருட்
செலமுழுக வருகவெனச் செப்பல்திரு வெம்பாவை
நலமுறுமந் தணர்வடிவாய் நாரணன்காண் பரியபதம்
நிலமதில்வந் தாள்கருணை நினைந்தாடல் அம்மானை. 4

சத்திகளால் தனுகரண புவனபோ கங்கள்தமை
அத்தனுக்குச் சுண்ணமவை யாமிடிக்கக் கூவுதலே
ஒத்ததிருச் சுண்ணம்உயர் போதமொரு வண்டாகச்
சித்தவிகா ரத்தூது செப்பிவிடல் கோத்தும்பி. 5

பொன்னார்மெய் அண்ணலரும் போதவின்ப மேமிகுந்து
தென்னாதென் னாவெனவே தெள்ளேணங் கொட்டியதாம்
முன்னார் கலையுமுண ராமூகை யாமேடி
தன்னாற் பதிமுதன்மை சாற்றியதாம் திருச்சாழல். 6

தேவரறி யாதசிவன் தேடியே ஆண்டநலம்
ஆவலொடுஞ் சொல்லி அடியாரோ டுங்கூடிப்
பூவியந்து கொய்தல்திருப் பூவல்லி யாம்;அரன்சீர்
பாவமுறு தீமையறப் பாடல்திரு வுந்தியதே. 7

சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய்
அத்தன் செயுங்கருணைக்கு ஆராமை உண்மிகுந்து
பொத்திய கைகொட்டிப் புகழ்தல்தோ ணோக்கம்;அருட்
சத்தியிருந் தாடத்தா லாட்டிடுதல் பொன்னூசல். 8

நேயம்மி குந்த நிலைகுலையக் கூடுதலை
ஆயவருட் டாய்க்கங்கு அறைதல்அன்னைப் பத்தாகும்;
தூயவருட் குயிலோநற் சோதியெனைக் கூடுதற்குன்
வாயினாற் கூவெனமுன் வாழ்த்தல் குயிற் பத்தாமே. 9

பேர்நாடு ராறுமலை பெயரூர்தி படைமுரசு
தார்கொடியெ லாமரற்குச் சாற்றல்தசாங் கமதாம்
ஏர்மரு திருப்பள்ளி எழுச்சிபணி விடைகேட்டு
ஆர்வமுட னுண்டவரற் கன்புசெயு மியல்பே. 10

கோயின்மூத்த திருப்பதிகஞ் சிதம்பரத்தில்
அருளடையுங் குறிப்பதாகும்,
ஏயுங்கோயில் திருப்பதிகம் பெருந்துறைத்
தேசிகர் மோக மியம்பலாகும்
ஆய பசுபோதம் முற்றுங் கெடவேண்டலே
செத்தி லாப்பத் தாகும்;
ஓதுவல் வாதனைகள் வந்தணுகாமல்
அடைக்கலப்பத் துரைத்ததாமே. 11

கருவியுறும் ஊனுடற்கண் வாராமல்
திருவருளிற் கலப்பதற்கே,
அரனடியைப் புகழ்ந்துபெரு கார்வமொடு
பாடுதலேயாசைப் பத்தாம்,
வெருவிமலத் தினைச்சிலத் தொன்றுருகும்
அடியர்குழாத் துடனே கூட்டும்,
பரமரருட் பெருமைமிகு தியைப்புகழ்ந்து
பாடல் அதிசயப் பத்தாமே. 12

ஆண்டகுரு வைப்பிரியா தணைந்துபணி
புரிந்துமிகு மன்போ டின்பம்
பூண்டுகிடக் கப்பெறுவ தென்றுகொலோ
எனும்விருப்பம் புணர்ச்சிப் பத்தாம்

நீண்டவுல கத்தினிற்பற் றென்றிலேன்
இவ்வுடற்க ணின்று வாழேன்
மாண்டகுநின் பதநிழற்கீழ் வருகவருள்
புரியெனுஞ் சொல் வாழாப் பத்தே. 13

சோதியருட் சுடர்விளக்கே துயர்ப்பிறவி
கடல்விடுத் துன்தாள் சேர்தற்கு
ஆதரித்திங்கு உனையழைத்தால் அதெந்துவெனக்
கேளெனுஞ்சொல் அருட்பத் தாகும்
நீதிமறை பரவுதிருப் பெருந்துறையிற்
குருவடிவாய் நிகழ்ந்த கோலம்
காதலொடுங் காட்டினையே எனுங் களிப்புப்
பகர்தல்திருக் கழுக்குன் றமே. 14

இந்திரிய வயமயங்கா தேயெடுத்துத்
தானுக்கும் எழிலா னந்தம்
கந்தமலி தில்லையினுட் கண்டேனென்று
உவந்துரைத்தல் கண்ட பத்தாம்
அந்தமிலா ஆனந்தத் தகலாமல்
எனையழுத்தி யாள்வா யென்று
சிந்தைகலந் துரைத்ததுவே பிரார்த்தனைப்பத்
தாய்ப்புகலுஞ் செய்கை யாமே. 15

இழைத்தேனிவ் வாக்கைபொறுத் தினிக்கணமும்
பொறுக்கலேன் ஏழை யேனைக்
குழைப்பதேன் பிழைபொறுத்தாள் எனவிரங்கிக்
கூறுதலே குழைத்த பத்தாம்
தழைத்துவளர் பேரின்பந் தானுகி
உயிர்தோன்றுத் தன்மை யாய்த்துன்
பொழித்துநிறை வைப்பெறுதல் உயிருண்ணிப்
பத்தாவிங் குரைத்த தாமே. 16

தரையில்வளர் வினைமுழுதும் வரினும்அஞ்சேன்
சிவசமயத் தவஞ்சா ராதார்
அருகின்வரக் காண்கின்மனம் அஞ்சுமென
இகழ்ந்துரைத்தல் அச்சப் பத்தாம்
புரவியின்மேற் பாண்டியன்முன் வரும்பதத்தை
யாம்பெறுமற் புதம்போல் யாரும்
விரவுமின்கள் என்றடியார்க்கு உறுதிசொலல்
திருப்பாண்டி விருத்த மாமே. 17

மிக்கபிற வித்துயரெ லாமொழித்து
விபுத்துவமிங் களித்த லாலே
சிக்கறச்சிக் கெனப்பிடித்தேன் நின்னையென்று
துணிவுசெப்பல் பிடித்த பத்தாம்
தக்கபரி யாய்நரியை யாக்குதல்போல்
எனைப்பெரிதாய்த் தாக்கித் தாட்கீழ்
அக்கணம்வைத் தனையேயென்று இரங்கல்திரு
வேசறவுஎன் றியம்ப லாமே. 18

கரைந்துருகும் பேரன்புன் கழலிணைக்கே
கற்றாவின் மனம்போல் என்றுந்
திருந்தும்வகை யெனக்கருள்க வெனக்கேட்டல்
திருப்புலம்ப லாகும் உள்ளம்
விரும்புசிவா னந்தவெள்ளம் விழைந்துதில்லை
நாயகனை மிகக்கொண் டாடி
நிரம்புமனக் களிமிகுத்த விறுமாப்பே
குலாப்பத்தாய் நிகழ்த்த லாமே. 19

மாயவுருக் கொண்டுளத்தை மயக்குமின்னார்
கண்வலையுண் மயங்கு வேற்கிங்கு
ஆயுமறி வளித்தான ததிசயமென்
றுரைத்தல்அற்பு தப்பத் தாகும்
தூயவருட் குருபதத்தைச் சூட்டுதற்குப்
பெற்றவுயர் சுகத்தை நோக்கிச்
சேயமலர்ப் பதத்துஅருமை அடியரொடும்
வியந்துரைத்தல் சென்னிப் பத்தே. 20

அறம்பெருகும் பெருந்துறையில் அமையாண்ட
செயன்முதலா அரன்சீ ராட்டின்
திறமறிவார் எம்பிரா னுவரென
உரைத்தல்திரு வார்த்தை யாகும்
நிறம்வளரு மலர்ப்பொழில்சூழ்ந் தோங்குதிருத்
தில்லைமன்றுள் நிமலன் நாமத்

திறம்பெருகும் இன்பம்அரு ளென்றலெண்ணப்
பத்தெனவும் திகழ்த லாமே. 21

பொல்லாத பவத்தைவிட்டுச் சிவன்கழற்கீழ்ப்
புகுங்காலம் புணர்ந்த தேற்கிங்கு
எல்லாரும் வாருமெனக் கருணையினல்
அழைத்திடல்யாத் திரைப்பத் தாகும்
அல்லாத துர்க்குணமாய் அப்படைகள்
விளையாமல் அருள்வா ளேந்தி
நல்லோர்கள் இயாருமெம்மோடு எய்துமெனப்
படையெழுச்சி நவிலல் ஆகும். 22

தொந்தமா மலமொறுத்துச் சுகம்பெருக்கிப்
பெருந்துறைவாழ் சோதி யென்றன்
சிந்தனையே யூராகக் கொண்டிருந்தார்
என்றுரைத்த திருவெண் பாவாம்
எந்தைதிருப் பெருந்துறையை யேத்துநம
ரேவாழ்வுற் றிடர்சேர் பாச
பந்தமறுத் திடுவரெனப் பண்டாய
நான்மறையும் பகர்ந்த தாமே. 23

வாகுதிருப் பெருந்துறையார் எழுந்தருளப்
பெறிலெல்லா வளங்கண் முற்றும்
ஆகுமெமக் கல்லாத தாகாதென்று
இயம்பல்படை யாட்சி யாகும்
மோகமிகு மடியரொடும் கூடவிரும்பியது
ஆனந்தம் மொழியும் ஈசர்
போகசுக மெனக்களித்தார் ஆர்பெறுவார்
எனுமருமை புகறல் அச்சோ. 24

---

# பதிக அட்டவணை

# 1. சிவபுராணம்

## சிவனது அநாதி முறைமையான பழமை.

( கலி வெண்பா )

[திருப்பெருந்துறையில், குருந்தமரத்தின் அடியில், குருபரனாகச் சிவபெருமான் எழுந்தருளினான். திருவாதவூரருக்குச் சிவஞானமாகிற மெய்ப்பொருளை உணர்த்தினான். அவரைத் தன் அடியவராக்கியும் உய்வித்தான். அந்த அருளினைப் போற்றுவாராக அடிகள் அருளிச்செய்தது இது. சிவனைப்பற்றிய பழைமையான வரலாறுகளை உரைத்து அவனைப் போற்றுவது.]

### 1. வாழ்க! வாழ்க!

திருச்சிற்றம்பலம்

**நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க**
**இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க**
**கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க**
**ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க**
**ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க** 5

நமச்சிவாய முழக்கம் உலகில் என்றும் நிலைபெறுக! அந்தத் திருவைந்தெழுத்தின் சொரூபனாக விளங்கும் இறைவனது திருவடிகள் எங்கணும் நிலைபெறுக! இமைப்பொழுதளவும் என் நெஞ்சினிடத்தினின்றும் நீங்காதவனின் திருவடிகள் வாழ்க! என் பசுத்தன்மையினை நீக்கி என்னை ஆட்கொண்டருளிய குருநாதனின் திருவடிகள் என்றும் வாழ்க! ஆகமங்களின் மெய்ப்பொருளும் தானேயாகிநின்று அருள் செய்பவனின் திருவடிகள் வாழ்க! தானே தனியனாகியும், அடியவர்கள் விரும்பியவண்ணம் அவர்களுக்கு அருளுதற் பொருட்டாகத் தானே அநேகனாகியும் விளங்கும் இறைவனது திருவடிகள் என்றும் வாழ்க!

[கோகழி -பசுத்தன்மை கழிதல்; அதாவது, உயிர் தனது இயல்பான பாசத்துப் பிணிப்பினின்றும் விடுபடுதல். இங்ஙனம், பலகாலும் இறைவன் அருளிச்செய்த இடமான திருவாவடுதுறையினையும், அடிகட்கு அருளிச்செய்த திருப்பெருந்துறையினையும் இது குறிப்பதாகவும் கொள்வர். அண்ணித்தல் - அருளுதல்.]

## 2. வெல்க! வெல்க!

வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க

*ஆணவத்தால் எழுகின்ற மனவேகங்களைக் கெடுத்து என்னை ஆண்டருளிய வேந்தனின் திருவடிகள் வெல்க! உயிர்களின் பிறவித்தளையினை அறுத்து வீடளிக்கும் தலைக்கோலத்தினை உடையவனின், வீரக்கழல்கள் நிறைந்த திருவடிகள் வெல்க! சிவநேயத்திற்குப் புறமாயிருப்பவர்கட்குத் தானும் தொலைவாகவே இருப்பவனின் மலரடிகள் வெல்க! கரங்குவித்துத் தன்னைவழிபடும் அடியவரின் உள்ளத்தே, அவர்கள் கண்டுகளிக்கும் கோமானாக நிலவுகின்றவனின் திருவடிகள் வெல்க! தனக்குத் தலைதாழ்த்தும் தன் அடியவரை, உலகினர் யாவரினும் உயர்நிலை அடைவிக்கும் சிறப்புடையானின் திருவடிகள் வெல்க!*

*[கழல்-வீரத்தின் சின்னம். பிஞ்ஞகம்-தலைக்கோலம். சீர்மை-சிறப்பு.]*

## 3. போற்றி! போற்றி!

ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி

*ஈசனது திருவடிகட்கு வணக்கம்! என் தந்தையாவானின் அடிகட்கு வணக்கம்! ஒளிமேனியனின் அடிகட்கு வணக்கம்! சிவபெருமானின் செவ்விய அடிகட்கு வணக்கம்! அன்பினிடத்தே நிலைபெற்ற மாசற்றவனின் அடிகட்கு வணக்கம்! வஞ்சமாகிய பிறவிப்பிணியை அறுத்தருளும் மன்னவனின் அடிகட்கு வணக்கம்! சிறப்புமிகுந்த பெருந்துறைக்கண்ணே விளங்கும் நம் கடவுளின் அடிகட்கு வணக்கம்! தெவிட்டாத பேரின்பத்தினை அருளுகின்ற, மலைபோன்ற மாண்புடையானின் அடிகட்கு வணக்கம்!*

*[ஈசன்-ஆள்பவன். தேசு-ஒளி. நிமலன்-மாசற்றவன். மாயம்-வஞ்சனை. அன்பிலாதவர் சிவனடி அடைதல் அரிது;*

*இதனைக் கூறுவார், 'நேய்த்தே நின்ற நிமலன்' எனப் போற்றுகின்றனர். ஆராத இன்பம்-தெவிட்டாத பேரின்பம்.]*

## 4 உரைப்பன் யான்!

**சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்**

*சிவபிரானாகிய அவனே என் சிந்தையுள் நீங்காது நிலை பெற்றிருப்பவன். அதனால், அவன் அருளினாலேயே அவன் திருவடிகளை வணங்கும் பேற்றினை யான் பெற்றேன். என்னுடைய உள்ளம் மகிழவும், என்னுடைய முன்னைப் பழவினை அனைத்தும் முற்றவும், ஒழியவும் கருதி, இச் சிவபுராணத்தினை யான் இப்போது உரைக்கின்றேன்.*

*['சிவன் அவன்' இதிலுள்ள அவன் என்பது மேலே சொல்லிய அத் தன்மையினனான பெருமான் என்பதனைக் குறிக்கும். 'தவமும் தவமுடையார்க்கு ஆகும்' என்று குறள் கூறும்; அதனையே, 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்றனர். இறையருள் வாய்த்தாலும், முந்தை வினையின் பயன்களை அநுபவித்தே தீர்தல் வேண்டும் என்பார்கள். அதனாலேயே, 'முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்' என்றனர்.]*

## 5. புகழ்தற்கும் அறியேன்!

**கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்**

*நெற்றிக்கண்ணினை உடையான் அவன். அவன், தன்னுடைய கருணையாகிய கண்ணோட்டத்தினைக் காட்டி அருளினான். யானும், அதனால் இவ்விடத்தினை வந்து அடைந்தேன். எண்ணத்தால் அறிதற்கும் எட்டாதவாக விளங்கும் அழகுமிகுந்த அவன் திருவடிகளைக் கண்டு வணங்கும் பேறும் பெற்றேன். வானக மெங்கணும் நிறைந்தும், மண்ணக மெங்கும் நிறைந்தும், அவற்றுக்கும் அப்பாலாக மிகுந்தும் விளங்குவோனே! திகழ்கின்ற ஒளியுருவாக விளங்குவோனே! எண்ணி அளவிடுவதற்கும் உட்படாதவாறு, அதனையும் கடந்து, நினக்கு ஓர் எல்லை என்பதும் யாதென*

*இல்லாது இருப்பவனே! பொல்லாத வினையினாலே பற்றப் பெற்றிருக்கும் யான், நின்னைப் போற்றுவதற்கான வகையினைப்பற்றி யாதொன்றும் அறிந்திராத தன்மையேன் ஆவேன்.*

*[அனைத்தையும் தோற்றுவித்து அவற்றைக் கடந்து நிற்கும் இறைவனின் தன்மையினை, 'விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்' என்றனர். பொல்லாவினை-உயிர்களைப் பற்றிப் பொல்லாதனவற்றுள் புகுத்தும் தீவினை. புகழும் ஆறு-புகழ்தற்குரிய நெறிமுறைகள். 'அறியேன்' என்றது, தாம் முன்னர் அவற்றை நாடாத தம் அறியாமைநிலையினைச் சுட்டி உரைத்ததாம்.]*

### 6. இளைத்தேன் பெருமானே!

**புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்**
**மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்**

*உணர்வற்ற கல்லாகிக் கிடந்தும், புல்லாகியும், பூண்டாகியும், புழுவாகியும், மரமாகியும், பல்வேறு மிருகங்கள் பறவைகள் பாம்புகள் ஆகியும், மனிதராகியும், பேய்களாகியும் பூதகணங்களாகியும், வலிய அசுரர்களாகியும், தவநெறி மிக்க முனிவர்களாகியும் தேவர்களாகியும் இயங்குவதான அசையும்பொருள் அசையாப்பொருள் என்னுமிவற்றுள், எல்லாப் பிறப்புக்களினும் சென்றுசென்று பிறந்து யானும் இளைத்துவிட்டேன். எம் பெருமானே! இன்றுதான் உண்மையாகவே நின் அழகிய திருவடிகளைக் காணும் பேறு பெற்றேன். அந்தக் காட்சிப்பயனால் என் பிறவித்துயரினின்றும் விடுதலையும் பெற்றுள்ளேன்.*

*[உலகின்கண், ஓரறிவு முதலாக விளங்கும் பல்வேறு உயிரினங்களுள்ளும் தாம் பிறந்தும் இறந்தும் உழன்று களைத்ததனைக் கூறிப், பெருமானின் திருவடிப்பேறு பெற்றதனால் அந்தப் பிறவித்தளையினை அறுத்து வீடுபெற்றதனையும் உரைக்கின்றனர். விருகம்-விலங்கு. கணம்-பூதகணங்கள். தாவரம்-அசையாப் பொருள். சங்கமம்-அசையும் பொருள்.]*

### 7. மெய்ச்சுடரே! நல்லறிவே!

**உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற**
**மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்**

ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னும்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

*யான் உய்யும் பொருட்டாக, என் உள்ளத்துள்ளே ஓங்கார வடிவமாகி நிலைபெற்றுள்ள மெய்ப்பொருளே! மலங்களாற் பற்றப்படாதவனே! இடபத்தை வாகனமாக உடையவனே! வேதங்களும் நின்னை முற்றவும் அறியமாட்டாவாய் 'ஐயனே!' என அரற்றித் தேடிக்கொண்டிருக்க, உயர்ந்தும் தாழ்ந்தும் பரந்தும் எங்கணும் நிறைந்துவிளங்கும் நுட்பமான பரம்பொருளே !*

*வெய்யவனே! தண்மையனே! அத்துவிதக் கலப்பினாலே எவ்விடத்தும் உயிராகக் கலந்து நிற்கின்ற மாசற்றவனே! பொய்ப்பொருளாயின எல்லாம் என்னைவிட்டு நீங்கி அகன்று போகுமாறு என்முன் வந்து தோன்றி எனக்கு அருளுதலைச் செய்து, உண்மை ஞானமாகி என்முன் ஒளிவீசுகின்ற மெய்ச் சுடரே! எத்தகைய நல்லறிவும் இல்லாதவனாகிய எனக்குப் பேரின்பமாக வந்துவாய்த்த பெருமானே! அஞ்ஞானத்தினை என்னிடமிருந்து நீங்கச்செய்த நன்மையான அறிவுப் பொருளே!*

*[உயிர்கள், முந்தைவினையால் பல்வேறாகிய உயிர்வகைகளுள் சென்றுதோன்றி உழன்று இறையருளினை அடைதற்குரிய பக்குவநிலையினை எய்துகின்றன. அந்த நிலையெய்தியதும், இறைவனே குருபரனாக வந்து அவற்றின் அறியாமையினை ஒழித்து, அவற்றைத் தன் திருவடிப்பேறாகிய நற்கதியுள் சேர்க்கின்றனன்; இதனை உரைத்தனர். ஓங்காரம்-ஓம் என்னும் பிரணவ மந்திரம். மலம்-கட்டு. அஞ்ஞானம்-பொய்யாயினவற்றை மெய்யாயின என்று உணருகின்ற புல்லறிவு.]*

## 8. என்னைப் புகுவிப்பாய்!

ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்

*ஆகிவந்ததென்ற தோற்றமும், அது இதுகாறும் நிலவியதென்ற அளவினை உடையதான நிலைபெறுதலும், அவை அழிதல் என்ற இறுதியடைதலுமாகிய மூவேறு தன்மைகளும் நின்னிடத்து இல்லாதவனே! ஆயினும், உலகம் அனைத்*

தையும் ஆக்கியும் காத்தும் அழித்தும் அருள்தருகின்றவனே! என்னைப் பிறவிகளிற் புகுமாறு செலுத்துவோனே! என்னை அதனின்றும் ஆட்கொண்டு நற்கதியில் புகுவித்து, நின் அடித் தொண்டாகிய நற்றவத்தில் செலுத்துபவனே!

[தொழும்பு—தொண்டு. படைத்தல், காத்தல், அழித்தல், போக்குதல், புகுவித்தல் ஆகிய, இறைவனது ஐந்தொழில் மரபும் இதன்கண் உரைக்கப்பட்டது.]

## 9. எங்கள் பெருமான்!

நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந் தாற்போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்

பூவினிடத்துப் பொருந்தியுள்ள மணத்தைப்போல நுட்பமாக அனைத்தின்பாலும் அமைந்து விளங்குபவனே! அன்பராகி அணுகாதார்க்குத் தொலைவானவனே! அன்பர்க்கு அணிமையானவனே! சொல்லையும் மனத்தையும் கடந்து நிற்கின்ற மறைப்பொருளே! கறந்த ஆவின்பால் கருப்பஞ் சாறு ஆகியவற்றுடன், நெய்யினையும் சேர்த்து கலந்துவைத் தாற்போல இனிமையினுற் சிறப்புற்று, நின் அடியவரின் சிந்தனையுள்ளே இனிமை ஊற்றெடுத்துப்பெருக நிலைபெற்று, அவர்கள் பிறந்த பிறவியாகிய தளையினை அறுத்து, அவர்களை விடுவிக்கும் எங்கள் பெருமானே!

[நாற்றம்-மணம். மாற்றம்-சொல். மறை-இரகசியப் பொருள். இறையடியார் தம் உள்ளத்துள் கொண்டு இன்புறும் செவ்வியினைக் குறிப்பவர் 'தேனூறி நின்று' என்றனர்.]

## 10. மறைந்திருந்தாய்!

நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை

பொன்னிறம் வெண்ணிறம் செந்நிறம் கருநிறம் புகை நிறம் என்னும் நிறங்கள் ஐந்தினையும் நின்பாற் கொண்டவனே! எனினும், வானவர்கள் துதித்தபோது, அவர்களது காட்சிக்கு உட்படாது மறைந்தும் இருந்தனையே, எம் பெருமானே!

[ஐம்பெரும் பூதங்களைத் திருமேனியாகக் கொண்டவன் என்பார், அவற்றின் நிறங்களான 'ஐந்தினையும் உடையவன்' என்றனர். வானவர்க்குப் புலப்படாதிருந்த அவன், தமக்குத்

தானே தோன்றி அருளியதனை வியப்பவர், 'விண்ணோர்கள் ஏத்த மறைந்திருந்தாய்' என்றனர்.]

## 11. தயாவான தத்துவனே!

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

*மாசற்றவனே! வலிய வினையினாலே பற்றப்பட்டுக் கிடந்தேன் யான். என் நல்லறிவானது மறைந்திடுமாறு மூடிக் கிடந்த, வஞ்சனையாகிய அஞ்ஞானஇருளில் யான் ஆழ்ந்தும் கிடந்தேன். நல்வினை தீவினை என்னும் கடத்தற்கரிய இரு பாசங்களினாலே கட்டுண்டுமிருந்தேன். புறத்தே தோலைப் போர்த்ததாய், உள்ளெங்கும் உள்ள புழுக்களும் அழுக்குகளும் மூடி மறைக்கப்பெற்றதாய், தனது ஒன்பது துவாரங்களினும் அழுக்கு வடிகின்றதாய் அமைந்த, உடலாகிய இந்த இருப்பிடத்தினை எனக்குத் தந்தனை! என் அறிவு கலங்கும்படியாக ஐம்புலன்களும் எனக்கு வஞ்சனையைச் செய்தன. அவற்றுட்பட்டு நின்னினின்றும் அகன்றுபோகிய என் உள்ளத்தால், நினக்குக் கலந்த அன்புஉடையவனாகிக் கசிந்து உருகுகின்ற நன்மையான செயல் யாதும் செய்தற்கும் இல்லாதவன் ஆயினேன். அத்தகைய சிறுமை உடைய எனக்கும் நீ அருளிச்செய்தனை! இம்மண்ணிடத்தேகுருபரனாக எழுந்தருளி வந்தனை! புகழ்மிகுந்த நின் திருவடிகளைக் காட்டி என்னை உய்வித்தனை! நாயினும் கடைப்பட்டவனாகிக் கிடந்த அடியேனுக்குத் தாயினுங்காட்டில் மேம்பட்ட கருணைவடிவாக, அங்ஙனம் எழுந்தருளி விளங்கிய தத்துவப்பொருளே!*

*[வல்வினை-கொடிதான வினை. வினைப்பயன் வந்துறுதலை எவரானும் தடுத்தற்கு அரிதாகும்; அதனால், அது வல்வினை எனப்பெற்றது. மாயஇருள்-மாயையாகிய இருளும் ஆம். அறம்-நல்வினை. பாவம்-தீவினை. குடில்-கூடு; உடல். மலங்குதல்-கலங்குதல். விலங்குதல்-விலகிச் செல்லல். நீள்கழல்-புகழ்மிக்க திருவடிகள்*

## 12. ஆருயிராய் நின்றானே!

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே

*குற்றமற்ற ஒளியே இதழ்களாக மலர்ந்துள்ளாற் போன்று விளங்கும் மலர்ச்சுடரே! ஒளிவண்ணனே! இனிமை மிகுந்த அமுதமே! சிவபுரத்தனே! பாசமாகிய பற்றினை ஒழித்து அன்பரது அறிவினை விரிவடையச் செய்கின்ற மேலோனே! என் மனத்தேயுள்ள களங்கம் கெடும்படியாக, எனக்குக் காதலோடு கூடிய அருளினைச்செய்து, என் நெஞ்சினைவிட்டு அகலாது நிலைபெற்ற, பெருங் கருணைவெள்ளத்தையுடைய பேராற்றினைப் போன்றவனே! தெவிட்டாத அமுதம் போன்றவனே! அளவில் அடங்காத பெருமையினை உடையவனே! நின்னை அறிந்து உணராதவரின் உள்ளத்தே இருப்பினும், அவர்க்குப் புலனாகாது ஒளித்திருக்கும் சோதியே! என் கல் மனத்தையும் நீராக உருகச்செய்து, என்னுடைய அரிய உயிருக்கும் உயிராகி, என்பால் கலந்து நிலைபெற்றவனே!*

*['மாசற்ற சோதியானது மலர்ச்சிபெற்று விளங்குவது போன்று விளங்கும் மலர்ச்சுடர்' என, அவன் ஒளிமேனி வண்ணத்தை உரைத்தனர். தேசன்-குருபரனும் ஆம். நேசம்-காதல். பாரித்தல்-விரித்தல்.]*

## 13. எந்தை பெருமானே!

இன்பமுந் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே

*உலகத்துப் பொருள்களாலே வந்துறுகின்ற இன்ப துன்பங்கள் நினக்கென இல்லாதவனே! எனினும், அன்பர் பொருட்டு அவற்றை உடையவனாகவும் விளங்குபவனே! நின் அன்பர்கட்கு அவர்போலவே நீயும் அன்புடையானாகி இலங்குபவனே! அனைத்தினும் கலந்துநிற்கும் தன்மையினால்*

யாவையும் ஆகியும், அனைத்தினாலும் கட்டுப்படாததனால் அவை யாதும் அல்லாதனையாகியும் இருப்பவனே! ஒளியாக விளங்குபவனே! அடர்ந்த இருளாகத் தோற்றுபவனே! தோன்றுதலற்ற பெருமையினை உடையவனே! அனைத்திற்கும் ஆதியானவனே! அவற்றின் இறுதியாகவும், அவற்றின் ஆதிக்கும் இறுதிக்கும் உட்பட்ட நடுவாகவும் விளங்குபவனே! எனினும், நினக்கொரு ஆதியும் நடுவும் அந்தமும் இல்லாதவனே! என்னை இவ்விடத்திற்கு வருமாறு இழுத்து, என்னை ஆட்கொண்டு அருளிச்செய்த, எமது தந்தையாகிய பெருமானே!

[இறைவனே இன்பமுடையவன். அதனால், அவனுக்குப் பிறவற்றால் வருவதான இன்பம் எதுவுமில்லை. ஆகவே, அவனுக்குத் துன்பமும் கிடையாது. எனினும், அடியார்க்கு வரும் இன்பதுன்பங்களைத் தனக்கே வந்தவாகக் கொண்டு அவன் விளங்குதலால், 'உள்ளானே' எனவும் உரைத்தனர். இருளும் அவன்! அதனை அகற்றும் சோதியும் அவன்! எனினும் இந்த உண்மையை உணராதார்க்குத் தோன்றாது நிற்கும் நுட்பமும் அவன்!' என்றனர்.]

## 14. காண்பரிய பேரொளியே!

கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே

கூர்மையான மெய்யறிவினாலே நின்னைத் தம் உள்ளத்தே கொண்டு அறிபவரின் கருத்தினுக்கும், சுட்டி அறிவதற்கு அரியதாக விளங்கும் அறிவுப் பொருளே! மேலும் நுணுக்கப்படுவதற்கு அரிதாக விளங்கும் நுண்ணுணர்வுப் பொருளே! ஒன்றை நாடிப்போதலும், அதனை அடைதலும், அதனின்றும் மீளுதலும் என இல்லாத நன்மையனே! எம்மைப் பிறவித்துயரினின்றும் காத்தருளுகின்ற காவலனே! எம்மால் காண்பதற்கும் அரிதாக விளங்கும் பேரொளியே!

['நோக்குதற்கரிய நோக்காகவும், நுணுக்குதற்கரிய நுண்ணுணர்வாகவும் விளங்குபவன் இறைவன்' என்றனர்.]

## 15. உடையானே!

ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே

*அப்பனே! இன்பந்தருகின்ற ஆற்றுவெள்ளம் போன்றவனே! உலகிற்கு அப்பாற்பட்டவனாய், நிலைபெற்ற விளக்கமுடைய சுடரொளியாய்ச், சொல்லால் உணர்த்தற்கரிய நுட்ப அனுபவமாய் விளங்குபவனே! வெவ்வேறாக அமைந்த உலகினரிடையே நீயும் வெவ்வேறாகக் காணப்பட்டுவந்து, முடிவான அறிவாகவும் தெளியப்படுகின்ற தெள்ளியனே! தெளிந்தவரின் தெளிவினிடத்தே அந்தத் தெளிவாக விளங்கும் மெய்ப்பொருளே! என் சிந்தனையுள் ஊற்றாகத் ததும்பி, உண்ணத் தெவிட்டாத அமுதமாக அமைந்தவனே! என்னை அடிமையாக உடையவனே!*

## 16. நட்டம் பயின்றாடும் நாதனே!

வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே

*'வெவ்வேறு திரிபுகளை உடைய ஊனுடம்பினுள்ளே கட்டுப்பட்டுக் கிடத்தலை, யான் இனிப் பொறுக்கமாட்டேன்; எம் ஐயனே! அரனே! ஓலம்' என்று கூவிக்கூவி நின்னைப் போற்றிப் புகழ்ந்து இருந்து, பொய்ப்பொருள்களின் பற்றுக் கெட்டு, மெய்ப்பொருளோடு ஒன்றுபட்டவர்கள், மீளவும் இவ்வுலகிடத்தே வந்து வினைக்கீடாகிய பிறவியினை அடையாமல், கரவுடைய ஐம்புலவேடர் சூழ்ந்துள்ள அவர் உடம்பினை முற்றவும் தொடர்பறுக்க வல்லவனே! அனைத்தையும் நின்னுள் ஒடுக்கிய ஊழியிறுதியில், நள்ளிருளிலே, ஊழித் திருக்கூத்தினை இயற்றுகின்ற நாதனே!*

## 17 சிவபுரத்தில் உள்ளார்!

தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

'தில்லை மன்றினிடத்தே கூத்தப்பிரானாக விளங்குபவனே! தென்பாண்டி நாட்டினை உரிமையாகக் கொண்டவனே! துயரம் கொண்டதான தொடர்ந்து வரும் பிறவித்தளையினை அறுத்து உதவுபவனே! ஓலம்!' என்று சொற்களால் புகழ்ந்து உரைத்தற்கும் அருமையானவனைப் புகழ்ந்து கூறிய இந்தப் பாட்டின் பொருளினை உணர்ந்து சொல்லுபவர்கள், பலரும் வணங்கிப் போற்றுமாறு சிவனடி நீழலின்கீழ் இருக்கின்றவராகிச், செல்வச்செழுமையினை உடைய சிவலோகத்தினும் சென்று நிலைபெறுபவராக ஆவார்கள்.

# 2. கீர்த்தித் திருவகவல்

## சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை

( நிலைமண்டில ஆசிரியப்பா )

*[மணிவாசகர் தில்லைப்பதியினை அடைந்து, அங்கே பஞ்ச கிருத்தியத் தாண்டவம் செய்திருக்கும் கூத்தப் பிரானைக் கண்டு போற்றினார். அவ்விடத்து வீதிவலம் வருகின்றபோது சொல்லியது இந்த அகவல்.]*

### 1. கொள்கையும் சிறப்பும்!

திருச்சிற்றம்பலம்

தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகுந்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடை யிருளை ஏறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்—

*தில்லையாகிய பழையநகரிலே பஞ்சகிருத்தியத் தாண்டவம் செய்தருளிய தன் திருவடியானது, பற்பல உயிர்களினிடத்தெல்லாம் சென்று பொருந்தியிருப்பதாகவும் அவன் செய்தருளினான். அளவில்லாத பல குணங்களோடு பொருந்தி அழகுவாய்க்கவும் அவன் விளங்கினான். மண்ணுலகும் விண்ணுலகும் மற்றைய தேவர்உலகும் பொருந்திய கல்விகளை எல்லாம் தோற்றுவித்து, அவற்றை அழித்தலையும் செய்வான். அவனே, என்னுடைய அஞ்ஞானஇருளை முழுவதும் ஒழித்தான். அடியாரின் உள்ளத்தே அன்பானது அதிகரிக்க அதிகரிக்க அதனையே தன் குடியிருப்பாக்கிக் கொள்ளுபவன் அவன். அந்த முறைமையையும் சிறப்பினையும் உடையவன் அச் சிவபிரான் ஆவான்.*

*[இருள்-அஞ்ஞானமாகிற இருள். மீதூர்தல்-மிக்குப் பெருகுதல். ஐம்பெரும் பூதங்களுள் வானைக்குறிப்பது இல்லை. அதனிடத்துப் பிறபூதங்கள் தோன்றின என்பதும், அப்படித்*

தோன்றிய காலத்து உடற்கூறெடுத்த எல்லா உயிர்களினும் இறைவன் உயிர்க்குயிராய்க் கலந்து நிற்பவனாயினன் என்பதும் கூறினர். பல்குணம்-தன்வயத்தனாதல் முதலாய எண்குணங்கள். துன்னிய-பொருந்திய. ஏற-முழுவதும்.]

## 2. ஆகமம் அருளியது!

மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்
கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புறவு எய்தியும்
பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டும் இன்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்து
உற்றஐம் முகங்க ளாற்பணித் தருளியும்

புகழால் நிலைபெற்ற மகேந்திரமலையதனில் உமையம்மைக்குச் சொல்லிய சிவாகமத்தை, உலகினரின் பொருட்டாக மீளவும் வெளிப்படுத்தி அவன் அருளினான். கல்லாடம் என்னும் திருப்பதியில், இனிதாக உமாதேவியோடும் ஒருமிக்க யாவரும் விரும்பும்படியாகவும் அவன் எழுந்தருளியிருந்தான். பஞ்சப்பள்ளி என்னுமிடத்தே, பால்போன்ற மொழியினை உடையவளான உமாதேவியுடன், குறைவின்றி மிகுந்த இன்னருளினை விளைவித்தவனாகவும் இருந்தான். வேடனின் வேடத்துடனே, முருக்கம்பூப்போன்ற சிவந்த உதடுகளை உடையவளான உமாதேவியின் நெருங்கிய அழகான கொங்கைத்தடத்திலே மூழ்கியும் இருந்தான். வலையனாகிக் கெளிற்றுமீனைப் பிடித்தும் திருவிளையாடல் செய்தான். அம் மீனின் வயிற்றிலிருந்த பெருமைவாய்ந்த விருப்பத்தினையுடைய ஆகமங்களைக்கவர்ந்தும் மீட்டான். பின்னும், அந்த ஆகமங்களை, மகேந்திரமலையில் இருந்தவாறே, பொருந்திய ஐந்துமுகங்களாலும், ஐந்து பெருமுனிவர்க்கும் தானே உபதேசித்தும் அருளினான்!

[மகேந்திரம், நெல்லை மாவட்டத்தில் பொதியத்துக்குத் தென்புறமாக விளங்குவது. நயப்பு-இன்பம். கிராதன்-வேடன். கிஞ்சுகம் - முள்முருக்கம்பூ. விராவு - நெருங்கு. இறைவனிடம் உபதேசங்கேட்ட முனிவர்கள் அகத்தியர், காசிபர், கௌதமர், பரத்துவாசர், கௌசிகர் ஆகியவர்.

*வேடனாகிய விளையாடலைப் பாரதத்துட் காண்க. வலைவீசிய விளையாடலைத் திருவிளையாடல் கூறும்.]*

## 3. ஆச்சார்யனும்! குதிரைவீரனும்!

நந்தம் பாடியில் நான்மறை யோனாய்
அந்தமில் ஆரிய னாயமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை ஈசனிப் புவனியை உய்யக்
கூறுடை மங்கையுந் தானும்வந் தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்
தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்

*நந்தம்பாடி என்னும் பதியிடத்தே, நான்மறைகளையும் உணர்த்துகின்ற முடிவற்ற ஆச்சாரியனாகவும் அவன் எழுந் தருளியிருந்தான். வெவ்வேறான உருவங்களும், வெவ்வேறான குணங்களும் நூறுஇலட்சம் வகையினை உடையதாகி விளங்க, இடபவாகனத்தை உடைய ஈசனான அவன், இவ்வுலகினை உய்விக்கும் பொருட்டாகத், தனது இடப்பாகத்தினை உடை யாளோடு தானுமாக வந்து, பலகாலும் பலவிடத்தும் உல கினர்க்கு அருளிச்செய்தான்.*

*குடதிசை நாட்டிடத்தே, குதிரைகளை நடாத்திக் கொண்டு, அழகுபொருந்தத்தானே குதிரைவீரனாகவும் எழுந் தருளினான். வேலம்புத்தூர் என்னும் பதியில் எருதுவிடுத்து அருளியதுடன், தன்னுடைய திருக்கோலத்தைப் பொலி வாகக் காட்டிய கொள்கையினையும் உடையவன் ஆயினான். சாந்தம்புத்தூரில், வில்லினாற் போர்செய்கின்ற வேடன் ஒருவனுக்குக் கண்ணாடியில் காட்சிகொடுத்தும் அருள்செய் தான்.*

## 4. குதிரைச் சேவகன்!

மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டி யன்தனக் குப்பரி மாவின்

ஈண்டு கனகம் இசையப் பெறாஅது
ஆண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி ஆண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்

குதிரைக்குக் கொள்ளுப் பையினைக் கட்டியருளுதற் பொருட்டாக அவன் குதிரையினின்றும் இறங்கியபோது, முற்றிலும் நெருப்புப்போன்ற தன் உருவத்தினைப் பாண்டியன் காணுமாறு அழகியதாகக் காட்டிய, பண்டை முறையினையும் அவன் உடையவன். திருமாலோடு பிரமனுக்கும் அளந்தறிதற்கு இயலாதவனாகவும் அவன் விளங்கியவன். காட்டுநரிகளைக் குதிரைகளாகச் செய்த நற்செயலினையும் அவன் உடையவன். பாண்டியனை ஆட்கொண்டு அருள்பவனாக அழகுமிக்க தன்திருவடியோடு, அவனுக்குக் குதிரைகளை விற்று, அவன் விலையாகத் தந்த திரண்ட பொன்னை வாங்கிக் கொள்ளுவதற்கு உடன்படாது, அதனால் அவன் செயலற்று வியந்தவனாயிருக்க, அவன் தன் திருவருள்வழியினை நாடி இருக்கும் பொருட்டாக, அவனுக்குத் தூண்டுதல் விளைவிக்கும் தன் ஒளியுருவினைச் சிறிதே வெளிப்படுத்திய அந்தத் தொன்மையினையும உடையவன் அவன்.

அந்தணனாகி வந்து என்னை ஆட்கொண்டருளினவன் அவன். இந்திரசாலத்தைத் தோற்றுவித்த தன்மையினனும் அவன். மதுரையாகிய பெரிய நல்ல பெருமைவாய்ந்த நகரத்திலேயிருந்து, சுந்தரசாமந்தன் என்ற அன்பனின் பொருட்டாகக் குதிரைவீரனாகி வந்த கோட்பாட்டினை உடையவனும் அவன்.

## 5. கரந்த கள்ளன்!

ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்புந்
திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்

*அந்த மதுரைமா நகரத்திலேயே, அடியவளாகிய செம்மனச் செல்வியின் பொருட்டாக அவட்குரிய ஆளாகி வந்து, மண்சுமந்து அருளிய பரிசினையும் அவன் உடையவன். உத்தரகோசமங்கை என்னுமிடத்திலிருந்து ஞானசிரிய வேடத்தினைக் காட்டிய தன்மையனும் அவன். திருப்பூவணம் என்னுமிடத்தில் விளங்கிஇருந்து அருளிச்செய்து, தூயதாகிய அழகிய தன் திருமேனியினைக் காட்டியருளியவனும் அவன். திருவாதவூரினிடத்தே இனிதாக எழுந்தருளிப் பாதச்சிலம்புகளின் ஒலியினைக் காட்டியருளிய பண்பினையும் அவன் கொண்டவன். அழகுநிரம்பிய திருப்பெருந்துறைக்கு இறைவனாகிப் பெருமைபொருந்திய ஒளிப்பிழம்பிலே மறைந்துபோயின கள்ளத்தையும் அவன் உடையவன்!*

*[உத்தரகோச மங்கையில் இறைவனே தமக்கு ஞானசிரியனாகி அருளுதல் வேண்டுமெனத் தவம் கிடந்தவர் பொருட்டு, இறைவன் வித்தக வேடம் காட்டினன். பூவணத்தில், பொன்னனையாளுக்குக் காட்சியளித்து உதவினன்.]*

## 6. காட்டிற் கரந்தவன்!

பூவலம் அதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசுந்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனில்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்கு
அட்டமா சித்தி அருளிய அதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்

*திருப்பூவலம் என்னுமிடத்திலே அழகுடன் எழுந்தருளி, அடியவரின் பாவங்களனைத்தையும் ஒழித்தருளிய கருணையாளனும் அவன். பாண்டியனுக்கு வெற்றியுண்டாகும் பொருட்டுத் தண்ணீர்ப்பந்தல் வைத்து, நல்ல நீர்ச்சேவகனாக இருந்த உபகாரியும் அவன். திருவெண்காட்டிலே விருந்தாளியாகிக் குருந்த மரத்தின் அடியில் வீற்றிருந்தவனும் அவன். திருப்பட்ட மங்கையில் அழகுடன் வீற்றிருந்து, அங்கே அட்டமா சித்திகளைக் காட்டியருளியவனும் அவன். வேடுவனாகி வந்து, வேண்டும் வடிவினை எடுத்துக்கொண்டு, காட்டிடத்தே சென்று ஒளித்த வஞ்சகத்தை உடையவனும் அவன்.*

*[அஷ்டமாசித்திகள் அணுவாதல், மேருவாதல், எளிதாதல், பழுவாதல், எங்குமியங்குதல், விரும்பிய இன்பம்*

பெறுதல், முத்தொழில் புரிதலின் முதன்மை, தன்வயப் படுத்தல் என்பன.]

### 7. ஞானம் நல்கினான் !

மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
பாண்டூர் தன்னில் ஈண்ட இருந்துந்
தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவில்
கோவார் கோலங் கொண்ட கொள்கையுந்
தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்

*அங்ஙனம் கரந்த பின்னர், உண்மையினைக் காட்டுதற் பொருட்டாக, விரும்பிய வடிவினை மேற்கொண்டு, தகுதியுடையான் ஒருவன் போலாகின தன்மைகொண்டானும் அவன். ஓரி என்னும் ஊரினிடத்தே விருப்பமுடன் எழுந்தருளியிருந்து, பூமியிற் சிறுகுழந்தை போலாகியிருந்தவனும் அவன். பாண்டூரில், அடியவர்க்கு விளங்குமாறு நெருங்க வீற்றிருந்தவனும் அவன். தேவூர்க்குத் தென்பக்கத்திலே விளங்கும் தீவினிடத்தே, அரசக்கோலத்தைக் கொண்டிருந்த கோட்பாட்டினை உடையவனும் அவன். தேன்பொருந்திய மலர்ச்சோலைகள் சூழ்ந்த திருவாரூரின்கண், முனிவர் பலருக்குச் சிவஞானத்தினைக் கொடுத்தருளி உபகாரம் செய்தவனும் அவனே யாவான்.*

*[ஓரியூர்த் திருவிளையாடலை விருத்த குமார பாலரான படலத்துட் காண்க. பாண்டூர், தேவூர் என்பன பாண்டிவள நாட்டு ஊர்கள்.]*

### 8. சைவன் ஆகினான்!

இடைமரு ததனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்தஅப் பரிசும்
ஏகம் பத்தின் இயல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசுந்
திருவாஞ்சி யத்திற் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமுஞ்
சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசுங்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும்

திருவிடை மருதூரில் மிகவிருந்து, பரிசுத்தமான தன் திருவடியினை நிலைபெறுத்திய சிறப்பினனும் அவன். திரு வேகம்பத்தில் இயற்கையாயிருந்து, பெண்பாகமாக விளங் கின தன்மையனும் அவன். திருவாஞ்சியத்தில், சிறப்புப் பெற வீற்றிருந்து, மணம்நிறைந்த கூந்தலையுடைய உமையவ ளோடு மகிழ்ந்திருந்தவனும் அவனுவான்.

பாண்டியனுக்குச் சேவகனுகி, வலியமைந்த வில்லினைக் கையேந்திப், பலவகையான இயல்புகளைக் காட்டியருளிய சிறப்பினனும் அவன். கடம்பூரிடத்தே, இடம் உண்டாக வீற்றிருந்தவனும் அவன். திருவீங்கோய் மலையினிடத்தே தன் மரகதத்திருமேனியினைக் காட்டியவனும் அவன். திரு வையாற்றினில் சைவாசாரியனின் வடிவுடனே வந்தவனும் அவனுவான்.

## 9. சிவலிங்கம் ஆகினுன் !

துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னுகியுங்
கழுமல மதனிற் காட்சி கொடுத்துங்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்பய மதனில் அறம்பல அருளியுங்
குற்று லத்துக் குறியா யிருந்தும்

திருத்துருத்தியில், விருப்பத்தோடு வீற்றிருப்பவனும் அவன். திருப்பனையூரில், விருப்பம் கொண்டிருந்தவனும் அவன். திருக்கழுமலத்துள், திருக்கோலம் காட்டியருளியவ னும் அவன். திருக்கழுக்குன்றத்தில் ஞானவடிவுடன் குற்ற மற்று இருந்தவனும் அவன். திருப்புறம்பயத்துள், பல தரு மங்களையும் அருளிச் செய்தவனும் அவன். திருக்குற்றலத் துள் சிவலிங்கவடிவாக எழுந்தருளி இருந்தவனும் அவனுவான்.

## 10. தானுகிய தயாபரன் !

அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்டு
இந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்
தானே யாகிய தயாபரன் எம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னுகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுட்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்

முடிவில்லாத பெருமையினை உடைய தனது நெருப்பு உருவத்தினை மறைத்து, அழகிய வேடத்தையுடைய ஒப்பற்ற முதற்பொருளின் வடிவத்தினை மேற்கொண்டு, இந்திரசாலத்தைப்போலத் திடுமென எழுந்தருளினவனும் அவன். எல்லார் குணமும் தன்னிடத்தே அடக்கித் தாமொருவனே முழு முதற்கடவுளாகிய தயாபரனும் அவன்! அத்தகைய எம் இறைவன், சந்திரதீபம் என்னும் திருப்பதியிலே சாத்திர போதகனாகவும் ஆகியிருந்தான். ஆகாயத்தினின்றும் இறங்கி வந்து, அழகுவாய்ந்த பாலைநிலத்துள், அழகிய திருக்கோலத்தோடும் வீற்றிருந்தான்.

## 11. பெரிதான கருணையன்!

மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை அருளுடை அண்ணல்
எந்தமை ஆண்ட பரிசது பகரின்
ஆற்றல் அதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை யொருங்குடன் அறுக்கும்
ஆனந் தம்மே ஆறு அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்

மந்திர நூலாகிய ஆகமங்கள் எல்லாம் வெளியிடப்பட்ட பெருமலையான மகேந்திரம் என்னும் மலையினுக்கு உரிய தலைவனும் அவன். அளவற்ற பெருமையும் அருளும் உடைய பெரியோனும் அவன். எம்மை அவன் ஆட்கொண்டருளிய தன்மையினைக் கூறினால், வல்லமை உடைய அழகுபொருந்திய திருமேனியிடத்தே, திருவெண்ணீற்றுக் கொடியினை உயர்த்துக் காட்டியும், பிறவித்துன்பத்தினை ஒருங்கே சேதிக்கின்ற இன்பமே நெறியாக அருளிச்செய்தும், உமாதேவியினை ஒருபாகத்தே கொண்டருளிய மிகப் பெருங் கருணையாளனாகத் தோன்றியும், அவன் வந்தனன்.

## 12. கழுநீர் மாலையன்!

நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்
மூல மாகிய மும்மலம் அறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்

நாதமாகிய பெரிய பறை முழங்கி ஒலிசெய்ய, அன்பர் மனம் களங்கம்அடையாமல் ஆட்கொண்டு அருள்பவனுக அவன் வந்தான். சூலாயுதத்தைத் தன்னுடைய கையிற் பிடித்தருளினுன். மூலகாரணமாகிய மும்மலங்களையும் அறுக்கின்ற பரிசுத்தத் திருமேனிகொண்டு ஒளிவிடுகின்ற சோதியனுகவும் விளங்கினுன். அன்பரிடத்து அன்புடையவனுகிச், செங்கழுநீர் மாலையினைப் பொருத்தமுடையதாக அழகு பெறத் தரித்துமிருந்தான்!

## 13. அருள்மலை ஆகவும்!

அரியொடு பிரமற் களவறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் அடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்
ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப ஊர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்

திருமாலுக்கும் பிரமனுக்கும் எல்லை அறியப்படாதவன் அவன். அவன் குதிரையின்மீது ஏறிவந்த விதத்தினையும் உடையவன். மீண்டும் பிறவிக்குவராத முத்தி நெறியினை அருள் புரிபவனும் அவன் ஆவான். பாண்டிவள நாடே தனக்குரிய பழம்பதியாக உடையவனும் அவன். பக்திசெய்கின்ற அடியவரை, மிகவும் மேலான முத்தியுலகிலே கொண்டு வைப்பவனும் அவன். திருவுத்திரகோச மங்கையினை தன் திருப்பதியாக உடையவனும் அவன். முதன்மையான மூர்த்திகட்குத் திருவருள்புரிந்தவனும் அவன். 'தேவதேவன்' என்பதே தன் திருப்பெயராகக் கொண்டுள்ளவனும் அவன். அஞ்ஞான இருளினை நீக்கியருளின இன்பவாகனனும் அவன். அவன், எமக்கு அருள்செய்த பெருமை, அருள்மலையினைப் போலப் பெரிதும் உயர்வுடையதாகும்.

## 14. நாதனே! நாதனே!

எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்
அப்பரி சதனுல் ஆண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி

அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற வொன்ற உடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியுங்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாத மெய்தினர் பாத மெய்தவும்

*எத்தகைய பெருந்தன்மையினையும் எவ்வகைப்பட்டவர் திறத்தினையும் அவ்வத் தன்மைகளாலேயே ஆட்கொண்டு அருள்பவன் அவன். நாய்போலும் கடையேனாகிய என்னை, 'நன்மைமிகுந்த தில்லைப்பதியுள் அழகுநிறைந்த அம்பலத்திடத்தே வருக' என்றனன். என்னை இவ்விடத்தே பொருந்துமாறு ஒழித்தருளினான். அன்று, தன்னுடனே கூடப்போயின அடியார்கள் பொருந்தப்பொருந்த அவரோடுங் கலந்து, அவர்க்கு அருளிச்செய்தனன். தன்னை அடைதலை விரும்பி அன்று வராதவர், எரியிடத்தே பாய்ந்து தம் உடலை ஒழித்த காலத்தும், ஆசை கொண்டு மயக்கத்தினை அடைந்தும், பூமியிடத்தே புரண்டு வீழ்ந்து அலறியும், காலால் வேகங் கொண்டு ஓடிக் கடலில் விழுதற்கு நெருங்கியும், 'நாதனே! நாதனே!' என்று அழுது அரற்றியும் திருவடிப்பேற்றினை அடைதற்கு முயன்றனராக, அவர்களும் அந்தப் பேற்றினை அடைந்து திளைக்குமாறு, அவர்க்கும் அவன் அருளினான்.*

## 15. கைலை கிழவோன் !

பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை யம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை உயர்கிழ வோனே.

*'பதஞ்சலி முனிவருக்கு அருளிச்செய்த மேலான கூத்தப்பிரானே!' என்று இதயம்வருந்த நின்று ஏக்கமுற்றவர் ஏங்கியவாறே நிற்கவும், அழகுபெற்ற இமயமலையின் இயல்பினையுடைய அழகிய பொன்வண்ணமாக விளங்குகின்ற புலியூர்ப் பொதுவிடத்தினிலே நடனஞ் செய்திருப்பவன் அவன். கொவ்வைக்கனி போன்ற செவ்விய வாயினையுடைய*

உமையம்மையோடு காளிக்கும் அருளிச்செய்த திருமுகத்தில், அழகு பொருந்திய குறுநகை விளங்க நடனமிடும் எம் பெருமான் அவன். தன் திருவடிகளைச் சரணாகக் கொண்ட அடியவர்களோடும், ஒலிக்கின்ற கயிலாயத்திலே உயர்ந்து விளங்கும் உரிமையுடைய பிரானும் அவன். விளங்குகின்ற புலியூரினும் அவன் எழுந்தருளி, இவ்வாறு எனக்கு அருளிச் செய்தவனும் அவனே யாவான்.

# 3. திருவண்டப் பகுதி

## சிவனது தூலசூக்குமத்தை வியந்தது

(இணைக்குறள் ஆசிரியப்பா)

*[இதுவும், தில்லையில் அருளப்பெற்றதே யாகும். சிவனது வியாபகப் பெருமையினையும், வியாபக நுட்பத்தினையும் பாராட்டியது இது.]*

### 1. பெரியோன் அவன்!

திருச்சிற்றம்பலம்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் தெரியின்

*அண்டப் பகுப்பினையுடைய பூகோளத்தின் விளக்கம் அளவிட்டு உரைத்தற்கும் அரியதான ஒரு தன்மையினை உடையது. வளமான பெருங்காட்சியினையும் அது உடையது. அவை ஒன்றனுக் கொன்று மேலாக நிலைபெற்றுள்ள அழகினைச் சொல்வதானால், அவை நூற்றொரு கோடிக்கும் அதிகமாகப் பரந்து பெருகியுள்ளன எனலாம்.*

*ஆராயுமிடத்து, வீட்டினுள் நுழைகின்ற கதிரவனின் கிரணத்திலே நெருங்கித் தோற்றும் அணுக்களையொப்பச் சிறியவாக அவையனைத்தும் விளங்குமாறு, அத்துணைப் பெரியோனாக விளங்குபவன், இறைவன் ஆவான்.*

### 2. பெயர்க்கும் குழகன்!

வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியுந்
தோற்றமுஞ் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையுஞ்
சூக்கமொடு தூலத்துச் சூறைமாருதத்
தெறியது வளியிற்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்

படைப்புக் கடவுளரான பிரமர்களின் கூட்டமும், காத்தற் கடவுளரான திருமால்களின் பெருக்கமும், அவர்களின் தோற்றமும், அவர்களின் மேன்மையும், அவர்களின் இறுதியும் ஆகியவற்றோடு பொருந்திய, மிகப்பெரு ஊழிகளின் அழிவும் இருப்பும் அவனாலேயே நிகழ்வனவாம். சூக்குமப் பொருள்களோடு அமைந்துள்ள பருப்பொருள்கள் அனைத்தையும், பெரிய சூறைவளிக் காற்றானது சுழற்றி அழிப்பதுபோல,அனைத்தையும் நிலைபெயர்க்கும் அழகனும் அவனேயாவான்!

## 3. வீடுபேறாய் நின்றான்!

படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்கும் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன் நாள்தொறும்

அனைத்தையும் படைப்பவனாகிய பிரமனை மீளவும் படைக்கின்ற பழையோனும் அவனே. படைத்தவை அனைத்தையும் காக்கின்ற காத்தற்கடவுளினைக் காப்பாற்றுகின்ற கடவுளும் அவனே. அங்ஙனம் காக்கப்படுவனவற்றை எல்லாம் உரியகாலத்தில் தன்னுள் ஒடுக்குபவனும் அவனே. அங்ஙனம், தன்னால் ஒடுக்கப்பெற்றவற்றைப் பற்றி யாதும் கருதாதிருக்கும் கருத்தினையுடைய கடவுளும் அவனே!

மேன்மை உடையனவாகிய அறுவகைப்பட்ட கொள்கைகளையுடைய அறுவகைச் சமயத்தினைச் சார்ந்தவர்களுக்கும், வீடுபேறு அளித்தற்கு உரியவராய் நிலவுகின்ற கடவுளரின் தொகைகள் எல்லாம், தன்னை நோக்கப் புழுக்கள்போலத் தோன்றுமாறு, தானே அனைத்தினும் பெரியோனாக விளங்கி, உயர்முத்தி அளிக்கின்ற உரிமைஉடையவனும் அவனே!

## 4. அனைத்தையும் அமைத்தோன்!

அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன் திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்

றனைப்பல கோடி யெனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று

ஞாயிற்று மண்டலத்திலே நாள்தோறும் தோற்றுகின்ற ஒளியினை அமைத்தவனும் அவனே. அழகு பொருந்திய திங்கள் மண்டலத்தினிடத்தே குளிர்ச்சித்தன்மையினை வைத்தவனும் அவனே. மிகுந்த ஆற்றலையுடைய நெருப்பினிடத்தே வெம்மையினை விளங்கச்செய்தவனும் அவனே. பூதங்களுள் நிலையாக விளங்கும் வானத்தினிடத்தே, எல்லாவற்றிற்கும் இடங்கொடுத்துப் பரந்துவிளங்குகின்ற, கலந்துநிற்கும் இயல்பினை அமைத்தோனும் அவனே. மேன்மைதங்கிய காற்றினிடத்துக் கிளர்ந்தெழும் ஆற்றலைப் பொருத்தியவனும் அவனே. குளிர்ச்சி பொருந்திய நீரினிடத்து, இனிதான சுவையினை வைத்தவனும் அவனே. வெளிப்படையான மண்ணினிடத்தே திரட்சியினை அமைத்தவனும் அவனே. இவ்வாறே, எத்துணைப் பலகோடியாகிய அத்துணைப் பலவாகிய பிறபிற பொருள்களையும், அவ்வவற்றுக்குள் பொருத்தமாக, அவ்வவற்றின் தன்மையினை, அவ்வவற்றினிடத்தே பொருத்தி வைத்தவனும் அவனே யாவான்!

## 5. நீற்றோன் காண்க!

முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் தானே காண்க
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி அரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும்

அதுவன்றியும், படைப்புப் பொருள் அனைத்திற்கும் முற்பட்டவன் அவனென நோக்கியருள்க. அனைத்தையும் உடையவன் அவனென அறிக. தனக்கு யாரும் ஒப்பில்லாதவனாகத் தானே தனக்கு நிகராக விளங்குபவனும் அவன் என்றறிக. பண்டைக்காலத்தில் வராகவதாரம் கொண்ட திருமாலின் பற்களைப் பிடுங்கித் தன் மார்பிடத்து அணிந்தவனும் அவனென்று அறிக. தாருகாவனத்து முனிவர்கள் வேள்வி செய்து விடுத்த காட்டுப்புலியினைக் கொன்று அதன் தோலினை அரையிடத்து உடுத்தவனும் அவனென்று அறிக. திருவெண்ணீற்றை அணிந்தவனும் அவனே என்று அறிக!

## 6. சொற்பதம் கடந்தவன்!

ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க
அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க

பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க

*நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அவனைப் பிரிதற்கு ஆற்றாது யானும் வருந்துவேன். அந்தப் பிரிவு நீட்டித்ததானால், ஐயோ! நான் கெட்டு அழிந்தே போவேன். இனிய ஓசையினையுடைய வீணையிடத்தே நாதம் பொருந்தியிருப்பது போல, என் உயிரினுள் கலந்திருப்பவன் அவன். அப்படி என்னுட் கலப்பதாகிய ஒரு செயலினை அவ்விடத்துப் பரிபக்குவத்தை நோக்கி நிகழ்த்துவதற்கு அறிந்தவனும் அவன். அவனே எவற்றிற்கும் மேலானவன். அவனே அனைத்திற்கும் பழைமையானவன். படைப்புக்கு இறையாகிய பிரமனும், காத்தற்கு உரியவனான திருமாலும், அடிமுடி காணவொண்ணாது மயங்கநின்ற பெரியவனும் அவனே யாவான்!*

*அவன் வியத்தற்கு உரியவன். அவன் பல்வேறு வடிவுடனும் விளங்குபவன். அவன் சொல்லின் அளவினையுங் கடந்த பழைமையினை உடையவன். மனமும் சென்று பற்றுவதற்கு ஒண்ணாத தூரத்திலுள்ளவனும் அவனே யாவான்!*

## 7. பத்தி வலையிற் படுவோன்!

பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மை இலையோன் காண்க
இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க

*ஆயினும், அன்பரது பத்தியாகிய வலையினுள் எளிதாக அகப்பட்டுக்கொள்பவனும் அவன். 'ஒப்பற்றவன்' என்று சொல்லுதற்கு உரிய ஒருவனும் அவனே. விரிந்த உலகம் எங்கணும் விரிந்துநிற்பவனும் அவனே. அணுப்போன்ற நுட்பத்தன்மையினை உடைய அழகனும் அவனே. இணையற்ற பெருமையினையுடைய ஈசனும் அவனே. அறிதற்கு அரியதானவை அனைத்தினும் அரியவனும் அவனே. எப்பொருளினிடத்தும் பொருந்தியிருந்து, அவற்றை வளர்த்துக் காப்பவனும் அவனே. எத்தகைய நூலறிவினாலும் உணர்ந்து அறியப்படாத நுட்பம் உடையவனும் அவனே யாவான்!*

## 8. சுரக்கும் அமுதம்!

மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதுஞ் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியுங் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண்ஆண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணால் யானுங் கண்டேன் காண்க
அருள்நனி சுரக்கும் அமுதே காண்க

*மேலோடு கீழுமாகி எங்கும் நிறைந்திருப்பவனும் அவனே. முடிவும் முதலும் நீங்கியிருப்பவனும் அவனே. பிறவியாகிய கட்டினையும், பிறவி நீக்கமாகிய வீட்டினையும் உண்டாக்குபவனும் அவனே. இயங்காப்பொருள், இயங்கும் பொருள் ஆகிய அனைத்திலும் கலந்து, அவையாகி நிற்பவனும் அவனே. ஊழிநிகழ்ச்சியினையும் அதனுடைய முடிவினையும் கண்டவனும் அவனே. எல்லாரும் தன்னை அடையும் பொருட்டாக எழுந்தருளுகின்ற ஈசுவரனும் அவனே. தேவர்களாலும் காணவொண்ணாத சிவமாக விளங்குபவனும் அவனே. பெண் ஆண் அலி என்கின்ற மூவேறு தன்மையினைக் கொள்பவனும் அவனே. அத்தகைய சிறப்பினனை யானும் என்னுடைய கண்களாற் கண்டேன். அவன், அருளினை மிகுதியாகச் சுரக்கின்ற அமுதவூற்றாதலையும் அறிந்தேன்!*

## 9. கருமா முகிலில் தோன்றினன்!

கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந் தானும் உடனே காண்க
பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலில் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழில் தோன்றி வாளொளி மிளிர

அவனுடைய கருணைவடிவாகிய பெருமையினை யான் உணர்ந்தேன். இந்நிலவுலகத்தில் என் பொருட்டாக அவன் தன் திருவடிகளைப் பொருந்துமாறு வைத்தருளினான். 'அவனே பரம்பொருளானவன்' என, அவனைக்கண்ட மாத்திரத்தாலே யானும் தெளிவடைந்துவிட்டேன். அவனும் என்னைத் தனக்கு அடிமையாக ஏற்றுக்கொண்டு எனக்கும் அருளிச் செய்தான். அவன், குவளை மலர்போன்ற கண்களை உடைய வளான உமாதேவியைத் தன் இடப்பாகத்தே கொண்டவன். அவளும் தானுமாக ஒருங்கேவந்து என்னைக் காத்தருளினான். மேன்மையான பேரின்பக்கடலாயதும் அவனது அந்த அருள் வெள்ளமே யாகும். சூல்கொண்ட கரிய பெருமேகம் போலத் தோன்றி, அழகுபொருந்திய திருப்பெருந்துறை என்கின்ற மலையின் மேலேறிச்சென்று, அழகுதிகழும் மின்னொளி யானது திக்குகள்தோறும் பரவ, ஐம்புலன்களின் கட்டாகிய ஒளிபொருந்திய பாம்புகள் அஞ்சி ஓடிப்போகுமாறு இடி முழக்கி, வெவ்விய பிறவித் துன்பமாகிய கடுவேனில் தன் விரிந்த தலையினைக் காட்டாது மறைத்துக்கொள்ள, மிக்க அழகுவாய்ந்த தோன்றிச்செடிகள் போலத் தன்னிடத்தே ஞானஒளியானது விளங்க, அவன் அருள் பொழியும் மேகமாக வந்தருளினான்.

## 10. உயிர்கள் துவண்டன!

எந்தம் பிறவியிற் கோபம் மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணந்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்கா தசைந்தன

எம் பிறவியாகிய இந்திரகோபப் பூச்சிகள் அவ்வேளையிற் செறிந்து தோன்றின. அவனுடைய மிகப்பெருங் கருணை யாகிய முரசம் ஒலித்து முழங்கியது. பூப்போன்றதாகிய அடியவரது கூப்பிய கைகள் காந்தள்மலர்கள் போலத் தோன்றின. அப்போது, குறையாத இன்பந்தரும் அருளாகிய அவனது நுண்ணிய துளிகள் கால்கொண்டன. செவ்விய ஒளிப்பெருக்கானது திசைதோறும் நிறைந்து மேலிட்டது. ஒரு வரையறைப்படுமாறு துன்பக்குளங்கள் கரையழிந்து

உடைந்தோட, அந்த அருள்வெள்ளம் எங்கணும் மிகுந்தது. அறுவகைச் சமயமாகிய ஒப்பற்ற கானல்நீரினை நீர்வேட்கை உண்டாக உண்ணுதற்கு நாடித்தொடரும் நெடிய கண்களை யுடைய மான்கூட்டங்கள் போலச், சிற்றறிவுயிர்கள் அதனைத் தம் அகன்ற பெருவாயினாற் பருகியும் அதனால் தம் விடாய் தீராவாகிய தளர்ச்சியோடும், மிகக் கெடுதியான தாகம் தீராவாகியும் வருந்தித் துவண்டன.

## 11. பாய்ந்த வெள்ளம்!

ஆயிடை வானப் பேரியாற் றகவயிற்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தூழூழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்
துருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்

அவ்விடத்தே, வானமாகிய பேரியாற்றின் உள்ளிடத்திலே, அவனது அருள்மழை மிகுதியாகப் பொழிந்தது. அந்த அருள்வெள்ளம், அடியவரை நோக்கிப் பாய்ந்து எழுந்தும் வருவதாயிற்று. பேரின்பமாகிய பெரிய சுழியினைச் சுழித்து மெய்ப்பொருளாகிய மணிகளை வாரிக்கொண்டு அது வந்தது. எம் பாசக்கட்டாகிய பெருங்கரைகளை மோதி அலைத்து அவ் வெள்ளம் இடித்துத் தகர்த்தது. முறைமுறையாகப் பெருகி வந்த எங்கள் நல்வினை தீவினைகளாகிய பெருமரங்களை எல்லாம் வேரொடும் பறித்து வீழ்த்தியவாறு, மேலும் அது பாய்ந்து வந்தது. முழுதும் அருளாகிய அவ் வெள்ளத்தினைச் செலுத்தி, அரிய மலைச்சந்தின் பெரிய கரையினை அது கட்டியது. தேன் விரிகின்ற இதயக்குளங்களின் உண்மையாகிய வாயினையும் அது அமைத்தது.

## 12. மேகன் வாழ்க!

மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவ ராரத் தந்த
அண்டத் தரும்பெறல் மேகன் வாழ்க

'பொறியடக்கம்' என்னும் சிறந்த அகிற்புகை சேரும் வரம்பினையுடைய, ஓங்காரமாகிய வண்டொலி எழுகின்ற, உள்ளக் குளத்திலே சென்று, மென்மேலும் அவ்வெள்ளம்

பெருகுவதாயிற்று. அங்ஙனம் அது மென்மேலும் பெருகுவதனை நோக்கி, வழிபாடு என்னும் வயலுள் அன்பென்னும் வித்தினை விதைத்துத், தொண்டராகிய உழவர்கள் அதன் விளைபயனைக் கொண்டு துய்க்க உதவியவன் அவன். அத்தகையவனாகிய, பரமாகாயத்தேயுள்ள, பெறுதற்கரிய மேகம் போன்ற கருணையாளன் வாழ்க!

## 13. எய்ப்பினில் வைப்பு!

கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க

கரிய படத்தையுடைய பாம்பினை அரைக்கச்சாக அணிந்திருக்கும் அந்தக் கடவுள் வாழ்க! அரிய தவத்தினை மேற்கொண்டவர்கட்கு அருள்செய்கின்றவனாகிய அந்த முதல்வன் வாழ்க! பிறவியச்சத்தினை நீக்கியருளிய வீரன் வாழ்க! நாடோறும் எம்மை வலியவிழுத்துத் தனக்கு அடிமைகொள்பவன் வாழ்க! எம்மைச் சூழ்ந்து கொள்ளுகின்ற பெருந்துயரத்தினை நீக்குபவன் வாழ்க! தன்னை அடைந்தவர்க்கு அரிய அமுதமாகிய பேரின்பத்தை அளித்தருள்பவன் வாழ்க! பெரிய மூங்கில்போன்ற நயப்பான தோள்களையுடைய உமாதேவியின் காதலன் வாழ்க! அயலார்க்குத் தானும் அயலவனாகவே இருக்கின்ற எம் தலைவன் வாழ்க! அன்பர்க்கு இளைப்புற்ற காலத்தில் பயன்படும் பெருநிதிபோன்ற செல்வன் வாழ்க!

## 14. வாழ்க! வாழ்க!

நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி, நாற்றிசை

நஞ்சினையுடைய அரவினை ஆட்டுவோனாகிய நம் பெருமானுக்கு வணக்கம்! எம்மைப் பித்தேற்றியருளிய பெரியவனுக்கு வணக்கம்! திருவெண்ணீற்றோடு தோற்றுதற்கு வல்லவனுக்கு வணக்கம்!

## 15. பூவினில் மணம் போன்றவன்!

நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியும் இல்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை

*நாற்றிசைகளினும் நடப்பவற்றை நடத்தியும், கிடப்பவற்றைக் கிடத்தியும், நிற்பவற்றை நிறுத்தியும் சொல்லளவைக் கடந்தவனாக விளங்கும் தொன்மையன் அவன். அவன், மனவுணர்வினாலே கொள்ளப்படாத தன்மையன்; கண்முதலாகிய புலன்களால் காணவும் படாதவன்; ஆகாயம் முதலிய பூதங்களை அவை வெளிப்பட்டுத் தோன்றுமாறு வகுத்தவன்; பூவினிடத்தமைந்த நாற்றத்தினைப் போன்று எழுந்து மேம்பட்டு, உலகெங்கும் நீக்கமற நிறைந்து, எவற்றிற்கும் சார்பாகப் பொருந்தியிருக்கின்ற பெருமையினை உடையவனும் அவனாவான்.*

## 16. ஊற்றிருந்து களிப்போன்!

இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச்செய்த ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி

*அவன், இந்நாளில் எனக்கு எளிதாக வந்து அருளிச் செய்தனன். அழிகின்ற தன்மையினை உடையதான இந்த உடம்பினை ஒழியச்செய்த ஒட்பமாகிய பொருள் அவனேயாவான். இன்று எனக்கு எளியனாக வந்திருந்து அருள் செய்த அவனைப் போற்றுகின்றேன்! கனிந்து அழிகின்ற இந்த உடற்கூட்டினை எனக்குத் தந்தவனைப் போற்றுகின்றேன்! என்னுள்ளத்தே இன்பஊற்றாக இருந்து களிப்புக் கொள்ளுகின்ற அவனைப் போற்றுகின்றேன்!*

## 17. பலர்க்கும் ஒளித்தனன்!

ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்

திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்
துற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்தும்

*தாங்கமுடியாத பேரின்பமானது பரவி அலைவீசுகின்றது; அதனைப் போற்றிக் கொண்டிருப்பதற்கு இயலாத இந்த உடம்பினை இனியும் தாங்கியிருத்தலை யான் வேண்டேன். மரகதமணிக் குவியல்களும் மாணிக்கங்களின் பெருக்கமும் ஒளிவிட்டு வீசுகின்ற தன்மையினைக் கொண்ட பொன்னொளியினைத் தன்மேனியின்பாற் கொண்டு விளங்குபவன் அவன். நான்முகன் சென்று தேடிக்காண முயன்றும் அவனுக்குத் தன்னை அவன் மறைத்து நின்றனன். முறைமையாக அவனை அடைதற்கான நெறிப்படி காண முயன்றவர்கட்கும் அவன் தன்னை மறைத்தனன். ஒருமைப்பாடுகொண்டு நோக்கும் உள்ளத்து உறுதியினை உடையவரான, உலகத்து உறவினர் வருந்துமாறு துறவு மேற்கொண்டு அவனை அடைய முயன்றவர்க்கும், தன்னைக் காட்டாது அவன் மறைத்தனன்*

## 18. மறைத்தான் !

மறைத்திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாள்நுதற் பெண்ணென ஒளித்துஞ் சேண்வயின்

*மறைகளின் முறைமைகளை ஆராய்ந்து வருந்தி, அவற்றின்படி முயன்றவர்கட்கும் தன்னை மறைத்தனன். 'இந்த உபாயத்தினாலே காண்போம்' என்று, ஒன்றினிடத்து முயன்று எதிர்பார்த்து இருந்தவர்க்கும், அந்த உபாயத்தினாலேயே தன்னைக் காட்டாது அவனும் ஒளித்துநின்றனன்.*

*பரம்பொருளாகிய அவனைச் சாந்தமாக நோக்கியும் மிகுதியாகப் பற்றி நிற்கவும் முயன்றவர்க்கும், அவன் தன்னைக் காட்டினான் அல்லன். ஆணாகத் தோற்றியும், அலி வடிவாகக் காட்டி மறைந்தும், ஒள்ளிய நெற்றியினையுடைய பெண்ணாகத் தன்னைக் காட்டி ஒளித்தும் அவன் நின்றனன்.*

## 19. சோரனைக் கண்டனம் !

ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை

அருந்தவர் காட்சியுள் திருந்த வொளித்தும்
ஒன் றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்

*ஐம்புலன்களையும் நெடுந்தொலைவிற்கு அகன்று போகுமாறு போக்கி, ஏறுதற்கரிய மலைகள்தோறும் சென்று, தம் பாற் பொருந்தினவற்றைத் துறந்து, வெற்றுயிரோடு கூடிய உடம்பினை உடையவராக விளங்கும், அரிய தவநெறியினரின் காட்சியினுள்ளும் திருத்தமுறத் தன்னை மறைத்துநின்றனன். ஒன்று உண்டுளனவும், ஒன்று இல்லையெனவும் அறிந்துணர்கின்ற அறிவினுக்கும் அறிந்துணரப் படாதவாறும் அவன் தன்னை மறைத்தனன். இங்ஙனமாகப் பண்டை நாளிலிருந்தே பயிலுந்தோறும் மறைந்து போகின்றவனாகி, இன்றும் பழகுந்தோறும் மறைத்தலைச் செய்யக் கூடியவனாகி, அன்பர்களது மனத்தைத் தன்பாற் கவர்ந்து கொள்ளுகின்ற கள்வனை, யாம், இன்று எம் முன்பாகவே கண்டோம்.*

## 20. பற்று ஒளித்தவன் !

ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்

*அனைவரும் ஆரவாரித்துக் களியுங்கள்! புத்தம் புதிய மலர்களால் தொடுத்த மாலைகளாலே அவன் திருவடிகளைத் தளையிடுங்கள்! அவனைச் சுற்றிச்சூழ்ந்து நில்லுங்கள்! அவன் எங்குச் சென்றாலும் தொடர்ந்து செல்லுங்கள்! அவனை மறைந்து போகுமாறு விட்டுவிடாதீர்கள்! அவனைப் பற்றிக் கொள்ளுங்கள்!'' என்று இப்படியாகக் கூறி, அவனைப் பற்றிக் கொள்ள முயல்கின்றவர்கட்கு அவர்களது பற்றுக்கள் முழுவதனிலும் ஒளித்தவனும் அவனே ஆவான்.*

## 21. ஆட்கொண்டான் !

தன்னே ரில்லோன் தானே யான தன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி ஆட்கொண் டருளி

*தனக்கு யாரும் ஒப்பில்லாத பெருமான் அவன். அனைத்தும் தானேயாகி அத்துவிதமாய்க் கலந்து நிற்பவனும் அவன். அந்தத் தன்மையினை என்போல்பவர் கேட்டுத் தெளிவு கொள்ளுமாறு அவனே வந்து அறிவுறுத்தி அருள்*

செய்தனன். என்னை அறைகூவி அழைத்துத் தனக்கு அடிமை யாக்கியும் கொண்டனன்.

## 22. காட்சி அநுபவம் !

மறையோர் கோலங் காட்டி யருளலும்
உளையா அன்பென் புருக வோலமிட்டு
அலைகடற் றிரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவும்
கடைக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்

அவன், அந்தணனாகிய ஆசிரியக்கோலத்தினைக் காட்டி வந்து எனக்கு அருளினான். அங்ஙனம் அருளிச்செய்ததும், கலப்பில்லாத அன்பினாலே எலும்பும் உருகும்படியாக யான் அவனைநோக்கி முறையிட்டேன். கொந்தளிக்கும் கடலினது அலைகளைப்போலக் கூவிக் கூவி எழுந்தும் தாழ்ந்தும் கதறினேன். தலைமயங்கிக் கீழேவிழுந்து புரண்டு அரற்றினேன். பித்தரைப்போல மயங்கிப் பிதற்றினேன். வெறிகொண்டவனைப் போலக் களித்துக் கூவினேன். நாட்டினர்கள் எல்லாரும் மருட்சிகொள்ளவும், கேட்டவர்கள் அனைவரும் வியப்புக் கொள்ளவும், தன்மேற் பாகனை ஏற்றாத மிகப்பெரும் மதங் கொண்ட களிற்றியானையினைப் போல, அந்தக் களிப்பினைத் தாங்கமாட்டாது நிலைகலங்கி நின்றேன். அங்ஙனம் என்னால் தாங்குதற்கும் இயலாத பேரின்பத்தினை என்னுள் நிறைத்து, என் உறுப்புக்கள் அனைத்தும் கொம்புத்தேனைப் போன்று இனிக்குமாறு, என்பால் இன்பவுணர்வு எழுமாறு செய்தவனும் அவன்.

## 23. வாழி முறையோ !

ஏற்றார் மூதூர் எழில்நகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையில் நெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ

தன்னைப் பகைத்து எதிர்த்தவராகிய திரிபுரத்தினரின் பழைய ஊர்களை, அழகுவிளங்கும் சிறுநகையாகிய நெருப்பினாலேயே அழியச்செய்தவன் அவன். அங்ஙனமே, தன் அரு

ளாகிய பெருநெருப்பினில் அடியேங்களுடைய அடிமைக் குடும்பத்தில் ஒருத்தரும் விடுபட்டுப் போகாதபடியாக, அனைவரையுமே தன்னுள் ஒடுக்கியும் கொண்டனன். எனக்கு பரந்த கையினிடத்ததாகிய நெல்லிக்கனியினைப் போல நுகர் வதற்கு எளிதானவனும் தானே ஆயினான். அந்த இன்பத் தினைப் பிறருக்கு எடுத்துரைக்கவும் யான் அறியேன்! இனியும் யான் உடலோடுங்கூடி வாழ்தலும் முறைதானோ ?

## 24. இன்ப நிறைவு!

தரியேன் நாயேன் தானெனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்
கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடல் திரைபுரைவித்
துவாக்கடல் நள்ளுநீர் உள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறுந்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்தேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ
துள்ளங் கொண்டோர் உருச்செய் தாங்கெனக்
கள்ளூ ருக்கை யமைத்தனன்—

*நாய்போன்ற யான் இனியும் அதனைத் தாங்கமாட்டேன். அவன் எனக்குச்செய்த அந்த விதத்தினை யாதெனத் தெரிந் திலேன். ஐயகோ! யான் செருக்கற்று ஒழிந்தேன். அடியே னுக்கு அருளிய அந்தப் பேரினபத்தினை அளந்து அறியவும் இயலாதவன் யான். அதனைப் பருகியும் நிறைவினைப் பெற் றிலேன். விழுங்கியும், மிகுதியாக மேலும் விழுங்குவதற்கு ஆற்றல் இல்லாதவனாகவே உள்ளேன்.*

*செழுமையாகிய குளிர்ந்த பாற்கடலின்கண் எழுகின்ற அலைகளைப்போல, இன்பஅலைகளை என்உள்ளத்தே தோற்றுவித் தனன். முழுமதி நாளிலே பொங்குகின்ற கடல்நீரைப்போல, என் மனத்துள் இன்பம் பொங்கித் ததும்புகின்றது. சொல் லினாலே எடுத்துரைக்கவும் இயலாதபடி அந்த அமுதமானது மயிர்க்கால்கள் தோறும் நிறைந்திடுமாறும் செய்தனன். தீயேனுடைய ஊன் நிறைந்த உடலின் அணுத்தோறும் இன் பத்தை நிறைத்தனன். நாயேனின் உடலினுள்ளே சிறுவீட் டிருக்கை கொண்டிருந்து, இனிதான பேரின்பத் தேனை எங் கணும் பாய்ச்சினன். நிறைந்த அற்புதமான அமுத தாரை*

களை என் எலும்புத் துளைகள்தோறும் பாயுமாறு செய்தனன். உருகுவதாகிய ஒரு மனத்தைக் கொண்டு ஒரு வடிவினை அமைத்தாற்போல, அடியேனுக்கு அமுதம்ஊறிக் கசிகின்ற ஓர் உடம்பினையும் தந்தனன்.

## 25. கருணைத் தேன்!

—ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன்; என்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

ஒளிமிக்க கற்கண்டினைப்போன்று இனிமை உடையதான கனியினைத்தெரிந்தெடுத்து உண்ணுகின்ற களிற்றினைப்போல, இறுதியாக, என்னையும் இருப்பதாகச் செய்தருளினான். அவனது கருணையாகிய மேலான தேனானது என்னிற் கலக்குமாறு அருளோடு எழுந்தருளிவந்து, மேலான அமுதமயமாக என்னையும் ஆக்கினான். அவனே, பிரமனும் திருமாலும் தேடியும் அறியாத, பெரிதான தன்மையினை உடைய சிவபிரான் ஆவான்.

# 4. போற்றித் திருவகவல்

## சகத்தின் உற்பத்தி

(நிலைமண்டில ஆசிரியப்பா)

['சகத்தின் உற்பத்தி' என்பது, உலகத்து உயிர்களின் தோற்ற முறையாகும். இந்த அகவலின் ஒரு பகுதி அதனைக் கூறுவதனால், இவ்வாறு இதனைக் குறித்தனர்.]

### 1. எளிதாய் வந்தனன்!

திருச்சிற்றம்பலம்

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்று
அடிமுடி யறியும் ஆதர வதனிற்
கடுமுரண் ஏன மாகி முன்கலந்
தேழ்தலம் உருவ இடந்து பின்னெய்த்து
ஊழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கடல் உலகினில்

*நான்முகன் முதலாகிய வானவர்கள் அனைவரும் தொழுது எழுந்தனர்: அத்தகைய பேருருவினை எடுத்துத் தன் இரண்டு அடிகளாலும் மூன்று உலகங்களையும் அந்நாளிலே அளந்தனன் திருமால்; அப்போது, நாற்றிசைகளினுமுள்ள முனிவர்களும் தம் ஐம்புலன்களும் மகிழ்ச்சிகொள்ள அவனைத் துதித்தனர். அங்ஙனம் துதிக்கப்பெற்ற, ஒளிபொருந்திய திருமுடியினை அணிந்திருக்கும் பெருமைமிக்க திருமாலும், அந் நாளிலே-*

*இறைவனுடைய அடியினது முடிவினைக் காணும் விருப்பத்தினாலே, வேகமும் வலிமையுமுள்ள பன்றிவடிவினை எடுத்தான். இறைவனின் திருமுன்னர் வந்து பொருந்தி, ஏழுலகங்களும் ஊடுருவும்படியாகத் தோண்டியும் சென்றனன். அதன்பின்னரும் அடியின் முடிவைக் காணாதானாகி, மேலும் தோண்டுதற்கும் இயலாது இளைப்படைந்து, 'ஊழி முதல்*

வனே! வெல்க! வெல்க!' என்று துதித்தனன். அங்ஙனம் துதித்தும் அவனாற் காணப்பெறாத அடியிணைகள், நெடிய கடலாற் சூழப்பட்ட இவ்வுலகத்திலே, துதித்தற்கு எளிதாகுமாறு என்முன் வந்து வெளிப்பட்டனன்.

## 2. தப்பினேன்! பிழைத்தேன்!

யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியி னுள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதர் உதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்

உருவத்தாற் பெரிதான யானைமுதலாக, உருவிற் சிறிதான எறும்பு இறுதியாக, உலகில் விளங்கும் ஊனமில்லாத யோனிபேதங்கள் பலவற்றினும் தோன்றி, அவற்றுள் நேர்கின்ற தீவினைகளினின்றும் யான் தப்பினேன். அதன்பின், மனிதப்பிறப்பினுள், தாயின் வயிற்றிடத்துள்ள குறைவில்லாத புழுக்களின் போருக்கும் தப்பினேன்.

ஒரு மாதத்தினுள், தான்றிக்காயின் அளவினை அடைந்து, அது சிதைந்து இரண்டாக பிளவுபட்டு போகாதபடியும் தப்பினேன். இரண்டாவது மாதத்து நிகழ்விலே, ஒருமைப்பாடு கொள்வதற்கு ஏற்பட்ட இடையூறுகளின்றும் தப்பினேன். மூன்றாவது மாதத்தில், கருப்பையிற் பெருகும் மதநீர்ப்பெருக்கினாற் கழிந்துவிடாதவாறு தப்பினேன் நான்காவது மாதத்தில், சூழ்ந்த பேரிருளினிற் சிதையாது தப்பினேன். ஐந்தாவது மாதத்தில், அழிந்து போதலினின்றும் தப்பினேன். ஆறாவது மாதத்தில், தினவு மிகுதியாலுண்டாகும் துன்பத்திற்குத் தப்பினேன். ஏழாவது மாதத்தில், கருப்பை தாங்காதுபோய்ப் பூமியிற் காயாய் விழுதலினின்றும் தப்பினேன். எட்டாவது மாதத்தில் வளர்ச்சி நெருக்கத்தால்

ஏற்படும் இடையூறினின்றும் தப்பினேன். ஒன்பதாவது மாதத்தில் வெளிவருவதற்காகத் தருகின்ற நோவுகளினின்றும் தப்பினேன். வெளிவரத் தகுதியான பத்தாவது மாதத்தில், தாயோடு சேர்ந்துபடுகின்ற துன்பக்கடலின் துயரத்திடையும் அழியாதவாறு தப்பினேன்.

## 3. நயனக் கொள்ளையில் பிழைத்தேன்!

ஆண்டுகள் தோறும் அடைந்தவக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்து
ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தங்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்

*வருடங்கள் தோறும் வளர்ச்சி அடைந்துவந்த அந்தக் காலத்தில், நெருங்கியும் இருத்தியும் துன்புறுத்தல் போன்ற பலவாறான துன்பங்களினின்றும் தப்பினேன். காலையில் மலங்கழித்தல், நடுப்பகலில் பசி தவிர்த்தல், இரவு வேளையில் நித்திரை போதல், போக்குவரத்து, ஆகிய பலவற்றினும் இடையூறு ஏற்பட்டு அழியாமலும் தப்பினேன்.*

*கருமையான கூந்தலையும்; சிவந்த வாயினையும்; வெண்மையான பற்களையும்; கார்காலத்துக் களிக்கின்ற மயிலைப் போன்ற சாயலினையும்; ஒன்றுடனொன்று நெருக்கமாகி, உள்ளே திரட்சிபெற்றுக், கச்சும் கிழிந்துபோகும்படியாகப் புடைத்தெழுந்து ஒளிபெற்று, முன்னே பருத்துத் தோன்றி, இடையானது இளைத்து வருந்தும்படியாக எழுச்சிபெற்று, பக்கங்களில் பரந்து, ஈர்க்கும் இடையே நுழையவியலாத வண்ணம் விளங்குகின்ற, இளமைநயம் செறிந்த கொங்கைகளையுமுடைய மாதர்களின், கூர்மையான கண்நோக்கினாற் கொள்ளை கொள்ளப்பெற்றுப் போய்விடாதவாறும் யான் பிழைத்தேன்.*

## 4. பலதுறை பிழைத்தேன்!

பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்

செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்

*பித்துக்கொண்டு அலைகின்ற உலகத்தவரது பெரிதான பலதுறை முயற்சிப்பரப்புக்களுள், மதயானை என்று சொல்லத்தக்க ஆசையினின்றும் தப்பினேன்; கல்வி என்கின்ற பலவான கடல்களினும் அமிழ்ந்துவிடாது தப்பினேன்; செல்வம் என்கின்ற துன்பத்தின் பிடியினின்றும் தப்பினேன்; வறுமை என்னும் பழைய நஞ்சின் கொடுமையுட்படாதும் தப்பினேன்; சிறுசிறு எல்லைகளைக்கொண்ட பலதுறை முயற்சிகளினும் ஈடுபட்டு, அவற்றிடைக் கழியாதும் தப்பினேன்.*

## 5. தெய்வ சித்தம்!

தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானோர் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்

*'தெய்வம்' என்பதாகிய ஒரு நினைப்பு உண்டாகியது. வெறுப்பு இல்லாததாகிய அந்த ஒப்பற்ற மெய்ப்பொருளினை நாடினேன். அவ்வேளையில், ஆறுகோடி என்று ஆன்றோர் கணக்கிட்டு உரைக்கின்ற மாயாசக்திகள் என்னைத் தொடர்ந்தன. வெவ்வேறு வகையான தத்தம் மாயைகளை அவை என்பாற் காட்டத் தொடங்கின. நெருக்கமானவர்களும், அயலாரான பிறரும் கூடி நாத்திகவாதத்தை எனக்குச் சொல்லிச்சொல்லித் தம் நாத் தழும்பேறப் பெற்றவராயினர்.*

## 6. அரற்றி மலைந்தனர்!

சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியருஞ்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்

*உறவினரென்னும் பழமையான பசுக் கூட்டங்கள் என்னைத் தம்மோடு சேர்தற்கு அழைத்து, என்னைத் தெய்வத்தை நாடிச் செல்வதற்குவிடாது பற்றிக்கொண்டு, பதை*

பதைத்துக் கூடினார்கள். வேதியர்களும் விரதங்களைக் கடைப்பிடித்தலே மேலான நெறியென்று கூறி, அதனை மெய்ப்பித்தற் பொருட்டாகச் சாத்திரங்கள் பலவற்றையும் ஆதாரமாகக் காட்டினார்கள். சமயவாதிகள் பலரும், தத்தம் மதங்களிலேதான் மெய்ப்பொருள் அமைந்திருப்பதாகக் கூறிக் கூச்சலிட்டுத் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டனர்.

## 7. கடுவிடம் எய்திற்று!

மிண்டிய மாயா வாத மென்னுஞ்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்து
உலோகா யதனெனும் ஒண்திறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்

திண்மையான மாயாவாதம் என்கின்ற பெருங்காற்றானது சுழித்தடித்து ஆரவாரித்தது. உலாகாயதம் என்னும் ஒள்ளிய ஆற்றலுடைய பாம்பினது சாத்திரபேதங்களை யுடைய கொடிய நஞ்சும் என்னை அடைந்தது. அதில், பெரிதான மாயைகள் பலவும் என்னைப் பலவாறுகச் சூழ்ந்து கொண்டன.

## 8. பக்தரின் உறுதி!

தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுள முருகி அழுதுடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையுங் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி

இவைகளிற் சிக்கி நெறிதவறிப் போய்விடாமல், தாம் பற்றிக்கொண்ட தெய்வநினைவிற் சலிப்புக் கொள்ளாமல் இருப்பவரே நின் அன்பர்கள். அவர்கள் நின்னை நினைந்து நெருப்பைக்கண்டமெழுகினைப்போல உள்ளம்உருகுவார்கள். நின் திருவடிகளைத் தொழுதும், உள்ளம் நெக்குருகியும், தம் குறையுணர்ந்து அழுதும், உடல் நடுங்கியும், ஆடியும், ஓலமிட்டும், பாடியும், துதித்தும் வருவார்கள். பேயும் மூடனும் தாம் பற்றிக் கொண்டதனை நெகிழ விடாமை போல, அவர்களும் தம் கொள்கையினை நெகிழவிடாது பேணுவார்கள், பசிய மரத்திலே ஆணியினை அறைந்தாற்போல,

இறைநினைவு அவர்கள்பால் நன்றாக உறைப்புற்று நிற்கும். உள்ளத்தே கசிதல் பெருகும். கடலைப்போலக் கொந்தளிப்பும் நிலவும்.

## 9. அகம் குழையும்!

அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலும் நினையா

*மனம் குழைந்து அதற்கேற்ப உடலும் நடுக்கங் கொள்ளும். உலகத்தார் தம்மைப் பேயென்று சொல்லிச் சிரிப்பதைக் கேட்டும் அவர்கள் பொருட்படுத்தார்கள். நாணமானது முற்றவும் நீங்கிப் போயினவராக, உலகத்தவரின் பழித்தலான அச் சொற்களையும் தமக்கு அணிகலனாகக் கருதி ஏற்றுக்கொள்வார்கள். மனத்தே கோணுதலற்று, எதுவும் நம்மால் ஆகுமென்னும் திறமையுணர்வையும் இழந்து, சிவஞானத்தை அறியவேண்டுமென்னும் மயக்கத்தையே கொண்டவராக, அடைதற்கு உரித்தான நற்கதியினையே மேலான அதிசயமாகக் கருதி, அதனிடத்திலேயே மனம் வைப்பார்கள். கன்றையுடைய பசுவின் மனத்தைப் போல உருக்கம் கொண்டவர்களாக, நின்னை நினைந்து கதறியும், பதைபதைத்தும், மற்றொரு தெய்வத்தைக் கனவினும் நினையாதவராகியும் அவர்கள் விளங்குவார்கள்.*

## 10. தாயாகி வளர்த்தனை!

தருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதயம் மலரக்

கண்களி கூர நுண் துளி அரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி

*அரியதான வீட்டுலகத்தினை உடைய ஒப்பற்ற பரம் பொருள் குருமூர்த்தியாகி இந்த உலகினிடத்தே வந்து தோன்றினான். அவன், குருமூர்த்தியாகி வந்து ஆட்கொண் டருளிய அந்தப் பெருந்தன்மையினைச் சிறுமை என நினைந்து அடியவர் இகழ்தல் செய்யார். அவனுடைய திருவடிகள் இரண்டையும் தொடர்தலல்லது பிறிதோர் செயலையும் அறியாத நிழலினைப்போலத் தொடர்ந்துபற்றி, முன்னும் பின்னுமாகி நின்றுபோற்றி, அந்தச் செயலிடத்து வெறுப்புக் காட்டாமல், அத் திசைநோக்கியே எப்போதும் வணங்கி யிருப்பர்.*

*எலும்புகளும் கசிந்து உருகுமாறு மனம் நெகிழ்வுற்று நெகிழ்வுற்று ஏங்குவர். இறையடிக்கு அன்புடைமை என் கின்ற ஆறானது நிறைந்து கரைபுரண்டு ஓடும். நல்லவாய புலன்களும் அடங்கி ஒருமைப்பட்டு விளங்கும். 'நாதனே' என்று அரற்றுவர். உரைகள் தடுமாற்றங்கொள்ளும். உரோ மங்கள் புளகங் கொள்ளும். கைம்மலர்கள் குவியும். இருதய மாகிய மலர் விரியும். கண்கள் களிப்பால் மிகுந்தனவாகி நுண்மையான துளிகள் அரும்ப விளங்கும். இங்ஙனம் நிலை தளராத பேரன்பினை நாள்தோறும் நின்பால் வளர்ப்பவர்கள் நின் அடியார்கள். இத்தகைய அடியவர்கட்கு, அவர்களைக் காக்கின்ற தாயேயாகி, அவர்களை உயர்த்தினை! அத்தகைய நின்னைப் போற்றுகின்றேன்!*

## 11. அருளாய் போற்றி!

மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னா ருருவ விகிர்தா போற்றி
கல்நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக் கருளாய் போற்றி

மெய்ப்பொருளாகிய சிவஞானத்தைத் தந்தருளுகின்ற அந்தணனாகி எழுந்தருளிவந்து, எங்கள் வினையானது அழியும் படியாக எங்கட்குக் கைகொடுக்கவல்ல கடவுளே, நின்னைப் போற்றுகின்றேன்!

பொன்மயமான மதுரைக்கு அரசனே, நின்னைப் போற்றுகின்றேன்! கூடற்பதியிலே விளங்கும் குருநாதனே, நின்னைப் போற்றுகின்றேன்! அழகிய தில்லையம்பலத்தில் திருநடனம் செய்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! இன்று, எனக்குத் தெவிட்டாத அமுதமாக ஆயினவனே, நின்னைப் போற்றுகின்றேன்! மூப்பற்ற நான்மறைகட்கும் முதல்வனே, நின்னைப் போற்றுகின்றேன்!

இடபவடிவம் பொருந்திய வெற்றிக்கொடியினை உடைய சிவனே! மின்னலின் ஒளியினைப் பொருந்திய உருவத்தையுடைய வேறுபாட்டினை உடையவனே! கல்லான என் நெஞ்சினும் நாருரித்து வெற்றிகண்ட கனியே! பொன்மலையினைப் போன்றவனே! என்னைக் காத்தருள்க! ஐயகோ! எனக்கும் அருள்செய்யாயோ?' என, நின்னைப் போற்றுகின்றேன்.

## 12. நம்பனே போற்றி!

படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி

அனைத்தையும் படைப்பவனே! அனைத்தையும் காப்பவனே! அனைத்தையும் அழிப்பவனே! நின்னைப் போற்றுகின்றேன்! துன்பங்களை நீக்கி அருளுகின்ற எம் தந்தையே நின்னைப் போற்றுகின்றேன்! எம் ஈசனே நின்னைப் போற்றுகின்றேன்! எம் இறைவனே, நின்னைப் போற்றுகின்றேன்! ஒளிவீசும் பளிங்கின் திரட்சியைப் போல விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! எம் அரசனே, நின்னைப் போற்றுகின்றேன்! எமக்குப் பேரின்பத்தைத் தருகின்ற அமுதனே, நின்னைப் போற்றுகின்றேன்! மணம்

பொருந்திய திருவடிகளையுடையவனே, நீதிமுறைகளை விதிப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! வேதியனே, நின்னைப் போற்றுகின்றேன்! மலமற்றவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அனைத்திற்கும் முதல்வனே, நின்னைப் போற்றுகின்றேன்! அனைத்தின் அறிவாக அமைந்துள்ளவனே, நின்னைப் போற்றுகின்றேன்! உயிர்கட்குக் கதியாக இருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! இனிமைசெறிந்த கனியினைப் போன்று அன்பர்க்கு விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! கங்கையை அணிந்திருக்கும் செவ்விய சடையினையுடைய நம் பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்!

## 13. அருள் அரசே! போற்றி!

உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையேன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றமும் முரணுறு நரகிடை
ஆழா மேயருள் அரசே போற்றி

எம்மை எல்லாம் அடிமைகளாக உடைய பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்! எம்முள் கலந்து, யாம் உணரும் உணர்வாகவும் விளங்கும் பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்! கடைப்பட்ட என்னையும் நினக்கு அடியவனாக்கிக் கொண்டவனே, நின்னைப் போற்றுகின்றேன்! ஐயனே, நின்னைப் போற்றுகின்றேன்! அணு உருவாகிய நுண்மையனே, நின்னைப் போற்றுகின்றேன்! சைவனே, நின்னைப் போற்றுகின்றேன். எம் தலைவனே, நின்னைப் போற்றுகின்றேன்! யாம் குறிக்கொண்டு விளங்குதற்கு அடையாளப் பொருளாகி அமைபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! எண் குணங்களின் உருவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நன்னெறியாக அமைந்தவனே, நின்னைப் போற்றுகின்றேன்! என் நினைவிற்கலந்து அந்த நினைவாகவே விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! செருக்குடைய வானவர்க்கு அடைதற்கு அரியவனாக இருக்கும் அமுதனே, நின்னைப் போற்றுகின்றேன்! செருக்கற்ற அடியவரான பிறருக்கு எளிதாக வந்துதவும் இறைவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நின் அடியவரின் மூவேழ் தலைமுறைகளிலும் வருகின்ற

உறவின் முறையாரும், மாறுபட்ட இயல்புகளையுடைய நரகங்களில் அழுந்தித் துயருறுமற்படிக்கு, அவரையும் காத் தருளுகின்ற அரசனே, நின்னைப் போற்றுகின்றேன் !

## 14. உணர்வு கடந்த ஒருவனே!

தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர்வு இறந்த ஒருவ போற்றி

அடியவர்க்கு உற்ற தோழனாகி உதவுபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அவர்களின் துணைவனாக என்றும் பிரியாது விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அடியவர்க்கு அவர்தம் வாழ்வேயாகி அமைந்த தன்மையனே, நின்னைப் போற்றுகின்றேன்! அவர்கள் ஈட்டிவைத்துள்ள செல்வம் போன்று திகழ்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அன்பர்க்கு வீட்டின்பமாகி விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அனைத்திற்கும் அடிப்படையாகிய முதல்வனே, நின்னைப் போற்றுகின்றேன்! எம் அப்பனே, நின்னைப் போற்றுகின்றேன்! எம்மைச் சூழ்ந்துள்ள பாசத்தை அறுத்து அருள்கின்றவனே, நின்னைப் போற்றுகின்றேன்! சொல்லையும் மனவுணர்வையும் கடந்து திகழ்கின்ற ஒப்பற்ற பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்!

## 15. சேவக போற்றி!

விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையில் எளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையும் ஒருவ னாக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி

விரிந்த கடல்சூழ்ந்த உலகத்தில் வாழ்கின்ற வாழ்வின் பயனாக விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அடைதற்கு அரியதோர் பொருளாக இருந்தாலும், அன்பர்க்கு அருமையாகாது எளிதாகவே வந்தருளுகின்ற அழகனே, நின்னைப் போற்றுகின்றேன்! கார்மேகத்தினைப் போல அருள் புரிகின்ற கண்ணோட்டம் உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நிலைபெற்ற திருவருள் மலையாக விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! கடைப் பட்டவனாகிய

என்னையும் நின்னுடைய அடியார் கூட்டத்தினுள் ஒருவனாக ஆக்கிக்கொண்டு, நினது பெருமையுடையவான திருவடிகளை என் தலைமீதும் வைத்தருளி, எனக்குப் பாதுகாவலனாகி விளங்கும் பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்!

## 16. அமரர் தாயே! போற்றி!

தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி

நின்னைத் தொழுது நிற்கும் கூப்பிய கையினரின் துன்பங்களை எல்லாம் போக்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அழிவற்ற ஆனந்தக் கடலாக விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! ஒடுக்கம் என்பதும் தோற்றம் என்பதும் இல்லாதவனாகி, அவற்றைக் கடந்து நிற்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அறிவால் அறியப்படுகின்றன அனைத்தையும் கடந்தும், அறியப்படும் அவை அனைத்திற்கும் முதல்வனாகவும் இருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! மானை நிகர்த்த பார்வையினை உடையாளான உமையம்மையின் மணாளனே, நின்னைப் போற்றுகின்றேன்! விண்ணுலகத்துள்ள தேவர்களையும் தோற்றுவித்ததனால், அவருக்கும் தாயாகித் திகழ்கின்ற பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்!

## 17. நாயேற்கு அருளினை!

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலும் நாயேற் கருளினை போற்றி

நிலமாகிய பூதத்தினிடத்தே சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் அதன் ஐந்து பூதத் தன்மைகளுடனேயும் பரவியிருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நீரினிடத்து அதன் நான்கு தன்மைகளைக் கொண்டவனாக அமைந்திருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நெருப்பினிடத்தே அதன் மூன்று தன்மைகளுடனும் தெரிபவனே, நின்னைப்

போற்றுகின்றேன்! காற்றிடத்து அதன் இரண்டு தன்மைகளுடனும் விரும்பி நிலைபெற்றவனே, நின்னைப் போற்றுகின்றேன்! வானம் ஆகிய வெளியினிடத்தே, அதன் ஒரே தன்மையாகத் தோன்றுகின்றவனே, நின்னைப் போற்றுகின்றேன்!

நின்னை நினைந்து உருகுபவரின் உள்ளத்தின் கண்ணே அமுதமாக நிறைந்திருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அங்ஙனம் உருகாத தேவர்கட்குக் கனவிலும் காண்பதற்கு அரியவனாகி விளங்குபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! இருந்தும், நாயினேனாகிய எனக்கு, நனவின்கண்ணும் எழுந்தருளி வந்து காட்சிதந்து அருள் செய்தவனே, நின்னைப் போற்றுகின்றேன்!

## 18. மற்றோர் பற்று அறியேன்!

இடைமரு துறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரு ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறு போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி

திருவிடைமருதூரில் கோயில் கொண்டிருக்கும் எமது அப்பனே, நின்னைப் போற்றுகின்றேன்! சடையினிடத்தே கங்கையினை ஏற்று அமைத்துக் கொண்டவனே, நின்னைப் போற்றுகின்றேன்! திருவாரூரின்கண் அமர்ந்தருளின அரசனே, நின்னைப் போற்றுகின்றேன்! சிறப்புப் பொருந்திய திருவையாற்றின்கண் உள்ளவனே, நின்னைப் போற்றுகின்றேன்! திருவண்ணாமலையில் இருக்கின்ற எம் மேலோனே, நின்னைப் போற்றுகின்றேன்!

காட்சிக்கு மிகவும் இனிமையான அமுதக் கடலினைப் போன்று தோற்றுபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! திருவேகம்பத்தில் வீற்றிருக்கும் எம் தந்தையே, நின்னைப் போற்றுகின்றேன்! நின்னில் ஒரு பகுதி பெண்ணுருவாக ஆகியிருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! திருப்பராய்த்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவனே, நின்னைப் போற்று

கின்றேன்! திருச்சிராப்பள்ளியின்கண் பொருந்தியிருக்கின்ற சிவபிரானே, நின்னைப்போற்றுகின்றேன்! இவ்வுலகினிடத்து, நின்னைப்பற்றி நிற்பதன்றி வேறோர் ஆதரவினையும் பற்றிக் கொள்ளுவதற்கு யான் அறியேன்! என்னைக் காத்தருள்க, பெருமானே!

## 19. எந்நாட்டவர்க்கும் இறைவா!

குற்றா லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்கு
அத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி!

திருக்குற்றாலத் தலத்திலே எழுந்தருளி யிருக்கின்ற எம்முடைய கூத்தப்பெருமானே, நின்னைப்போற்றுகின்றேன்! திருவாவடுதுறையில் பொருந்தியிருக்கின்ற இறைவனே, நின்னைப் போற்றுகின்றேன்! திருவீங்கோய் மலையினிடத் துள்ள எம் அப்பனே, நின்னைப் போற்றுகின்றேன்! அழகு நிரம்பியிருக்கும் திருப்பழனத்தின்கண் அழகனாக எழுந்தருளி யிருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்!

திருக்கடம்பூரில் எழுந்தருளியிருக்கும் அழகனே, நின்னைப் போற்றுகின்றேன்! அன்பினாலே வந்தடைந்த அடியவர்களுக்கு அருளிச்செய்கின்ற அப்பனே, நின்னைப் போற்றுகின்றேன்! கல்லாலமரத்தின் அடியிலே வீற்றிருந்து, திருப்பட்ட மங்கையினிடத்தே, இயக்கிகள் அறுவர்க்கும் அருள்செய்தவனே, திருக் கடம்பவனத்திலே வெள்ளானைக்கு அருளிச்செய்த அரசனே, நின்னைப் போற்றுகின்றேன்! தென்னகமாகிய தமிழ்நாட்டினையே நினக்கு உரிமையுடைய நாடாகக் கொண்டுவிளங்கும் சிவபிரானே, நின்னைப் போற்று கின்றேன்! எந் நாட்டவர்க்கும் அவரவர் போற்றும் தெய்வ மாகித், தானே அவரவர்க்கும் அருளிச்செய்கின்ற இறை வனே, நின்னைப் போற்றுகின்றேன்!

## 20. நித்தனே! நிமலனே!

ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி

அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தே னடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி!

*பன்றிக்குட்டிக்குப் பாலூட்டி வளர்த்த கருணையாளனே, நின்னைப் போற்றுகின்றேன்! பெருமை பொருந்திய திருக் கயிலாய மலையினை இடமாகக் கொண்டிருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அடியவர் அனைவரும் தமக்கு அருள் செய்திடுமாறு வேண்டித் துதிக்கின்ற அம்மானே, நின்னைப் போற்றுகின்றேன்! அங்ஙனம் வேண்டித் துதிக்கின்ற அடியவர்களது அஞ்ஞான இருளானது முற்றவும் நீங்கிப் போகுமாறு அருள்புரிகின்ற இறைவனே, நின்னைப் போற்று கின்றேன்! நினக்கு ஆட்பட்ட அடியனேன் பிறவித்துயரிற் பட்டுத் தளர்ந்துபோய்த் தனியனாகித் தவிக்கின்றேன். என்னைக் காத்தருள்க! நின்னடி சேர்தலாகிய நிலையான இடத்தினைப் பெறுவதற்கு அருள்புரிவாயாக! 'அஞ்சாதே' என்று அபயந்தந்து, இவ்விடத்தே எனக்கும் அருள் செய்வாயாக! நஞ்சினையே அமுதமாக விரும்பி உண்டு பிறர் துயரத்தைத் தீர்த்தவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அப்பனே, நின்னைப் போற்றுகின்றேன்! ஐயனே, நின்னைப் போற்றுகின்றேன்! நித்தனே, நின்னைப் போற்றுகின்றேன்! நிமலனே, நின்னைப் போற்றுகின்றேன்!*

## 21. நாயேன் அலந்தேன்!

பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி!

*எம் பதியே, நின்னைப் போற்றுகின்றேன்! எவற்றுக்கும் பிறப்பிடமானவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அனைத்*

துக்கும் பெரியோனே, நின்னைப் போற்றுகின்றேன்! வள்ளலே, நின்னைப் போற்றுகின்றேன்! அறிதற்கு அரியவனே, நின்னைப் போற்றுகின்றேன்! பாசத்தால் பற்றப் படாதவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அந்தணக் கோலத்தோடு எழுந்தருளிய மெய்ந்நெறியே, நின்னைப் போற்றுகின்றேன்! எனக்குக் கருணைசெய்ததும் முறை தானோ? நின் அருட்பெருக்கினைத் தாங்குவதற்கு ஆற்றாதேன் யான். முதல்வனே, நின்னைப் போற்றுகின்றேன்! எனக்குரிய சுற்றமே, நின்னைப் போற்றுகின்றேன்! என் உயிருக்கு உயிரானவனே, நின்னைப் போற்றுகின்றேன்! சிறந்த மெய்ப் பொருளே, நின்னைப் போற்றுகின்றேன்! சிவமே, நின்னைப் போற்றுகின்றேன்! அழகனே, நின்னைப் போற்றுகின்றேன்! மணவாளனே, நின்னைப் போற்றுகின்றேன்! பஞ்சனைய மென்மையான பாதங்களை உடையவளின் பாகமாக உள்ள வனே, நின்னைப் போற்றுகின்றேன்! 'எனக்கு வீடுபெறுதலை எப்பொழுது தருவாயோ' என்று எண்ணி, நாயேனாகிய யான் ஏக்கமுற்றேன்; அதனைத் தந்தருளும் நின்னைப் போற்று கின்றேன்!

## 22. துரியம் கடந்த சுடரே!

இலங்கு சுடரெம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி!

விளங்குகின்ற ஒளியினையுடைய எம் ஈசனே, நினக்கு வணக்கம்! கவைத்தலை என்னுமிடத்திலே பொருந்தியிருக்கும் கண்போன்ற பிரானே, நினக்கு வணக்கம்! குவைப்பதியில் எழுந்தருளியிருக்கும் இறைவனே, நினக்கு வணக்கம்! மலை நாட்டினை உரிமையாக உடைய மன்னவனே, நினக்கு வணக்கம்! கலைகளுள் மிகுந்த பகைவர்க்குஞ் சிங்க ஏறாக விளங்குவனே, நினக்கு வணக்கம்! திருக்கழுக்குன்றினிடத்தே மேவியிருக்கும் ஞானச் செல்வனே, நினக்கு வணக்கம்! திருப்பூவணத்தில் குன்றினிடத்தாக அமர்ந்திருப்பவனாகிய அரனே, நினக்கு வணக்கம்! அருவமாய் இருந்தும் உருவத்

*திருமேனி காட்டியருளியவனே, நினக்கு வணக்கம்! அருள் பொருந்திய மலையே, நினக்கு வணக்கம்! நான்காவதான துரிய நிலையினையும் கடந்து நிற்கும் ஞானச்சுடரே, நினக்கு வணக்கம்!*

## 23. மந்திர மலையாய்!

தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி!

*தெரிந்து கொள்ளுவதற்கு அருமையுடைய தெளிவே, நின்னைப் போற்றுகின்றேன்! தொளைக்காத முழுமுத்தின் சோதியே, நின்னைப் போற்றுகின்றேன்! நினக்கு அடிமை யானவர்கட்கு அன்பனாக இலங்குபவனே, நின்னைப் போற்று கின்றேன்! தெவிட்டாத அமுதமே, அருளே, நின்னைப் போற்றுகின்றேன்! ஆயிரம் பெயரினையுடைய தலைவனே, நின்னைப் போற்றுகின்றேன்! தாளிக்கொடியின் தழையினையும் அறுகினையும் கலந்து கட்டிய மாலையினை உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! பேரொளியாகி விளங்கும் கூத்தப்பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்! சந்தனத் தேய்வை அணிந்த சுந்தரனே, நின்னைப் போற்றுகின்றேன்! நினைவினாலும் அறிதற்கரிய சிவமே, நின்னைப் போற்று கின்றேன்! சிவபிரானே, நின்னைப் போற்றுகின்றேன்! மந்திரங்களினிடத்தே பொருந்தியிருக்கும் மாமலை போன்ற வனே, நின்னைப் போற்றுகின்றேன்!*

## 24. ஒழிவற நிறைந்தவனே!

எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி

இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி!

*எம்மை உய்யுமாறு அடிமைகொண்டு அருளுகின்றவனே, நின்னைப் போற்றுகின்றேன்! புலியின் முலைப்பாலினை மான்குட்டிக்கு ஊட்டியவனே, நின்னைப் போற்றுகின்றேன்! அலைகடலின் மேலாக நடந்தவனே, நின்னைப் போற்றுகின்றேன்! கருங்குருவிக்கும் அந்நாளில் உபதேசித்து அருள் செய்தவனே, நின்னைப் போற்றுகின்றேன்!*

*வலிய ஐம்புல வேட்கைகள் அனைத்தும் அற்றொழியும் படியாக எனக்கு அருளியவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நிலத்தின்கண் மிகவும் பழகிய தூயவனே, நின்னைப் போற்றுகின்றேன்! முதலும் நடுவும் முடிவும் ஆகியவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நரகம் சுவர்க்கம் பூமி என்பவற்றுள் நுழையாமல், பாண்டியனுக்கு மேலான வீட்டுலகத்தினை அருளினவனே, நின்னைப் போற்றுகின்றேன்! நீக்கமில்லாமல் எங்கும் நிறைந்த ஒப்பற்றவனே, நின்னைப் போற்றுகின்றேன்!*

## 25. போற்றி! போற்றி!

செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி!

*செழுமையான மலர்களையுடைய சிவபுரத்திற்கு அரசனே, நின்னைப் போற்றுகின்றேன்! செங்கழுநீர் மாலையினைச் சூடுகின்ற கடவுளே, நின்னைப் போற்றுகின்றேன்! வழிபடுவாரது மன மயக்கத்தை அறுப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! ‘தவறு யாதெனவும், பொருத்தம் யாதெனவும் அறியாத நாயினேன் தொடுத்த இந்தச் சொன்*

மாலையினையும் ஏற்றுக்கொண்டு எனக்கும் அருள்வாயாக' என, நின்னைப் போற்றுகின்றேன். திரிபுரங்களை எரித்த பழைமையானவனே, நின்னைப் போற்றுகின்றேன்! மேலான வற்றிற்கும் மேலான ஒளியினையுடைய மேலோனே, நின்னைப் போற்றுகின்றேன்! பாம்பணிந்த பெருமானே, நின்னைப் போற்றுகின்றேன்! பழைமையின் மூலகாரணனே, நின்னைப் போற்றுகின்றேன்! நினதே வெற்றி! நினதே வெற்றி! நின்னைப் போற்றுகின்றேன்! நின்னையே யான் போற்றுகின்றேன்!

# 5. திருச்சதகம்

## பக்தி வைராக்கிய விசித்திரம்

(கட்டளைக் கலித்துறை)

## 1. மெய் உணர்தல்

*[இறைவன் பத்துவகையாக வாதவூரரைக் காத்தருளி அடிமை கொண்ட அந்த அநுபவம், இந்த நூறு செய்யுட்களினும் உரைக்கப்பெறுகின்றது. அவற்றுள், தேகாதி பிரபஞ்சங்களைக் கண்டு நீங்குதல், முதற் பத்துச்செய்யுட்களுள் கூறப்பெற்றுள்ளன.]*

**மெய்தான் அரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்**
**கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்**
**பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னும்**
**கைதான் நெகிழவிடேன் உடையா யென்னைக் கண்டுகொள்ளே.**

*என்னை அடிமையாக உடையவனே! நினது மணம் பொருந்திய திருவடியடைதலைப் பெறும்பொருட்டாக, என் உடலெங்கும் மயிர்சிலிர்க்க நடுநடுங்கி, என் கைகளைச் சிரமேற்குவித்துவைத்து, கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் நிரம்ப, நின்னைச் சேரும் ஆசையினாலே உடல் வெதும்ப, உள்ளத்தைப் பொய்யான ஒழுக்கத்தினின்றும் நீக்கி, நின்னைப் 'போற்றி சயசய போற்றி' என்று வழிபடுகின்ற ஒழுக்கத்தினை அடியேன் ஒருபோதும் நழுவவிடாது மேற்கொள்வேன். என்னையும் கண்பார்த்து நின் அடியவனாக ஏற்றுக் கொள்வாயாக. ['உடையவனே! மணம்நிறைந்த நின் திருவடியைப் பெறும்பொருட்டு, என் மெய் முதலிய முக்கரணங்களினாலும் நின்னை வழிபடுதலில் யான் சோர்வில்லேன்; ஆதலால், என்னையும் கடைக்கணித்து ஏற்றுக்கொள்ளல் வேண்டும்' என்பது கருத்து.]*

**கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்**
**நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்**
**எள்ளேன் திருவரு ளாலே இருக்கப் பெறின்இறைவா**
**உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லாதெங்கள் உத்தமனே.** 2

இறைவனே! எங்கள் உத்தமனே! யான் நின் திருவருளோடும் கூடியிருக்கப் பெறுவேனாயின், இந்திரன் திருமால் பிரமன் என்பவர்களுடைய வாழ்வினையும் ஒருபொருளாக மதித்து என் மனத்திற் கொள்ளமாட்டேன். என் குடியே கெட்டாலும், நின் அடியவரோடு கூடியிருப்பதன்றிப் பிறரோடு கூடியிரேன். நரகத்தில் புகுதலைப் பெற்றாலும் அதனை இகழமாட்டேன். நின்னை அல்லாது பிற தெய்வங்களை மனத்தால் நினைக்கவும் செய்யேன். ['இறைவனே! நின் திருவருளோடு கூடியிருக்கப் பெறுவேனாயின், அந்தப் பேற்றின் சிறப்பினால் இந்திரன் முதலானவரது பெருவாழ்வையும் மதியேன்; என் குடிகெட்டாலும் நின் தொண்டரோடு அல்லாமல் பிறருடன் கூடேன்; நரகம் புகுந்தாலும் அதனை இகழேன்; நின்னை நினைத்தலன்றிப் பிற தெய்வங்களை நினையேன்' என்பது கருத்து.]

**உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி**
**மத்த மனத்தொடு மாலிவ னென்ன மனநினைவில்**
**ஒத்தன வொத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவருந்**
**தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே? 3**

பெரியோனும் அனைத்து உயிருக்கும் தந்தையும் ஆகிய உடையவனது திருவடிகளையே மனத்தால் நினைந்து உருகுதல் வேண்டும்; உன்மத்தங்கொண்ட மனத்தோடு 'இவன் மயக்கங் கொண்டவன்' என்று தம் மனக்கருத்தில் தோன்றியவற்றை எல்லாம் கண்டோர் சொல்லவும், அதனைப் பாராட்டாது ஊர்கள்தோறும் திரிந்து, எத்தகையோரும் தங்கள் தங்கள் மனம்போனவாறு பேசவும், அவற்றைக் கேட்டுச் சலிப்படையாது விளங்கல் வேண்டும். அங்ஙனம் யான் செயலற்றிருப்பது எந்நாளிலோ? ['உத்தமனும் அத்தனுமாகிய உடையவனது திருவடியையே நினைந்துருகி, உன்மத்தங்கொண்ட மனத்தோடு, 'இவன் பித்தனென்று' ஊரார் தூற்றவும், யான் அதனால் சலிப்படையாது செயலற்றிருக்கப் பெறுவதுதான் எந்த நாளிலோ?' என்பது கருத்து.]

**சாவமுன் னாள்தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி**
**ஆவவெந் தாயென் றவிதா விடுநம் மவரவரே**
**மூவரென் றேயெம்பி ரானொடும் எண்ணிவிண் ணாண்டுமண்மேல்**
**தேவரென் றேஇறு மாந்தென்ன பாவந் திரிதவரே. 4**

முன் காலத்திலே தக்கன் இயற்றிய யாகத்திலே கொல்லப்பட்டு அளித்த யாகப்பசுவை அவிசுடன் உண்டனர்; பின்னர், வீரபத்திரர் தண்டிக்கவந்தபோது சாவதற்கு அஞ்

சினர்; பாற்கடலிற் பிறந்த நஞ்சின் வேகத்தால் சாவு நேருமென அஞ்சினர்; 'ஐயோ! எந்தாய்!' என்று முறையிடுகின்ற தன்மையினை உடையவருமாயினர்; நம்மவராகிய அத்தகைய அயனும் அரியும்தாமோ எம் பெருமானோடும் 'மூவர்' என்று எண்ணப்பட்டுத், தத்தமக்குரிய விண்ணுலகங்களை ஆண்டு, மண்மேல் 'தேவர்கள்' என்றுஞ் சொல்லப்பட்டு, இறுமாந்து திரிகின்ற தலைமைப்பாடு உடையவர்கள்? இஃது என்ன பாவமோ! அறியேனே!

['முற்காலத்தில், தக்கனின் யாகத்திடப்பெற்ற அவிசையுண்டு அதனால் வரும் தண்டனைக்கு அஞ்சியும், பாற்கடலில் தோன்றிய நஞ்சினால் அழிவுவருமென அஞ்சியும், 'எந்தையே! எம்மைக் காக்க' என முறையிட்ட நம்மவர்கள்தாமோ, எம் பெருமானோடுஞ் சேர்த்து மூவர் என்று கருதப்படுபவர்கள்? அவர்கள்தாமோ தத்தமக்குரிய விண்ணுலகங்களை ஆண்டு மண்ணுலகினும் தேவரென்று சொல்லப்பட்டு இறுமாப்புடன் திரிகின்ற தலைமைப்பாடு கொண்டவர்கள்? இஃதென்ன பாவமோ!' என்பது கருத்து. அவர் சிவனுக்குச் சமமாக மாட்டார் என்பது முடிபு.]

தவமே புரிந்திலன் தண்மல ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்
அவமே பிறந்த அருவினை யேன்உனக் கன்பருள்ளாஞ்
சிவமே பெறுந்திரு வெய்திற்றி லேன்நின் திருவடிக்காம்
பவமே யருளுகண் டாய்அடி யேற்கெம் பரம்பரனே, 5

மிகவும் மேன்மை உடையவனே! வீணாகவே இவ்வுலகில் பிறந்துவிட்ட தொலைத்தற்கரிய தீவினையாளனாகிய யான், தவமேதும் செய்திலேன்; தண்ணிய மலர்களைத் தூவி நின்னை அருச்சித்து வணங்குதலையும் செய்திலேன்; நினக்கு அன்பரானவர் நடுவிலே கலந்திருத்தற்கு வேண்டும் மங்களகரத்தை உடைய செல்வத்தையும் அடைந்திலேன்; இனியேனும், அடியேனுக்கு நின்திருவடிக்கு ஆளாவதற்கு உரியதான பிறப்பினையே நீ அருளிச்செய்தல் வேண்டும். ['தவம் முதலியவற்றைச் செய்யாமைக்கு உரிய பயனில்லாத பிறவியாகப் பிறந்தேன்; ஆதலால், இனியேனும் நின் திருவடிக்கு அன்பு செய்வதற்கு உரியதான நற்பிறவியை எனக்கு அருளிச்செய்ய வேண்டும்' என்பது கருத்து.]

பரந்துபல் லாய்மல ரிட்டுமுட் டாதடி யேயிறைஞ்சி
இரந்தவெல் லாமெமக் கேபெற லாமென்னும் அன்பருள்ளங்
கரந்துநில் லாக்கள்வ னேநின்றன் வார்கழற் கன்பெனக்கு
நிரந்தர மாயரு ளாய்நின்னை யேத்த முழுவதுமே. 6

'பல பதிகட்குஞ் சென்று, சிவபூசைக்குத் தகுந்த பல வகைப்பட்ட மலர்களையும் ஆராய்ந்து எடுத்துவந்து, அவற்றால் அருச்சித்து, நின் திருவடிகளை விதிமுறையிற் குறையாமல் முறைப்படவணங்கி, 'நின்னிடத்தே வேண்டுவன அனைத்தையும் பெற்றுக் கொள்ளலாம்' என்னும் உள்ளவுறுதியினை உடைய அன்பர்களின் நெஞ்சிற்கு மறைந்துநில்லாது, பிறருக்கு மறைந்துபோகின்ற மாயத்தை உடையவனே! என் வாழ்நாள் முழுவதும் நின்னையே துதிக்கவும், நின் திருவடிக்கே நிரந்தரமாக அன்புசெய்திருக்கவும் எனக்கு அருள் புரிவாயாக. ['நின்னை மனவுறுதியுடன் வழிபடுகின்ற அடியவரின் உள்ளத்து வெளிப்பட்டு நிற்பாய்; ஆதலால், எனக்கும் நின் திருவடிக்கு அன்பு செய்திருக்குமாறு கருணை புரிதல் வேண்டும்' என்பது கருத்து. ஆய்மலர்-சிவபூசைக்கு ஆகின்ற மலர்; 'வில்வமுடன் கொன்றை மலர் சங்கரற்கு நேயம்' என்று புட்பவிதி கூறும்.]

**முழுவதுங் கண்டவனைப் படைத்தான்முடி சாய்த்துமுன்னாள்**
**செழுமலர் கொண்டெங்குந் தேடஅப் பாலன்இப் பால்எம்பிரான்**
**கழுதொடு காட்டிடை நாடக மாடிக் கதியிலியாய்**
**உழுவையின் தோலுடுத் துன்மத்த மேல்கொண் டுழிதருமே. 7**

எல்லாப் பொருள்களையும் படைத்தவனாகிய பிரமனையும் தன்னுடைய உந்திக்கமலத்திடத்துப் படைத்தவன் திருமால். அவன், முன்னொரு காலத்திலே தன் தலையினை இறைஞ்சியபடி செழுமையான மலர்களைக் கைக்கொண்டு, நின்னைத் தொழுது போற்றுவதனையும் கருத்திற்கொண்டு, எங்கும் தேடினான். அங்ஙனம் அவன் தேடவும், அவனுக்குப் புலனாகாது தன்னை மறைத்து அவனால் காணுதற்கு அப்பாற்பட்டவனாகி விளங்கியவன் எங்களது சிவபிரான். அத்தகைய பெருமான், இவ்விடத்தே, சுடுகாட்டினிடத்தில், பேய்க்கணங்களோடும் கூடியவனாயிருந்து கூத்தாடி, வறியவனாய்ப், புலித் தோலினை உடுத்துக்கொண்டு, பித்தும் மேற்பட்டவனாகத் திரிவான். இஃதோர் வியப்புத்தான் என்னையோ! ['திருமால் மலர் கைக்கொண்டு அருச்சித்து வழிபடுவதற்காகத் தேடியும் அவனாற் காணக்கூடாதவன், சுடுகாட்டில், பேய்களோடு நடித்துத் திரிகின்றனனே! இஃதென்னே வியப்பு!' என்பது கருத்து. கழுது-பேய். கதியிலி-கதியென எதனையும் நாடுதல் இல்லாதவன்.]

**உழிதரு காலுங் கனலும் புனலொடு மண்ணும்விண்ணும்**
**இழிதரு காலமெக் காலம் வருவது வந்ததற்பின்**
**உழிதரு காலத்த உன்னடி யேன்செய்த வல்வினையைக்**
**கழிதரு காலமு மாயவை காத்தெம்மைக் காப்பவனே. 8**

உழலா நின்ற காற்றும், நெருப்பும், நீரோடு மண்ணும் விண்ணும் அழிகின்ற சர்வசங்கார காலம் எந்நாளில் உண்டாவதோ? அது உண்டாயின பின்னரும் நிலைத்திருக்கின்ற ஒரு காலதத்துவத்தினை உடையவனே! உண்டாக்கப்பட்ட காலதத்துவமும் ஆகி, அவற்றைக் காத்து, எம்மையும் காக்கின்றவனே! நின் தொண்டனாகிய யான் செய்த வலிய வினைப்பயன்களைக் கழித்து எனக்கும் அருள்வாயாக. [புவனங்களின் தோற்ற ஒடுக்கங்கட்கு முன்னும் பின்னும் உள்ளவன் ஆகியநினக்குஎன் வினைகளைக்கழித்துக் காத்தருளுதல் அருமை உடையதோ?' என்பது கருத்து. 'உழிதரு கால் அத்த' என்பதற்கு, 'நிலைபெற்றிருக்கும் திருவடியினையுடைய அத்தனே' எனவும் பொருள் உரைப்பார்கள். 'மூப்பான் இளையவன் முன்னவன் பின்னவன்' எனத் திருக்கோவையாரினும் இறைவனின் இந்தத் தன்மையினை அடிகள் குறித்துள்ளனர்.]

பவனெம் பிரான்பணி மாமதிக் கண்ணிவிண் ணோர்பெருமான்
சிவனெம்பிரான்என்னை ஆண்டுகொண்டான்என்சிறுமைகண்டும்
அவனெம் பிரானென்ன நானடி யேனென்ன இப்பரிசே
புவனெம் பிரான்தெரி யும்பரி சாவ தியம்புகவே. 9

எல்லாப் பொருள்களுக்கும் முதற்காரணமாக இருப்பவன் எம்பெருமான்; அவன், குளிர்ந்ததும், அழகியதுமாகிய பிறையினைத் தலைமாலையாகச் சூடியிருப்பவன்; தேவர்களுக்குத் தேவனாக விளங்குபவன்; 'சிவன்' என்னும் திருநாமத்தை உடையவன்; சுயம்பு வடிவாக விளங்குபவன்! என் சிறுமையினைக் கண்டும், கண்டவர் 'எம் இறைவன்' எனவும் யான் அவன் அடியவன் என்னவும் பெறுமாறு, என்னை அவன் ஆண்டு கொண்டருளினான். இந்த அவனுடைய அருளுந் தன்மையினைத் தெரிந்துகொள்ளும் வழி யாதென்பதனைக் கூறுவீராக! ['எல்லாப் பொருள்களுக்கும் முதற்காரணனாகவும் தேவர்கோமானாகவும் இருப்பவன் சிவன். என் சிறுமை கருதாது என்னையும் வந்து அவன் ஆட்கொண்டமைக்கு யாது காரணமோ? அறிந்தாற் சொல்வீராக' என்பது கருத்து. சிறுமை-சிற்றறிவும் சிறு செயலும் உடைமை. புவன்-சுயம்பு; ஒளி மேனியன். சிவன் - மங்களகரன். மலர்மாலைபோல வளைந்திருத்தலால், மதியைக் 'கண்ணி' என்றனர். பிரான்-வள்ளன்மை உடையவன்.]

புகவே தகேன்உனக் கன்பருள் யானென்பொல் லாமணியே
தகவே யெனையுனக் காட்கொண்ட தன்மையெப் புன்மையரை
மிகவே உயர்த்தி விண்ணோரைப் பணித்திஅண் ணாவமுதே
நகவே தகும்என் பிரானென்னை நீசெய்த நாடகமே. 10

தொளைக்கப்படாத என் மாணிக்கமே! யான் நினது அடியார் கூட்டத்தின் நடுவே புகுதற்கும் தகுதியற்றவன். அத் தன்மையனாகிய என்னை, நினக்கு அடிமையாக்கிக் கொண்ட தன்மை தகுதியுடையதோ? எத்துணைச் சிறுமையாளரையும் மிகவும் உயரச் செய்கின்றனை! மேன்மை பெற்றவராகிய தேவர்களையும் தாழ்த்துகின்றனை! அப்பனே! அமுதனே! எம்பெருமானே! நீ செய்த திருக்கூத்துத்தான் என்னே? நகைத்தற்கே தகுதியுடையதாக இருக்கின்றதே! ['இறைவனே! நின் அன்பர் கூட்டத்திடைப் புகவும் தகுதியற்ற என்னை, நீயே வலியவந்து ஆட்கொண்ட வரலாற்றை நோக்கினால், அது நகுதற்கே தகுதியுடையதாய் இருக்கின்றது!' என்பது கருத்து. பொல்லாமணி-தொளைக்கப்படாத மணி.]

## 2. அறிவுறுத்தல்

(தரவு கொச்சகக் கலிப்பா)

[அடிகள் தம்முடைய மனத்திற்கு அறிவுரை கூறுபவராக அருளிச்செய்தவை இந்தப் பத்துப் பாடல்களும். முதல் எட்டுச் செய்யுட்கள் இறைவனது அருளினை வேண்டித் துதிக்கின்ற விண்ணப்பங்களாகவும், இறுதியிலுள்ள இரண்டு செய்யுட்கள் மனத்துக்கு அறிவுறுத்துதலாகவும் விளங்குகின்றன.]

**நாடகத்தா லுன்னடியார் போல்நடித்து நானடுவே**
**வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்**
**ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்**
**ஊடகத்தே நின்றுருகத் தந்தருளெம் உடையானே. 11**

எம்மை அடிமையாக உடையவனே! நான், நின்பால் கனிகின்ற அன்பினை இல்லாதவனாயிருந்தும், வஞ்சனையாக அன்பனைப்போல நடித்துக்காட்டி, நின் அடியவரைப் போலவே அவர்களுக்கிடையே நடித்தவனாகி, முத்தியுலத்தில் அவரோடுங்கூடிப் புகுதற்கு மிகப்பெரியதாக விரைகின்றேன். ஆதலினால், சிறப்பு வாய்ந்த பொன்மலையே! மாணிக்க மலையே! நின்னிடத்து இடையறாத அன்பு என்னுடைய மனத்தினூடே நிலைத்துநிற்கவும், அதனால் யான் மெய்யாகவே நின்னை நினைந்து உருகவும் எனக்கு அருள் செய்வாயாக. ['யான் நின்னிடத்தே அன்பிலேனாயிருந்தும், நின் அன்பரைப்போல நடித்து முத்தியுலகிற் புகுதற்கு விரைகின்றேன்; அதற்கேற்ப, நின்னிடத்து இடையறாத அன்பு செய்தலை இனியேனும் எனக்கு அருள்புரிதல் வேண்டும்'

என்பது கருத்து. நாட்கத்தால் என்பதனை, நடித்துக் காட்டுந் திறனால் எனவும், நாட்டகத்தில் எனவும் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். ஆடகம் இறைவனின் பொன்மேனியினையும், மணிக்குன்றம் இறைவியின் நீலமேனியினையும் குறிப்பன. இதனால், மணிவாசகர் தம் பூதவுடலை நீத்து இறையடி சேர்தலை மிக விரும்பி வேண்டுகின்றனர் என்பதும் பெறப்படும்.]

யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயும் மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் அருள்பெறுநாள் என்றென்றே வருந்துவனே. 12

யான் சிறிதுங்கூட எனக்கு வந்துறும் பிறவிகளுக்கு அஞ்சமாட்டேன். ஆயின், இறப்புத் துன்பத்தினுக்கும் உட்படாமல் என்ன செய்யக் கடவேன்? ஆகவே அதற்கும் அஞ்சேன். வானுலகத்து ஆட்சியினைப் பெறுவதாயிருப்பின் அதனையும் விரும்பேன். மண்ணுலகை ஆள்கின்ற சிறப்பு வாய்ப்பதாயிருப்பினும், அதனை ஒரு பொருட்டாக மதித்து இருக்கவும் நினையேன். தேன்பொருந்திய கொன்றைமலர் மாலையினைத் தரித்த சிவபெருமானே! எம்பெருமானே! எம் பெரியோனே! நின் திருவருளைப்பெற்று நான் வீடுபேறடையுங் காலம் எக்காலமோ என்றே சதா வருந்தியிருப்பேன். அதனை எனக்கு அருள்வாயாக. [பிறப்புத் துயரினுக்கு அஞ்சேன்; இறப்புத் துயரினுக்கும் அஞ்சேன்; மண்ணுலக ஆட்சியை மதியேன்; விண்ணுலக ஆட்சியையும் விரும்பேன்; நின் திருவருட்கு ஆளாகும் காலம் எக்காலமோ என்றே வருந்துவேன்; அதனால், அந்தப் பேற்றினை எனக்கு அருள் செய்வாயாக' என்பது கருத்து.]

வருந்துவன்நின் மலர்ப்பாத மவைகாண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன் ஏத்தேன்நாத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தாய் அருளமுதம் புரியாயேல்
வருந்துவனற் றமியேன்மற் றென்னேநான் ஆமாறே. 13

நாய்த்தன்மையின னவன் அடியேன். நின்னுடைய மலரடிகளாகிய அவற்றைக் காண்பதற்காகவே நான் மிகவும் வருந்தி முயல்கின்றேன். அங்ஙனமாயிருந்தும், நினக்கு நல்ல மலர்களைச் சாத்தேன்; நாவில் தழும்பு உண்டாகும் அளவிற்கு நின் புகழினைக் கூறி வாழ்த்தவும் மாட்டேன்; நின் பெருமைக்குப் பொருந்திய பொன்மலையாகிய வில்லினை வளைத்துக் கைக்கொண்டவனே! நின் அருளாகிய அமுதத்தனை அருளிச்செய்யா திருந்தனையானால், வேறு ஆதரவற்ற தனியனாகிய யான், மேலும் வருத்தம் அடைவேன்.

அ∴.தன்றி, நினக்கு அடியனுகும் வகைதான் வேறு யாதோ ? ['நின் திருவருளைப் பெறுதற்கு வருந்தி முயலுகின்ற யான், நினக்கு மலர்சூட்டியும் நின்னைப் புகழ்ந்துபோற்றியும் வழி படாததற்குச் சினந்து, நீ அருளவில்லையானால், மேலும் வருந்தி அழிவதைத்தவிர என்னால் வேறு யாது செய்ய இயலும்?' என்பது கருத்து. 'மலையை வளைத்த நீ, என் கன் மனத்தை வளைத்தல் கடினமல்லவே? எனத் துதிக்கின்றனர். பொன்னார் மேனியனாகிய அவன்' தன் மேனிவண்ணத்திற்குப் பொருந்திய வகையில் பொற்சிலை ஏந்தினன் என, உபசார மாகக் கூறினார். 'வருந்துவன்' என்றது, தொடர்ந்து வந்துறும் பிறவித் துயரினைக் கருதிய காரணத்தால்.]

ஆமா றுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே. 14

மெய்யறிவினது சதுரப்பாட்டினாலே அடையப்படுகின்ற அறிவுப் பொருளே! நின் திருவடிக்கே ஆளாகும் வண்ணம் மனம்நெகிழமாட்டேன்; நின்பால் அன்புகொண்டு உருகவும் மாட்டேன்; பூமாலை புனைந்து நின்னைத் துதிக்கவும் மாட்டேன். நின்னைப் புகழ்ந்து போற்றுதலையும் செய்யேன்; தேவர் பெருமானான நின் திருக்கோயிலை அலகிடவும் மாட்டேன்; மெழுகுதலையும் செய்யேன்; நின்னையே நினைந்து ஆனந்தக்கூத்தும் ஆடேன். மற்று, நான் செய்வதெல்லாம், சாவதற்கான வழியினைத் துரிதப்படுத்துவனவாகவே உள்ளன. என்னையும் கடைத்தேற்றி அருள்வாயாக! ['நின் திருவருளுக்கு ஆளாகும்படி செய்தற்குரிய பலப்பல திருத்தொண்டுகளையும் செய்யேன் ஆயினும், திருவடியைப் பெறுவதற்கு விரைகின்றேன்; எனக்கு அருள் செய்தருள்க' என்பது கருத்து. சதுர்-திறமை. குழைதல்-நெகிழ்தல். சாதல்-உடற்கூட்டினை ஒழித்தல். திருவடிப் பேற்றுக்குத் தடையாயிருப்பது உடலாதலின் 'சாமாறே விரைகின்றேன்' என்கின்றனர்.]

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே! 15

ஆகாயம், நிலம், காற்று, ஒளியுடைய பொருள்கள் ஆகியன வாகியும், உடலும் உயிரும் ஆகியும், மெய்யர்க்கு மெய்ப்பொருளாகவும்பொய்யர்க்குப் பொய்ப்பொருளாகவும் ஆகியும், அவற்றுட்படாது நிற்கும் முதல்வனாகியும், அவ்வ

வர்களை 'யான்' 'எனது' என மயங்கிக் கூத்தாடச் செய்விப் பவனுகியும் நிலைபெற்றிருக்கும் நின்னை, யான் என்னவென்று சொல்லித் துதிப்பேன்? ['அனைத்துமாகியும், அவற்றுட் படாத முதல்வனுகியும், உயிர்கட்கு உடலும் உயிருக்கு உயிரும் ஆகியும் விளங்குவோனே! யான் எனது என இயங் கும் அவற்றின் இயக்கமாகவும் இருப்பவனே! நின்னை யாது சொல்லி வாழ்த்துவேன்?' என்பது கருத்து. ஒளி-சூரியன், சந்திரன், அக்கினியாகிய மூன்றையும் குறிக்கும்.]

வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே. 16

வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்கின்ற கொன்றை மாலையினை அணிந்தவனே! நின்னை வானவர்கள் துதிப்பது தாம் வாழ்வுபெறுதலின் பொருட்டாகவே! நின்னிடத்தில் அவர்தம் உள்ளத்தைப் பணிவிப்பது தாம் உயர்வடைந்து, தம்மைப் பிறர் எல்லாரும் வழிபடுதலை விரும்பியே! நாய் போன்ற அடியனேன் பாழாகிய என் பிறவித்தளையினை அறுத் தலின் பொருட்டாகவே நின்னைத் துதிக்கின்றேன். எனக்கு உதவுக! ['தேவர்கள், தாம் உயர்ந்து பிறர் தம்மைத் தொழு தலை விரும்பி நின்னை வழிபடுகிருர்கள்; யானே என்னுடைய பிறவித் தளையினை அறுத்துக் கொள்வதற்காகவே நின்னைத் துதிக்கின்றேன்; அதனுல்,எனக்கு விரைவில் வந்து அருள்புரிக' என்பது கருத்து. வானவர், இந்திரன் முதலிய இறையவர் பதத்தினர். மதுகரம்-தேனை ஈட்டுவது; அது வண்டு.]

பரவுவார் இமையோர்கள் பாடுவன நால்வேதம்
குரவுவார் குழல்மடவாள் கூறுடையா ளொருபாகம்
விரவுவார் மெய்யன்பின் அடியார்கள் மேன்மேலுன்
அரவுவார் கழலிணைகள் காண்பாரோ அரியானே. 17

அரியவனே! அராவிச் செய்யப்பெற்ற பெரிய வீரக் கழல் களை அணிந்திருக்கும் நின் இருதிருவடிகளைத் தேவர்கள் போற்றித் துதிக்கின்றனர். நான்குமறைகளும் நின் திருவடிப் புகழையே பாடுகின்றன. குரவமலரை யணிந்த நெடிதான கூந்தலையுடைய உமையம்மையும், நின்னுடைய இடப்பாகத் தினைப் பெற்றிருக்கின்றனள். நின்பால் மெய்யன்பினை யுடைய அடியார்கள் மென்மேலும் நின்னை வழிபட்டு உய்தி பெறக் கருதிக் கூட்டமாக நின்முன் நிறைகின்றனர். இவர் கள் எல்லாரும் நின்திருவடிகளைத் தரிசிப்பார்களோ? ['தேவர் களும் மறைகளும் காணுத சிறப்பின நின் திருவடிகள். நின்னில்

ஒரு பாகமாகியவளோ அவற்றைக் காணும் கடமையினை உடையாள் அல்லள். மெய்யன்பர்கள் கூடிநின்று தரிசித்து உய்தி பெறுவர்; யானோ அவர்போல யாதுமே செய்திலேன்; என்னையும் கடைத்தேற்றுவாய்' என்பது கருத்து. அரியவன்- மனம் வாக்குக் காயங்கட்கு எட்டாதவன். அரவுவார் கழல்- ஒலி முழங்கும் பெருங்கழல்களும் ஆம்.]

அரியானே யாவர்க்கும் அம்பரவா அம்பலத்தெம்
பெரியானே சிறியேனை ஆட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன் வியந்தலறேன் நயந்துருகேன்
தரியேன்நான் ஆமாறென் சாவென்நான் சாவேனே. 18

யாவர்க்கும் அறிதற்கு அரியவனே! தில்லை அம்பலமான சுத்தப் பெருவெளியில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே! சிறுமைமிக்க அடியேனை ஆளாக்கிக் கொண்ட செறித்த கழலினையுடைய நின் திருவடிக்கீழ், மணம்பொருந்திய மலர் களைத் தூவி வழிபடுதலையும் செய்யேன்; நின் திருப்புகழை வியந்துபோற்றிக் கதறவும் மாட்டேன்; நின்னையே மனத் தின்கண் விரும்பி, அதனால் உருகுதலையும் செய்யேன். இத் தகையேனாகிய யான், இனியும் இவ்வுடலோடு வாழ்ந்திரேன். எனக்கு உய்தியான வகைதான் யாதோ? யான் இனிச் சாதலையே செய்வேன்! ['கருத்து, இறைவனே! என்னையாட் கொண்ட நின் திருவடிகளை வழிபட்டு உய்தலில் மனஞ் செலுத்தாத யான், உயிர் வாழ்தலினும் இறத்தலே எனக்கு தகுதியுடையது' என்பதாம். பெரியோனாகிய அவன், தன் னுடைய பெருந்தன்மையினால் என்னை ஆட்கொண்டும், சிறி யோனாகிய யான், என் சிறுமைத் தன்மையினால், அவன் திருவடிகளை முறையே வழிபடலை மறந்தேன்; இங்ஙனம் மறந்த யான் சாவதுதான் தகுதியானது என்கின்றனர்.]

வேனில்வேள் மலர்க்கணைக்கும் வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலாம் நின்றுருகப் புகுந்தாண்டான் இன்றுபோய்
வானுளான் காணாய்நீ மாளாவாழ் கின்றாயே. 19

இளவேனிற் காலத்திற்குரியவன் மன்மதன்; அவன் எய் கின்ற மலரம்புகளுக்கும், வெள்ளிய நகையினையும் சிவந்த வாயினையும் கருங்குவளை மலர்போன்ற கண்களையும் உடைய மகளிர்க்கும் ஈடுபட்டுப் பதைத்து உருகுகின்ற பாழ்பட்ட மனமே! உடல் முழுவதும் நின்று உருகும்படியாகத், தானே வந்து என்னுட்புகுந்து, என்னை அன்று இறைவன் ஆட் கொண்டருளினன். இன்றோ, அவன் என்னைப் பிரிந்து

சென்று வானகத்தில் இருக்கின்றான். அவனைக் காணாதா யாகிய நீ, இறந்தொழியாது இன்னமும் உயிர்வாழ் கின்றனையே? [மனமே! மலர்க்கணைக்கும் மாதர்க்கும் பதைத்து உருகுகின்ற நீ, இறைவனின் பிரிவினுக்குப் பதைத்து உருகா திருக்கின்றனையே? பயனற்ற நீ, இறந்து ஒழிந்தால்தான் என்ன?' என்பது கருத்து. நகை-பல். வாய்-வாயிதழ்கள்.]

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமற் காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீஅவலக் கடலாய வெள்ளத்தே. 20

பயனுடைய பேரின்பவாழ்வினைப் பெற்று, நிலையாக வாழக் கருதாத நெஞ்சமே! நீயும் வாழ்கின்றனை! கொடிய வினையிலே அகப்பட்டு அழுந்தாமல், நம்மைக் காப்பாற்று கின்றவனாகிய இறைவனைத் துதியாதே, துயரத்தில் அழுந்து கின்றனை! நீயே நினக்குக் கேடு சூழ்கின்றனை! பலமுறையும் நினக்கு எடுத்துரைக்கின்றேன்; எனினும் நீ அதனைக் கேட்டுத் திருந்தாமல், துன்பக் கடலாகிய பெருவெள்ளத் திலேயே வீழ்கின்றனை! நின் தன்மைதான் என்னே? ['மனமே! யான் பலகாற் சொல்லியும், இறைவனைத் துதித்து நற்கதி பெறாமல், நினக்கு நீயே கேடுசூழ்ந்து, துயரக்கடலுள் வீழ்கின்றனையே! நின் செயலுக்கு யான் என் செய்வேன்?' என்பது கருத்து. அவலத்தின் மிகுதியைக் கூறுவார், 'கடல்' என்றனர். குருபரனாகி இறைவன் காட்சியளித்தபோதும், முற்றவும் உலகப்பற்றினின்றும் நீங்காது மயக்கங் கொண்டிருந்த மனமானது, அவனை நாடாமல், பிறபிற இச்சைகளிற் பட்டுழல, அடிகள், இவ்வாறு வருந்துகின்றனர்.]

## 3. சுட்டறுத்தல்

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

['சுட்டி அறிகின்ற அறிவை ஒழித்தல்' என்பது இத் தலைப்பின் பொருள். இப் பதிகச் செய்யுள்கள் அந்த முடிபினை வற்புறுத்துவன.]

வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்கு

உள்ளந்தாள் நின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாங் கண்ணாய் அண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையும் மரமாம்தீ வினையி னேற்கே. 21

*'கங்கையின் பெருக்கானது வந்து விழுந்து தங்கிய விரித்த செஞ்சடையினை உடையவனே! இடபஊர்தியை உடையவனே! தேவர் கோமானே!' என்று அன்பர்கள் நின்னைத் துதிப்பார்கள். அந்தத் துதிச்சொற்களைக் கேட்டதும், ஆர்வங்கொண்ட மனத்தினராய், பள்ளத்தில் சென்று விழுகின்ற மிகுந்த நீரினைப்போலக், கீழ்மேலாகப் பதைத்து உள்ளம் உருகுகின்ற தன்மையினராக, அடியவர்கள் நிற்பார்கள். அவர்க்கு அருளாது, என்னையும் வந்து ஆண்டருளின நினக்கு, உள்ளங்கால் முதல் உச்சியளவும் நெஞ்சாகக்கொண்டு யான் உருகினேனில்லை! உடல் முழுவதும் கண்ணாகக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் பெருகிப் பாய்ந்தோட நின்றேனுமில்லை! தீவினையினை உடைய எனக்கு, நெஞ்சம் கல்லேயாகும்! இரு கண்களும் மரமே யாகும்! ['மெய்யடியார் வேண்டிநிற்கவும், என்னை வலிந்து நீ ஆட்கொண்ட நின் கருணையினைக் குறித்து மனமுருகாதும், கண்ணீர் பெருக்காதும் நிற்கும் தீவினையாளன் யான்!' என்பது கருத்து. அண்ணா என்பதற்குக் கிட்டவொண்ணாத என்றும் பொருள் உரைப்பர்.]*

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடன் என்பாய் போல
இனையன்நான் என்றுன்னை அறிவித் தென்னை
ஆட்கொண்டெம் பிரானானாய்க்கு இரும்பின் பாவை
அனையநான் பாடேன்நின் றாடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோநான் ஆன வாறும்
முடிவறியேன் முதலந்தம் ஆயி னானே. 22

*வினைப் பாசத்தினுள்ளே சிக்கி, மீள வகைகாணாது அமிழ்ந்து கிடந்தேன் யான். என்னுள், நீயாகவே வந்து புகுந்து ஆட்கொண்டு நின்றாய். 'நான் வினைக்கட்டினை ஒழிப்பவன்; என்பால் நீ வருக' என்று கூறுவாய்போல, என்முன் எழுந்தருளினை. 'இன்ன தன்மையன்' என்று நின்னையும் எனக்கு அறிவித்தனை! என்னை நினக்கு அடிமை யாக்கிக்கொண்டு, என் தலைவனும் ஆகினை! இருப்புப் பாவை யினைப் போல உணர்வற்று விளங்குகின்ற யான், நீ அவ்வாறு கருணைகாட்டியுங்கூட, நின் புகழினைப் பாடாதிருந்தேன்!*

*நின்னால் அடைந்த அந்தப் பேரின்பத்தினை எண்ணிக் கூத்தாடாதிருந்தேன்! நின்னை நோக்கி அலறுதும் இருந்தேன்! நின்னை நினைந்து உருகி உலறுதும் இருந்தேன்! உடற் கூட்டைக் கைவிட்டு உயிர்தளராதும் நின்றேன்! முதல் வனே! நான் அங்ஙனம் ஆகியவாறு முறையாகுமோ? ஆதியும் அந்தமும் ஆகியவனே! என் முடிவு யாதென யான் அறிகின்றிலேனே? ['வலியவந்து நீ ஆட்கொண்டபோதும், யான் அந்த அருளினை முற்றவும் ஏற்றவனாகி, அதற்குத் தக்கவாறு நின்னைப் போற்றி உருகாது செயலற்றேனே! என் முடிவுதான் யாதாகுமோ? என்னைக் காத்தருள்க' என்பது கருத்து.]*

ஆயநான் மறையவனும் நீயே யாதல்
அறிந்துயான் யாவரினுங் கடைய னாய
நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டும்
நாதனே நானுனக்கோர் அன்ப னென்பேன்
ஆயினேன் ஆதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தா மில்லையே அன்றி மற்றோர்
பேயனேன் இதுதான்நின் பெருமை யன்றே
எம்பெருமான் என்சொல்லிப் பேசு கேனே. 23

*அறிஞரால் ஆராயப்படுகின்ற நான்மறைகளின் உட் பொருளாகியவன் நீயேயாதலை அறிந்தேன். எல்லாரினும் கடைப்பட்டவனாகிய நாய்போல்பவன் யானாக ஆதலையும் நன்றாக அறிந்தேன். அதனால், 'நாதனே! நானும் உனக்கோர் அன்பன்' என்றுஞ் சொல்வேனாயினேன். ஆதலால், என்னை நீயும் ஆட்கொண்டு அருளினை! ஒப்பற்ற பேயினேனாகிய என்னையல்லாது, நீ சென்று ஆட்கொள்ளுவதற்குத் தக்க பக்குவமடைந்த அடியார்கள்தாம் வேறில்லையோ? இருந்தும், என்னை வந்து நீ ஆட்கொண்டது நின் பெருமை அல்லவோ! எம் பெருமானே! நின்னை யாது சொல்லிப் புகழ்வேன்? ['வேதப்பொருளாக விளங்கும் உயர்வுடையோன் நீயாதலை யும், கடைப்பட்ட நாயினேன் யானாதலையும் அறிந்து, என்னைக் காத்தருள நின்னை வேண்டினேன். நீ வந்து என்னை ஆட்கொண்டது, நினக்கு வேறு அடியவர் இல்லாததனால் அன்று; என்னைக் கடைத்தேற்றுவிக்கும் பெருங்கருணை யினாலேயே யாகும்; அத்தகைய நின் பெருமையினை யாது சொல்லிப் புகழ்வேன்?' என்பது கருத்து.]*

பேசிற்றும் ஈசனே யெந்தா யெந்தை
பெருமானே யென்றென்றே பேசிப் பேசிப்
பூசிற்றுன் திருநீறே நிறையப் பூசிப்

போற்றியெம் பெருமானே யென்று பின்று
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே அவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே எந்தாய் அந்தோ
என்னைநீ ஆட்கொண்ட வண்ணந் தானே. 24

குற்றமற்ற மாணிக்க மலையே! எம் தந்தையே! பேசுவதானால், 'ஈசனே! எந்தையே! எம் தந்தையாகிய பெருமானே!' என்றென்றே சொல்லிச் சொல்லி நின்னைத் துதிப்பார்கள். யாதேனும் பூசுவதானால், திருவெண்ணீற்றையே உடலெங்கும் நிறையப் பூசுவார்கள். 'எம் பெருமானே! நின்னை வணங்குகின்றேன்' என்று, பின்னிடாத பேரன்பினாலே, நின்னைப் போற்றிப் பணிவார்கள். அங்ஙனம் நின்னைப் போற்றித், தம்முடைய பிறப்பும் இறப்புமாகிய துன்பத்தினைக் கடந்தவர்களை ஆண்டருளியவனே! உலகத்து ஆசைவெள்ளத்திலே அகப்பட்டு, நின் அடியாரைப்போல நடிக்கும் வஞ்சகனாகிய என்னையும், நீ அடிமைகொண்டு அருளிய நின் பெருந்தகைமைதான் என்னே! ['இறைவனே! அன்பரை ஆட்கொள்ளும் தன்மையனாகிய நீ, அன்பற்று, ஆனால் அன்பனாக நடிக்கும், எனக்கும் அருளிய கருணைதான் வியப்புடையதாவது!' என்பது கருத்து. பின்றல்-பின்னிடல். கடந்தார்-கடக்கும் பரிபக்குவ நிலையினை அடைந்தவர்.]

வண்ணம்தான் சேயதன்று வெளிதே யன்று
அநேகனேகன் அணுவணுவி லிருந்தா யென்றங்கு
எண்ணந்தான் தடுமாறி யிமையோர் கூட்டம்
எய்துமா றறியாத எந்தா யுன்றன்
வண்ணந்தா னதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணம்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்
எம்பெருமான் என்சொல்லிச் சிந்திக் கேனே. 25

"நின் நிறந்தான் செந்நிறம் அன்று; வெண்மையும் அன்று. நீ பலவாம் தன்மையன்; ஒன்றாகும் தன்மையனும் ஆவாய். அணுவாகியும், அணுவினைக் கடந்த நுட்பமுடையவனாகியும் இருப்பவன் நீ" எனவெல்லாம், தேவர்களின் கூட்டம் நின்னைக நறித்துச் சொல்லும். அவ்வாறே கொண்டு, தம் நினைவு தடுமாறப்பெற்று, நின்னை அடைவதற்கான வகையினை அறியாதும் உழலும்! அத்தகைய எந்தையே! எனக்கு, நின் வண்ணமாகிய அதனையும் காட்டினாய்; நின் வடிவினையும் காட்டினாய்; நின் மலரடிகளாகிய அவற்றையும் காட்டினாய். உய்யும் வகை

*யற்றிருந்த என்னை, உறுதியாகவே பிறவாதிருக்கும்படி செய்து, தடுத்தாட் கொள்ளுதலையும் செய்தாய்! எம் பெருமானே! நின் கருணையினை யாதுசொல்லி நினைத்தற்கு யான் வல்லேன்? ['தேவர்களும் நின்னை உண்மையாக அறியாது தடுமாறிநிற்க, அவர் காணாத நின் தன்மையினைக் காட்டி, என்னை ஆட்கொண்ட நின் கருணையினை எவ்வாறு சொல்லி நினைப்பேன?' என்பது கருத்து.]*

சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
வந்தனைஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே. 26

*நாயினேனுடைய எனது சிந்தனையினை முற்றவும் நினக்கே உரியதாக்கினாய்! என் இரு கண்களையும் நின் திருவடி மலர்களையே நோக்கியிருக்குமாறும் செய்தாய்! என் வணக்கத்தையும் அத் திருவடி மலர்க்கே உரியதாக்கினாய்! என் பேச்சினை நின் புகழினைப்பற்றிப் பேசுதற்கே உரியதாகச் செய்தாய்! என் ஐம்பொறியறிவும் நின்னையே துய்க்குமாறு எழுந்தருளிவந்து, என்னை இங்ஙனம் ஆட்கொண்டனை! என் உள்ளத்துள்ளே புகுந்த அருஞ்செயலினையுடைய, அன்பு மயமான, அமுதப் பெருங்கடலே! பொற்குன்றமே! சிவந்த தாமரைக் காட்டைப்போன்ற திருமேனி வண்ணத்தினை உடைய ஒப்பற்ற சுடரே! இருமையும் அற்ற இந்தத் தனிமையாளனுக்கு, நின்னையே நீ தந்தருளினையே! இஃது என்னதான் அதிசயமோ? ['இறைவனே! இருமையும் அறியாத என் மன முதலியவற்றை நினக்கே உரிமையாக்கி என்னை அடிமை கொண்ட நின் பெருங்கருணையினை என்னென்று புகழ்வேன்?' என்பது கருத்து. இறைவனின் திருமேனி பொன்னினை ஒக்கும்; ஆதலால், மலையென்றது பொன்மலையினை. ஐம்பொறிகட்கும் மனத்திற்கும் இனிமைதரும் சிறப்புப்பற்றி அவனருளை 'மாலமுதப் பெருங்கடல்' என்றனர். இருமை அற்ற நிலை, தன்னை உணராதும் தலைவனை உணராதும் நிற்கும் அறியாமை நிலை. செம்மேனி எம்மானைச் 'செந்தாமரைக் காடனைய மேனித் தனிச்சுடர்' என்றனர்.]*

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னுங் காலாற்

**கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு**
**இனியென்னே உய்யுமா றென்றென் றெண்ணி**
**அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை**
**முனைவனே முதலந்தம் இல்லா மல்லற்**
**கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே.** 27

*கேவலாவத்தை நயிலே தனியனாகிக் கிடந்தவன் யான். பிறவியாகிய பெருங்கடலிலே பின்னர் வீழ்ந்தேன். துன்பங் களாகிய பேரலைகளால் தாக்கப்பட்டு, ஆதாரம் யாதொன் றும் இல்லாமல், அக்கடலிடத்தேயே உழன்றேன். கொவ்வைக் கனியினை நிகர்த்த, பவளவாயினராகிய மாதரென்கிற புயற் காற்றினாலே அலைக்கப்பட்டுங் கலக்கமுற்றேன். ஆசை என் கின்ற பெரிய கருமீனின் வாயிற்சிக்கி, இனிப் 'பிழைக்கின்ற தற்கு வழி யாதோ'வென்று பலகாலும் எண்ணி நொந்தேன். முடிவிலே, திருவைந்தெழுத்தாகிய தெப்பத்தினைப் பற்றிக் கொண்டு, செயலற்றுங் கிடக்கலானேன். முதல்வனே! அத்தகைய மூர்க்கனாகிய எனக்கு, முதல் ஈறுகள் இல்லாத முத்திக் கரையினைக் காட்டி, என்னைக் கரைசேர்த்து ஆட் கொண்டனை! நின் கருணைதான் என்னே! ['பிறவியிற் சிக்கி உழன்று, இறுதியில் திருவைந்தெழுத்தின் புணைபற்றிக்கிடந்த மூர்க்கனாகிய எனக்கு, முத்திக்கரையினைக் காட்டியருளின நின் கருணைதான் என்னே? என்பது கருத்து. முதலந்தம் இல்லாமை-தோற்றக் கேடுகள் இல்லாமை. அஞ்செழுத்தின் புணைபற்றிக் கிடத்தல்' தன்னைக் காக்கும் பொறுப்பினை அத னிடத்தே விட்டுத், தான் செயலற்று அதனையே பற்றிக் கிடத்தல்.]*

கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே. 28

*யாவராலும் கேள்வியாற் கேட்டறியப் படாதவன்; யாதொரு அழிவென்பதும் தனக்கில்லாதவன்; யாதொரு உறவும் தனக்கில்லாதவன்; பிறரிடம் சென்று கேளாமலே அனைத்தையும் கேட்டறிந்தவன், இறைவன். அவன், நாட் டில் உள்ளவர்கள் பார்த்திருக்கவும், உலகத்தில், நாயினே னுக்கு இருக்கை அளித்துக், காட்டக்கூடாதன எல்லாவற்*

றையும் காட்டியருளினன்; பின்னும், கேட்கக் கூடாதன வற்றை எல்லாம் கேட்பித்தும் அருளினன்; என்னை மீட்டும் சென்று பிறவாமற்படிக்குக் காத்தும் ஆட்கொண்டான்! எம்பெருமானாகிய அவன் செய்திட்ட வித்தைதான் இது வாகும்! ['பெருமான், என் சிறுமை நோக்காது, தன்பெருங் கருணையினால், தானே எழுந்தருளிவந்து என்னைத் தடுத்து ஆட்கொண்டது, 'நாய்க்குத்தவிசு இட்டாற்போன்ற' தொரு அற்புதச் செயலே' என்பது கருத்து. தவிசு-இருக்கை. நாட்டார்கள்-உலகினர்கள்; அவர்கள் 'விழித்திருப்ப' என்றது, அவர்கள் அதிசயித்து வியந்து நோக்கியிருப்ப என்பதாகும். காட்டாதன, திருவடிகள்; கேளாதன, திருவைந்தெழுத்தின் உபதேசம். விச்சை-வித்தை.]

விச்சைதான் இதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாதல் அடியார் தம் அடிய னாக்கி
அச்சந்தீர்த் தாட்கொண்டான் அமுத மூறி
அகம்நெகவே புகுந்தாண்டான் அன்பு கூர
அச்சன்ஆண் பெண்ணலிஆ காச மாகி
ஆரழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சைமா மலர்புரையும் மேனி யெங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே. 29

அனைவருக்கும் தந்தையாகியவன் இறையவன். ஆண் பெண் பேடு ஆகாயம் என்பவைகளாகி, எல்லாவற்றிற்கும் ஆதியாகிய சோதிவடிவான சுத்தமாயையாகி, இவை அனைத்திற்கும் முடிவும் ஆகி, இவற்றுக்கு எல்லாம் அப்பாற்பட்டும் நின்றவனும் அவனே ஆவான். செச்சை மலரை நிகர்த்த திருமேனியுடைய சிவபெருமானாகிய அவனே, எங்கள் பெருமானும் தேவர்கோமானும் ஆகிய பரம்பொருளும் ஆவான். அவன், தன்பால் பேரன்பினையுடைய அடியார்களுக்கு என்னையும் அடியவனாக்கினன்; என்னுடைய பிறவியச்சத்தை நீக்கியும் அருளினன்; என்னைத் தடுத்து ஆட்கொண்டும் அருளினன்; பேரின்பமாகிய அமுதம் ஊற்றெடுத்து அதனால் நெஞ்சம் கரையவும், அன்பு மிகுதியாகவும், என் உள்ளத்தே புகுந்து என்னையும் ஆண்டருளினன்! கேட்குமிடத்து, இதனை ஒப்பதாகிய ஓர் அதிசயமும் வேறுண்டோ? ['உருவிலியாய், பஞ்சபூத வடிவனாய், அவற்றுக்கும் முடிவிடமாகிய மூலப்பகுதியாய், அதனையும் கடந்து நிற்பவன் சிவபிரான்! அவன், என்னையும் ஆட்கொண்டு, என்னுட்புகுந்து பேரின்பம் விளைத்தனன்! இதுபோன்ற செயற்கு, ஒப்பதான அதிசயமும் வேறுளதோ?' என்பது கருத்து. செச்சை-வெட்சிமலர்; செஞ்சந்தனம்.]

**தேவர்கோ அறியாத தேவ தேவன்**
**செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கும் மற்றை**
**மூவர்கோன் ஆய்நின்ற முதல்வன் மூர்த்தி**
**மூதாதை மாதாளும் பாகத் தெந்தை**
**யாவர்கோன் என்னையும்வந் தாண்டு கொண்டான்**
**யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்**
**மேவினோம் அவனடியார் அடியா ரோடும்**
**மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே.** 30

*தேவர்களின் கோமானாகிய இந்திரனும் அறியாத தேவ தேவன் அவன்! செழுமையான உலகங்களைப் படைத்துக் காத்து அழிக்கின்ற மற்றைய முக்கடவுளர்க்கும் தலைவனாகி நின்ற, ஆதிபுருடனும் அவனே! நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், சந்திரன், சூரியன் ஆன்மா என்கின்ற அட்டமூர்த்தமாக இருப்பவனும் அவனே! எல்லார்க்கும் மூதாதையும் அவனே! உமாதேவியால் ஆளப்பட்ட இடப்பாகத்தினை உடையவனும் அவனே! அவனே, எம் தந்தை! அவனே, யாவர்க்கும் கோமான்! இத்தகைய பெருமான், கடைப்பட்ட என்னையும், தானே வந்து ஆண்டுகொண்டு அருளினான். ஆதலால், யாங்கள் அவனையன்றிப் பிறர் எவருக்கும் அடிமையாக மாட்டோம்; எதற்கும் அஞ்சவும் மாட்டோம். அவனது அடியார்க்கடியவரோடு கூடியுள்ளோம்; அந்த ஆனந்தப் பெருவெள்ளத்திலேயே மென்மேலும் மூழ்கித் திளைத்துக் குடைந்தாடுவோம்! ['இறைவனால், தானே வந்து தடுத்தாட் கொள்ளப்பெற்ற கருணையினை உடைய யாங்கள், இனி எவருக்கும் அடிமையாகோம்; எதற்கும் அஞ்சோம்; அந்தப் பேரின்பத்திலேயே மூழ்கித் திளைப்போம்' என்பது கருத்து. மூர்த்தி-மூர்த்தத்தை உடையவன். குடைந்தாடல்-மூழ்கித் திளைத்தல்.]*

## 4. ஆத்தும சுத்தி

*(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்)*

*['இறையடியே பேரின்பம்' என்கின்ற உண்மையினை உணர்ந்துகொண்ட ஆன்மாவானது, தூயதாய், அந்த அநுபவத்திலேயே முற்றவும் அழுந்திக்கிடக்கின்றதனை அறிவிப்பது இது.]*

**ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை என்புருகிப்**
**பாடு கின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர்**
**சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே**
**தேடு கின்றிலை தெருவுதோ றலறிலைசெய்வதொன் றறியேனே.**

*யாதொரு துணையும் இல்லாத பிணத்தைப் போன்று, செயலற்றுக் கிடக்கின்ற மனமே! அவனால் அருளப்பெற்ற நீ, ஆனந்தக்கூத்தும் ஆடுகின்றாயில்லை! உடையவனான அவன் திருவடிக்கு அன்பும் செய்கின்றாயில்லை! என்பு உருகி அவன் புகழைப் பாடுகின்றாயும் இல்லை! அஞ்சி நடுங்குகின்றாயும் இல்லை! தாழ்ந்து வணங்குகின்றாயும் இல்லை! அவன் திருவடி மலர்களைச் சென்னிமேற் சூடுகின்றாயும் இல்லை! காணா விடத்து, அவனைத் தேடுகின்றாயும் இல்லை! தெருக்கள் தோறும் அலைந்து அவனைக்கூப்பிட்டு அரற்றுகின்றாயும் இல்லை! நீ இத்தன்மையை ஆதலால், யான் இனிச் செய்வதற்கான ஓர் உபாயத்தினையும் அறியாதவனாக இருக்கின்றேனே! ['நெஞ்சே! உடையவன் அடிமைகொண்ட பின்னரும், நீ அந்தத் தகுதிக்கு ஏற்ப நடந்தாயில்லை! நீ இவ்வாறாயின பின்பு, யான் உய்திபெறுவதற்கு இனி யாதுசெய்வேன்?' என்பது கருத்து.]*

அறிவிலாத எனைப்புகுந் தாண்டுகொண் டறிவதை யருளிமேல்
நெறியெ லாம்புல மாக்கிய எந்தையைப் பந்தனை யறுப்பானைப்
பிறிவி லாதஇன் னருள்கள்பெற் றிருந்துமா றாடுதி பிணநெஞ்சே
கிறியெலாம்மிகக்கீழ்ப்படுத்தாய்கெடுத்தாயென்னைக்கெடுமாறே.

*பிணம்போலப் பயனற்றுக்கிடக்கும் மனமே! இறைவனை அறிவதற்கான அறிவற்றிருந்த என்னையும், என்னுள் தானே வந்துபுகுந்து ஆட்கொண்டு அவன் அருளினான். தன்னை அறியும் மெய்யறிவையும் எனக்கு அருளிச் செய்தான். மேலாகிய வீட்டுநெறியினை முழுவதும் எனக்குப் புலப்படுத்தினான். இத்தகைய எம் தந்தையினைப், பிறவித்தளையினை அறுப்பவனை, நீக்கமற்றிருப்பதற்கான இன்னருள்கள் அனைத்தையும் பெற்றிருந்தும், மாறுபட்டே நீ இயங்குகின்றனை! பொய்ந் நெறிகள் மிகுதிப்பட என்னையும் தாழ்த்தினை. யான் கெட்டுப்போகின்ற வழியினையே மேற்கொண்டு என்னைக் கெடுத்தும் விட்டனை! ['அவனை அறியும் அறிவற்றுக்கிடந்த எனக்கு, அவனே வந்து இன்னருள்கள் பலவற்றை அருளியும், அவற்றுள் ஈடுபடவிடாது, மாறுபாடானவற்றுள் செலுத்தி என்னைக் கெடுத்துவிட்டனையே?' என்பது கருத்து. கிறி-பொய். மாறாடுதல்-மாறுபடச் செயலாற்றுதல்.]*

மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையையெம் மதியிலி மட [நெஞ்சே
தேறு கின்றிலம் இனியுனைச் சிக்கெனச் சிவனவன் [திரள்தோள்மேல்
நீறு நின்றது கண்டனை யாயினும் நெக்கிலை யிக்காயங்
கீறு கின்றிலை கெடுவதுன் பரிசிது கேட்கவுங் கில்லேனே. 33

*அறிவற்ற எம் மூடமனமே! எம்மைப் பகைத்து நின்று, யான் கெட்டுப்போமாறு செயலற்றுக்கிடக்கும் அந்தத் தன்மையினை ஆயினையே! இனிமேல், நின்னையும் எமக்கோர் உறுதியாகக் கருதி* **யாம்** *நம்பமாட்டோம். சிவபெருமானுகிய அவனது திரண்ட தோள்களின்மீது திருவெண்ணீற்றுக் குறி இருந்ததனையும் கண்டனை! கண்டபின்னும், இன்னமும் மனம் உருகினுயில்லையே! இந்த உடம்பினைப் பிளக்கின்ருயும் இல்லை! நின் தன்மையாகிய இது, எமக்குக் கேடு விளைவிப்பதற்கே உரியது. இதனைக் கேட்கவும் இனிப் பொறுக்கேன். ['அறிவற்ற மனமே! என்னை இவ்வாறு செய்த நின் தன்மையின் வரலாற்றை யான் உறுதியாகத் தெளிந்திலேன்' என்பது கருத்து. திருநீற்றுக்குறி உலகத்து நிலையாமையினையும் திருவருள் ஒளியினையும் விளக்கும். அதனைக் கண்டும், உடற்பாசத்திலே உழன்று கிடந்து, திருவருளை நாடாது போயின நெஞ்சினை விளித்து, இங்ஙனம் கூறி நோகின்றனர்.]*

கிற்ற வாமன மேகெடு வாயுடை யானடி நாயேனை
விற்றெ லாம்மிக ஆள்வதற் குரியவன் விரைமலர்த் திருப்பாதம்
முற்றி லாஇளந் தளிர்பிரிந் திருந்துநீ யுண்டன எல்லாமுன்
அற்ற வாறுநின் னறிவுநின் பெருமையும் அளவறுக் கில்லேனே.

*வேண்டிய வாறெல்லாம் நுகர்வதற்கு ஆசைப்படுகின்ற மனமே! நீ அழிவாயாக! அடிப்பட்ட நாயினேனையும் தனக்கு அடிமையாக வுடைய பெருமான், என்னை முழுவதும் விலைப் படுத்தியேனும், என்னைத் தான் ஆட்கொள்ளுவதற்கு உரிமை உடையவன். அவனது, மணம் பொருந்திய தாமரைமலர் போன்ற திருவடிகளாகிய, முதிராத இளந்தளிரினைப் பிரிந்திருந்து நீ நுகர்ந்தனவெல்லாம், முன்னரே அற்றொழிந்த விதத்தையும், நின் அற்பமான அறிவையும், நின் பொய்ப்பட்ட பெருமையினையும், அளவுபடுத்தியறியும் ஆற்றல் இல்லாதவன் யான்! ['மனமே! இறைவனின் திருவடிகளைப் பிரிந்து நீ நுகர்ந்த பிற இன்பங்களையும், நின் அறிவையும், நின் போலிச்செருக்கையும் யான் அளந்தறிய இயலாதேன்' என்பது கருத்து. உலகப் பொருள்களை நாடும் மனத்தின் அறியாமையினைப் பழித்து, எள்ளி உரைத்தது இது.]*

**அளவ றுப்பதற் கரியவன் இமையவர்க் கடியவர்க்கெளியான்நம்**
**களவ றுத்துநின் றுண்டமை கருத்தினுட் கசிந்துணர்ந்** [திருந்தேயும்
**உளக றுத்துனை நினைந்துளம பெருங்களன் செய்ததுமிலைநெஞ்சே**
**பளக றுத்துடை யான்கழல் பணிந்திலை பரகதி புகுவானே.** 35

தேவர்களுக்கும்அளவிட்டு அறிவதற்கு அருமையானவன் சிவபிரான்! ஆனுல், அவன் அடியவர்கட்கு எளிதாக வந்தும் அருள்பவன். அவன், நம்முடைய வஞ்சமாகிய பிறவியினை ஒழித்து, நம் உள்ளத்தே நிலைபெற்று நின்று, நம்மையும் ஆண்டருளினுன்! அதனைக் கருத்தினுள்ளே கசிந்து அறிந்திருந்தும், உள்ளனவாகிய குற்றங்களை வெறுத்தும், உன் நிலையினையே சிந்தித்திருக்கின்ருேம்! நெஞ்சமே! நினக்கு யாம் பெருவஞ்சகம் யாதொன்றும் செய்ததும் இல்லையே? இங்ஙனமாகவும், பரகதியிற் சென்று புகும் பொருட்டாகக் குற்றங்களை ஒழித்து நம்மை ஆளுடையானின் திருவடிகளை நீதான வணங்கினுயில்லையே? ['நெஞ்சே! தேவர்க்கும் அரியவன், நம்மையும் ஒரு பொருளாகக் கருதி வந்து ஆட்கொண்டதனைச் சிந்தித்து, நின் குற்றங்களை நீக்கிப், பரகதியினை அடைதற்கு அவன் திருவடிகளைப் பணிந்தாயில்லையே? நின் தன்மைதான் என்னையோ?' என்பது கருத்து. களவு-கள்ளம். கறுத்தல்-வெறுத்தல். பளகு-குற்றம். 'உணர்ந்தும் அதனில் ஈடுபடாது, கரவாக உலகப் பற்றுக்களிலே என்னைச் செலுத்தினையே!' என்கின்றனர்.[

புகுவ தாவதும் போதர வில்லதும் பொன்னகர் புகப்போதற்கு
உருகுவதாவதும்எந்தையெம்பிரானென்னையாண்டவன் கழற்கன்பு
நெகுவ தாவதும் நித்தலும் அமுதொடு தேனெடு பால்கட்டி
மிகுவ தாவதும் இன்றெனின் மற்றிதற் கென்செய்கேன்
[வினையேனே. 36

அனைவரும் சென்றடைவதாக இருப்பதும், சென்றவர் மீண்டும் வருதலென்பது இல்லாததாக விளங்குவதும், பொன்னகராகிய, சிவபுரமே ஆகும். அதனை அடையுமாறு செல்வதற்கு என் மனம் உருகுதல்வேண்டும். எந்தையும், எம்பிரானும், என்னை ஆண்டவனுமாகிய சிவபிரானின் திருவடிகட்குப் பொருந்திய அன்பினுலே, அது நெகிழ்ச்சி அடைதலும் வேண்டும். நாள்தோறும், அமுதத்தோடும் தேனேடும் பாற்கட்டியினேடும் சுவையினுல் மேற்படுவதாகிப் பேரின்பம் சிறத்தல் வேண்டும். அஃது இல்லையானுல், தீவினை உடையவனுன யான், யாதுசெய்ய வல்லேன்? ['நெஞ்சமே! போக்கும் வரவும் இல்லாத முத்தியுலகத்திற் புகுதற்கு, இறைவனின் திருவடிகட்கு அன்புசெய்தல் முதலியவற்றில் நீ ஈடுபடல் வேண்டும். நின்னிடத்து அந்தத் தன்மை இல்லையானுல், யான்தான் யாது செய்வேன்?' என்பது கருத்து. இங்ஙனம் தம் நெஞ்சிடத்துக் கூறி அடிகள் வருந்துகின்ருர்.]

வினையென் போலுடை யார்பிற ராருடைய யானடி நாயேனைத்
தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப் பன்றுமற் றதனாலே
முனைவன் பாதநன் மலர்பிரிந் திருந்தும்நான் முட்டிலேன்
[தலைகீறேன்
இனையன் பாவனை யிரும்புகல் மனஞ்செவி யின்னதென்
[றறியேனே. 37

என்னைப்போலத் தீவினையினை உடையவர்தாம் பிறர் யாருளர்? அடிப்பட்ட நாயினேனைத் தினையளவு நேரங்கூடப் பிரிதல், என்னை அடிமையாக உடைய பெருமானின் திருவுள்ளக் குறிப்பன்று. ஆதலால், முன்னோனை அவனது திருவடிகளாகிய நன்மலர்களைப் பிரிந்திருந்தும், நான் என் தலையினை மோதிக் கொள்ளவும் மாட்டேன்; பிளந்து கொள்ளவும் மாட்டேன். இத் தன்மையனாகிய என்னுடைய சிந்தனை இரும்பினை போல்வதாகும்! என்னுடைய மனமோ கல்லைப் போன்றதாகும்! என்னுடைய செவி இன்னதற்கு ஒப்பெதென யான் உரைத்தற்கே அறியேனே? ['எனக்கு அருளியசிவபிரானின் திருவடிகளைப் பிரிந்திருந்தற்கு ஆற்றாது முட்டியும் பிளந்தும் யான் உயிர்விட்டிலேன். அதனால் என் பாவனையும் மனமும், இரும்பும் கல்லும்போல உணர்வற்றன வாகும்' என்பது கருத்து. முனைவன்-முன்னோன். பாவனை-சிந்தனை.]

ஏனை யாவரும் எய்திட லுற்றுமற் றின்னதென் றறியாத
தேனை ஆன்நெயைக் கரும்பின்இன் தேறலைச் சிவனையென்
[சிவலோகக்
கோனைமான்அன நோக்கிதன் கூறனைக்குறுகிலேன் நெடுங்காலம்
ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு வேனுயி ரோயாதே. 38

சிவனுக்கு அன்பு செய்யாத மற்றையோர் யாவரும் முத்தியடைவதற்கு முயல்வர். எனினும், அவரால் 'இன்ன தன்மையன்' என்றுகூட அவன் அறியப்படான். அத்தகைய தேனினைப், பசுவின் நெய்யைக், கரும்பின் தெளிவைச், சிவபெருமானை, என் சிவலோகத்து அரசனை, மானைப்போன்ற திருநோக்கத்தை உடையாளாகிய உமாதேவியைத் தன் ஒரு பாகமாகக் கொண்டிருக்கும் உடையவனை, யானும், அணுகாது இருக்கின்றேனே! அத்தகைய யான், இவ் வுலகில் இன்னமும் இருந்து ஊன்பிண்டமாகிய இந்த உடலினையும் பேணுகின்றேனே! இங்ஙனம் கெடுவேனாகிய என்உயிரானது, இன்னே ஒடுங்காதோ? ['இறைவனை அடையாது பொய்யுடலைப் பேணிநின்றேன்: அதன் கட்டைவிட்டு என் உயிரும் இப்போதே ஒடுங்காதோ?' என்பது கருத்து.]

ஓய்வி லாதன உவமனில் இறந்தன ஒண்மலர்த் தாள்தந்து
நாயி லாகிய குலத்தினுங் கடைப்படும் என்னைநன் னெறிகாட்டித்
தாயி லாகிய இன்னருள் புரிந்தஎன் தலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை உருள்கிலேன் செழுங்கடல்
[புகுவேனே. 39

அழிவில்லாதனவும் உவமிக்கப்படும் பொருள்கள் யாவற்றையும் கடந்தனவும் ஆகிய, ஒட்பமாகிய தாமரைமலர் போன்ற தன் திருவடிகளைத் தந்தனன்; நாயினுங் கடைப்பட்ட அடியேனுக்கு, நன்னெறி காட்டித் தாய்போலும் இன்னருள் புரிந்தனன், என் தலைவன்! அவனை இப்போது மிகவும் காண்கிலேன். அங்ஙனம் காணுதலை நினைந்து, என் உயிரை வெறுத்துத் தீயில் வீழ்ந்தேனும் இறவேன்! திண்ணிய மலைமேனின்று உருண்டும் சாகேன்! வளமிக்க கடலிலாயினும் புகுவேனோ எனின், அதுவும் செய்யேன்! என் தன்மைதான் இருந்தவாறு என்னே? ['எனக்கு அருள் செய்து நன்னெறி காட்டி, இன்னருள் செய்த நாதனைப் பிரியாதிருக்க, என் உயிரினை அவனுடைய திருவடிகளிற் சேர்க்காதிருக்கும் என் தன்மைதான் என்னே?'' என்பது கருத்து. ஓய்விலாதன தாள்; உவமனிலிறந்தன தாள்; ஒண்மலர்த் தாள் என இயைக்க. 'நாயிலாகிய குலம்,' தனது சிறுமையைக் குறித்துச் சொன்னது. 'தாயிலாகிய இன்னருள்' இறைவனின் பெருங் கருணையினை வியந்தது.]

வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடும் அதுதனை நினையாதே
மான்நி லாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகித்
தேன்நி லாவிய திருவருள் புரிந்தவென் சிவனகர் புகப்போகேன்
ஊனின் ஆவியை ஓம்புதற் பொருட்டினும் உண்டுடுத்
[திருந்தேனே. 40

இளவேனிலுக்கு உரியவன் மன்மதன். அந்த மன்மதனது பஞ்சபாணங்களும் என் நெஞ்சினைப் பிளந்திட, மதியமானது என் உடலைச் சுட்டெரிக்கும். அதன் கொடுமையுட்பட்டு என்னுடைய நற்கதியினை நினையாதும் போவேன். மானினது பார்வைபோன்ற நோக்கினை உடையவராகிய மாதரது வஞ்சனையினிடத்திலே, மத்திட்டுக் கடையப்படும் தயிர் போலச் சிக்கியும் சுழல்வேன். தேனினைப் போன்ற இனிமையானது நிலைபெற்ற திருவருளினைச் செய்தருளிய என் சிவபெருமானது, சிவபுரத்தினை அடைவதற்கும் செல்லமாட்டேன். உடலிடத்து உயிரை வைத்துப் பேணிக்காத்தலாகிய சிற்றின்பத்தின் பொருட்டாகவே இன்னமும் உணவுண்டும், உடையுடுத்தும் யான் வாழ்ந்திருந்தேனே? என்னே, என்

அறியாமை! ['மாதர் மயக்கில் உழன்று, சிவபுரத்தை நாடாது, ஊனுடலைப் பேணி உழன்றேனே?' என்று வருந்தியது இது. படிறு-பொய்; வஞ்சம்.]

## 5. கைம்மாறு கொடுத்தல்

### (கலி விருத்தம்)

[பேரருள் செய்து உதவிய பெருமானின் கருணையினை எண்ணிய அடிகள், அதற்கு ஈடாகத் தாம் அவனுக்கு யாதும் கைம்மாறு கொடுத்தற்கு இயலாதுள்ள தம்முடைய எளிமையை நினைந்து, அதனைக் குறித்துக் கூறி, அவனைப் போற்றுகின்றனர்.]

இருகை யானையை ஒத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெய்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்பன் உண்ணவே. 41

பெரிதான துதிக்கையினை உடைய மதயானையைப் போலச்செருக்குடனிருந்து, என்னுள்ளத்தின் மூலமாகிய பெருமானை யான் காணாதிருந்தேன். யான் கண்டதெல்லாம் துன்பமேயாகும். அத்தகைய என்னையும், 'நின்பால் வருக' என்று நீ பணித்தருளினை! வானுள்ளோர்க்கு எல்லாம் ஒப்பற்றவனே! நீ அளித்த அந்தப் பேரின்பத்தினைத் தெளிந்து, யான் நுகர்தற்கும் ஆற்றேனாக அப்போது இருந்தேனே? ['என் உள்ளத்து மூலமாய் நீ இருந்தும், நின்னை அறிந்து உணராது துன்பத்திலேயே உழன்றேன். எனக்கு இரங்கி, நீயே எழுந்தருளிவந்து, 'நின்பால் வருக' என அழைத்தும், அப்போதும் என் பிழையை மறந்து அந்தப் பேரின்பத்தை நுகரமாட்டாது செயலிழந்து இருந்தேனே?' என்பது கருத்து.]

உண்டொர் ஒண்பொரு ளென்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே. 42

ஒட்பமாகிய ஒப்பற்ற பொருளொன்று உண்டென்று அறிந்து, நின்னை நாடுகின்ற அடியவர்க்கெல்லாம், நீ பெண்ணோ, ஆணோ, அலியோ என்று உறுதியாக அறியக்கூடாதவனாக இருந்தனை. அடியவனாகிய எனக்கோ, நீ உள்ளவாறாகவே வந்து தோன்றிக் காட்சியும் தந்தனை. நின்னைக் கண்டும், யான் நின்னடி சேர்தற்கான வழியினைக் காணேனாய் மயங்கி

நின்றேனே! இது என்ன கண்மாயமோ? ['தன் முனைப்பால் நின்னை அடைதற்கு முயன்ற ஞானியர்க்கு நின்னை மறைத்து நின்ற நீ, என்மேற் கருணைகொண்டு, தானேவந்து நின் உண்மை நிலையினையும் காட்டியருளினை.அதனைக் கண்டும், நின்னை அடைதற்கு வழிகாணாது மயங்கிய என் கண்மயக்கந் தான் என்னவோ?' என்பது கருத்து.]

மேலை வானவ ரும்மறி யாததோர்
கோல மேயெனை ஆட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேயிவை வந்துபோம்
கால மேயுனை யென்றுகொல் காண்பதே. 43

மேலாகிய பதங்களிலுள்ள தேவர்களும், அறியாததாகிய ஒப்பற்ற திருவுருவே! என்னை ஆட்கொண்ட கூத்தப் பெருமானே! மண் விண் என்னும் இவையாவும் தோற்றி ஒடுங்குகின்ற காலரூபமாகவும் இருப்பவனே! நின்னை, இனி நான் காணப் பெறுவதுதான் எந்நாளோ? ['என்னை ஆட்கொண்ட நின்பால் அப்போதே முற்றவும் சாராது யான் மயங்கி நின்றேன். இனி, நின்னை மீளவும் யான் காண்பது எந்நாளோ?' என்பது கருத்து. கோலம்-திருவுருவம்.]

காண லாம்பர மேகட் கிறந்ததோர்
வாணி லாப்பொரு ளேயிங்கொர் பார்ப்பெனப்
பாண னேன்படிற் றாக்கையை விட்டுனைப்
பூணு மாறறி யேன்புலன் போற்றியே. 44

அடியவர்கட்குக் காணலாகின்ற பரம்பொருளே! மற்றையவரின் கண்கட்குக் காணலாகாத, ஒப்பற்ற ஒளிநிலை பெற்ற பொருளே! இவ்வுலகத்தில், கூட்டைவிட்டு வெளியேற அறியாத ஒரு பறவைக் குஞ்சுபோலத், தீவினையாளனாகிய யானும், அறியாமை கொண்டு வாழ்கின்றேனே! பொய்யுடம்பினை விட்டு, ஐம்பொறிகளைத் தடுத்து, மெய்யாகிய நின்னை அடையும் வழியினை அறியாது நலிகின்றேனே! ['இறைவனே! நின்னை அடையும் வழியறியாது நலிகின்ற எனக்கு, மீளவும் வந்து, நின் திருவடிப்பேற்றினைத் தாராயோ?' என்பது கருத்து. வாள்நிலா-பேரொளி. பார்ப்பு-பறவைக் குஞ்சு. பரம்-மேன்மை.]

போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்தும்நின்று
ஆற்றல் மிக்கவன் பாலழைக் கின்றிலேன்
ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்
கூற்ற மன்னதொர் கொள்கையென் கொள்கையே. 45

போற்றியென்று சொல்லியும், நிலத்தே புரண்டும், புகழ்ந்து பாடியும் செய்தலாகிய, நின் திருத்தொண்டிலே நிலைபெற்று, திண்மைமிகுந்த பேரன்பினாலே நின்னை வேண்டி அழைக்கின்றேனில்லை! என் கொள்கையானது, நின்னை எதிர்த்துவந்து, நின் தாமரைமலர் போன்ற திருவடிகளை அடைந்த, எமனைப்போன்றதாகிய ஒருகோட்பாடே யாகும். ['இறைவனே! எமனைப்போல நின்னை மாறுபட்டே வந்துநின் திருவடிகளை யானும் அடைந்தேன். என்னையும், அவனைச் செய்ததுபோலவே திருத்தி ஆட்கொண்டருள்தல் வேண்டும்' என்பது கருத்து. ஏற்று வரல்-எதிரேற்று மாறுபட்டு வருதல்.]

கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றையான்
நள்ளுங் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல்நின்ற எந்தையே. 46

தேனும் வண்டினமும் எப்போதும் நீங்காத கொன்றை மலர் மாலையினை உடையவனே! எப் பொருள்களி னுள்ளும், மேல் கீழ் நடுவாகிய எப்பக்கத்தும், எள்ளும் எண்ணெயும் போல வியாபித்துநின்ற எந்தையே! நின்னை அறிந்து கொள்ளும் தன்மையற்ற என்னையும், நின் மெய்யடியாரைப் போலக் கொண்டு, வலிய அழைத்துப் பணிகொள்வாயாக! ['எங்கும் எதனிடத்தும் நீக்கமறக் கலந்து நிற்கும் நின்னை, அடைகின்ற வழியினை அறியாத என்னையும், நின் அன்பரைப் போலக் கூவிப் பணிகொள்வாயாக' என்பது கருத்து.]

எந்தை யாயெம் பிரான்மற்றும் யாவர்க்குந்
தந்தை தாய்தம் பிரான்தனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவருஞ்
சிந்தை யாலும் அறிவருஞ் செல்வனே. 47

யாவரும் மனத்தாலும் அறிதற்கரிய முத்திப் பெருஞ் செல்வனாகிய இறைவன், எமது தந்தையாகியும், எம்பெருமானாகியும் விளங்குபவன்! மற்றுமுள்ள எல்லார்க்கும் தந்தை தாயாகுபவனும் அவனே! அனைவருக்கும் தலைவனும் அவனே! எனினும், அவன் தனக்கொரு தாயும் தந்தையும் தலைவனும் இல்லாதவன்! எனக்கு, அவனடியைச்சார்தற்குரிய பக்குவகாலம் வருவதற்கு முன்பாகவே, அவன், தன் பெருங் கருணையினால், என் உள்ளத்தே வந்து புகுந்து, என்னை ஆட்கொண்டனன்! ['யாவரும் மனத்தானும் அறிய வொண்ணாத சிவபிரான், பக்குவமற்ற என் மனத்துள்,

*தானே வந்து புகுந்து என்னையும் அடிமை கொண்டனன்' என்பது கருத்து.]*

**செல்வம் நல்குர வின்றிவிண் ணோர்புழுப்**
**புல்வ ரம்பின்றி யார்க்கும் அரும்பொருள்**
**எல்லை யில்கழல் கண்டும் பிரிந்தனன்**
**கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே.** 48

*செல்வமும் வறுமையும் இல்லாமல், தேவர்களும்புழுவும் புல்லுமாகிய ஒரு வரையறையும் இல்லாமல், மேன்மைக் கோர் எல்லையில்லாத நின் திருவடிகளைக் கண்டும், அவற் றிடத்தே முற்றவும் ஒன்றிவிடாது, யான் பிரிந்துவிட்டேன். அது, கல்லினத்ததாகிய மனத்தினை உடையேனை அடைந்த கஷ்ட காலத்தின் பயன்தானோ? ['மேன்மைக்கோர் வரம் பற்ற சிவனடிகளைக் கண்டும், ஒன்றிவிடாது பிரிந்தேன்; இது என் கெட்ட காலந்தானோ?' என்பது கருத்து. கழல்-அடி. கல்வகை மனம்-கல்லின் இனத்ததாகிய மனம்; கல்மனம்.]*

**கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ**
**றிட்ட அன்பரொ டியாவருங் காணவே**
**பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை**
**எட்டி னோடிரண் டும்அறி யேனையே.** 49

*என் பிறவித்தளையினை அறுத்து, என்னை ஆண்டருளித், திருவெண்ணீற்றை அணிந்த அன்பர்களோடு மற்றும் கூடி நின்ற எல்லாரும் கண்ணாரக் காணும்படியாக, அகர உகர மாகிய எட்டையும் இரண்டையும் அறியாத கள்வனான என்னையும், நின் திருவோலக்க மண்டபத்திலே ஏறச் செய்தனை! இதுதான் என்ன அதிசயமோ? ['எட்டிரண் டறியாக் கள்வனாகிய என்னை, நின் அன்பரெல்லாம் காணும் படி ஆண்டருளித், திருவோலக்க மண்டபத்திலேயே ஏறச் செய்த நின் பெருங்கருணைதான் என்னையோ?' என்பது கருத்து. எட்டும் இரண்டும் அகர உகரம்; இவை சிவசக்தி இயல்பினைக் குறிப்பன. அன்றிப் பத்தெனக்கொண்டு யகர மாகிய ஆன்மாவென உரைத்து, 'ஆன்மநிலை அறியாதேன்' எனவும் பொருள் கூறுவர்.]*

**அறிவ னேயமு தேஅடி நாயினேன்**
**அறிவ னாகக்கொண் டோஎனை ஆண்டது**
**அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்**
**அறிவ னோவல்ல னோஅரு ளீசனே.** 50

*அறிவே உருவானவனே! அமுதே வடிவாயவனே! நின் அடிமையாகிய நாயினேனை, நின்னை அறிய வல்லவனாகக்*

கருதியோ நீ ஆட்கொண்டது? அன்று, நீ கண்டது என் அறிவிலாமையைத்தான் அல்லவோ? என்னை ஆண்டருளிய அந்நாளில் நான் அறிவனோ? அறிவற்றவனோ? ஈசனே! இதனை எனக்கு அருளிச் செய்வாயாக. ['அன்று, நீ வந்து ஆண்டருளிய நாளிலும் யான் அறியாமை உடையவனாகவே இருந்தேன். அதனைப் பொறுத்து, என்னை ஆட்கொண்டனை. இனியும், என்னைக் கைசோரவிடாது காத்தருள்க' என்பது கருத்து. இறைவன் ஞானமயன்; அதனால் 'அறிவனே' என்றனர். அடுத்தாரை அழிவிலாதவராக்கும் தன்மை உடையவன் அவன்; அதனால் 'அமுதே' என்றனர். 'முன்னர் நீ வந்தருளிய காலத்தும் அறியாமையாளனாகியிருந்த என் மேல்இரக்கங்கொண்டு எனக்குக் கருணைசெய்தனை! அதனைப் பாராட்டாது பின்னரும் மயங்கிநிற்கும் இப்போதும், என்னை என் அறியாமை கருதி ஒதுக்காது, நின் கருணையினால் காத்தருளல் வேண்டும்' என்றனர்.]

## 6. அநுபோக சுத்தி

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[சிவானுபவத்தின் பொருட்டாக உடலவத்தைகளை ஒழித்து, ஆன்மசுத்தி செய்துகொள்ளுதலைக் குறித்தது இது. அங்ஙனம் ஆன்மசுத்தி பெற்றவர் சுகமேலிடு பெறலும், பிறர் பெறாது கழிதலும் பற்றி, அதனை அடைதலை வலியுறுத்தி அருளியதும் இதுவாகும்.]

ஈச னேயென் எம்மானே யெந்தை பெருமான் என்பிறவி
நாச னேநான் யாதுமொன் றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை ஆண்டாய்க்கு நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னேஅம் பலவனே செய்வ தொன்றும் அறியேனே. 51

செல்வப் பெருக்கை உடையவனே! எனது பெருமானே! எந்தையாகிய பெரியோனே! என் பிறவிப்பிணியினை நசிக்கச் செய்வோனே! யான் யாதேனும் ஒரு பொருளுக்கும் ஒப்பாகாத நாயினைப் போன்ற நீசனேன். என்னையும் வந்து ஆண்டருளினை! அத்தகைய நின்னைக் குறித்து யான் சிந்திக்கவும் மாட்டேன். ஒளிமேனியனே! மன்றுளானே! செய்யக்கடவது ஒன்றையும் யான் அறிந்திலேனே? என்னையும் காத்தருள்க! ['என் பிறவி நசிக்குமாறு தடுத்தாட்கொண்ட நின்னைப்பற்றி யாதும் நினையேன்; நின்னை அடைவதற்குச் செய்யத்தகுவனவும் செய்யேன்; என்னையும் ஏற்றருள்க' என்பது கருத்து.]

செய்வ தறியாச் சிறுநாயேன் செம்பொற் பாத மலர்காணுப்
பொய்யர் பெறும்பே றத்தனையும் பெறுதற் குரியேன் பொய்யிலா
மெய்யர் வெறியார் மலர்ப்பாதம் மேவக்கண்டுங் கேட்டிருந்தும்
பொய்ய னேன்நான் உண்டுடுத்திங் கிருப்ப தானேன்
[போரேறே. 52

*செய்வதற்கு உரியதனை அறிந்துணராத சிறுமையினை உடைய நாயினைப் போன்றவன் யான்! செவ்விய பொன்னைப் போன்ற நின் பாதமலர்களைக் காணாத பொய்யர்கள் பெறுகின்ற பேறுகள் அனைத்தையும் அடைதற்குஉரியவனும் யான்! பொய்யற்ற மெய்யன்பினர், மணம் நிறைந்த நின் மலர்ப் பாதங்களை அடைதலைக் கண்டும், அதனைப்பற்றிக் கேட்டிருந்தும், யான் நின்னை அடைந்தேனில்லை! இத்தகைய பொய்யனாகிய யான், உண்டும் உடுத்தும் என் உடலைப் பேணிக்கொண்டு இங்கு இருப்பதானேனே? போர் ஏறே! என்னைக் காத்தருள்க! ['நின் அன்பர் நின் திருவடி அடைதலைக் கண்டும், கேட்டும், நின் அடியனாகிப் பொய்த்து நின்று, யான் உண்டு உடுத்து உடலைப்பேணும் பொய்மையினையே மேற்கொள்ளத் தலைப்பட்டேன்; என்னைத் தடுத்து ஆட்கொள்வாயாக' என்பது கருத்து. 'பொய்யர் பெறும் பேறு' என்றது, துன்பங்களை.]*

போரே றேநின் பொன்னகர்வாய் நீபோந் தருளி யிருள்நீக்கி
வாரே றிளமென் முலையாளோ டுடன்வந் தருளஅருள்பெற்ற
சீரே றடியார் நின்பாதஞ் சேரக் கண்டுங் கண்கெட்ட
ஊரே றாயிங் குழல்வேனோ கொடியேன் உயிர்தான்
[உலவாதே. 53

*போரிடத்து ஏறுபோல விளங்கும் பெருமானே! நினக்குரிய பொன்னகரினின்றும் எழுந்தருளி வந்தனை! என் மனத்திருளை நீக்கி, வாரணியப்பெற்ற இளமையும் மென்மையும் கொண்ட தனங்களை உடையவளான அம்மையோடுங்கூடி வந்து, அருளிச் செய்தனை! நின் அருளினைப்பெற்ற சிறப்பு மிகுந்த தொண்டர்கள் நின் பாதங்களைச் சேர்தலையும் கண்டேன். கொடியவனான யான், அதனைக் கண்டும் என் உயிர் அழியப்பெறாதவனாகிக், கண்ணிழந்த ஊர்ப்பன்றியைப் போன்று, இவ்வுலகத்து இழிந்தவைகளையே தேடித்திரிந்து உழல்வேனோ? ['இறைவனே! எம்பிராட்டியோடும் எழுந்தருளிவந்து நீ இருள்நீக்கி அருளக்கண்டும், உயிரினை நின் பாதங்களில் சேர்க்காது நின்றேன். கண்ணிழந்த ஊர்ப்பன்றி போல இனியும் உழல்வேனோ? என்னைக் காத்தருள்க' என்பது கருத்து. அருளுருவாகிய பிராட்டியோடு கூடாதவிடத்து*

அருள் செய்தல் இயலாமையால், 'வாரே றிளமென் முலையா ளோடு உடன் வந்தருள' என்றனர்.]

உலவாக் காலந் தவமெய்தி உறுப்பும் வெறுத்திங் குனைக் [காண்பான்
பலமா முனிவர் நனிவாடப் பாவி யேனைப் பணிகொண்டாய்
மலமாக் குரம்பை யிதுமாய்க்க மாட்டேன் மணியே [உனைக்காண்பான்
அலவா நிற்கும் அன்பிலேன் என்கொண் டெழுகேன் [எம்மானே. 54

*எமது தலைவனே! ஒழியாத காலம் தவத்தினை மேற் கொண்டனர்; உடலையும் போற்றாது வெறுத்தனர்; அத் தகைய பலராகிய மாமுனிவர்களும் இவ்வுலகத்தில் நின்னைக் காணும் பொருட்டாக மிகவும் முயன்று வாடிநிற்பர். இருப் பவும், பாவியாகிய என்னை, நீ நினக்கு ஏவல் கொண்டனை! மாணிக்கமே! நின்னைக் காணும் பொருட்டு பெரிய மலக் கூடாகிய இந்த உடலினை ஒழிக்கவும் மாட்டேன். அதனிற் சிக்கிக்கிடந்து துன்புற்று நிற்கும் அன்பற்றவனாகிய யான், இனி எதனைத் துணைக்கொண்டு உயர்நிலை அடைவேன்? ['அளவில் காலம் தவமியற்றிய முனிவரும் காணாது வாடி நிற்கப், பாவியாகிய என்னைப் பணிகொண்டனை. யானோ இந்த மலக்கூட்டினை ஒழிக்க முயலாது நின்றேன். இனி, எதனைக்கொண்டு நின்பால் அன்பற்ற யானும் உய்வேன்?' என்பது கருத்து.]*

மானேர் நோக்கி உமையாள் பங்கா வந்திங் காட்கொண்ட
தேனே அமுதே கரும்பின் தெளிவே சிவனே தென்தில்லைக்
கோனே உன்றன் திருக்குறிப்புக் கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்ப தானேன் உடையானே. 55

*மானொத்த பார்வையினை உடையவளான உமையாளை இடப்பாகத்தே கொண்டிருப்பவனே! இங்கு எழுந்தருளிவந்து என்னையும் ஆட்கொண்ட தேனே! அமுதமே! கருப்பஞ் சாறே! சிவனே! தென்திசை உள்ளதாகிய தில்லைக்கு அதி பனே! உடையவனே! வீடளிக்கும் நின் திருக்குறிப்பைச் சார்ந்தவர்கள் நின் திருவடியைக் கூடினர். யானோ, தசை நிறைந்த புழுக்கூடாகிய இந்த உடலினைக் காத்தவாறு, இவ் விடத்தில் இருப்பவனானேன். என்னையும் ஆண்டருள்க! ['இறைவனே! நின் திருவுளப்பாங்காக ஒழுகுகின்ற அடி யவர் நின் திருவடிகளை அடைய, யானோ இந்தப் புழுக்கூட் டைக் காத்திருந்தேன். இனி, யான் உய்யும் வழிதான் யாதோ?' என்பது கருத்து.]*

உடையா னேநின் றனையுள்கி உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதஞ் சேரக் கண்டிங் கூர்நாயிற்
கடையா னேன்நெஞ் சுருகாதேன் கல்லாமனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்ப தாக முடித்தாயே. 56

*உடையவனே! நின்னை நினைந்து உள்ளமுருகும் பேரன்பினை உடையவர்கள், அடிமை கொண்டவனாகிய நின் பாதங்களைச் சேரக்கண்டும், இவ்விடத்தில், ஊர்நாயினும் கடைப்பட்டவனாக யான் வாளாவிருந்தேனே! நெஞ்சம் உருகாதவனாயும், கல்லான மனத்தினனாயும், கசியாத அன்பினனாயும் நின்றேனே! புலால் நாறும் புழுக்கூடாகிய இதனைக் காத்து, யான் இங்கு இருப்பதாகவே நீயும் முடிவுசெய்தால், என் கதிதான் இனி யாதோ? ['உடையவனே! நின்னை நினைந்து உருகும் அன்பர்கூட்டம் நின் திருவடியைச் சேரக்கண்டும், என்னை இந்தப் புழுக்கூட்டினைக் காத்துக் கிடக்குமாறு செய்தனையே? என் தீவினை இருந்தவாறு என்னே?'' என்பது கருத்து.]*

முடித்த வாறும் என்றனக்கே தக்க தேமுன் னடியாரைப்
பிடித்த வாறுஞ் சோராமற் சோர னேனிங் கொருத்திவாய்
துடித்த வாறுந் துகிலிறையே சோர்ந்தவாறும் முகங்குறுவேர்
பொடித்த வாறு மிவையுணர்ந்து கேடென் றனக்கேசூழ்ந்தேனே.

*நின்னை நாடிய அடியாரைத், தளராவிடாமல் முற்பட நீ பற்றிக்கொண்டதும், என்னை இங்கே கிடந்து உழலுமாறு முடிவுசெய்ததும் தகுந்த செயல்தான். உடலின்பங்களில் ஈடுபட்ட கள்ளனாகிய யான், இவ்விடத்தில், மாயையின் தோற்றமாகிய ஒருத்தியின் இதழ்கள் துடித்ததும், அவள் ஆடை சிறிது நெகிழ்ந்ததும், அவள் முகத்தில் குறுவியர்வு அரும்பினவிதமும் ஆகிய இவற்றைக் கண்டு மயங்கினேன். அதனால், எனக்கே கேட்டினைச் செய்து கொண்டேன். ['நின் அடியார் நின்னையே விரும்பிச் சேர்ந்தனர். யானோ மாயா சத்தியாகிய பெண்ணின் மயக்கத்தில் ஈடுபட்டேன், அதனால் எனக்கே கேடு சூழ்ந்தேன். அவர்களைத் திருவடிசேர்த்து, என்னை நீ விட்டுச்சென்றது தகுந்தசெயலே' என்பது கருத்து. 'பெண்டிர்' என்றது, உலகவாசைகளால் தாம் இழுக்கப்பட்டதனை உரைத்ததேயன்றித் தாம் காமுற்று நிலையழிந்ததாகக் கூறியது ஆகாது. இதனை நினைவிற் கொள்ளல் வேண்டும்.]*

தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை யொளியைத்
[தெளிந்தார்தம்
ஊனை உருக்கும் உடையானை உம்ப ரானை வம்பனேன்
நானின் னடியேன் நீயென்னை யாண்டா யென்றால் அடியேற்குத்
தானுஞ் சிரித்தே யருளலாந் தன்மையாமென் தன்மையே. 58

தேனைப்போலும் இனியவனைப், பாலைப்போலும் தூய்மையனைக், கன்னலின் தெளிவைப்போலும் சுவையினனை, ஒளியுருவினனைத், தெளிந்த அடியார்களது உடலையும் உருக்குகின்ற உடையவனை, சிதாகாயத்தை உடைய பெருமானைத், துட்டனாகிய யான், 'நான் நின்னுடைய அடியவன், நீ என்னை ஆட்கொண்டாய்' என்று சொல்வேனானால், அப்படிச் சொல்லுகின்ற என் தன்மையானது, 'அடியேனுக்கும் நீ சிரித்தே அருளலாம்' என்னும் தன்மையுடையதே ஆகும். ['இறைவனே! நீ என்னை மிகவும் எளிதாகவே ஆட்கொண்டு அருளலாம்' என்பது கருத்து.]

தன்மை பிறரால் அறியாத தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை ஆண்டையா புறமே போக விடுவாயோ
என்னை நோக்கு வார்யாரே யென்நான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழுந் திருமேனி யெந்தா யெங்குப் புகுவேனே. 59

ஐயனே! அன்புடையவர் அல்லாத பிறரால் அறியப்படாத தலைவனே! பொல்லாத நாயைப்போன்ற இழிதகைமை உடையனாகிய என்னையும் ஆண்டருளினாய். என்னை நின்னருளுக்குப் புறம்பாகச் செல்லுமாறு இனியும், விடுவாயோ? அங்ஙனம் விடுவாயானால், என்னைக் கண் பார்த்து எனக்கு அருளுபவர்தாம் யாவர்? எம் பெருமானே! யான் யாது செய்வேன்? பொன்போல ஒளிருகின்ற திருமேனியினை உடைய எந்தையே! யான், நின்னைவிட்டு எங்குச்சென்று எவரிடம் அடைக்கலம் புகுவேன்? [இறைவனே! என்னை ஆண்டருளிப் புறத்தேபோமாறும் விடுகின்றாயோ? நீயே இவ்வாறு செய்யின், யான் என் செய்வேன்? எங்குச் செல்வேன்? எனக்குக் கருணைகாட்டுவார் யார்?' என்பது கருத்து. ஆளா புறம்போக விடுதலினும், ஆண்டு புறம்போக விடுதல் மிகுதியும் துயரந்தருவது என்றற்கு, 'ஆண்டு, ஐயா, புறம்போக விடுவையோ?' என்றனர். புறம்போதல்-இறையருளிற்குப் புறமாகி, மீளவும் உலக இச்சையிற் சிக்கி உழலுதல்.]

புகுவே னெனதே நின்பாதம் போற்றும் அடியா ருள்நின்று
நகுவேன் பண்டு தோளேக்கி நாண மில்லா நாயினேன்
நெகுமன் பில்லை நினைக்காண நீயாண் டருள அடியேனுந்
தகுவ னேயென் தன்மையே எந்தாய் அந்தோ தரியேனே. 60

எனதேயாகிய நின் திருவடிகளில், யானும் அடைக்கலம் புகுவேன். நாணமற்ற நாயினேன், நின்னை வணங்குகின்ற நின் அடியார்களின் நடுவிலே நின்றவாறு, பழைமையாகிய நின் தோள்களைப் பார்த்துச் சிரிப்பேன். நின்னைக் காணு

*தற்காக உருகுகின்ற அன்பும் என்னிடத்தே இல்லை. நீ ஆண்டு அருளுதற்கு அடியேனும் தகுதியுடையவனோ? இது என்ன தன்மையோ? எந்தையே! ஐயகோ! இனியும் இதனை நான் தரிக்கமாட்டேனே! ['இறைவனே! நின் திருவடிகளையே அடைகின்றேன். அதற்குத் தகுதியான அன்பு என்னிடத்தே இல்லையாயினும், இனியும் இவ்வுலகில் வாழ்ந்திருக்கமாட்டேன்; என்னை நின்பாற் சேர்த்தருள்வாயாக' என்பது கருத்து. 'பண்டு தோள் நோக்கி' என்றது, முன்னர்க் கண்ட காட்சியினை நினைந்து கூறியது.]*

## 7. காருணியத்து இரங்கல்

*(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)*

*[இறைவன் கருணைகொண்டு இரக்கங்காட்டி அருளிச் செய்தால்தான், உயிர்கள், அவனை அடைந்து, பிறவி நீத்த பெற்றியனராதற்கு இயலும். அஃதன்றி, நாமே நம்முடைய முயற்சியாலேயே அவனை அடைந்திடக் கூடுமென நினைப்பது பொருந்தாது. அதனால், அவனைக் கருணை கொண்டு தமக்கு இரங்கும்படியாக அடிகள் துதிக்கின்றனர்.]*

தரிக்கிலேன் காய வாழ்க்கை சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி எங்கள் விடலையே போற்றி ஒப்பில்
ஒருத்தனே போற்றி உம்பர் தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள் நின்மலா போற்றி போற்றி. 61

*சங்கரனே, நின்னைப் போற்றுகின்றேன்! சிதாகாயத்தில் வாழ்கின்ற பழையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! எங்கள் அண்ணலே, நின்னைப் போற்றுகின்றேன்! ஒப்பற்ற ஒருவனே, நின்னைப் போற்றுகின்றேன்! தேவர்தலைவனே, நின்னைப் போற்றுகின்றேன்! தில்லைமன்றில் நடமிடுபவனே, நின்னைப் போற்றுகின்றேன்! எங்கள் நிர்மலனே, நின்னைப் போற்றுகின்றேன்! உடலோடுங் கூடிவாழுகின்ற இந்த வாழ்க்கையினை இனியும் தாங்கிக்கொண்டிருக்க இயலாதவன் யான்: ['ஆகவே, என் உடம்பினை ஒழித்து நின்னுடைய திருவருளிற் சேர்கின்ற பயனையும் எனக்கு அருளிச்செய்க' என்பது கருத்து. சங்கரன்-சுகத்தைச் செய்பவன். நிருத்தம்-கூத்து.]*

போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி. 62

*ஓ நமச்சி வாயனே, நின்னைப் போற்றுகின்றேன்! பாம்பாகிய அணியினை உடையவனே, அடியேன் மயக்க முற்று நிற்கின்றேன். 'ஓ நமச்சிவாயனே, நின்னைப் போற்று கின்றேன்! நான் சரண்புகுதற்குரிய இடம் வேறொன்றுமே இல்லை. ஓ நமச்சிவாயனே, நின்னைப் போற்றுகின்றேன்! என்னைப் புறம்போக விட்டுவிடாதே. ஓ நமச்சிவாயனே, நின்னைப் போற்றுகின்றேன்! நின் வெற்றி ஓங்குக! நின்னை யானும் போற்றுகின்றேன்! ['இறைவனே! யான் உலக மாயையில் சிக்கி இன்னமும் மயங்குகின்றேன்; நின்னையன்றி எனக்குப் புகலிடம் இல்லை; என்னைக் கைவிடாது காத்தருள்க' என்பது கருத்து. புயங்கம்-பாம்பு; கூத்து எனப் பொருள் கொண்டு, 'புயங்கமென்னும் கூத்தை உடையவனே!' எனவும் உரைப்பார்கள்.]*

போற்றியென் போலும்பொய்யர் தம்மைஆட் கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி நாதனே போற்றி போற்றி
போற்றிநின் கருணை வெள்ளப் புதுமதுப் புவனம் நீர்தீக்
காற்றிய மானன் வானம் இருசுடர் கடவு ளானே. 63

*என்னைப்போன்ற பொய்யர்களையும் அடிமையாக்கிக் கொள்ளுகின்ற வள்ளலே, நின்னைப் போற்றுகின்றேன்! நின் திருவடிகளைப் போற்றுகின்றேன்! எம் தலைவனே, நின்னைப் போற்றுகின்றேன்! போற்றுகின்றேன்! நினது கருணைப் பெருக்காகிய புதுத்தேனைப் போற்றுகின்றேன்! நிலம், நீர், தீ, காற்று, உயிர், வானம், இரு சுடர்கள் இவையாவும் ஆகிநின்ற கடவுளானே, நின்னைப் போற்றுகின்றேன்! ['என்போலும் பொய்யனையும் ஆட்கொள்ளுகின்ற பெரிதான கருணைவள்ளலே! நின்னைப் போற்றுகின்றேன்' என்பது கருத்து.]*

கடவுளே போற்றி யென்னைக் கண்டுகொண் டருளு போற்றி
விடவுளே உருக்கி யென்னை ஆண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை உம்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி. 64

*எல்லாவற்றையும் கடந்து நிற்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! 'என்னையும் கண்பார்த்து அருள்வாயாக' என்று, நின்னைப் போற்றுகின்றேன்! 'நெகிழ்ச்சி கொள்ளுமாறு என் மனத்தினை உருகச்செய்து, என்னையும் நீ ஆட்கொண்டிட வேண்டும்' என்று நின்னைப் போற்றுகின்றேன்! 'இந்த உடலினை நீக்கிவிட்டு மேலிடமாகிய முத்தியினைக் கொடுத்தருள்க' என்று, நின்னைப் போற்றுகின்றேன்! சடையினுள்ளே கங்கையினை வைத்த சங்கரனே, நின்னைப்*

போற்றுகின்றேன்! போற்றுகின்றேன்! [கடவுளே! உடற் கட்டை நீக்கி எனக்கு முத்தியினைத் தருவாயாக' என்பது கருத்து. 'உக்கிரத்துடன் வந்த கங்கையின் வேகத்தைத் தடுத்து ஆண்டதுபோல, என்னுடைய மனோ வேகங்களை ஒடுக்கி என்னையும் ஆட்கொள்வாயாக' என்கின்றனர்.]

சங்கரா போற்றி மற்றோர் சரணிலேன் போற்றி கோலப்
பொங்கரா அல்குற் செவ்வாய் வெண்ணகைக் கரிய வாட்கண்
மங்கையோர் பங்க போற்றி மால்விடை யூர்தி போற்றி
இங்கிவ்வாழ் வாற்ற கில்லேன் எம்பிரான்
[இழித்திட் டேனே. 65

சங்கரனே, நின்னைப் போற்றுகின்றேன்! யான் வேறொரு புகலிடமும் இல்லாதவன்; அதனால், நின்னைப் போற்றுகின்றேன்! சீற்றங்கொண்ட பாம்பினது அழகான படத்தைப் போன்ற அல்குலையும், சிவந்த இதழ்களையும், வெண்மையான பற்களையும், கருமையாகிய ஒளியினையுடைய கண்களையும் உடையவளான, மங்கைப் பருவத்தினளுமான, உமையம்மையை நின் ஒரு பாகத்திலே அமைத்துக் கொண்டவனே, நின்னைப் போற்றுகின்றேன்! பெரிய இடபவூர்தியை உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! இவ்விடத்து, இப் பொய்யான வாழ்வினைப் பொறுக்க இயலாதவனாகி, இதனை யான் அருவருத்துவிட்டேன். என்னை ஏற்றருள்க, எம் பெருமானே! ['உன்னையன்றிப் புகலிடமும் இல்லை; இந்த உலகவாழ்வும் வெறுத்தது; என்னை இனியும் வருந்தவிடாமல் நின்னடிக்கு ஏற்றருள்க' என்பது கருத்து.

இழித்தனன் என்னை யானே எம்பிரான் போற்றி போற்றி
பழித்திலேன் உன்னை என்னை ஆளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர் கடமைபோற்றி
ஒழித்திடிவ் வாழ்வு போற்றி உம்பர்நாட் டெம்பி ரானே. 66

என்னை யானே அருவருத்து விட்டேன்; எம்பெருமானே! போற்றி! போற்றி! நின்னை யான் குறைகூறவு மாட்டேன். என்னை ஆளாக ஏற்றுக்கொண்ட நின் திருவடிகளைப் போற்றுகின்றேன்! சிறியோர் செய்த தவறுகளை எல்லாம் பொறுத்துக் கொள்ளுதல் பெரியவரது கடமையன்றோ! அதனால், பெரியோனாகிய நின்னைப் போற்றுகின்றேன்! 'மேலுலகத்தையுடைய எம் பெருமானே, இந்த வாழ்வினை ஒழித்தருள்க' என்று, நின்னைப் போற்றுகின்றேன்! ['இறைவனே! நின் கருணைக்குப் பாத்திரனாக ஆகாதுபோயினமைக்கு என்னையே நான் குறைப்பட்டுக் கொள்வேனே அல்லாமல், நின்னைக் குறைகூற மாட்டேன்; என் பிழைகளைப்

பொறுத்துப் பெரியோனாகிய நீ என்னைக் காத்தருள்க' என்பது கருத்து.]

எம்பிரான் போற்றி வானத் தவரவர் ஏறு போற்றி
கொம்பரார் மருங்குல் மங்கை கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத் திருச்சிற்றம் பலவ போற்றி
உம்பரா போற்றி என்னை ஆளுடை ஒருவ போற்றி. 67

எம் பிரானே, போற்றுகின்றேன்! வானகத்து விளங்கும் அவ்வத் தேவர்கட்குஞ் சிங்கவேறுபோல விளங்குபவனே, போற்றுகின்றேன்! கொடிபோன்ற சிறந்த இடையினை யுடைய உமையாளை ஒருபாகத்தே கொண்டுள்ளவனே, திருவெண்ணீற்றினை உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! செம்மேனி உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! தில்லைஞானப் பொதுவினை உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! மேலாகிய முத்தியுலகினை உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! என்னை அடிமையாகவுடைய ஒப்பற்றவனே, நின்னைப் போற்றுகின்றேன்! ['தேவர்கட்குஞ் சிங்கவேறு போன்ற நின்னைப் போற்றுகின்றேன்! என்னை ஆட்கொண்டு காத்தருள்க' என்பது கருத்து. செம்பிரான்-செம்மையாகிய பிரானும் ஆம்.]

ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி தமியனேன் தனிமை தீர்த்தே. 68

ஒப்பற்றவனே, போற்றுகிறேன்! நிகரில்லாத அப்பனே, போற்றுகின்றேன்! வானோர்க்குக் குருவானவனே, போற்றுகின்றேன்! எங்களுடைய இளமைச் செவ்வியினையுடைய சோதியே, போற்றுகின்றேன்; 'வருவாயாக' என்று என்னை நின்னிடத்தே அழைத்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என, நின்னைப் போற்றுகின்றேன்! 'தமியேனது துணையின்மையை நீக்கித் துணையாக நின் திருவடிகளைத் தந்தருள்வாயாக' என, நின்னைப் போற்றுகின்றேன்! ['என்னை, நீயே நின்பால் வருகவென அழைத்து ஆட்கொள்ளல் வேண்டும்; யானாக நின்னை வந்தடைதற்கு ஆற்றேன்' என்பது கருத்து. கொழுந்து-அனற் கொழுந்து.]

தீர்ந்தஅன் பாய அன்பர்க் கவரினும் அன்ப போற்றி [போற்றி
பேர்ந்துமென் பொய்ம்மை யாட்கொண் டருளிடும் பெருமை
வார்ந்தநஞ் சயின்று வானோர்க் கமுதம்ஈ வள்ளல் போற்றி,
ஆர்ந்தநின் பாதம் நாயேற் கருளிட வேண்டும் போற்றி. 69

இருவகைப் பற்றினையும் விட்டுவிட்டு, அன்புருவமாகவே விளங்குகின்ற அடியவருக்கு, அவரினுங் காட்டில் அன்புடையவனாகத் திகழ்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! என் பொய்த்தன்மையினை நீக்கி என்னை அடிமைகொள்ளுகிற நின் பெருந்தகைமையைப் போற்றுகின்றேன்! பாற்கடலிற் பெரிதாய் எழுந்த நஞ்சினையுண்டு, தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்தருளிய வள்ளலே, நின்னைப் போற்றுகின்றேன்! 'எங்கும் நிறைந்த நின் திருவடிகளை நாயினேனுக்குத் தந்து அருளவேண்டும்! என்று, நின்னைப் போற்றுகின்றேன்! [தீமையை அணுகாது தடுத்து, நன்மையை அநுபவிக்கத் தருகின்ற கருணையாளனே! நின் திருவடிகளிலே என்னையும் சேர்த்தருள்க! என்பது கருத்து. தீர்ந்த அன்பு-பேரன்பும் ஆம். அயிலல்-உண்ணல்.]

போற்றியிப் புவனம் நீர்தீக் காலொடு வான மானாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்றம் ஆகிநீ தோற்ற மில்லாய்
போற்றியெல் லாவு யிர்க்கும் ஈறாயீ றின்மை யானாய்
போற்றியைம் புலன்கள் நின்னைப் புணர்கிலாப்
[புணர்க்கை யானே. 70

இந்தப் புவனமும், நீரும், தீயும், காற்றும், வானமும் ஆகியவனே, நின்னைப் போற்றுகின்றேன்! எவ்வகை உயிர்கட்கும் பிறப்பிடமாகியும் தோற்றமின்றி இருப்பவனே, நின்னைப் போற்றுகின்றேன்! எல்லா உயிர்கட்கும் முடிவிடமாகியும் நினக்கொரு முடிவில்லாத தன்மையனே, நின்னைப் போற்றுகின்றேன்! ஐம்புல உணர்வுகளும் நின்னை இயல்பாகவே அடையாத மாயத்தை உடையவனே, நின்னைப் போற்றுகின்றேன்! ['ஐம்புலன்களாலும் பற்றப்படாத நீ, பற்றிக் கிடந்து வருத்தமுறும் எனது அறியாமையை நீக்கி, என்னை வந்து ஆண்டருளல் வேண்டும்' என்பது கருத்து.]

## 8. ஆனந்தத்து அழுந்தல்

(எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[இறையடி சேர்ந்தவர் பெற்றுக் களிக்கின்ற, அந்தப் பேரானந்தப் பெருநிலையிலேயே அழுந்திக் கிடத்தற்கு அருளுமாறு, இறைவனை வேண்டுதல் இது.]

புணர்ப்ப தொக்க எந்தை யென்னை யாண்டுபூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்றபோது நின்னொ டென்னொ டென்னிது
புணர்ப்ப தாக அன்றி தாக அன்பு நின்க ழற்கணே [தாம்
புணர்ப்ப தாக அங்க ணாள புங்க மான போகமே. 71

அழகிய கண்ணுளனே! நீ குருபரனுக எழுந்தருளி வந்து அருள்புரிதற்கு உரியதான பக்குவநிலையும் ஒத்துவர, எந்தையாகிய நீயும், என்னை வந்து ஆண்டுகொண்டு, யான் நின் திருவடிகளைப் பூண்டு கதிபெறுமாறு, எனக்கும் அருள் நோக்கத்தினை அந்நாளில் நல்கிஞய்! 'நின்னேடு என்னை இணைக்குவதன்று இந்த உடம்பு' என்றறிந்தபோது, நின்னேடும் என்னேடும் இந்த நிலைதாம் எனக்கு யாது பயனைத் தரும்? என் நல்லூழ் என்னை நின்னெடும் சேர்ப்பதாயினும் ஆகுக, அன்றிச் சேர்க்காது போயினும் போகுக! நின்னுடைய திருவடிகளிடத்தே கொள்ளும் என் அன்பு மட்டும், என்ருவது என்னை நின்னடிகளில் சேர்ப்பதாக! உயர்ந்த சிவபோகத்தையும் என்பால் நிறைப்பதாக! ['நின்னடி சேர்ந்து பேரின்பத்தை அடைகின்ற பக்குவநிலை வாய்ப்பினும், வாயாது போயினும், யான் நின்னடிக்கே அன்புடையவனுகி, நின் திருவடியடைதலாகிய பேரின்பத்தினையே நாடி முயல்வேனுக! அதற்கு மட்டும் அருளுக' என்பது கருத்து.]

போகம் வேண்டி வேண்டி லேன்பு ரந்த ராதி யின்பமும்
ஏக நின்க ழலிணைய லாதி லேனென் எம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி யஞ்ச லிக்கணே
ஆக என்கை கண்கள் தாரை யாற தாக ஐயனே. 72

இந்திரன் முதலாகிய இறையவர் பதங்களை அடைதலை விரும்பி, யான் நின்னை வேண்டினேன் இல்லை. மற்று, யான் நின்னை வேண்டுவது, எம்பெருமானே, ஒப்பற்ற நின்னுடைய திருவடிகள் இரண்டையுமன்றி வேறு யாதுமின்று. ஐயனே! உடல் பிளந்து நடுக்கமுண்டாகி, என் கைகள் சிரமேற் குவிந்து அஞ்சலி செய்தலினிடத்தே ஈடுபடுக! என் கண்களில் நீர்த்தாரைகள் ஆருகப் பெருகி ஓடுக! இதற்குமட்டும் அருள்வாயாக! ['இறைவனே! இந்திரபோகங்களை விரும்பிலேன். நின் திருவடி இன்பத்தையே நாடினேன். என் கைகள் நின்னைத் தொழவும், என் கண்கள் நின்காட்சியால் ஆனந்தக் கண்ணீரைச் சொரியவும் எனக்கு அருள்வாயாக' என்பது கருத்து. போகம்-அநுபவம். கம்பம்-நடுக்கம். குஞ்சி-குடுமி; அதனையுடைய தலைக்காயிற்று. தாரை-ஒழுங்கு.]

ஐய நின்ன தல்ல தில்லை மற்றெரர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை பொய்ம்மை யேனென் எம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த அன்ப ரன்பெ னக்கு மாக வேண்டுமே. 73

*ஐயனே! நின்னுடைய ஆதரவன்றி எனக்குப் பிறிதோர் ஆதரவும் இல்லை. வஞ்சகனாகிய யானோ ஒரு பொய்மை யாளன். என்னிடத்தில் பொய்மையே கலந்திருந்ததன்றி மெய்மை சேர்ந்திருந்ததும் இல்லை. எம் பெருமானே! மை தீட்டிய கண்களையுடைய அம்மையினை ஒரு பாகத்திலே உடையவனே! நின்பால் வந்து, நின் திருவடிக்கண்ணே உண்மையாய்க் கலந்த அன்பரது அன்பே, எனக்கும் உளதாக வேண்டும். அதற்கு அருளிச் செய்வாயாக! [ஐயனே நின்னையன்றி எனக்குக் கதியில்லை. யான் பொய்யனே ஆயினும், நின் அடியவரிடத்து உளதாகிய அன்பே என் பாலும் உளதாகுமாறு எனக்கும் அருள்வாயாக!' என்பது கருத்து. பற்று-ஆதரவு. மெய்கலந்த அன்பர்-மெய்யன்பர்.]*

வேண்டும் நின்க ழற்கணன்பு பொய்மைதீர்த்து மெய்ம்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை ஆவ வென்ற ருளுநீ
பூண்டுகொண் டடியனேனும் போற்றி போற்றி யென்றுமென்று
மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன நின்வ ணங்கவே. 74

*மன்னவனே! நாயினேனைப் பொய்ந் நெறியினின்றும் நீக்கி, உண்மையாகவே அடிமையாக்கிக் கொண்டு, ஐயோ வென்று என் அறியாமைக்கு இரங்கி, எனக்கும் அருள் செய்வாயாக!'யான் இனியும் பிறந்தும் இறந்தும்உழன்றாலும் நின் திருத்தொண்டினை மேற்கொண்டவனாகப், போற்றி போற்றி என்று நின்னைத்துதித்தும், எக்காலத்தும் நின்னை வணங்கியும், நின் கழற்கு அன்புசெய்தும் இருத்தலான அந்தப் பேற்றினையே தந்தருளுமாறு' நின்பால் வேண்டு கின்றேன்! இதனையேனும் எனக்கு அருள்வாயாக! ['இறை வனே! யான் பிறவிநீக்கம் பெற்று உய்தலின்றிப் பிறந்தும் இறந்தும் உழல்வதற்கே உரியவனாயினும், நின் திருவடிகட்கு அன்புமாறாது நின்னை வழிபட்டிருக்கின்ற தன்மையினை யேனும் எனக்கு அருள்வாயாக' என்பது கருத்து.]*

வணங்கு நின்னை மண்ணும்விண்ணும் வேதம்நான்கும் ஓலமிட்
டுணங்கு நின்னை எய்தலுற்று மற்றொ ருண்மை யின்மையின்
வணங்கி யாம்வி டேங்க ளென்ன வந்து நின்ற ருளுதற்
கிணங்கு கொங்கை மங்கை பங்க என்கொ லோநி னைப்பதே. 75

*நெருங்கின கொங்கைகளையுடைய மங்கையினை ஒரு பாக மாக உடையவனே! மண்ணுலகமும் விண்ணுலகமும் நின்னையே வணங்கா நிற்கும். நான்கு வேதங்களும் நின்னை அடைதலை விரும்பியும், அங்ஙனம் அறிந்துணர மாட்டாமை யால் ஓலமிட்டு வாடிநிற்கும். நின்னையன்றி மற்றொரு*

மெய்ப்பொருள் யாதும் இல்லாமையினால், அடியேங்களாகிய யாங்களும், நின்னடிகளை வணங்கி, அவற்றை விடமாட்டோம் என்று சொல்லவும், எமக்கெதிரே வந்து நின்று அருள் செய்தற்கின்றி நீ நினைப்பதுதான் யாதோ? எதுவும் நினையாது, எம் வேண்டுகோட்கு இணங்குவாயாக! ['இறைவனே! அறிதற்கரிய நின் கழலிணைகளைப் பற்றிக்கொண்டு, விடமாட்டோம் என்று யாம் உறுதிகொண்டிருப்பவும், எம்முன் வந்து காட்சிதந்து நின்றுயான நீ, எமக்கு அருளுதற்கு யோசிப்பது ஏனோ? அங்ஙனம் எதனையும் நினைத்து எம்மைக் கைவிட்டு விடாமல், எமக்கு அருள்செய்து உதவுக' என்பது கருத்து. 'மண்விண்' என்பன அவற்றிலுள்ள உயிர்களை உணர்த்தின.]

நினைப்ப தாக சிந்தை செல்லு மெல்லை யேய வாக்கினால்
தினைத்த னையு மாவ தில்லை சொல்ல லாவ கேட்பவே
அனைத் துலகு மாய நின்னை ஐம்பு லன்கள் காண்கிலா
எனைத் தெனைத்த தெப்புறத்த தெந்தை பாத மெய்தவே. 76

என்மனம், நின்னை நினைந்து அறிவதற்காக மேற்பட்டுச் செல்லும். அது செல்லும் அளவினைப் பொருந்துவதற்கு வாக்கினால் வரம்பு உண்டாகச் சொல்லுதலும் தினையளவும் பொருந்துதலில்லை. எல்லாவுலகங்களும் நின் பெருமையைச் சொற்களின் அளவினுட்பட்டே கேளாநின்றன. எல்லா உலகமுமான நின்னை, ஐம்பொறியறிவுகள் அறியமாட்டா. எமது தந்தையாகிய நின் திருவடிகளை அடைதற்கு விரும்புமானும், அது எந்தெந்த அளவினதெனவும், எவ்விடத்தது எனவும் தெரிகின்றிலேனே! ['இறைவனே! மனோவாக்குக் காயங்கட்கும் அப்பாலான நின் திருவடிகளை யான் காணுகின்ற வகைதான் யாது?' என்பது கருத்து, எங்கும் நிறைந்துள்ளவன் இறைவனாயினும், அவன் தன்னைக் காணக் காட்டினாலன்றி, எவரானும் அவனைத் தன்முனைப்பின் துணையால் அறிதல் இயலாது. ஆகவே, 'எனைத் தெனைத்து? எப்புறத்தது?' என்கின்றனர்.]

எய்த லாவ தென்று நின்னை யெம்பி ரானிவ் வஞ்சனேற்
குய்த லாவ துன்க ணன்றி மற்றொ ருண்மை யின்மையிற்
பைத லாவ தென்று பாது காத்தி ரங்கு பாவியேற்
கீத லாது நின்க ணொன்றும் வண்ண மில்லை யீசனே. 77

எம்பெருமானே! நின்னை அடைதலாவது எப்போது? இந்த வஞ்சகனாகிய எனக்கு உய்யும் வழியாவது நின்னிடத்ததன்றி, வேறோர் மெய்ப்பொருளாவதும் யாதுமில்லை. ஆதலால், எனக்குத் துன்பம் உண்டாமென்று இரக்கங் கொண்டு, என்னைக் காப்பாற்றி, எனக்கு இரங்கியருள்

வாயாக! பாவியேனாகிய எனக்கு இதுவல்லாது நின்னிடத்திற் சேர்கின்ற வகைதான் யாதுமில்லை. ஈசனே, எனக்கும் அருள் வாயாக! ['இறைவனே. என்பாற் கருணைகொண்டு நீயே வந்து ஆட்கொண்டால் அல்லது, உய்வதற்கான வழி யாது மில்லை. எனவே, என்னை விரைவில் வந்து ஆட்கொள்வா யாக' என்பது கருத்து. பைதல்-துன்பம்.]

**ஈச னேநீ அல்ல தில்லை இங்கும் அங்கு மென்பதும்**
**பேசி னேனொர் பேத மின்மைபேதை யேனென் எம்பிரான்**
**நீச னேனை ஆண்டு கொண்ட நின்ம லாவோர் நின்னலால்**
**தேச னேயோர் தேவ ருண்மை சிந்தி யாது சிந்தையே.** 78

*ஈசனே! எம் பெருமானே! இகத்தினும் பரத்தினும் நின்னையன்றி வேறுதுணை யாதும் இல்லை என்பதனையும், பேதைமை யாளனாகிய யான், ஒரு வேறுபாடுமின்றிச் சொன்னேன். நீசனாகிய என்னை ஆட்கொண்ட நின்மலனே! தேசனே! ஒப்பற்ற நின்னையன்றி, வேறொரு தேவர் உளரெ பதனைக் கூட என் மனம் ஒரு போதுமே சிந்தியாது! ['இகத் திற்கும் பரத்திற்கும் நீயே துணையென்று மனத்தின்கண் வேறுபாடின்றிப் பேசினேன். என்மனம் வேறொரு தெய் வத்தை நினையவும் செய்யாது; எனக்கும் இரங்கி உதவுக' என்பது கருத்து.]*

**சிந்தை செய்கை கேள்வி வாக்குச் சீரில் ஐம்பு லன்களால்**
**முந்தை யான காலம் நின்னை எய்தி டாத மூர்க்க னேன்**
**வெந்தை யாவி ழுந்தி லேனென் உள்ளம் வெள்கி விண்டிலேன்**
**எந்தை யாய நின்னை யின்னம் எய்த லுற்றி ருப்பனே.** 79

*சிந்தை, செய்கை, கேள்வி, வாக்கு, சிறப்பில்லாத ஐம்புலன்கள் முதலிய தடைகளினாலே, நீ என்னை ஆட்கொள்ள வந்தருளிய முற்பட்ட காலத்திலே, யான் நின்னை அடைந்திடாத மூர்க்கனாகி நின்றேன். ஐயனே! அன்று யான் தீயினில் வெந்து என் உடலினை விட்டேனில்லை. என் மனத்தே நாணமுற்று நெஞ்சுவெடித்துச் செத்தேனு மில்லை. எந்தையாகிய நின்னை அடைவதனைக் கருதி இன்ன மும் இவ்வுலகத்தில் இருப்பவன் ஆயினேன்! என்னே என் அறியாமை? [முன்னர் நீ வந்து காட்சிதந்தபோது, உடற் கட்டை விட்டு நின் பாதங்களை அடைகின்ற முதிர்ச்சி என் னிடத்து ஏற்படவில்லை. இன்னமும், நின்னை அடைய முயன்றுதான் வருகின்றேன். என்றுதான் நின்னை அடை வேனோ?' என்பது கருத்து.]*

இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை ஆண்டு கொண்ட நின்னதாட்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ னைக்க லந்து போகவும்
நெருப்பு முண்டு யானு முண்டி ருந்த துண்ட தாயினும்
விருப்பு முண்டு நின்கண் என்கண் என்ப தென்ன விச்சையே. 80

இரும்பினைப்போன்ற வன்மையான மனத்தையுடைய என்னையும் ஆட்கொண்டருளிய நின்னுடைய திருவடியாகிய கருப்பஞ்சாறு, என்னைத் தன்னுள் விழுங்கித், தான் என்னுட் கலந்து அன்று பிரிந்தது; உடனே உடலை விடுவதற்கு நெருப்பும் இருந்தது; யானும் அதன் அருகே இருந்ததும் உண்டு. அங்ஙனம் யான் உடலைவிடாது இருந்த நிலை உண்டாயினும், நின்பால் எனக்கு அன்பும் உளதாயிருந்தது என்பேன்; இது என் அறியாமையே ஆகும். ['நின்னைக் காணக் கொடுத்துவைத்தும் நின்னடி அன்றே சேர்ந்திலேன். அத்தகைய யான், 'நின்னிடத்து அன்புடையேன்' என்பது அறியாமையே! என்னைத் தடுத்தாட்கொண்டு காத்தருள்க' என்பது கருத்து.]

## 9. ஆனந்த பரவசம்

### கலிநிலைத் துறை

[சிவானந்தத்தை எண்ணி எண்ணிப் பரவசமுற்று வேண்டித் துதிக்கின்றது இதுவாகும்.]

விச்சுக் கேடுபொய்க் காகா தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானா ரெல்லாரும் வந்துன் தாள்சேர்ந்தார்
அச்சத் தாலே ஆழ்ந்திடு கின்றே னாரூரெம்
பிச்சைத் தேவா என்னான் செய்கேன் பேசாயே. 81

பொய்ம்மைக்கு வித்துக்கேடு ஏற்பட்டுவிடல் ஆகாது என்பதற்காகவோ, பொய்யனாகிய என்னை இவ்வுலகத்தே இருத்திவிட்டு, நீயும் அன்று பிரிந்துபோயினை. நின் அன்பிற்கு உரியவரானோர் அனைவரும் வந்து அன்றே நின் திருவடியை அடைந்தார்களே! நான் பிறவித் துயராகிய அச்சத்தினாலே அழுந்துகின்றேனே! திருவாரூரிலே எழுந்தருளியிருக்கின்ற, எம்முடைய பிட்சாடனப் பெருமானே! யான் உய்வதற்கு இனி யாதுசெய்வேன்? அதனையேனும் எனக்குச் சொல்வாயாக. ['பிச்சைத் தேவா! யான் அச்சத்தால் ஆழ்கின்றேன்; இனிச் செய்வது யாதென்று எனக்கு அறிவுறுத்துவாயாக' என்பது கருத்து.

பேசப் பட்டேன் நின்னடி யாரில் திருநீறே
பூசப் பட்டேன் பூதல ராலுன் அடியானென்
றேசப் பட்டேன் இனிப்படு கின்ற தமையாதால்
ஆசைப் பட்டேன் ஆட்பட் டேனுன் அடியேனே. 82

*நின் அடியவருள் ஒருவனாகப் பிறராற் பேசப்பட்டேன். நின் திருவெண்ணீற்றினைப் பூசுதலையும் பெற்றேன். உலகத்தவரால் நின் அடியவனென்று குறித்து ஏசவும் பட்டேன். நின் அடியனாகிய யான், மீளவும் நினக்கே ஆசைப்பட்டேன்; நினக்கே ஆட்படலும் செய்தேன்; இனியும், யான் துயரத்துட் படுகின்றது பொருந்தாது! என்னைக் காத்தருள்க! ['இறைவனே! நின்னடியவனாகப் பலரும் என்னைக் கருதியும், நீ மட்டும் என்னை ஏற்றனை இல்லையே? என்றும் யான்நின் அன்பனே, அடியவனே! என்னையும் ஏற்றருள்க' என்பதுகருத்து.]*

அடியேன்அல்லேன் கொல்லோ தானெனை ஆட்கொண் டிலை
அடியா ரானா ரெல்லாரும் வந்துன் தாள் சேர்ந்தார் [கொல்லோ
செடிசேர் உடலம் இதுநீக்க மாட்டேன் எங்கள் சிவலோகா
கடியேன் உன்னைக் கண்ணாரக் காணுமா று காணேனே. 83

*யான் நின் அடியவன் அல்லேனோ? நீ என்னை வந்து ஆட்கொள்ள வில்லையோ? நின் அடியவராயினார் அனைவரும் வந்து அன்று நின் திருவடி சேர்ந்தனரன்றே? எங்கள் சிவபுரத்தனே! தீவினை பொருந்துதற்கு இடமாகிய இந்த உடலினை ஒழிக்கவும் மாட்டேனாகிய, கடினமான தன்மையினை உடைய யான், இனி, நின்னைக் கண்குளிரக் காண்பதற்கான நெறியினைக் காணாதும் இருக்கின்றேனே! ['அன்று நீ காணக் காட்டியும், உடலை ஒழித்து நின்னடி சேர்ந்தேனில்லை. இப்போது, நின்னைக் காணும் வழியறியாது வாடுகின்றேன். எழுந்தருளி வந்து எனக்கு உதவுக' என்பது கருத்து.]*

காணுமா று காணேன் உன்னை அந்நாட் கண்டேனும்
பாணே பேசி என்றன்னைப் படுத்ததென்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே ஆரமுதே அத்தாசெத்தே போயினேன்
ஏணா ணில்லா நாயினேன் என்கொண்டெழுகேன் எம்மானே. 84

*எமது பெரியோனே! அந்நாளில் நினைக் காணும் பேறு பெற்ற யானும், நின்னை அறிகின்ற வழியினைக் காணாது போயினேன். பாழானவற்றைப் பேசி, என்னை அன்று கீழ்ப் படுத்தியதுதான் யாதோ? மேலான ஒளிப்பிழம்பே! ஆணே! பெண்ணே! தெவிட்டாத அமுதமே! அத்தனே! அன்று யான் பயன்கொள்ளாதே செயலற்றுக் கிடந்தேனே? மன வலிமை*

*யும் நாணமுமில்லாது அன்று அப்படியாயின யான், இனி, எதனைத் துணைக்கொண்டு மேற்செல்வேன்? ['அந்நாளிற் கண்டபோது நின்னடி சாராது போயினேன். இன்றோ, காண்பதற்குத் துடிக்கின்ற யான் மேற்செல்லுதற்கான துணைகாணாது அயர்கின்றேன். எனக்குத் துணைநின்று அருளாயோ?'' என்பது கருத்து. ஏண்-வலிமை.]*

மானேர் நோக்கி யுடையாள்பங்கா மறையீ றறியா மறையோனே
தேனே அமுதே சிந்தைக்கரியாய் சிறியேன் பிழைபொறுக்குங்
கோனே சிறிதேகொடுமை பறைந்தேன் சிவமா நகர்குறுகப்
போனா ரடியார் யானும்பொய்யும் புறமே போந்தோமே. 85

*மானொத்த பார்வையினைக் கொண்ட, எம்மை உடையாளாகிய அம்மையின் பாகத்தை உடையவனே! வேதத்து முடிவும் அறிந்தறிய ஒண்ணாத மறையவனே! தேனே! அமுதமே! சிந்தைக்கு அரியவனே! சிறியேனுடைய பிழையினைப் பொறுத்தருளும் கோமானே! அடியேன், சிறிதளவு கொடுமையானவற்றைக் கூறுதலும் செய்தேன். நின் மெய்யடியார்கள் பெருமையுள்ள சிவபுரத்தை அணுகச்சென்றார்கள். யானும் பொய்யும் அவர்கட்குப் புறம்பாக உலகிடத்தே கழிக்கப்பட்டு நின்றோம். ['பெருமானே! நின் அடியார் சிவபுரம் குறுக, அன்று, யானும் பொய்யும் புறமானோம்; இனி, யான் உய்யும்வகைதான் யாதோ?' என்பது கருத்து.]*

புறமே போந்தோம் பொய்யும் யானும் மெய்யன்பு
பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன் யான்
அறவே நின்னைச்சேர்ந்த அடியார் மற்றொன் றறியாதார்
சிறவேசெய்து வழிவந்து சிவனே நின்தாள் சேர்ந்தாரே. 86

*அங்ஙனமாகப் பொய்யும் யானும் நினக்குப் புறம்பே போயினோம். மெய்யன்பினைப் பெறுதற்கு வல்லேனல்லாத ஒரு தன்மையினையும் யான் பெற்றேன். சிவனே! முற்றிலும் நின்னையடைந்த அன்பர்கள், நின்னையன்றி யாதொன்றினையும் அறியாதவராகிச், சிறப்பாக வீட்டின்பம் அடைதற்கு உரியதனையே செய்து, செந்நெறியில் ஒழுகி, நின் திருவடியையும் அடைந்தார்கள்! ['இறைவனே, நின் மெய்யடியார்கள் சிறவே செய்து வழிவந்து நின் திருவடியினை அடைந்தார்கள். யானும் பொய்யும் புறம்போந்தோம்' என்பது கருத்து.]*

தாராய் உடையாய் அடியேற் குன்தா ளிணையன்பு
பேரா வுலகம் புக்காரடியார் புறமே போந்தேன்யான்
ஊரா மிலேக்கக் குருட்டா மிலேத்திங் குன்தாளிணையன்புக்
காராய் அடியேன் அயலே மயல்கொண் டழுகேனே. 87

என்னை ஆளாக உடையவனே! அடியேனுக்கு நின் திருவடித் துணைக்கு அன்பு செய்தலாகிய பேற்றினைக் கொடுத்தருளாய். புகவொண்ணாத முத்தியுலகில் நின் மெய்யடியார் போய்ப் புகுந்தனர்! யானோ புறமாயினேன்! ஊரிலுள்ள பசுக்கள் நல்ல புல்லினை நாடிச்சென்று மேய்கின்றபோது, அதனோடு சென்ற குருட்டுப்பசுவும் அகப்பட்டதை மேய்ந்தது என்றாற்போல, நின் திருவடியிணையிடத்து அன்பு செய்தற்கு, அடியனேன் எவருடைய துணையினனாகி, அயலே மயக்கங்கொண்டு அழுவேனோ? [இறைவனே! ஊர்ப்பசுக்கள் பசுமை தெரிந்து புல்மேய, உடன்சென்ற குருட்டுப் பசுவும் அகப்பட்டதை மேய்கின்றதுபோல, நின் அடியவர் சிவபுரம் செல்ல, யானோ பொய்யைப் பற்றிப் புறமாயினேன். இனி யான் உய்யும் நெறிதான் யாதோ?' என்பது கருத்து.]

அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய் அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்னார் பொன்னார் கழல்கண்டு
தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடும் தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண் டுன்னைப் பணிகேனே. 88

நின்னிடத்து அன்புள்ள மனத்தோடு அழுது போற்ற மாட்டேன். நெருப்பைச் சேர்ந்த மெழுகினைப் போன்றவராய நின் அடியவர், மின்னுதலமைந்த பொற்கழலணிந்த நின் அரிதான திருவடிகளைக் கண்டதும், தொழுதனராய் நின்னைத் தொடர்ந்தனர். அவரோடு சேர்ந்து தொடர்ந்து வராமல், வீண் பிறவியினனாகிய யானும் நின்றேன். இனி, எதன் துணைகொண்டு நின்னைப் பணிவேன்? ['இறைவனே! நின்னன்பர் நின்னைக் கண்டதும் மனமுருகி நின்னை அடைந்தனர். அடையாது நின்ற யான் இனி எதனைப்பற்றி நின்னை வந்து அடைவேன்?' என்பது கருத்து. 'எதனைப்பற்றி' என்றது, அத்தகைய அன்புச்செறிவு தம்மிடத்து இல்லாததென்றது ஆகும்]

பணிவார் பிணிதீர்த் தருளிப் பழைய அடியார்க்குன்
அணியார் பாதங் கொடுத்தி அதுவும் அரிதென்றால்
திணியார் மூங்கி லனையேன் வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லை தாராய் பொய்தீர் மெய்யானே. 89

பொய்ம்மையின் நீங்கிய மெய்யனே! நின்னை வணங்குகின்றவராகிய அடியவரின் பிறவிப்பிணியினை நீக்கியருளி, நின் பழைய அடியாராகிய அவர்க்கு, நின் அழகு நிறைந்த திருவடிகளைக் கொடுத்தருள்கின்றனை. எனக்கு, அதுவும் அரிதாகுமானால், வன்மைமிக்க மூங்கிலைப் போன்றேனாகிய எனது வினைகளைமட்டும் நீறுசெய்து, விரைந்துவந்து, நின்

தண்ணருட் பாதங்களைத் தந்து, அங்ஙனமேனும் அருள் செய்வாயாக.

யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே. 90

தேனே! அமுதமே! கரும்பின் தெளிவே! தித்திக்கும் பெரியோனே! யானும் பொய்யன்; என் மனமும் பொய்ம்மை உடையது; என் அன்பும் பொய்யான அன்பே. ஆனாலும் தீவினையினை உடையனாகிய யான், என் பிழையினை உணர்ந்து அழுதலைச் செய்தாலாவது நின்னை அடையலாகுமோ? அடியனேன் நின்னை வந்து கலப்பதற்கான வழியினை அருளிச் செய்வாயாக! ['யான், என் மனம், என் அன்பு அனைத்தும் பொய்யாயபோது, நின்னை எங்ஙனம் பெறுவேன்? நின்னைப் பெறுவதற்கான வழியினை எனக்கு அருள்வாயாக' என்பது கருத்து.]

## 10. ஆனந்த அதீதம்

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[பேரின்பத்தினை விரும்பி, அதன் மிக்க சிறப்பான தகைமையினை வியந்து, பெருமானைப் போற்றுவது இப்பகுதி.]

மாறி லாதமாக் கருணை வெள்ளமே
 வந்து முந்திநின் மலர்கொள் தாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
 மெய்ம்மை அன்பருன் மெய்ம்மை மேவினார்
ஈறி லாதநீ எளியை யாகிவந்
 தொளிசெய் மானுட மாக நோக்கியுங்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
 கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே. 91

ஒரு காலத்தும் மாறுபடுதலில்லாத பேரருட்கடலே! அழகிய தாமரைமலரின் தன்மையினைக் கொண்ட நின் திருவடிகள் இரண்டையும்விட்டு நீங்காத நிலையாகிய சிறப்பினைப் பெற்ற மெய்யடியார்கள், நின் மெய்த்தன்மையினை அடைந்தார்கள். முடிவற்றவனாகிய நீ ஒளிசெய்கின்ற மானுட உருவினனாகி, எனக்கு அறிதற்கு எளிதானவனாக எழுந்தருளிவந்து என்பால் திருக்கண் நோக்கினை நல்கியும், பிளவுபட்டு உருகாத நெஞ்சினையுடைய நாயினேன், அன்றும் கடையனாகி நின்றேன்.

இங்ஙனம், யான் கடையனாகி நின்றதற்குக் காரணம் என் தீவினை தானோ? ['நின் அடியவர் தாமே முற்பட்டு வந்து நின்னை அடைந்தனர். யானோ நீயே வந்து அருளியபோதும் நின்னையடையாது கீழ்மைப்பட்டு நின்றேன். இது என் தீவினைப் பயனோ?' என்பது கருத்து. பதப்பரிசு-இறையடி சார்வதற்குரிய பக்குவ நிலைமை. இறைவன் குருபரனாகி வந்த தன்மையினை 'ஒளி செய் மானுடமாக' என்றனர்.]

மைஇ லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின்மழக்
கைஇ லங்குபொற் கிண்ண மென்றலால்
அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் நீற்று மேனியாய்
மெய்ம்மை அன்பருள் மெய்ம்மை மேவினார்
பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ
போவ தோசொலாய் பொருத்த மாவதே. 92

தீட்டிய அஞ்சனமாகிய மை விளங்குகின்ற அழகாகிய கண்களையுடைய உமாதேவியை இடப்பாகத்தில் உடையவனே! நீயே வலியவந்து என்னை அடிமைகொண்ட பின்பு, மெல்லிய கையிடத்தே விளங்குகின்ற எளிதாகிய பொற் கிண்ணத்தினைப்போல நினைத்ததே அல்லாமல், நின்னை எய்து வதற்கு அருமையுடையவன் என்று யான் கருதினேனில்லை. திருமேனியில் உண்மையாய் விளங்குகின்ற திருவெண்ணீற் றினை உடையவனே! நின் மெய்யடியார்கள் எல்லாரும் நின் உண்மை நிலையினை அடைந்தார்கள். என்னைப் பொய்ப்பட்ட இந்த உலகத்திற் புகவிட்டு நீ போவதுதான் எனக்குத் தகுதி யாவதோ? உரைத்தருள்வாயாக. ['நின்னை அரியையாய் நினைத்து, நீ எழுந்தருளி வரக்கண்டதும் நின்னை விடாது பற்றிக் கொண்டேனில்லை. அதனாலே போலும், நின் அடிய வரை நின்னுடன் சேரக்கொண்ட நீ, என்னை இப் பொய்யுல கிலேயே விட்டுச் சென்றனை! அது என் தீவினையோ?' என்பது கருத்து.]

பொருத்த மின்மையேன் பொய்ம்மை யுண்மையேன்
போத என்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள்செய் அன்பரும்
நீயும் அங்கெழுந் தருளி இங்கெனை
இருத்தி னாய்முறை யோவெ னெம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே. 39

*நின்னை அடைதற்குத் தகுதியற்ற யான் பொய்மையினை உடையவனாகவே இருந்தேன். என்னை 'வருக' வென்று அழைத்து, அருள்புரிந்து நீ நோக்கவும், நின்னை அடைதற்கான வருத்தங்களை யான் மேற்கொண்டிலேன். உலகப்பற்றை விடாத வஞ்சகத்தையே கொண்டிருந்தேன். நின்னை அடைவதற்காக யான் இறந்தேனுமில்லை. தாமரை மலர்போன்ற திருவடிகளை உடையவனே! செவ்வரத்த மலர்போன்று சிவந்திருக்கும் மேனியனே! நின்னால் அருள்செய்யப்பெற்ற அடியார்களும், நீயும், அவ்விடத்தே எழுந்தருளி, என்னை இவ்விடத்தே இருத்தினையே? இது நினக்கு நியாயமோ? என் பெருமானே! இவ் வீணனேனின் தீவினைக்கு ஒரு முடிவுகாலமும் இல்லையோ? ['நீ விரும்பி நோக்கவும், வஞ்சனேன் வருந்தி மாண்டிலேன். நின் அன்பரும் நீயும் சிவபுரத்துக்கு எழுந்தருளி, என்னை இங்கேயே இருத்தியதும் முறையோ? என் தீவினைதானோ?' என்பது கருத்து.]*

**இல்லை நின்கழற் கன்ப தென்கணே**
**ஏலம் ஏலுநற் குழலி பங்கனே**
**கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்**
**டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்**
**எல்லை யில்லைநின் கருணை யெம்பிரான்**
**ஏது கொண்டுநான் ஏது செய்யினும்**
**வல்லை யேயெனக் கின்னும் உன்கழல்**
**காட்டி மீட்கவும் மறுவில் வானனே. 94**

*குற்றமற்ற வானகத்தில் உள்ளவனே! நின் கழல்கட்கு அன்பென்பதும் என்னிடத்தில் இல்லை. மயிர்ச்சாந்து அணிந்த அழகிய கூந்தலை உடையவளான உமாதேவியினை ஒருபாகமாகக் கொண்டிருப்பவனே! கல்லை மெல்லிதாகக் கனியச் செய்கிற வித்தையினைக் கைக்கொண்டனை! என்னையும் நெகிழ்வித்தனை! நின்னடிக்கு அன்பனாகவும் ஆக்கினை! எம் பெருமானே! நின் கருணைக்கு ஓர் அளவென்பதும் இல்லை! நான் எத் தவறுகளைச் செய்தாலும், இன்னமும் அடியேனுக்கு நின் திருவடிகளைக் காட்டி, என்னை மீட்கவும் சக்தியுடையவன் நீயே யாவாய்! ஆகவே, என்னைக் கைவிட்டுவிடாது காத்தருள்வாயாக! ['கல்லைக் குழைவித்துக் கனியச் செய்கின்ற வித்தையினைப்போல, என்னுடைய கன் மனத்தையும் நெகிழச் செய்து நின்னடிக்குத் தொண்டனாக்கினை. அதற்கு ஏற்ப ஒழுகாது புறம்போயினும், என்னைப் பொறுத்து, மீளவும் வந்து ஆட்கொள்வாயாக' என்பது கருத்து. கல்லைக் கனியச் செய்தது, மேருவை வில்லாக வளைத்தது.]*

வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி லீறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நான்உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே. 95

*வானகத்து நாட்டினரான தேவர்களாலும் அறிய வொண்ணாதவன் நீ! வேதங்களின் முடிந்த பொருளானதும் தொடர்வதற்கு ஒண்ணாத நுண்மையன் நீ! பிற புவனங்களில் உள்ளவர்களும் தெரிந்துகொள்வதற்கு ஒண்ணாத சிறப்பினன் நீ! இருந்தும், அடியேனை நீயே இனிதாக எழுந்தருளி வந்து ஆட்கொண்டருளினை! இந்த ஊனுடம்பைப் புளகங் கொண்டு கூத்தாடச் செய்தனை! என் மனத்தை உருக்கி நின்னுடைய சிவப்பேரின்பத்தை நுகருமாறும் செய்தனை! உலகப் பற்றுக்கள் என்னிடத்து நின்றும் நீங்கிப்போகுமாறு ஞானக் கூத்தும் ஆடுவித்தனை! இவை எல்லாம் எளியேனுக்கு உலக விச்சைகள் ஒழிந்துபோமாறு நீ கொண்ட கருணையினாற் செய்ததே யாகும். ['தேவரும் பிறரும் அறியவொண்ணாத நீ என்னை ஆட்கொண்டது, என்னைக் கடைத்தேற்றக் கருதிய நின் கருணைப் பெருக்கினாலேயாகும்' என்பது கருத்து.]*

விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனையுன் கோயில் வாயிலிற்
பிச்ச னாக்கினாய் பெரிய அன்பருக்
குரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமர மாயி னுங்கொலார்
நானும் அங்ஙனே உடைய நாதனே. 96

*விண்ணுலகங்களையும், மண்ணுலகம் முழுவதையும், மற்றுமுள்ள புவனபோகங்களையும் அவற்றுக்கொரு வித்தென்பதும் இல்லாதேயே நீ தோற்றுவிப்பாய்; அவற்றைக்காத்து அழிக்கவும் செய்வாய்! அத்தகைய நீ, வஞ்சத்தையுடைய பெரும் புலையனாகிய என்னை நின்னுடைய கோயிலின் வாயிலினிடத்தேயே சுற்றிக் கொண்டிருக்கும் பித்தனாக்கினை! பேரன்பினரான நின் அடியவர்கட்கு உரியவனாகவும் ஆக்கினாய்! தாம் வளர்த்தது ஒப்பற்ற பெரிய நச்சுமரமே ஆயினும், உலகத்தார் அதனை அழிக்கமாட்டார்கள். என்னை அடிமையாகவுடைய*

நாதனே! அத் தன்மையேனாகிய என்னை நீயும் பேணாது அழித்துவிடாதே. ['அனைத்தையும் தோற்றுவித்தவன் நீயன்றோ? அத்தகைய நின்னருளால் தோன்றிய யான் சிறுமை உடையவனேனும், என்னை அதனைக் காட்டி அழித்துவிடாது காத்தருள்வாயாக' என்பது கருத்து. வளர்த்த மரம் நச்சு மரமாயினும் வெட்டாது விடுகின்ற உலகினரைப்போல, நச்சுத் தன்மை கொண்ட பாசங்களினாலே நிறைந்திருக்கும் என்னையும் அழித்துவிடாது பேணுவாயாக' என்கின்றனர்.]

உடைய நாதனே போற்றி நின்னலால்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
உடைய னேபணி போற்றி உம்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினுங்
கடைய னாயினேன் போற்றி என்பெருங்
கருணை யாளனே போற்றி யென்னைநின்
அடிய னாக்கினாய் போற்றி ஆதியும்
அந்த மாயினாய் போற்றி யப்பனே. 97

என்னை ஆளாகவுடைய தலைவனே. நின்னைப் போற்றுகின்றேன்! நின்னையல்லாமல், பற்றிக் கொள்வதற்கான பற்றாக எனக்கு ஆவதெனப் பிறிதொன்றினையும் இனி யான் உடையேனோ? இருப்பின், அதனைப் பணித்தருள்க. வானவர்களது மேலோனே! நின்னைப் போற்றுகின்றேன்! எனக்குப் பெருங் கருணை காட்டியவனே, நின்னைப் போற்றுகின்றேன்! என்னை அடியனாக்கிய நின்னைப் போற்றுகின்றேன்! அனைத்துக்கும் ஆதியும் அந்தமும் ஆகிய, நின்னைப் போற்றுகின்றேன்! அப்பனே, நின்னைப் போற்றுகின்றேன். ['நின்னையன்றி எனக்கொரு பற்றில்லை. அதனால், நீயே எனக்கு அருள்தல் வேண்டும்' என்பது கருத்து.]

அப்ப னேயெனக் கமுத னேஆ
னந்த னேஅகம் நெகஅள் ளூறுதேன்
ஒப்ப னேஉனக் குரிய அன்பரில்
உரிய னாயுனைப் பருக நின்றதோர்
துப்ப னேசுடர் முடிய னே துணை
யாள னேதொழும் பாள ரெய்ப்பினில்
வைப்ப னேயெனை வைப்ப தோசொலாய்
நைய வையகத் தெங்கள் மன்னனே. 98

எனக்கு அப்பனே! அமுதனே! ஆனந்தனே! மனம் நெகிழும்படியாக நெருங்கிச் சுரக்கின்ற தேன் போன்றவனே! நினக்குரிய அன்பருள், யானும் உரிமை உடையவனாய் நின்னை நுகருமாறு நின்றதாகிய ஓர் அறிவுருவனே! சுடர்கின்ற திரு

முடியினை உடையவனே! துணையாக நின்று உதவுபவனே! தொண்டர்களுக்கு இளைப்பிடத்துப் பயன்படும் வைப்பு நிதியினைப் போன்றவனே! எங்கள் வேந்தனே! வருந்தும்படியாக என்னை உலகத்தில் வைப்பது நினக்கு நீதியோ? சொல்வாயாக! ['இறைவனே! என்னை இனியும் இவ்வுலகிடை வாழும் படியாக வைத்து வருத்துவது நினக்குத் தகுதியுடைய செயலாகுமோ!' என்பது கருத்து.]

மன்ன எம்பிரான் வருக என்னெனை
மாலும் நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன எம்பிரான் வருக என்னெனை
முழுதும் யாவையும் இறுதி யுற்றநாள்
பின்ன எம்பிரான் வருக என்னெனைப்
பெய்க ழற்கண்அன் பாயென் நாவினாற்
பன்ன எம்பிரான் வருக என்னெனைப்
பாவ நாசநின் சீர்கள் பாடவே. 99

எம்பெருமானே! என்னை, 'நிலைபெறுமாறு என்பால் வருக' என்று அழைத்தனே. திருமாலினும், நான்முகனினும், மற்றும் யாவரினும் முற்பட்டவனே! எம்பெருமானே!' என்னையும் நீ வருகவென்று அழைப்பாயாக! அனைத்தும் இறுதியடைந்த அந்தக்காலத்தில் அவற்றுடன் ஒடுங்காது அவற்றுக்குப் பிற்பட்டும் விளங்குபவனே! எம் பிரானே! என்னை வருகவென்பாயாக. பாவநாசனே! நின் வீரக்கழல் அணிந்த திருவடிகட்கு அன்புடையேனாய், என் நாவினால் நின்னைப் புகழவும், நின் பெருமைகளைப் புகழ்ந்து பாடவும் வருகவென்று, நின்பாற்சேர்தற்கு என்னையும் அழைப்பாயாக. ['எம் பெருமானே! நின்னைப் புகழ்ந்து பாடுதற்கு வருக வென்று எனக்கு அருளிச் செய்க' என்பது கருத்து.]

பாட வேண்டு(ம்)நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டு(ம்)நான் போற்றி அம்பலத்
தாடும் நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டு(ம்)நான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டு(ம்)நான் போற்றி வீடுதந்
தருளு போற்றி நின்மெய்யர் மெய்யனே. 100

'நின்னுடைய மெய்யன்பர்க்கு மெய்யானவனே! நின்னையே யான் பாடுதல் வேண்டும். நின்னையே பாடிப்பாடி நைந்து நைந்து உருகி, நெகிழ்ந்து நெகிழ்ந்து ஆடுதல் வேண்டும். நாயினேனாகிய நான் நின்னைப் போற்றுகின்றேன்!

அம்பலத்தில் ஆடுகின்ற நின் திருவடிக் கமலங்களை யான் சேர்தல் வேண்டும். இந்தப் புழுக்கூடாகிய உடம்பினை நீக்குதல் வேண்டும்' என, நின்னைப் போற்றுகின்றேன். 'பொய்கள் எல்லாவற்றையும் விட்டுவிடுவதற்கு, அருள்க'வென்று நின்னைப் போற்றுகின்றேன். 'வீடு தந்து அருள்க' என்று நின்னைப்போற்றுகின்றேன். ['இறைவனே! நின்னைப் போற்றவும், உலகப் பற்றை ஒழித்து நின்னடி சேரவும் எனக்கு அருள்வாயாக' என்பது கருத்து.]

# 6. நீத்தல் விண்ணப்பம்

## பிரபஞ்ச வைராக்கியம்

(கட்டளைக் கலித்துறை)

*[திருவுத்தரகோச மங்கையில் அருளிச் செய்யப்பட்டது இது. 'பெருமானே! என்னைக் கைவிடாது தாங்கிக் கொள்க' என வேண்டுகின்ற மரபிலே அமைந்தது.]*

**கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட**
**விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின்தோல்**
**உடையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**சடையவ னேதளர்ந் தேன்எம்பி ரான்என்னைத் தாங்கிக்கொள்ளே**

*நின் பெருங் கருணையினாலே, கடையவனாகிய என்னையும், நீயாகவே வலிய வந்தடைந்து நினக்கு அடிமைகொண்டு அருளிச் செய்த இடபவாகனனே! என்னைக் கைவிட்டு விடுகின்றாயோ? வலிமையுடைய புலியினைக் கொன்று, அதன் தோலினை உடுத்திருப்பவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! சடா மகுடத்தை உடையவனே! அடியனேன், பிறவித் துயரிடைப்பட்டுத் தளர்ந்து போய் விட்டேன். எம் பெருமானே! என்னைத் தாங்கிக் கொள் வாயாக! ['வலியவந்து என்னைத் தடுத்தாட் கொள்ளத் திருவுளங்கொண்ட நீ, என்னுடைய சிறுமையினைக் கண்டு என்னைக் கைவிட நினைந்தாயோ ? நீ கைவிட்டால் தளர்ந்த என்னைத் தாங்குவார் யார் ? நீதான் என்னைத் தாங்கிக் காத்தருளல் வேண்டும்'' என்பது கருத்து. 'விட்டிடுதி' என்பதற்குப், பாசத்தினின்றும் என்னை 'நீக்கியருள்க' எனப் பொருள் கொள்வர் சிலர். 'நின் கருணைக்கு உரியனல்லேன் எனினும், என் சிறுமை நோக்காது, நின் பெருந்தகைமையை நோக்கி என்னைக் கைவிடாது காத்தருளல் வேண்டும்' என்கின்றனர்.]*

**கொள்ளேர் பிளவக லாத்தடங் கொங்கையர் கொவ்வைச்**
**[செவ்வாய்**
**விள்ளேன் எனினும் விடுதிகண் டாய்நின் விழுத்தொழும்பின்**
**உள்ளேன் புறமல்லேன் உத்தர கோசமங் கைக்கரசே**
**கள்ளேன் ஒழியவுங் கண்டுகொண் டாண்ட தெக்**
**[காரணமே. 2**

'உத்தரகோச மங்கை' என்னும் பதிக்குரிய மன்னவனே! எழுச்சி கொண்டவும், அழகியவும், பிளவற்று அகலாது நெருங்கியிருப்பவும் ஆகிய, பெருத்த கொங்கைகளையுடைய மாதர்களின், கொவ்வைக்கனிபோன்ற சிவந்த வாயிதழ்களை விரும்பும் விருப்பத்தைவிட்டு நான் நீங்கினேனில்லை. எனினும், நினது மேன்மையான திருத்தொண்டினுக்கும் உட்பட்டவன் ஆயினேன். அதற்குப் புறம்பாக நிற்பேனும் அல்லன். கள்வனாகிய யான் நின்னைவிட்டு நீங்கவும், அதனைக் கண்டு கொண்ட பின்னரும், நீ எழுந்தருளி வந்து என்னை ஆட்கொண்டதுதான் எந்தக் காரணத்தினாலோ? ['யான் மாதர்மயக்கிடைச் சிக்கி உழன்றேனாயினும், என்னைக் கைவிட்டு விடாது காத்தருள்க' என்பது கருத்து. 'கொள் ஏர் பிளவு அகலாத் தடம் கொங்கையர்'—கொள்ளின் அழகிய பிளவளவுக்கும் தம்மிடையில் நீங்கியிராத, மலை போன்று பருத்த கொங்கைகளையுடைய மாதர்' எனவும், கொள்வர்.]

காருறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண் டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க என்னை வளர்ப்பவனே. 3

புகழ்விளங்கும் திருவாரூரில் கோயில் கொண்டிருப்பவனே! கச்சினைப் பொருந்தியவும், பூண் பூண்டவுமாகிய தனங்களையுடைய உமாதேவியினை, ஒரு பாகமாகக் கொண்டிருப்பவனே! என்னைப் பேணி வளர்ப்பவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! கருமைமிகுந்த கண்களையுடைய மாதரது, ஐம்புல இன்பங்கள் என்கின்ற ஆற்றங் கரையிடத்து மரமாகி, வேரூன்றி நிற்கின்ற என்னை அப்படியே விட்டு விடுகின்றாயோ? ['மாதினை ஒருபாகமாகவே கொண்டிருக்கும் நீ, மாதர் மயக்கிடைச்சிக்கி அறிவழிந்து நின்றேன் என நினைந்து, என்னைக் கைவிட்டு விடாதே' என்பதுகருத்து. 'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிகின்ற ஐம்புல இன்பங்களும் மாதரிடத்துப் பெறலாகும்' என்று திருக்குறள் கூறுவதனையே, 'ஐம்புலன்' என்பதும் குறிக்கின்றது. அருள் சக்தியாகிய அம்மையுடன் கூடியே ஆண்டவன் உயிர்கட்குக் கருணைபாலிப்பான் என்பதனை விளக்குவார், 'வார்உறு பூண் முலையாள் பங்க என்றனர்.]

வளர்கின்ற நின்கரு ணைக்கையில் வாங்கவும் நீங்கியிப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதி கண்டாய்வெண் மதிக்கொழுந்தொன்
றொளிர்கின்ற நீள்முடி உத்தர கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னுமின் னும்அன்ன தோற்றச் செழுஞ்சுடரே.

*வெண்மையான இளம்பிறை யொன்று விளங்குகின்ற, நீண்ட சடைமுடியினை உடையவனே! திருவுத்தரகோச மங்கைக்கு அரசனே! தெளியாநின்ற பொன்னையும் மின்னையும் ஒத்தாற்போன்று, ஒளிவிளங்கும் செழுஞ்சோதியே! வளர்கின்ற நின் அருட்கரத்தால், என்னை நீ வளைத்துக் கொள்ள முயலவும், அதற்குள் அகப்படாமல் விலகி, இவ்வுலகப் பற்றிலேயே மிளிர்கின்றவனாகிய என்னை, அப்படியே விட்டுவிடுகின்றாயோ? ['நின் பெருங்கருணை என்னைத் தடுத்தாட் கொள்ள முயலவும், அதன் பிடிக்கு நழுவி அகன்றேன். இப் பொய்யான உலகிடை உழலா நிற்கவும் முயன்றேன். என்னை அழியவிடாது காத்தருள்க' என்பது கருத்து. இறைவனின் கருணைச் செவ்வியானது நாளும் பெருகி வருதலான சிறப்பினை உடையது; ஆதலால், வளர்கின்ற கருணை' என்றனர். 'தெளிகின்ற பொன்னும் மின்னும்என்பதில், பொன்னைத் திருமேனி வண்ணத்திற்கும், மின்னை வீழ்சடை வண்ணத்திற்கும் உவமையாகக் கொள்க.]*

செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி யாரிற்பன்னாள்
விழுகின்ற என்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி உத்தர கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு தூட்ட மறுத்தனனே. 5

*வண்டுகள் கிண்டுகின்ற மணம் பொருந்திய மலரினைத் தரித்த திருமுடியினை உடையவனே! உத்தரகோச மங்கைக்கு அரசனே! கருணைகாட்டி ஆட்கொள்ளுதலாகிய நின்னுடைய நெறியிலே நின்று, நின்னுடைய அருளாகிய அமுதத்தை, நீயே வலியவந்து உண்பிக்கவும், யான் அதனை உண்ண மறுத்து நின்றேனே! செழிக்கின்ற நெருப்பினிடத்தே சென்று வீழ்கின்ற விட்டிலைப்போன்று, சின்மொழியாராகிய மாதரது மயக்கத்திற் பலநாளும் வீழா நின்றேனாகிய என்னை, அப்படியே அழியுமாறு நீயும் விட்டுவிடுகின்றாயோ? ['நெருப்பிடைத் தானே புகுந்து அழிகின்ற விட்டிலைப்போல, மாதர்மயக்கிடைச் சிக்கி அழிகின்ற என்னைக் கைவிட்டு விடாதே, அருள்வாயாக' என்பது கருத்து. சின்மொழி-நிரம்பாத மழலை. பேரின்பத்திற்கு மாறாகச் சிற்றின்பத்தைத் தருகின்ற பேச்சும் ஆம். 'அமுதூட்டவும் மறுத்தேனே!' என்றது, தம்முடைய தீவினை வலியினை நினைந்து நொந்தது. வெறிவாய்—தேன்தேரும் வாயும் ஆம். அறுகால் - வண்டு.]*

மறுத்தனன் யானுன் அருளறி யாமையில் என்மணியே
வெறுத்தெனை நீவிட் டிடுதிகண் டாய்வினை யின்தொகுதி
ஒறுத்தெனை ஆண்டுகொள் உத்தர கோசமங் கைக்கரசே
பொறுப்பரன் றேபெரி யோர்சிறு நாய்கள்தம் பொய்யினையே. 6

*உத்தரகோச மங்கைக்கு அரசனே! பெரியவர்கள் சிறுமைக்குணமுடைய நாய்போல்பவரது பொய்ச்செயல் களைப்பொறுத்துக்கொள்வார் அல்லவோ? யான், நின்னுடைய திருவருளின் சிறப்பினை அறியாமையினாலே, அன்று நீ அமுதூட்டியபோதும் அதனை உண்ண மறுத்தேன். என் மாணிக்கமே! அதற்காக நீயும் என்னை வெறுத்துக் கைவிட்டு விடுகின்றாயோ? அங்ஙனம் கைவிடாது, என் வினைத்தொகுதியை அழித்து, என்னை ஆட்கொண்டு நீ அருளுதல் வேண்டும். ['சிறியோர் பிழைகளைப் பொறுத்தருளும் பெரியோர் செயல்போல, என்னையும் பொறுத்து நீ ஆட்கொள்ளல் வேண்டும்' என்பது கருத்து. அறியாமை—அஞ்ஞானம். வினைக்கு ஒரு வரையறை இல்லை' என்பவர், 'வினையின் தொகுதி' என்றனர். ஒறுத்தல் - அழித்தல்.]*

பொய்யவ னேனைப் பொருளென ஆண்டொன்று பொத்திக் [கொண்ட
மெய்யவ னேவிட் டிடுதிகண் டாய்விட முண்மிடற்று
மையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
செய்யவ னேசிவ னேசிறி யேன்பவந் தீர்ப்பவனே. 7

*பொய்யனாகிய என்னையும் ஒரு பொருளாகக் கருதிவந்து ஆட்கொண்டருளி, அவ்விடத்தும், முத்தியாகிய ஒரு பொருளை என்னினின்றும் மறைத்துக்கொண்ட மெய்யனே! அதனை எனக்குக் காட்டாதேயே விட்டு விடுகின்றனையோ! நஞ்சினை உண்டு, அதனால் கழுத்திடத்துக் கருமையினை வரப் பெற்றவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! செம்மையாளனே! சிவனே! சிறியேனாகிய எனது பாவங்களை தீர்த்தருள்கின்றவனே! ['என் பவந்தீர்ப்பவனாகிய நீ, எனக்கு முத்தியினைத் தந்து என்னை வாழ்விக்க வேண்டும்' என்பது கருத்து. 'ஒன்று' என்றது, முத்தியாகிய வீட்டுலகினை.]*

தீர்க்கின்ற வாறென் பிழையைநின் சீரருள் என்கொலென்று
வேர்க்கின்ற என்னை விடுதிகண் டாய்விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை உத்தர கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற அஞ்சொடச் சம்வினை யேனை இருதலையே. 8

*என்னுடைய குற்றங்களை, நின்னுடைய சிறந்த திருவருளானது வந்து தீர்க்கின்றதற்குரிய வகைதான் யாதோ வென்று, உள்ளம் புழுங்கியிருக்கின்ற என்னை, அப்படியே*

கைவிட்டு விடுகின்றாயோ? பகைவர்கள் அஞ்சுமாறு ஒலி முழங்குகின்ற, கிண்கிணி மாலையினை அணிந்த இடபத்தை உடையவனே! உத்தரகோச மங்கைக்கு அரசனே! ஐம்புல ஆசைகளோடு, அதற்கு மாறாகிய அச்சமும் சேர்ந்து கொண்டு, தீவினையாளனாகிய என்னை 'இருபுறத்தும் நின்று பற்றி இழுக்கின்றனவே! ['ஐம்புல இச்சைகள் ஒருபுறமும், அவற்றை வெறுத்தல் வேண்டுமென்கிற ஆர்வம் மற்றொரு புறமாக நின்று இழுக்க, இடைக்கண்பட்டுத் துயருறும் என்னைக் கைவிடாது காத்தருள்வாயாக' என்பது கருத்து. விரவார்- கலவாதவர்; பகைவர். அஞ்சொடச்சம் ஈர்க்கின்ற தற்குக் காரணம் வினையென்பார், வினையேனை' என்றனர்; அதனை ஒழித்து ஆட்கொள்ளுமாறும் இறைவனை வேண்டினர்.]

**இருதலைக் கொள்ளியின் உள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த**
**விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்**
**கொருதலை வாமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**பொருதலை மூவிலை வேல்வலன் ஏந்திப் பொலிபவனே. 9**

பெருமை பொருந்திய மூவுலகங்களுக்கும் ஒப்பற்ற தலைவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! போரிடும் தலையினையுடைய மூன்றிலை வடிவமான வேற்படையினை நின் வலக்கையிலே தாங்கியவாறு விளங்குபவனே! இருபுறத்தும் எரிந்துகொண்டிருக்கும் கொள்ளிக்கட்டையின், உள்ளிடத்தே அகப்பட்டுக் கொண்டுள்ள எறும்பினைப் போலத் துயருற்று, நின்னை அகன்று போயின விரிதலையேனாகிய என்னையும் கைவிட்டு விடுவாயோ? ['உலகபாசத்தை முற்றவும் ஒழித்தற்கான உறுதியற்ற என்னையும், அருள் செய்து காத்தருள்க' என்பது கருத்து. 'விரிதலை' அலங்கோல நிலையினைக் குறிப்பது. 'முத்தலைவேல்' என்றது, சூலப் படையினை.]

**பொலிகின்ற நின்தாள் புகுதப்பெற் றாக்கையைப் போக்கப்**
**மெலிகின்ற என்னை விடுதிகண் டாய்அளி தேர்விளரி [பெற்று**
**ஒலிநின்ற பூம்பொழில் உத்தர கோசமங் கைக்கரசே**
**வலிநின்ற திண்சிலை யாலெரித் தாய்புரம் மாறுபட்டே. 10**

வண்டுகள் தேர்ந்து முரலுகின்ற விளரிப்பண்ணின் ஒலியானது நிலைபெற்றிருக்கின்ற, பூம்பொழில்கள் சூழ்ந்த உத்தரகோச மங்கைக்கு அரசனே! வலிமைநிலைபெற்ற திண்மையான வில்லினாலே முப்புரங்களையும் பகைத்து நீறு செய்தவனே! விளங்குகின்ற நின் திருவடிகளில் சரண் அடைதலாகிய வாய்ப்பினைப் பெற்றும், அதனால் தெளிவுறாது,

உடலினை அதனுடைய சுபாவத்திலேயே செல்லவிடுகின்ற பொய்த்தன்மையினைப் பெற்றவனாகி, அடியேன் பெரிதும் தளர்கின்றேன். அங்ஙனம் தளர்கின்ற என்னையும் நீ பேணாது கைவிட்டு விடுகின்றாயோ? ['முப்புரத்தையும் பகைத்து நீறு செய்த ஆற்றலாளனாகிய நினக்கு, என்னைப்பற்றி வருத்தும் உடலிச்சைகளாகிற மாயைகளைப் பொடிசெய்து என்னைக் காத்தல் எளிதல்லவோ? அவ்வாறே செய்து என்னைக் காத்தருளாது, கைவிட்டு விடாதே!' என்பது கருத்து. முப்புரம் எரித்தவன் மும்மலங்களையும் அழித்துத் துணைசெய்தல் எளிது என்றனர். 'போக்க' என்றது, வீணேகழியச்செய்தல் என்பதாம்.]

மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யானுன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண் டாய்வினை யேன்மனத்தே
ஊறுமட் டேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன் மேனி நெடுந்தகையே. 11

பஞ்சேந்திரியங்களும் என்மேற் பகைகொண்டு என்னை வஞ்சித்ததனால், நினது அழகிய மலரடிகளுக்கு முற்றவும் ஆட்படாது யானும் அன்று மாறுபட்டு நின்றேன். அத்தகைய என்னையும் கைவிட்டு விடுவாயோ? தீவினையேனின் மனத்திலே சுரக்கின்ற தேனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! திருவெண்ணீறு அணியப்பெற்று ஒளிசெய்கின்ற பொன்மேனியினை உடைய பெருந்தகையே! அங்ஙனம் விடாது, என்னையும் காத்தருள்வாயாக! ['பஞ்சேந்திரியங்கள் வஞ்சித்ததனால் நின்னைப் பிரிந்தேன்; அவற்றை வென்று நின்னடியிணைகளை முற்றவும் அடைந்திருக்க எனக்கு அருள்வாயாக' என்பது கருத்து. வஞ்சித்தல்-இன்பமாகக் காட்டித் துயரத்துள் செலுத்துதல்.]

நெடுந்தகை நீயென்னை ஆட்கொள்ள யான்ஐம் புலன்கள்கொ
விடுந்தகை யேனை விடுதிகண் டாய்விர வார்வெருவ [ண்டு
அடுந்தகை வேல்வல்ல உத்தர கோசமங் கைக்கரசே
கடுந்தகை யேன்உண்ணுந் தெண்ணீர் அமுதப் பெருங்கடலே. 12

பெருந்தகையாகிய நீயே என்னை வந்து அடிமைகொள்ள வந்த அந்த நேரத்தில், ஐம்புல இச்சைகளையும் பற்றிக் கொண்டு, நின்னைவிட்டு நீங்கினேனானேன். அத்தகையனாகிய என்னை நீயும் விட்டுவிடப் போகின்றாயோ? பகைவர்கள் அஞ்சுமாறு அவர்களைக் கொன்று ஒழிக்கின்ற தகைமையினையுடைய, வேற்போரில் வல்லவனே! உத்தரகோச மங்கைக்கு அரசனே! கடுங் குணத்தினேனாகிய யான் உண்ணுகின்ற, தெளிவான நீர்மையமைந்த, பெரிதான அமுதக்கடலே!

['பெருந்தகையே! வேல்வல்ல நீயும் எனக்குத் துணைநின்று, என் புலன்களை வென்று, நின்னடி சேர்தற்கு உதவாயோ?' என்பது கருத்து. கடுந் தகையேன் – தீக்குணத்தினேன்; தீக்குணமாவது, தீயவைகளை நாடிச்செல்லுகின்ற மயக்கம்.]

**கடலினுள் நாய்நக்கி யாங்குன் கருணைக் கடலினுள்ளம்**
**விடலரி யேனை விடுதிகண் டாய்விட லில்லடியார்**
**உடலில மேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**மடலின்மட் டேமணி யேஅமு தேயென் மதுவெள்ளமே. 13**

*கடலினுள் நாயானது நக்கிநிற்கும் அந்தத் தன்மையினைப் போல, நின்னுடைய கருணைப்பெருங்கடலினிடத்தே உள்ளம் பற்றுதலைக் கைவிடுவதற்கு அரியவனாகிய என்னையும், நீ கைவிடுகின்றாயோ? விடுதற்குரியவரல்லாத அடியவர்களது உடலாகிய வீட்டினிடத்தே நிலைபெற்று இருக்கின்றவனே! உத்தரகோச மங்கைக்கு அரசனே! பூவிதழ்த் தேனே! மாணிக்கமே! அமுதமே! எனக்குரிய மதுவெள்ளமே! ['இறைவனே! நாய் கடலை நக்கியதுபோல, அன்று, நின் திருவருளில் முற்றவும் திளையாது யான் மயங்கி நின்றேன்; என் அறியாமையினைப் போக்கி அருளிச்செய்யாது என்னைக் கைவிட்டு விடுவாயோ?' என்பது கருத்து.]*

**வெள்ளத்துள் நாவற்றி யாங்குன் அருள்பெற்றுத் துன்பத்**
**தின்றும்**
**விள்ளக்கி லேனை விடுதிகண் டாய்விரும் பும்அடியார்**
**உள்ளத்துள் ளாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**கள்ளத்து ளேற்கரு ளாய்களி யாத களியெனக்கே. 14**

*நீர்ப் பெருக்கினுள்ளே நின்றும் நாவறட்சியால் ஒருவன் மயங்கினாற்போல, நின் திருவருளைப் பெற்றும் துன்பத்தினின்றும் நீங்குதற்கு அறியாது மயங்கிநின்ற என்னையும் கைவிட்டுவிடுவாயோ? விரும்புகின்ற அடியவர்களது உள்ளத்துள் உள்ளவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! கள்ளத்தனமான வழியிலே இருப்பவனாகிய எனக்கு யான் இதுவரை உண்டு களித்தறியாத பேரின்பமாகிய களிப்பினை அருளிச் செய்வாயாக! ['நின் அருளினைப் பெற்றும் அதனில் திளையாது, உலக பாசங்களிலே மனத்தைச் செல்லவிட்டு உழன்றேன்; என்னையும் பொறுத்தருளி, எனக்கும் நின் பேரின்பமாகிய அமுதினைத் தருவாயாக' என்பது கருத்து.]*

**களிவந்த சிந்தையொ டுன்கழல் கண்டுங் கலந்தருள**
**வெளிவந்தி லேனை விடுதிகண் டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்**
**ஒளிவந்த பூங்கழல் உத்தர கோசமங் கைக்கரசே**
**எளிவந்த எந்தைபி ரான்என்னை ஆளுடை என்னப்பனே. 15**

*களிப்புப் பொருந்திய மனத்தோடு நின் திருவடிகளைக் காணப்பெற்றேன். கண்டும், அவற்றிலே முற்றவும் கலந்து விட வெளிவராத என்னையும் கைவிட்டுவிடாதே. உண்மை யான சோதிப்பொருள்களுக்கு எல்லாம் ஒளியினுற் சிறந்த தாகி விளங்கும் அடியிணைகளை உடையவனே! உத்தரகோச மங்கைக்கு அரசனே! காணற்கு எளிதாகுமாறு எழுந்தருளி வந்த, எந்தையாகிய பெருமானே! என்னை அடிமையாக வுடைய என் அப்பனே! ['நின் ஒளிமிக்க திருவடிகளைக் கண்டும், ஒளியுற்று வெளிப்படாதவாறு அஞ்ஞானவிருளிலே மூழ்கிக்கிடந்த என்னையும் கடைத்தேற்றுயோ?' என்பது கருத்து. 'மெய்ச்சுடர்' என்றது, ஞாயிறு திங்கள் தீயாகிய முச்சுடர்களையும்.]*

என்னைஅப் பாஅஞ்சல் என்பவர் இன்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண் டாயுவ மிக்கின்மெய்யே
உன்னையொப் பாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
அன்னையொப் பாய்எனக் கத்தனொப் பாய்என் அரும்பொருளே. 16

*என்னை, 'அப்பா! நீ அஞ்சுதல் வேண்டா' எனக்கூறித் தேற்றுபவராக எவருமில்லாதபடி வருந்தி நின்று, மெலிவுற்று, அத்தகையவரைத் தேடியலைந்தேன். மின்னினை ஒப்பவனே! என்னைக் கைவிட்டு விடுவாயோ? உவமிக்க நினைந்தால், நின்னை நீயே மெய்யாக ஒப்புமை உடையை ஆவாய்! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! எனக்குத் தாயினைப் போன்றவனே! என் தந்தையினைப் போன்றவனே! எனக்குப் பெறுதற்கு அரிதான அரும்பொருளே! ['ஆதரவற்று மெலிந் திருந்த எனக்கு அருள்செய்ய நீயே முற்பட்டுவந்தும், யான் அன்று தெளிந்தேனில்லையே! அரும் பொருளே! வேறோர் ஆதரவும் எனக்கில்லையே! அதனல், நீயே என்னைக் காத்து அருளல் வேண்டும்' என்பது கருத்து.]*

பொருளே தமியேன் புகலிட மேநின் புகழிகழ்வார்
வெருளே யெனைவிட் டிடுதிகண் டாய்மெய்ம்மை யார்விழுங்கும்
அருளே அணிபொழில் உத்தர கோசமங் கைக்கரசே
இருளே வெளியே இகபர மாகி இருந்தவனே. 17

*மெய்யான பொருளே! தமியேனுக்குப் புகலிடமாக விளங்குபவனே! நின் புகழினை இகழ்பவர்க்கு அச்சம் விளை விக்கும் தன்மையனே! என்னைக் கைவிட்டு விடாதே! மெய் யன்பரை முற்றவும் அகப்படுத்திக் கொள்ளுகின்ற அருளே! அழகிய சோலைசூழ்ந்த உத்தரகோச மங்கைக்கு அரசனே! இருளாகவும் ஒளியாகவும் இருப்பவனே! இகமாகவும் பரமா*

கவும் அமைந்தவனே! ['எனக்கு மெய்ப்பொருளாகவும் புகலிடமாகவும் இருக்கும் நீதான் என்னைக் கைவிட்டுவிடாது காத்தருளல் வேண்டும்' என்பது கருத்து. அன்பர்க்குப் புகலிடமாகவும், ஒளியாகவும், மறுமையில் பேரின்பத்தை அளிப்பவனுகவும் இறைவன் விளங்குவான். அல்லாதவர்க்கு அச்சப் பொருளாகவும், இருளாகவும், உலகமாயையாகவும் இருப்பான். இதனையும் கூறினர்.]

**இருந்தென்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை யென்னி [னல்லால்**
**விருந்தின னேனை விடுதிகண் டாய்மிக்க நஞ்சமுதா**
**அருந்தின னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே**
**மருந்தின னேபிற விப்பிணிப் பட்டு மடங்கினர்க்கே. 18**

'அடியேனின் முன்பாக எழுந்தருளியிருந்து என்னை ஆண்டுகொள்வாயாக; என்னை விற்றுங் கொள்வாயாக; ஒற்றிவைத்துங் கொள்வாயாக' என்று சொல்வதல்லாமல், வேருென்றும் சொல்லுவதற்கு யான் அறியேன். நினக்குப் புதியவனுகிய அத்தகைய என்னைக் கைவிட்டுவிடாதே. பாற்கடலுள் எழுந்த கொடிய பெருநஞ்சினையும், அமுதமாகக் கருதி உண்டவனே! நிலைபெற்ற உத்தரகோசமங்கைக்கு அரசனே! பிறவியாகிய நோயிடத்தே சிக்கி முடங்கிக் கிடந்தவர்களுக்கு மருந்தாயிருப்பவனே! ['இறைவனே! பிறவிப் பிணிபட்டு மடங்கினர்க்கு மருந்தினனே! என்னை யாதாகிலும் செய்துகொள்; ஆனுல், கைவிடமட்டும் செய்யாதே' என்பது கருத்து. விருந்தினன்-புதியவன்.]

**மடங்கஎன் வல்வினைக் காட்டைநின் மன்னருள் தீக்கொளுவும்**
**விடங்கஎன் தன்னை விடுதிகண் டாய்என் பிறவியைவே**
**ரொடுங்களைந் தாண்டுகொள் உத்தர கோசமங் கைக்கரசே**
**கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித் தாய்வஞ்சிக்கொம்பினையே. 19**

என் வல்வினைக் காட்டை, அது அழியும்படியாக, நினது நிலைபெற்ற அருளாகிய தீயினைக் கொளுவுகின்ற அழகனே! என்னைக் கைவிட்டு விடாதே! என் பிறவியினை வேரோடும் களைந்து ஆண்டுகொள்வாயாக! உத்தரகோசமங்கைக்கு அரசனே! கொடுமையுடைய யானையான குன்றினைக் கொன்று, அதன் தோலினை உரித்துப் போர்த்து, வஞ்சிக் கொடி போன்ற அம்மையினை வெருவச் செய்தவனே! ['என் வினைக்காட்டை வேரோடும் வீழ்த்தி என்னை நற்கதியிற் சேர்ப்பாயாக' என்பது கருத்து. 'அம்மையினை அஞ்சுவித்தனன்' என்றது, அவளது மென்மைத்தன்மையினை உரைத்தற் பொருட்டாகும்.]

கொம்பரில் லாக்கொடி போல்அல மந்தனன் கோமளமே
வெம்புகின் றேனை விடுதிகண் டாய்விண்ணர் நண்ணுகில்லா
உம்பருள் ளாய்மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
அம்பர மேநில னேஅனல் காலொடப் பானவனே. 20

*இளமைச் செவ்வியினை உடையவனே! விண்ணுலகத்தவ ராகிய தேவர்களாலும் அடையப்பெறாத மேலுலகத்து உள்ளவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசனே! ஆகாயம் நிலம் தீ காற்று ஆகியவற்றோடு நீராகவும் ஆயின வனே! கொழுகொம்பு இல்லாது தவிக்கின்ற கொடியினைப் போல, யானும் அலைந்து சுழன்றேன்! வீடடைதற்கு விரும்பி வெதும்புகின்றேன்! என்னையும் கைவிட்டுவிடாதே! ['பற்றிக் கொள்ளுதற்கொரு கொம்பற்றுச் சுழன்று வெதும்பும் என்னைக் கைவிட்டுவிடாது, நீயே துணையாகிக் காத்தருள்க' என்பது கருத்து. கோமளம்-இளமைச் செவ்வி. 'உம்பர்' என்பது முத்தி உலகினை.]*

ஆனைவெம் போரிற் குறுந்தூ றெனப்புல னால்அலைப்புண்
டேனையெந் தாய்விட் டிடுதிகண் டாய்வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலை யும்அமு தத்தையும்ஒத்
தூனையும் என்பினை யும்உருக் காநின்ற ஒண்மையனே. 21

*கடுமையான யானைச்சண்டையின் இடையே அகப் பட்டுச் சிதைகின்ற சிறு தூற்றினைப்போலப், புலன்களின் ஆசைகளுக்கு இடையிலே அகப்பட்டு யானும் தவிக் கின்றேன். தீவினையினேனது உள்ளத்தில், தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்துத் தித்தித்து, எனது ஊனையும் என்பினையும் உருகச் செய்யாநின்ற ஒட்பத்தை உடையவனே! எந்தையே! என்னைக் கைவிட்டு விடாதே! ['யானைப் போரிடைச் சிக்கிய சிறுதூறு போலப் புலனாசைகளின் இடையிலே சிக்கித் துயருறும் என்னைக் கைவிடாது காத்தருள்க' என்பது கருத்து. குறுந்தூறு - சிறுசெடிப் புதர். ஒண்மை-ஒளியுடைமை; ஒட்பம் உடைமை.]*

ஒண்மைய னேதிரு நீற்றையுத் தூளித் தொளிமிளிரும்
வெண்மைய னேவிட் டிடுதிகண் டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென் றுஞ் சேயாய் பிறர்க்கறி தற்கரிதாம்
பெண்மைய னேதொன்மை ஆண்மைய னேஅலிப் பெற்றியனே. 22

*ஒட்பம் உடையவனே! திருநீற்றினைப் பூசி, அதன் ஒளி விளங்குதலாகிய வெண்மையினை உடையவனே! மெய்யான அடியவர்கட்கு அணித்தாக இருப்பவனே! அடியவரல்லாத*

*பிறருக்கு என்றும் தூரமாகவே இருப்பவனே! அறிதற்கு அரிதாகிய பெண்மை வடிவாகவும், பழைமையாகிய ஆண்மை வடிவாகவும், அலித்தன்மை கொண்ட வடிவாகவும் தோற்றுபவனே! என்னைக் கைவிட்டு விடாதே. ['ஒட்பம் முதலிய உடையவனான நீ, என்னைக் காத்தருளாது கைவிடுதல், நினக்குத் தகுதியுடையதன்று' என்பது கருத்து. உத்தூளித்து-பொடியை மேனி முற்றவும் பூசிக்கொண்டு.]*

**பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்**
**வெற்றடி யேனை விடுதிகண் டாய்விடி லோகெடுவேன்**
**மற்றடி யேன்தன்னைத் தாங்குநர் இல்லையென் வாழ்முதலே**
**உற்றடி யேன்மிகத் தேறிநின் றேனெனக் குள்ளவனே. 23**

*என் வாழ்விற்கு மூலகாரணமாக விளங்குபவனே! என் உயிருக்கு உயிராக இருப்பவனே! அடியனேன் நின்னை அடைந்து மிகவும் தெளிவுற்றும் நின்றேன்! நின்னால் தரப் பெற்றதான இந்த உடலினையே பற்றிக்கொண்டு, குற்றத் தையே மென்மேலும் பெருகச் செய்தவனாகிச், சுருக்கப்பட்ட அன்பினனாகிப், பயனற்ற அடியவனாகவும் ஆகினேன். அத்தகையவனாகிய என்னையும், ஆளாது கைவிட்டு விடாதே! நீ கைவிட்டனையாயின், யான் அழிந்தே போவேன்! என்னைத் தாங்கிக் காப்பவர் நின்னையன்றி வேறில்லை! அதனால், என்னைக் கைவிடாது காத்தருள்வாயாக! ['பெற்றதைக் கொண்டு நன்மையிற் செல்லாது, பிழை பெருக்கித் திரிந்தேனாகிய என்னையும், என்னைக் காப்பவர் பிறரின்மை யாதலைக் கருதி, நீயே இரங்கிவந்து ஆட்கொள்ளல் வேண்டும்' என்பது கருத்து.]*

**உள்ளன வேநிற்க இல்லன செய்யுமை யற்றுழனி**
**வெள்ளன லேனை விடுதிகண் டாய்வியன் மாத்தடக்கைப்**
**பொள்ளனல் வேழத் துரியாய் புலனின்கட் போதலொட்டா**
**மெள்ளனவே மொய்க்கு நெய்க்குடந் தன்னை எறும்பெனவே. 24**

*அழகிய பெரிய நீண்ட துதிக்கையினிடத்துத், தொளை யினையுடையதான யானையின் தோலினை உரித்துப் போர்த் திருப்பவனே! நெய்க்குடத்தினை எறும்புகள் மொய்த்துச் சூழ்வதுபோல ஐம்புல இச்சைகளும் என்னை மெல்லமெல்லச் சூழ்ந்துகொண்டனவாய், என் உள்ளத்தினை நின்னிடத்துச் செல்லவொட்டாமல் தடுக்கின்றன. அதனால், மெய்யா யினவை நிற்கப் பொய்யாயினவைகளையே செய்கின்ற, மயக்கமாகிய ஒலியுடைய வெள்ளப்பெருக்கிலே யானும் வீழ்ந்தேனாகினேன். நினக்கு உரியனல்லாத தன்மையனும் ஆயினேன்! என்னை நீயும் ஆட்கொள்ளாது கைவிட்டு*

விடாதே! ['மெய்யிருக்கவும் பொய்யையே செய்கின்ற அறிவிலியான என்னையும், கைவிட்டு விடாதே காத்தருள்க' என்பது கருத்து.]

எறும்பிடை நாங்கூ ழெனப்புல னாலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்வெய்ய கூற்றொடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர் வுற்றவர் உம்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய ராத பெருமையனே. 25

கொடிய யமனும் ஒடுங்கும்படியாக, அவன் மேற்சென்ற மணம்பொருந்திய நின் மலரடிகளை அறியலுற்றவர், தேவர்கட்கும் மேம்பட்ட பெரும்பதத்தினை அடைகின்ற நின் அடியவராவார்கள். நிலைபெயராத பெருமையினை உடையவனே! எறும்பினிடை அகப்பட்ட நாங்கூழ்ப் புழுவினைப் போல, ஐம்புலன்களாலும் அரிக்கப்பட்டு வருந்தின பயனற்ற தமியேனை, நீயும் கைவிட்டுவிடாதே காத்தருள் செய்வாயாக! ['நின் பாதங்களை அறிந்து நின்னடியவர் பெரும்பதம் பெற்று உய்ந்தனர். யானோ, கண்டும், அவற்றிடத்து மனம் பொருந்தாது, புலனிச்சைகளிற் சிக்கி அலைக்கழிந்தேன். அத்தகைய தீவினையாளனான என்னையும் கைவிட்டுவிடாது காத்தருள்க!' என்பது கருத்து. கடி-மணம். போது-மலர். அலத்தல்-வருந்துதல். நாங்கூழ்-நாங்கூழ்ப் புழு.]

பெருநீ ரறச்சிறு மீன்துவண் டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண் டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுள் மலைச்சிறு தோணி வடிவின்வெள்ளைக்
குருநீர் மதிபொதி யுஞ்சடை வானக் கொழுமணியே. 26

பெரிதான கங்கை நதியினிடத்துப் பெருகிவரும் நீரினையுடைய மடுவினுள்ளே விளங்கும், தலைதடுமாறுதலையுடைய சிறுதோணியினது வடிவத்தைப்போல,விளங்கும் வெண்ணிறமாகிய நீர்மையமைந்த பிறைச்சந்திரன் தவழ்கின்ற சடாபாரத்தை உடையவனே! பரமாகாயத்தினுள்ளே விளங்கும் கொழுவிய மாணிக்கமே! மிகுந்த நீரானது வற்றிப்போகச் சிறுமீன்கள் வாடிக் கிடந்தாற்போல, நின்னைவிட்டு நீங்கினதனால் அச்சமுற்று வாடிக்கிடக்கின்ற தன்மையேனாகிய என்னை, நீயும் கைவிட்டுவிடாதே! ['வெள்ளத்தைப் பிரிந்த சிறுமீனானது கிடந்து துடிப்பதுபோல, நின் அருளாகிய வெள்ளத்தைப் பிரிந்த யானும் கிடநது துடிக்கின்றேன்; என்னைக் கைவிட்டு விடாது காத்தருள்க' என்பது கருத்து.]

கொழுமணி யேர்நகை யார்கொங்கைக் குன்றிடைச் சென்று [குன்றி
விழுமடி யேனை விடுதிகண் டாய்மெய்ம் முழுதுங் கம்பித்

**தழுமடி யாரிடை யார்த்துவைத் தாட்கொண் டருளியென்னைக்**
**கழுமணி யேயின்னுங் காட்டுகண் டாய்நின் புலன்கழலே. 27**

*உடல் முழுவதும் நடுக்கமுற்றவராகி அழுது தொழுகின்ற நின் அடியார்கூட்டத்தின் நடுவிலே, என்னையும் பொருத்தி வைத்து அடிமையாக்கிக்கொண்டு அன்று அருளிச் செய்தனை! கழுவின மாணிக்கம் போன்றவனே! இன்னும் ஒருமுறை நினது ஞானசாதநமாகிய திருவடிகளை எனக்குக் காட்டி அருள்செய்வாயாக! கொழுவிய முத்தினைப் போன்ற அழகிய பற்களை உடையவராகிய மாதரது கொங்கைக் குன்றுகளிடையே சென்று, அறிவற்று வீழுகின்ற சோம்பலை உடையவனான என்னையும், கைவிட்டு விடாதே காத்தருள்வாயாக! ['இறையவனே! பேரின்பமாகிய நின் திருவடிக் காட்சியைக் கண்டும் அதன்பால் மனஞ்செலுத்தாது, மாதராசையிலே மனம் பேதலித்துத் தளர்ந்த என்னையும், கைவிட்டுவிடாது காத்தருள்வாயாக' என்பது கருத்து. 'கொழுமணி' என்றது, முத்தினை. 'குன்றி' என்றது, அறிவு வியாபகம் குன்றிப்போகின்ற நிலையினை.]*

**புலன்கள் திகைப்பிக்க யானுந் திகைத்திங்கொர் பொய்ந் [நெறிக்கே**
**விலங்குகின் றேனை விடுதிகண் டாய்விண்ணும் மண்ணு [மெல்லாம்**
**கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய் தாய்கரு ணாகரனே**
**துலங்குகின் றேனடி யேனுடை யாயென் தொழுகுலமே. 28**

*விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் ஆகிய எல்லாருமே கலங்கிநிற்க, அவர்களுக்கு இரங்கிப், பாற்கடலிற் பிறந்த நஞ்சினை அமுதமாக உண்டவனே! கருணாகரனே! என்னை அடிமையாக உடையவனாகவும், என் தொழு குலமாகவும் இருப்பவனே! அடியேன் கலங்குகின்றேன். ஐம்புலன்களும் திகைப்பினை என்பால் ஏற்படுத்த, யானும் திகிலடைந்தவனாய், இவ்வுலகிடத்தே ஒரு பொய்மையான வழியிலேயே விலகிச்செல்லுகின்றேன். என்னையும் கைவிட்டு விடாதே. [ஐம்புலன்களால் திகிலுற்று நின்னினின்றும் விலகிப்போகின்ற என்னை, அப்படியே போய்க் கழியும்படியாக விட்டுவிடாது காத்தருள்க' என்பது கருத்து. முந்நீர்-கடல். கருணாகரன்–கருணைக்கு ஆகரமாக இருப்பவன். 'தொழுகுலம்' - தொழுதற்கு உரியதான அந்தணக்குலம்; இது, இறைவன் அந்தணனாகி வந்து தம்மை அருள் பாலித்ததனை நினைந்து கூறியது.]*

குலங்களைந் தாய்களைந் தாய்என்னைக்குற்றங்கொற் றச்சிலையாம்
விலங்கலெந் தாய்விட் டிடுதிகண் டாய்பொன்னின் மின்னு
[கொன்றை
அலங்கலந் தாமரை மேனியப் பாவொப்பி லாதவனே
மலங்களைந் தாற்சுழல் வன்தயி ரிற்பொரு மத்துறவே. 29

*பொன்னினைப்போல மின்னுகின்ற கொன்றை மலர் மாலையினைத் தரித்தவனே! அழகிய செந்தாமரை மலரினைப் போல விளங்கும் திருமேனியினையுடைய எம் அப்பனே! ஒப்பில்லாதவனே! கலக்குகின்ற மத்தினிடைப் படுகின்ற தயிரினைப்போலப் பஞ்ச மலங்களினாலே யானும் கலங்கிச் சுழல்கின்றேன்! என் குலத்தினையும் போக்கினாய்! என்னைக் குற்றங்களினின்று நீக்கியும் அருளினாய்! வெற்றியுடைய வில்லாக மேருமலையினையே கைக்கொண்ட எந்தையே! என்னை, இனியும் கைவிட்டுவிடாதே! ['பஞ்சமலங்களினாலே கலக்குண்டு துயருறுகின்ற என்னைக் கைவிடாது காத்தருள்வாயாக' என்பது கருத்து. பஞ்சமலங்கள்: ஆணவம், கன்மம், மாயை, வைந்தவம், திரோதாயி. விலங்கல்-மலை; அது மேரு.]*

மத்துறு தண்தயி ரிற்புலன் தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுட னுரச்செஞ் சாந்தணி சச்சையனே. 30

*வெள்ளிய தலைமாலையினைத் தரித்துக், கொத்தாகிய கொன்றை மாலையினையும் அணிந்து, நீண்ட குடர்மாலையினையும் சுற்றிக்கொண்டு, பரவிய திருவெண்ணீற்றோடும் பொருந்தச் செஞ்சாந்தினையும் அணிந்துகொண்டு விளங்கும் இளமையுடையவனே! மத்திடைப்பட்ட குளிர்ந்த தயிரினைப் போலப், புலன்களாகிய நெருப்புப்பற்றிச் சூழக் கலக்கம் அடைந்து, கலக்கமென்பதின் விதையாகவே யானும் விளங்குகின்றேன். அத்தகைய என்னையும் கைவிட்டுவிடாதே! ['புலனாகிய தீப்பற்றி எரிக்கக் கலங்கிநிற்கின்ற என்னைக் கைவிட்டுவிடாது காத்தருள்க' என்பது கருத்து. சச்சையன்-நன்மையன்; இளமையன். கதுவல்-பற்றல்.]*

சச்சைய னேமிக்க தண்புனல் விண்கால் நிலம்நெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண் டாய்வெளி யாய்கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய னேயொண் படஅரவக்
கச்சைய னேகடந் தாய்தடந் தாள அடற்கரியே. 31

*வெண்மையனே! கரியவனே! பச்சைநிறத்தவனே! செம் மேனியனே! ஒளிவிளங்கும் படத்தை உடைய பாம்பினை*

அரைக்கச்சாக அணிந்தவனே! அகன்ற பாதங்களையுடைய வலிமிகுந்த யானையினைக் கொன்றவனே! நுட்பப்பொருளாக இருப்பவனே! மிகக்குளிர்ந்த நீரும், வானமும், காற்றும், நிலமும், நெருப்பும் ஆகிய வித்தைகளை உடையவனே! என்னைக் கைவிட்டுவிடாதே! ['வலிமிகுந்த யானையினை வென்றவனே! என்னைக் கலக்கும் மாயையினையும் வென்று என்னைக் காத்தருள்க' என்பது கருத்து. விச்சை-வித்தை.]

அடற்கரி போல்ஐம் புலன்களுக் கஞ்சி அழிந்தஎன்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண் டாய்விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்கரி யாய்சுடர் மாமணி யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு தாக்குங் கறைக்கண்டனே. 32

மேன்மையான தொண்டர்களுக்கு அல்லாமல் ஏனையோர்க்குத் தீண்டுதற்கும் அருமையானவனே! ஒளி வீசும் பெரிய மாணிக்கமே! சுடுகின்ற தீயானது சுழலா நிற்கவும், கடலின்கண் அரிதாகவே எழுந்த நஞ்சினையும் அமுதமாக ஆக்கிக்கொண்ட நீலகண்டனே! விடுதற்கு அரியவனே! வலிய யானைகளைப் போன்ற ஐம்புலன்களுக்கும் அஞ்சி, உள்ளமானது செயலழிந்து நிற்கின்ற என்னையும் கைவிட்டுவிடாதே! ['புலன்களால் பற்றப்பட்டுச் செயலழிந்த மனத்துடன் கலங்கிநிற்கும் என்னைக் கைவிடாது காத்தருள்க' என்பது கருத்து. 'சுடுதீ' என்றது, வடவைத் தீயினை.]

கண்டது செய்து கருணைமட் டுப்பரு கிக்களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண் டாய்நின் விரைமலர்த்தாள்
பண்டுதந் தாற்போற் பணித்துப் பணிசெயக் கூவித்தென்னைக்
கொண்டெனெந் தாய்களை யாய்களை யாய குதுகுதுப்பே. 33

என் தந்தையே! மனம்போனவாறு கண்டதை எல்லாம் செய்து, நின் கருணையாகிய தேனைப் பருகிக் களித்து மதர்த்துத் திரிகின்றேன்; என்னைக் கைவிட்டுவிடாதே! நினது மணம்நிறைந்த மலரடிகளை முன்னே தந்தருளினாற் போலவே, மீண்டும் எனக்குத் தந்தருளி, நினக்குப் பணி செய்யுமாறு என்னைக் கூவியழைத்து, நின் அடியவனாகவும் ஏற்றுக்கொண்டு, அயர்வாகிய என் வெதுவெதுப்பையும் களைந்தருள்வாயாக! ['நின்னை முன்னர்க் கண்டதற்குச் செருக்கித் திரியும் என்னைக் கழிய விட்டுவிடாது, மீண்டும் வந்து தடுத்தாட்கொண்டு, அடிமைகொள்ளல் வேண்டும்' என்பது கருத்து. மிண்டுதல்-மதர்த்தல். களை-இடுக்கணும் ஆம்; விடாய் எனவும் கூறுவர்.]

குதுகுதுப் பின்றிநின் றென்குறிப் பேசெய்து நின்குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண் டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப் பழத்தின் மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக் கயிலைப் பரம்பரனே. 34

*அறிவுருவாகிய திருக்கயிலையில் வீற்றிருக்கின்ற மேலவனே! வெதுவெதுப்பில்லாமல் நின்று, என் எண்ணத்தையே செய்து, நின் திருவுள்ளக் குறிப்பினை நாடி, அதற்கு ஆசைப்படுகின்ற என்னைக் கைவிட்டுவிடாதே! அடியேன் மனத்தை வாழைப் பழத்தைப்போலக் கனியச்செய்து, மணம் பொருந்திய இனிய மதுவினைப்போன்று, நீ வந்து எதிர்ப்படுவது எப்போதோ? அதனையேனும் சொல்வாயாக! ['நான் கருதியதையே செய்துவந்தாலும், நினது திருக்குறிப்பிற்கு ஆசையும் கொண்டு நைகின்றேன். என் மனத்தைக் கனிவித்து நீ வந்து எனக்குக் காட்சி நல்கி அருள்வதுதான் எக்காலமோ?' என்பது கருத்து. குதுகுதுப்பு-மகிழ்ச்சியான வெதுவெதுப்பு. வி-அறிவுருவாகிய ; மலர்பொருந்திய எனலும் ஆம்.]*

பரம்பர னேநின் பழஅடி யாரொடும் என்படி று
விரும்பர னேவிட் டிடுதிகண் டாய்மென் முயற்கறையின்
அரும்பர நேர்வைத் தணிந்தாய் பிறவிஐ வாயரவம்
பொரும்பெரு மான்வினை யேன்மனம் அஞ்சிப் பொதும்
[புறவே. 35

*மென்மையான முயற்கறையினையுடைய இளம்பிறையினையும், பாம்பினையும், சமமாகவே வைத்துச் சடையில் அணிந்தவனே! தீவினையேனது மனமானது நடுங்கி ஒரு பொந்தினைச் சென்று அடையுமாறு, பிறவியாகிய ஐந்தலைப் பாம்பு போரிடுகின்றது. பரம்பரனே! பெருமானே! நினது பழைய அடியார்களோடு என் பொய்யொழுக்கத்தையும் விரும்புகின்ற அரனே! என்னைக் கைவிட்டுவிடாதே! ['பிறவியாகிய ஐந்தலைநாகம் என்னைச் சீறி வருகின்றது; என்னை அதனிடத்தே தள்ளிவிடாது காத்தருள்க' என்பது கருத்து. பொதும்பு-பொந்து. அரும்பு-இளம்பிறை. மனத்தை மதியோடு உவமித்தனர்.]*

பொதும்புறு தீப்போற் புகைந்தெரி யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண் டாய்விரை யார்நறவம்
ததும்புமந் தாரத்தில் தாரம் பயின்றுமந் தம்முரல்வண்
டதும்புங் கொழுந்தேன் அவிர்சடை வானத் தடலரைசே. 36

*மணம்நிறைந்த தேன் ததும்புகின்ற மந்தார மலரிடத்தே தாரமாகிய வல்லிசையினைப் பழகிப், பின், மந்த*

*மாக ஒலிசெய்கின்ற வண்டுகள் ஒதுங்கித் திளைக்கும், வளமிக்க தேன்பொழிகின்ற மின்னுஞ் சடாபாரத்தை உடையவனே! பரமாகாயத்தில் உள்ள வலிமைமிக்க அரசனே! மரப் பொந்தினிடத்தே பொருந்திய தீயினைப் போலப் புகைந்து எரிகின்ற, அந்தப் புலன்களாகிய நெருப்புப் பற்றுதலால் வெப்பமடைகின்ற, என்னையும் கைவிட்டு விடாதே! ['புலன்களாகிய தீப்பற்றுதலால் வெதும்புகின்ற என்னைக் கைவிடாதே காத்தருள்க' என்பது கருத்து. பொதும்பு-மரப்பொந்து. முரலுதல்-ஒலித்தல். அதும்புதல்-ஒதுங்குதல்; அழுந்தல். வானம்-பரமாகாயம்.]*

**அரைசே அறியாச் சிறியேன் பிழைக்கஞ்ச லென்னின்அல்லால்**
**விரைசேர் முடியாய் விடுதிகண் டாய்வெண் நகைக்கருங்கண்**
**திரைசேர் மடந்தை மணந்த திருப்பொற் பதப்புயங்கா**
**வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை தான்வந் தடர்வனவே.37**

*அரைசனே! வெள்ளிய நகையினையும் கரிய கண்களையும் உடைய, கடல்கெழு செல்வியாகிய திருமகள் வணங்கிப் பொருந்திய, அழகிய பொற்பாதங்களையுடைய, பாம்பணிந்த பெருமானே! மலைகள் ஒன்றுசேர்ந்து தாக்கினாற்போல வல்வினைகள் வந்து தாக்குகின்றன. அரசனே! அறிவில்லாத சிறியேனின் குற்றத்தினைப் பொறுத்து, 'அஞ்சேல்' என்று நீ சொன்னால் அல்லாமல், எனக்கு வேறு கதியில்லை! மணம் பொருந்திய சடைமுடியினை உடையவனே! என்னைக் கைவிட்டுவிடாதே! ['வல்வினைகள் மலைகள்போல வந்து என்னைத் தாக்குகின்றன; சிறியேனைக் கைவிட்டுவிடாது பிழைகளைப் பொறுத்துக் காத்தருள்க' என்பது கருத்து. திரைசேர் மடந்தை-கங்கை எனவும், உமை எனவும் உரைப்பர். 'நகை' என்றது, பல்லை.]*

**அடர்புல னால்நிற் பிரிந்தஞ்சி அஞ்சொல்நல் லாரவர்தம்**
**விடர்விட லேனை விடுதிகண் டாய்விரிந் தேயெரியுஞ்**
**சுடரனை யாய்சுடு காட்டர சேதொழும் பர்க்கமுதே**
**தொடர்வரி யாய்தமி யேன்தனி நீக்குந் தனித்துணையே. 38**

*விரிந்து எரியாநின்ற சுடரினைப் போன்றவனே! சுடுகாட்டின் அரசனே! தொண்டர்கட்கு அமுதனே! தொண்டர் அல்லாதார்க்குத் தொடர்தற்கு அரியவனே! தமியேனது தனிமையினை நீக்குகின்ற ஒப்பற்ற துணையே! வருத்துகின்ற புலன்களாலே நின்னைப் பிரிந்து, பயந்து, அழகிய சொல்லினை உடைய மாதரது கூட்டமாகிய காட்டினை விடுதற்கில்லாத என்னையும் கைவிட்டுவிடாதே! ['புலன்களுக்கு அஞ்சி நின்னைப் பிரிந்து, மாதர் மயலிடைச் சிக்கி உழல்கின்றேனையும்,*

கைவிடாது காத்தருள்வாயாக' என்பது கருத்து. விடர்-மலைப்பிளவு; காடு-சுடுகாடு; அனைத்தும் ஒடுங்கிய இடம்.]

**தனித்துணை நீநிற்க யான்தருக் கித்தலை யால்நடந்த**
**வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய**
**மனத்துணை யேஎன்தன் வாழ்முத லேஎனக் கெய்ப்பில்வைப்பே**
**தினைத்துணை யேனும் பொறேன்துய ராக்கையின்**
**[திண்வலையே. 39**

*தீவினையேனது உள்ளத்திற்கு உறுதுணையாயிருப்பவனே! என் வாழ்விற்கு முதற்காரணமே! இளைப்புற்ற காலத்துச் சேமநிதிபோல அமைந்தவனே! ஒப்பற்ற துணையாகிய நீயிருக்கவும், யான். தன்முனைப்பாற் செருக்குற்றுத், தலையாலே நடந்தாற்போன்ற தீவினையின் துணையினையே நாடியவன் ஆகினேன். அத்தகைய என்னையும் கைவிட்டு விடாதே, துயரங்கட்கு ஆதாரமாகிய உடம்பென்னும் திண்ணிய வலைப் பிணிப்பைத் தினைத்துணையேனும் இனிப் பொறுக்கமாட்டேன்; என்னைக் காத்தருள்க! ['இனியும் துன்பங்கட்கு ஆதாரமாகிய இந்த உடலினைப் பொறுக்க மாட்டேன். என்னைக் கைவிட்டுவிடாது காத்தருள்க' என்பது கருத்து. தலையான் நடந்த-முறைமாறுக நடந்த. வினைத்துணையேன்-வினையினையே துணையாக உடையேன்.]*

**வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு**
**மிலைத்தலைந் தேனை விடுதிகண் டாய்வெண் மதியின்ஒற்றைக்**
**கலைத்தலை யாய்கரு ணாகர னேகயி லாயமென்னும்**
**மலைத்தலை வாமலை யாள்மண வாளஎன் வாழ்முதலே. 40**

*வெண்மதியினது ஒற்றைக் கலையினைத் தரித்த தலையினை உடையவனே! கருணாகரனே! கயிலாயம் என்னும் மலைக்குத் தலைவனே! மலைமகளாகிய உமையின் மணாளனே! என் வாழ்விற்கு மூலமே! வலையினிடத்தே அகப்பட்ட மானைப்போன்ற நோக்கினையுடைய மாதர்களது, பார்வையாகிய வலையிலே சிக்கி, அவர் வழியினையே மேற்கொண்டு யானும் அலைந்தேன். அத்தகையனாகிய என்னையும் கைவிட்டு விடுவாயோ? ['இறைவனே! மாதரது கண்வலையிற் சிக்கி உழலுகின்ற என்னையும் கைவிடாது காத்தருள்க' என்பது கருத்து. மிலைத்தல்-அணிதல்; மேற்கொள்ளல்.]*

**முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந் நீரிற் கடிப்பமுழ்கி**
**விதலைச்செய் வேனை விடுதிகண் டாய்விடக் கூன்மிடைந்த**
**சிதலைச்செய் காயம் பொறேன்சிவ னேமுறை யோமுறையோ**
**திதலைச்செய் பூண்முலை மங்கைபங் காஎன் சிவகதியே. 41**

*தேமல் படர்ந்தவும் பூணணிந்தவுமான கொங்கைகளையுடைய உமாதேவியின் பாகனே! எனது சிவகதியே! சிவந்த அதரங்களையுடைய மாதரென்கின்ற முதலையானது, அவர் மீது உண்டாகிய விருப்பம் என்கின்ற வெம்மையான நீரினிடத்தே, என்னைக் கவ்விக் கொள்ளுதலால், அதனிடத்தேயே மூழ்கிக், குடும்ப வாழ்வில் துயரப்படுவேன் ஆயினேன். அத்தகைய என்னைக் கைவிட்டு விடாதே! தசையும் நிணமும் நிறைந்த, நோயுண்டாதற்கு இடமாகிய, இவ்வுடம்பினை இனியும் யான் பொறுக்கமாட்டேன். என்னைக் காத்தருள்க! ['இறைவனே! மாதர் விருப்பிடைப்பட்டுக் கழியாது, என் உடம்பினைப் போக்கி என்னை ஆட்கொள்வாயாக' என்பது கருத்து. விதலை-நடுக்கம். சிதலை-நோய். திதலை-தேமல். 'மூழ்கி' என்றது, குடும்பக் கடலுள்.]*

கதியடி யேற்குன் கழல்தந் தருளவும் ஊன்கழியா
விதியடி யேனை விடுதிகண் டாய்வெண் தலைமுழையிற்
பதியுடை வாளரப் பார்த்திறை பைத்துச் சுருங்கஅஞ்சி
மதிநெடு நீரிற் குளித்தொளிக் குஞ்சடை மன்னவனே. 42

*வெள்ளிய தலையாகிய வளையிலே பொருந்துதலை உடைய ஒளிபொருந்திய பாம்பானது, சிறிது படம் விரித்து நோக்கிச் சுருக்கிக் கொள்ள, அதைக்கண்ட மதியானது அச்சங்கொண்டு, கங்கையாகிய பெருநீரில் மூழ்கி ஒளித்தற்கு இடமாயிருக்கும் சடாபாரத்தையுடைய வேந்தனே! அடியேனுக்குக் கதியாகிய நின் திருவடிகளைத் தந்தருளவும், உடம்பு கழியாமையாகிய ஊழ்வினையினைக் கொண்டிருந்த அடியனேனை, நீ கைவிட்டு விடாதே! ['நின் திருவடிகளைக் காணப்பெற்றும், உடலினை நீத்து நின்னை அடையாதுபோயின தீவினையேனைக் கைவிட்டு விடாது காத்தருள்க' என்பது கருத்து. முழை-மலைக்குகை. நெடுநீர்-கங்கை.]*

மன்னவ னேயொன் றுமா றறி யாச்சிறி யேன்மகிழ்ச்சி
மின்னவ னேவிட் டிடுதிகண் டாய்மிக்க வேதமெய்ந்நூல்
சொன்னவ னேசொற் கழிந்தவ னேகழி யாத்தொழும்பர்
முன்னவ னேபின்னும் ஆனவ னேயிம் முழுதையுமே. 43

*மேம்பட்ட வேதமாகிய மெய்ந்நூலினைப் பக்குவமுடைய முனிவர்கட்குச் சொன்னவனே! சொல்லினைக் கடந்தவனே! நீங்காத அன்பினரான தொண்டர்கட்கு எதிர்வந்து தோன்றி நிற்பவனே! பின்னரும், அவர்கட்கு ஆதரவாக இருப்பவனே! இப்படைப்பு முழுவதும் ஆயினவனே! மன்னவனே! நினக்குச் சிறிதளவும் கைம்மாறு செய்தற்கும் அறியாத சிறியனேனுக்கும் மகிழ்ச்சிப்பொருளாக விளங்கும் சோதியனே!*

என்னையும் கைவிட்டு விடாதே! ['நின் அருளுக்குக் கைம் மாறு செய்வதற்கு அறியாதுபோயின சிறுமையேனையும் கைவிடாது காத்தருள்வாயாக' என்பது கருத்து. 'ஒன்றும் மாறு அறியா' என்பதை, 'ஒன்றும் ஆறு அறியா' என இயைத்து, 'நின்னை அடைதற்கான வழியொன் றும் அறியாத' எனவும் உரைப்பர். 'மின்னவனே' என்ப தற்கு, 'கொடிபோன்ற உமையினைப் பாகமாக உடையவனே' எனவும் கொள்வர்.]

முழுதயில் வேற்கண் ணியரென்னும் மூரித் தழன்முழுகும்
விழுதனை யேனை விடுதிகண் டாய்நின் வெறிமலர்த்தாள்
தொழுதுசெல் வான்நற் றொழும்பரிற் கூட்டிடு சோத்தெம்பிரான்
பழுதுசெய் வேனைவி டேலுடை யாய்உன்னைப் பாடுவனே. 44

முற்றவும் கூர்மை பொருந்திய வேற்படையினைப் போன்ற கண்களையுடைய, மாதர்கள் என்கின்ற பெருநெருப் பிலே முழுகுகின்ற வெண்ணெயினைப் போல்பவன் யான். என்னையும் கைவிட்டு விடாதே! நின் மணம்பொருந்திய மலரடிகளை நானும் தொழுதுசெல்லும் பொருட்டாக, நினது நல்ல தொண்டர் கூட்டத்தோடு என்னையும் சேர்த்திடு வாயாக! எம்பிரானே! நினக்கு அஞ்சலி செய்து, மீண்டும் பழுது செய்தலிலே ஈடுபடுவேனாகிய என்னையும் கைவிட்டு விடாதே! உடையவனே! யான் நின்னையே எப்போதும் பாடித் துதிப்பேன்! [அயில்-கூர்மை. சோத்து-பணிவான வணக்கம். மூரி-வலிமை; மூரிநெருப்பு-பெருநெருப்பு. 'இறை வனே! நின் திருவடிகளைத் தொழுது போற்றும் பொருட்டு என்னையும் நின் அடியவர் கூட்டத்துடன் சேர்த்தருள்க' என் பது கருத்து.]

பாடிற்றி லேன்பணி யேன்மணி நீயொளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண் டாய்வியந் தாங்கலறித்
தேடிற்றி லேன்சிவ னெவ்விடத் தானெவர் கண்டனரென்
றோடிற்றி லேன்கிடந் துள்ளுரு கேன்நின் றுழைத்தனனே. 45

மணிபோன்று தோன்றிப் பின் ஒளித்துநிற்கும் நின் பொருட்டாக, யான் பாடுதலும் செய்திலேன்; பணிதலும் செய்திலேன்; பச்சைத் தசைகொண்ட உடலினையும் விட்டி லேன். இத்தகையேனாகிய என்னையும் கைவிட்டு விடாதே காத்தருள்க! அவ்விடத்தே, அதிசயித்துக் கதறியவனாக நின்னைத் தேடுதலையும் செய்திலேன்; 'சிவபெருமான் எவ்வி டத்தே இருக்கின்றான்? அவனைக் கண்டவர்கள் யாவர்?' என்று கேட்டுக்கேட்டு ஓடுதலையும் செய்திலேன்; உள்ளமும் உருகேன்; வீணே செயலற்று நின்று யானும் வருந்தினனே!

['பெருமானே! நீ அருளிய அந்நாளில், அப்போதே நின்னைப் பாடியும் பரவியும் உடற்கட்டை நீத்து வீடுபெறாது யானும் அறிவிலியாகி நின்றேன். நீ மறைந்த பின்னரும், நின்னைக் கண்டடைய முயலாது வீணே உழன்றேன்! அத்தகையவனாகிய என்னையும் கைவிடாது காத்தருள்க' என்பது கருத்து ]

உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத் தீயினைப்பாய்
விழைதரு வேனை விடுதிகண் டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபர னென்றென் றறைவன் பழிப்பினையே. 46

மான்போலும் நோக்கினையுடைய மாதரது கொங்கைகளாகிய பலாப்பழத்திலே, ஈக்கு ஒப்பாகி இச்சித்துக் கிடக்கின்ற என்னையும் தடுத்தாட் கொள்ளாது கைவிட்டு விடாதே. நீ கைவிட்டனையானால், 'கடல் நஞ்சினை உண்டவனாகிய நீலமேகமனைய கண்டன், குணமற்றவன்; மானிடன்; குறைந்த அறிவினன்; பழமையாகிய பெரிய ஆண்டி' என்றெல்லாம் நின் பழிப்புக்களையே யான் எங்கும் எடுத்துச் சொல்வேன். ['பலாப்பழத்து மொய்த்துக் கிடக்கும் ஈப்போல, மாதரது கொங்கைகளிடத்தே இச்சித்துக் கிடக்கும் என்னைக் கைவிட்டனையானால், நின்னைப் பழித்துஉரைப்பேன்' என்பது கருத்து. குணம் இலி-நிர்க்குணன். மானிடன்; மனிதன்; மானை இடப்பாகத்தே உடையவன். தேய்மதியன்-குறைந்த அறிவினன்; தேய்ந்த பிறைமதியைத் தரித்தவன். பழைதரு மாபரன்-பண்டைப் பெரிய ஆண்டி; பழமையாகிய உமையம்மையின் பக்கத்தினன். இவ்வாறு பொருள் கொள்ளப், போற்றுவதாகவும் சொற்கள் பொருந்துவன காண்க. உழை-மான்.]

பழிப்பில்நின் பாதப் பழந்தொழும் பெய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண் டாய்வெண் மணிப்பணிலங்
கொழித்துமந் தாரமந் தாகினி நுந்தும்பந் தப்பெருமை
தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ் சேர்தரு தாரவனே. 47

வெண்மணியாகிய முத்தினையும் சங்கினையும் கொழித்துக் கொண்டு, மந்தார மலர்களைச் சுமந்துகொண்டு, வரும் ஆகாய கங்கையானது தள்ளுகின்ற, அழகின் பெருமையைக் கொண்ட, தடுக்கப்பட்ட நீரில் பிறையாகிய தோணி சேர்தற்கு இடமாகிய சடையிடத்தே, கொன்றை மாலையினை உடையவனே! பழிப்பற்ற நின் திருவடிப் பழமைத் தொண்டினை அடைந்து, அது நழுவிப்போக, நின்னைப் பழித்து, யாதுஞ் செய்தற்கும் அறியாது விழித்துக்கொண்

டிருந்தவனுகிய என்னையும் கைவிட்டுவிடாதே. ['நின் திரு வடித் தொண்டினை அடையாது, பழித்துச், செய்வதறியாது விழித்திருந்த பேதையேனுகிய என்னைக் கைவிட்டுவிடாது காத்தருள்க' என்பது கருத்து. பந்தம்-அழகு. சிறை நீர்-தடுக்கப்பட்ட நீர்; தடுத்தது சடை. கலம்-மரக்கலம். தார்-வெற்றிமாலை; அது கொன்றை. மந்தாகினி-ஆகாய கங்கை. நுந்தும்-தள்ளும்.]

தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்
வீரஎன் தன்னை விடுதிகண் டாய்விடி லென்னைமிக்கார்
ஆரடி யானென்னின் உத்தர கோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே. 48

தலையிடத்துத் தாரகைகள் போலும் வெண்டலை மாலையினையும், நெருப்பு உமிழ்கின்ற பாம்பணியினையும் அணி கின்ற வீரனே! என்னைக் கைவிட்டு விடாதே! நீ கைவிட்டால், மேலோர் என்னை நோக்கி, 'நீ யாருடைய அடியவன்?' என்று கேட்பின், 'உத்தரகோச மங்கைக்கு அரசனுகிய சிவபிரானது சிறந்த அடியவர்கட்கு அடியவன் யான்' என்று கூறி, நின்னைச் சிரிக்கும்படியாகச் செய்துவிடுவேன். ['என்னைக் கைவிட்டால், 'யான் நின் அடியார்க்கு அடியவன்' என்று கூறிக் கொண்டு, என்னை ஆளாது கைவிட்ட நின் செயலைக் குறித்து அவர்கள் நின்னை நகையாடும்படியாகச் செய்து விடுவேன்' என்பது கருத்து.]

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத் தொழும்பையும் ஈசற்கென்று
விரிப்பிப்ப னென்னை விடுதிகண் டாய்விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் தோலுடைப் பிச்சன்நஞ் சூண்பிச்சன் ஊர்ச்சுடுகாட்
டெரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப் பிச்சனென் றேசுவனே. 49

சினந்து தள்ளத்தக்கதாய என்னுடைய வாழ்க்கையினைப் பெரியோர்கள் நகையாடும்படியாகச் செய்வேன். 'என் தொண்டும் ஈசனுக்கே' என்று கூறி, எங்கணும் அந்தச் செய்தியையே பரப்புவேன். அதனுலும், என்னைக் கைவிட்டு விடாதே. கைவிட்டனையானல், 'கொடிய யானைத்தோலைப் போர்த்த பித்தன்; புலித்தோலினை ஆடையாக உடுத்த பித்தன்; நஞ்சினை உணவாக உண்ணுகின்ற பித்தன்; ஊர்ச் சுடுகாட்டு நெருப்போடு ஆடுகின்ற பித்தன்; என்னையும் அடிமைகொண்ட பித்தன்' என்று, நின்னை யான் ஏசித் திரிவேன். ['என்னைக் கைவிடாது ஏற்றருள்க. கைவிடில், 'யான் நின்னைப் பித்தனென்று ஏசுவேன்' என்று, உரிமையோடு வாதாடுகின்றனர். சீறுதல் - சினத்தல். தொழும்பு-தொண்டு.]

ஏசினும் யானுன்னை யேத்தினும் என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவளவெற்பின்
தேசுடை யாயென்னை ஆளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலமுண் டாய்அமு துண்ணக் கடையவனே! 50

*செம்பவள மலையினைப்போல ஒளியுடையவனே! என்னை ஆளாக உடையவனே! வானவர் முதலிய சிற்றுயிர்கட்கு இரக்கங்கொண்டு, கடலைக்கடைந்த அவர்கள் பிழைத்திருந்து அமுதுண்ணுமாறு, வேகத்தோடு எழுந்த ஆலகால நஞ்சினை நீ உண்டனையே! யான் நின்னை ஏசினாலும், ஏத்தினாலும், என் குற்றத்தின் பொருட்டே மனங்குழைந்து துக்கப்படுகின்ற வருகிய என்னைக், கைவிட்டுவிடாதே! [''இறைவனே! யான் நின்னை ஏசினும் ஏத்தினும் பாராட்டாது, நின் பெருங்கருணையினால், எனக்கும் இரங்கி அருள் செய்வாயாக!'' என்பது கருத்து. கடையவன்-கடைந்தவன்; திருமால். சிற்றுயிர்-பிறரான தேவர்கள்; தேவர்கள் போக பூமியினர் என்றாலும், சிற்றறிவும் சிறுதொழிலும் உடையவரே என்பார், 'சிற்றுயிர்க்கு' என்றார். உயிரச்சத்தால் அவர்கள் ஓலமிட்டது அவர்களுடைய இந்தத் தன்மையினாலேயே என்க.]*

# 7. திருவெம்பாவை

## சக்தியை வியந்தது!

(வெண்டளையான வந்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா)

*[திருவண்ணுமலையில் அருளிச்செய்யப் பட்டது இது. கன்னியர், நாட்காலையில் எழுந்து, ஒருவரையொருவர் எழுப் பியவராக மார்கழிநீர் ஆடுதற்குப் பொய்கைசெல்லுதலாகிய அமைதியினைக்கொண்டு விளங்குவது. 'ஒன்பது சத்திகளுள் ஒருவரை யொருவர் துயிலெழுப்புவதாகவும், எல்லாரும் கூடி, இறைவனை வழுத்தும் பொருட்டுப் பாடுவதாகவும் சொல்லிய பாடல்கள் இவை' எனவும் ஆன்ருேர் உரைப்பர். நவசக்திகள், அம்பிகை, கணும்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசக்தி, ஆதிசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என்பன.]*

### மனோன்மணி, சர்வபூத தமனியை எழுப்புவது

திருச்சிற்றம்பலம்

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்மறந்து
போதார் அமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே!என்னே!
ஈதேஎந் தோழி பரிசேலோர் எம்பாவாய்! 1

*"ஆதியும் அந்தமும் இல்லாதவன்; அநாதியாகவே விளங்கும் முதல்வன்; அரும் பெருஞ் சோதிவடிவினனுகத் திருவண்ணுமலையிலே எழுந்தருளியிருப்பவன், சிவபெருமான்! அவனை, நாங்கள் எல்லாரும் பாடுவதைக் கேட்டவளாகியும், 'இன்னமும் நீ கண்வளருகின்றனையோ? அகன்ற, வாள் போன்ற, கண்களையுடைய மாதரசியே! நின் காதுகள்தாம் கேட்குஞ் சக்தியற்று வன்மையாகிப் போயினவோ?"*

*[இவ்வாறு, மனோன்மணி சொல்லியும், அவள் எழுந்து வராமற்போகவே மற்ருெருத்தி சொல்லுகிருள்:)*

"மாதேவனுகிய நம்பெருமானின், நீண்ட, வீரக்கழல்கள் பொருந்திய, திருவடிகளை நாமெல்லாரும் வாழ்த்திஞேம். அவ்

வாழ்த்து ஒலியானது தெருவழியே செல்ல, அதனை கேட்ட போதிலேயே, அவள் விம்மி விம்மி மெய்ம்மறந்தாள். மலர் மஞ்சத்தின்மேனின்றும் புரண்டு, இவ்விடத்து ஏதும் செய்வ தற்கும் ஆகாதவளாகி, இப்படிவிழுந்தும் கிடந்துவிட்டாளே! எம் தோழியின் நிலைமை இதுதான் என்பதை, எம்பாவாய் நீயும் அறிவாயாக! இஃது என்ன அதிசயமோ?'' (அவள் எழுந்து வர, அனைவரும் மேலே செல்லுகின்றனர்.)

## சர்வபூதநமனி பெலப்பிரமதனியை எழுப்புகிருள்

பாசம் பரஞ்சோதிக்கு என்பாய் இராப்பகல்நாம்
பேசும்போ தெப்போதிப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய்? நேரிழையீர்!
சீசி இவையுஞ் சிலவோ? விளையாடி
ஏசு மிடம்ஈதோ? விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோர் எம்பாவாய்? 2

பரஞ்சுடராகிய சிவபெருமானிடத்திலே நாமெல்லாம் பற்று உடையவர்கள்! அவனுக்கு அன்புடன் விளங்குபவர் கள்! இரவும் பகலும் அவனுடைய புகழினையே பேசுபவர்கள்! அவ்வாறு இருந்தும், நேரிழையே! எப்போதிலிருந்து இம் மலர்விரித்த அமளியின்மீதிலேயே, நீ ஆராத விருப்பம் வைத் தனையோ?

(சிவனை மறந்து, துயிலையோ நீ பெரிதாக நேசித்தனை? என்கிறாள். எழுந்து வந்துகொண்டிருந்தவளுக்கு ஆத்திரம் வருகின்றது. அவள்:)

நேரிழையீர்! சீசி! நீங்கள் பேசும் இவையும் பொருளுள்ள சில சொற்களாகுமோ?

(என்று கோபிக்க, மற்றொருத்தி சமாதானப்படுத்தும் வகையால்,)

தேவர்களும் அறிந்து போற்றுவதற்குச் சக்தியற்றவர் களாகி வெட்கிநிற்கின்ற, அறிதற்கரிய பெருமையுடையன நம் இறைவனின் மலர்ப்பாதங்கள்! அவன் ஒளி வடிவினன்! சிவலோகத்தினைத் தனக்கு உரிமையாகக் கொண்டவன்! அத்தகையவன், தன் பாதங்களிலே, நமக்கு எல்லாம் அடைக் கலம் தந்து அருளல்வேண்டும் என்ற கருணைப்பெருக்கினால், தில்லைச் சிற்றம்பலத்தினுள்ளே, தானே எழுந்தருளி வந்திருக் கின்றான்! கருணைவள்ளலான அவனுக்கு அன்புடையவர்கள் தாம் நம்மில் யாரோகாண்?

*(அனைவரும் அன்பினரே என்றுகூறி, அவளைச் சமாதானப் படுத்த, அவளும் வந்து சேர்ந்து கொள்ளுகிறாள். பின், இவர்கள் பெலவிகரணியைத் துயில்எழுப்பச் செல்லு கின்றனர்.)*

## பெலப்பிரமதனி பெலவிகரணியை எழுப்புகிறாள்

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந்து எதிர்எழுந்தென்
அத்தன்ஆ னந்தன் அமுதன்என்று அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர்! ஈசன் பழவடியீர்! பாங்குடையீர்!
புத்தடியோம் புன்மைதீர்த்து ஆட்கொண்டாற் பொல்லா
எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ? [தோ?
சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை?
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்! 3

*முத்துக்களைப்போன்ற பல்வரிசையினை உடையவளே! எழுந்து, எம் முன்னர் வருவாயாக! வந்து, 'அத்தன்! ஆனந் தன்! அமுதன்!' என்று, நின் வாயிலே நீர்ஊறி நிறைய, இனிக்க இனிக்க, அவன் புகழைப் பேசுவாயாக! எழுந்து வந்து, கதவினைத் திறப்பாயாக!*

*(அவள் வந்து தன் பிழையைப் பாராட்டாமலிருக்குமாறு வேண்டுகின்றாள்:)*

*பாசம் உடையவர்களே! பழைய அடியவர்களே! தோழமையும் உடையவர்களே! புதியதாக அடியவளான வள் யான். என் இத்தகைய புன்செயலைப் போக்கி, என்னை யும் ஆட்கொண்டருளினால், அது உங்களுக்குப் பொல்லாத செயலாகுமோ?*

*(சொற்களிலே குத்தலாகப் பேசிய தன்மை தோன்றவே அவளுக்குச் சிவன்மீதுள்ள அன்பினையே ஐயுறுவதுபோல ஒருத்தி சொல்லுகின்றாள்:)*

*என்னவோ? நின் அன்பு உடைமையின் இயல்பினை எல்லாம் யாமும் அறியாமோ?*

*(நீ அன்பில்லாதவள் எனபதுபோலப் பேசவே, மற் றொருத்தி இருவரையும் சமாதானப்படுத்துகிறாள்:)*

*உள்ளத்திலே அழகினை உடையவர் என்றால், அவர் யாவரும் நம் சிவபெருமானைப் பாடமாட்டார்களோ?*

*(இதனைக் கேட்டதும், முதலிற் கூறியவள் பாவையை முன்னிலைப்படுத்திக் கூறுகிறாள்:)*

*எம் பாவையே! எமக்கு இத்தனையும் வேண்டும்! (அதன் பின், அனைவரும், மேலும் செல்லுகின்றனர்.)*

## பெலவிகரணி காளியை எழுப்புகிருள்.

ஒண்ணித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றே?
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?
எண்ணிக் கொடுள்ளவா சொல்லுகேம் அவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக்கு ஒருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக்கு இனியானைப் பாடிக் கசிந்துஉள்ளம்
உண்ணெக்கு நின்றுருக யாம்மாட்டோம் நீயேவந்து
எண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய்! 4

*ஒளிசெறிந்த முத்துக்களைப் போன்ற பல் வரிசையினை உடையவளே! நினக்குமட்டும் நேரம் இன்னமும் புலரவில்லையோ?*

*(காளி உள்ளிருந்தே கேட்கிருள்:)*

*வண்ணக் கிளிமொழியினை உடைய நம் தோழிமார்கள் எல்லாரும் வந்துவிட்டார்களோ?*

*உண்மையாகவே சொல்லுகின்றேம்! நீ வேண்டுமாளுலும் வந்து எண்ணிக் கொள்வாயாக! கண்ணைத் துயின்று, காலம் அனைத்தையும் வீணுகப் போக்காதே!*

*வானகத்துக்கு ஓர் அருமருந்தானவனை; வேதங்கள் அனைத்தும் முழங்கும் மேலான மெய்ப்பொருளாக விளங்குபவனை, பாடிக் கசிந்து, உள்ளத்தினுள்ளேயும் நெக்குநெக்கு நின்று, யாம் உருக வேண்டாமோ?*

*எம்மால், நின்னை மனநிறைவு செய்வதற்கு இயலாது. நீயே வந்து எண்ணிக்கொள்வாயாக! எண்ணிக்கையிலே குறைந்தால், நீ மீண்டும் சென்று துயில்வாயாக!*

*(இவ்வாறு சொல்லக், காளியும் எழுந்துவந்து கலந்து கொள்ளுகிருள்: அனைவரும் கூடி மேற்செல்லுகின்றனர்.)*

## காளி இரவுத்திரியை எழுப்புகிருள்

மால்அறியா நான்முகனும் காணு மலையினைநாம்
போல்அறிவோம் என்றுள்ள பொக்கங் களேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மைஆட் கொண்டருளிக் கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேஎன்று
ஓலம் இடினும் உணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய். 5

'திருமால் அறியாதவனுயினுன்; நான்முகனும் காணுத வனுயினுன்; அத்தகைய பெருஞ் சிறப்பினையுடைய ஒளி மலையினை நம்மைப் போன்றவரோ அறிவோம்?' என்று, இப்படிப்பட்ட பொய்மைகளையே பேசுகின்ற, பாலூறு கின்ற, தேனினுமினிய சொற்களைப் பேசுகின்ற, வாயினை உடையவளே! உள்ளத்திலே வஞ்சகம் படைத்தவளே! எழுந்துவந்து கதவினைத் திறப்பாயாக!

(அவள் திறவாதிருக்கவே, அவளைக் கடிந்துகொள்ளத் தொடங்குகின்முள்.)

நிலவுலகமும், வானுலகமும், பிற உலகங்களும் அறி வதற்கும் அருமையானவன்; அவனுடைய உண்மைத் திருக் கோலத்தை யாம் அறிந்து போற்றிப் பாடினேம். அவன் நம்மை எல்லாம் ஆட்கொண்டு, நமக்கு அருள் செய்து, நம்மைச் சீராட்டும் அவனுடைய பெருங் கருணையையும் பாடினேம். 'சிவனே! சிவனே!' என்று அவன் திருநாமத்தைக் கூறி ஓலமிட்டும் நின்றேம். இருந்தும், நீ இவை எல்லாம் ஏதும் அறியாதவளாயினுய். நீ அறியாய்காண்! எம்பாவாய்! மயிர்ச்சாந்தணிந்த கூந்தலினை உடைய எம் தோழியின் தன்மையும் இத் தகையதோ?

(காளியின் உரிமையும் கடுமையும் கலந்த இந்தப் பேச்சினைக் கேட்டதும், அவள் எழுந்துவந்து, அவர்களுடன் தானும் கலந்து கொண்டாள். இவர்கள் அனைவரும் கூடி அடுத்த சக்தியினைத் துயில்உணர்த்தச் செல்லுகின்றனர்.)

## இரவுத்திரி சேட்டையை எழுப்புகிருள்

மானேநீ நென்னலே நாளைவந்து உங்களை
நானே எழுப்புவன் என்றலும் நாணுமே
போன திசைபகராய் இன்னம் புலர்ந்தின்றே?
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானேவந்து எம்மைத் தலையளித்துஆட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே உருகாய் உனக்கே உறும்எமக்கும்
ஏனோர்க்கும் தங்கோனைப் பாடேலோர் எம்பாவாய். 6

மானே! நேற்றைக்கு, 'நாளை. நானே வந்து உங்களை எழுப்புவேன்' என்றனையே? நாணமில்லாமல், நின் சொற்கள் இன்று போயின திசையினைத்தான் சொல்லாயோ? இன்ன மும் நினக்குமட்டும் நேரம் புலரவில்லையோ?

வானகத்தாரும்; நிலவுலகத்தாரும், பிறவுலகத்தாரும் அறிந்துகொள்ளுவதற்கும் அருமையுடையவன், தானுகவே

வந்து எங்களைக் கருணைபாலித்து ஆட்கொண்டருள்வான். அவனுடைய பெருமைமிக்க வீரக்கழல்கள் அணிந்த பாதங்களைப் பாடி வந்தவர் யாம். எமக்கு, நின் வாய்திறந்து ஏதும் கூறாதிருக்கின்றாய்! அவன் புகழினைக்கேட்டு ஊனுருகாமலும் வாளா கிடக்கின்றாய். இவை எல்லாம் நினக்கே தகுமோ? எமக்கும், ஏனைய பிறர்க்கும் தலைவனாக இருப்பவனை, நீயும் எங்களுடன் வந்து பாடாயோ?

(அவளும் வந்து கலந்து கொள்ளுகிறாள். அனைவரும் வாமையின் துயிலை எழுப்பச் செல்லுகின்றனர்.)

## சேட்டை வாமையை எழுப்புகிறாள்

**அன்னே இவையுஞ் சிலவோ பலவமரர்**
**உன்னற்கு அரியான் ஒருவன் இருஞ்சீரான்**
**சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்**
**தென்னாஎன் னாமுன்னம் தீசேர் மெழுகொப்பாய்**
**என்னானை என்அரையன் இன்னமுதுஎன் றுஎல்லோமும்**
**சொன்னோம்கேள் வெவ்வேறாய் இன்னம் துயிலுதியோ?**
**வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்**
**என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய்? 7**

அன்னையே! இவையும் சிலவாமோ? தேவர்களுள் பலரும் நினைத்தற்கும் அரியவன்; 'ஒப்பற்ற தலைவன்; பெருஞ் சிறப்பினை உடையவன்; அவனே நம் சிவபிரான்!

அவனுக்கு உரிய திருச்சின்னங்கள் ஒலிக்கக் கேட்ட போதிலேயே, 'சிவபிரானே' என்று நின் வாயினைத் திறப்பாயே! 'தென்னவனே!' என்று சொல்வதன் முன்னரே, தீயினைச் சேர்ந்த மெழுகினைப்போல உள்ளம் உருகி நிற்பாயே!

என் யானை! என் அரசன்! இனிய அமுதன்! என்று எல்லோரும் வெவ்வேறாக அவன் திருநாமத்தைச் சொன்னோமே. கேட்பாயாக! கேட்டபின், இன்னமும் நீ எழுந்து வாராது துயில்கின்றனையே? இஃது ஏனோ?

வன்மையான நெஞ்சினரான பேதைமாக்களைப் போல நீயும் சும்மா கிடக்கின்றனையோ? நின் தூக்கத்தின் தன்மைதான் இருந்தவாறு என்னே!

(இவ்வாறு கூறவும், மனம் வெட்கியவளாக, வாமை எழுந்துவந்து கலந்துகொள்கிறாள். எல்லாரும் கூடிச் சிவசக்தியைத் துயில்உணர்த்தச் செல்லுகின்றனர்.)

## வாமை சிவசக்தியை எழுப்புகிருள்

கோழி சிலம்பச் சிலம்பும் குருகுஎங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்குஎங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினேம் கேட்டிலையோ
வாழிஈ தென்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறே
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய். 8

*(முதலில் சுத்தமாயையைப் பிரேரிக்கிற அனந்த தேவரை ஆசரிக்கின்றனர். அதன்பின், பிரகிருதியில் விகிருதியான ஆன்மதத்துவம் நடத்தற்பொருட்டு, விட்டுணுவினிடத்தில் அதிட்டிக்கிற சிவசத்தியை நோக்கி வாமை கூறுகிறுள்:)*

*சேவல்கள் கூவுகின்றன! ஒலிசெய்யும் பறவை இனங்கள் எவ்விடத்தும் ஏழிசைபோல ஒலிக்கின்றன! வெண்மையான சங்குகள் எவ்விடத்தும் ஒலிமுழங்குகின்றன! ஒப்பில்லாத பேரொளியாக விளங்குபவன், ஒப்பில்லாத பெருங்கருணையினை உடையவன், அவனுடைய புகழாகிய ஒப்பற்ற மேலான பொருள்களைக் குறித்து யாங்கள் அனைவரும் பாடினேம்! இவை அனைத்தையும் நீ கேட்டாயில்லையோ? இது என்னதான் உறக்கமோ? நீ வாழ்க!*

*இன்னமும் நின் வாயினைத் திறந்து அவனைப் பாடாயோ? சக்கரப் படையினை உடைய திருமாலினது அன்புடைமை ஆகுமாறும் இவ்வாறுதானே? ஊழிக்காலத்து அனைத்தும் அழிவெய்தத் தான் மட்டுமே ஒருவனுகி நின்றவனை, ஏழைகளின் பங்கிலே எப்போதும் இருக்கின்றவனை, எம் பாவாய்! நீயும் எம்முடன் வந்து பாடுவாயாக!*

*(இவ்வாறு பாட, அவள் எழுந்துவந்து சேர்ந்து கொள்ளுகிறுள். அனைவரும் மேலே செல்லுகின்றனர். ஆழியான் சக்திசொரூபன் ஆனதால் அவனுடைய அன்புடைமை இருந்தவாறு இவ்வளவோ? எனக் கூறினர்.)*

## எந்தக் குறையும் இல்லை

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!
உன்னைப் பிரானுகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எம்கணவர் ஆவர் அவர்உகந்து

சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்
இன்ன வகையே எமக்குஎம்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம்ஏலோர் எம்பாவாய். 9

*(நவசக்திகளான, மனோன்மணி, சர்வபூத தமனி, பெலப் பிரமதனி, பெலவிகரணி, காளி, இரவுத்திரி, சேட்டை, வாமை, சிவசக்தி ஆகியவர் அனைவரும் கூடிச் சிவபெருமானின் பெருமைகளைப் போற்றுகின்றனர்.)*

*அநாதியே உள்ள பழமையான பொருள்கள் யாவற்றினுக்கும் அநாதியாக விளங்குகின்ற பழம்பொருளே! அவற்றுக்குப் பின்னுக வரும் புதுமைகள் அனைத்துக்கும் அத்தன்மையாகப் புதுமையுடன் விளங்கும் தன்மையனே! நின்னைத் தலைவனுகப் பெற்ற நின்னுடைய சிறந்த அடியவர்கள் யாம். நின்னுடைய அடியவர்களின் தாள்களையே பணிவோம். அவ்விடத்து, அவர்க்கே உரிமையுடையவராகவும் ஆவோம். அத்தகையவரே எம்முடைய கணவருமாவர். அவர்கள் விரும்பிச் சொன்னவண்ணமே யாங்கள் அவருக்குத் தொண்டராகிப் பணியும் செய்வோம்! எம் இறைவனே! எங்களுக்கு இவ்விதமாகக் கிருபைசெய்து அருள்வாயாளுல், யாம் எந்த விதமான குறையும் இல்லாதவர்களாவோம்.*

## அவனைப் பாடும் தன்மை யாது?

பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே
பேதை ஒருபால் திருமேனி ஒன்றுஅல்லன்
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டர்உளன்
கோதில் குலத்தரன்றன் கோயில் பிணப்பிள்ளைகாள்
ஏதவன்ஊர்? ஏதவன்பேர்? ஆர்உற்றூர்? ஆர்அயலார்?
ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய். 10

*பாதாளம் ஏழினுக்கும் கீழாகச் சென்று, இன்னவிடத்தது என்று சொல்லுதற்கும் அளவுபடாததாக, அவனுடைய பாத மலர்கள் விளங்கும்! மலர்ப் போதுகள் நிறைந்த, அலங்கரிக்கப்பட்ட அவன் திருமுடியும், மேலான பொருள்கள் யாவற்றினுக்கும் மேலாகிய முடிவிடமாயிருக்கும்! அவன் திருமேனியின் ஒரு பக்கத்தே பேதைமை உடைய உமாதேவியானவள் விளங்குவாள்! தான் ஒன்றுகவே இருப்பவனும் அவன் அல்லன்; வேதங்கள் அனைத்திற்கும் அடிப்படையாக உள்ளவன்; விண்ணுலகத்தவரும் மண்ணுலகத்தவரும் துதித்தாலும், மெய்யான அவன் பெருமைகள் அனைத்தையுமே*

சொல்லமுடியாத அளவு, அளப்பரும் பெருமையுடையவன்; ஒப்பற்ற தோழன்; தொண்டர்களின் உள்ளங்களிலே நிறைந்திருப்பவன்; குற்றமில்லாத மேன்மையினை உடையவன் அவன்! அச்சிவபெருமானது கோயிலுக்கு அடியவரான பெண்பிள்ளைகாள்! அவன் ஊர்தான் யாது? அவன் பேர்தான் யாது? அவனுடைய உற்றார்தாம் யாவர்? அவனுக்குரிய அயலார் தாம் யாவர்? அவனைப் பாடும் விதம்தான் யாது? (அனைத்தையும் சொல்லளவிலே உரைத்துச் சுட்டமுடியாதபடி சர்வ வியாபகனாக இருப்பவன் அவன் என்பது கருத்து.)

### எம்மைக் காப்பாய்!

மொய்யார் தடம் பொய்கை புக்கு முகேர்என்னக்
கையாற் குடைந்து குடைந்துஉன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோம்காண் ஆர்அழல்போற்
செய்யாவெண் நீறாடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ ஆட்கொண்டு அருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பாய் எமையேலோர் எம்பாவாய். 11

வண்டினம் மொய்த்திருக்கின்ற அகன்ற பொய்கையிலே புகுந்து, முகேரென்னும் படியாகக் கையால் குடைந்து குடைந்து, நின் திருவடிகளைப் புகழ்ந்து பாடினோம். ஐயனே! வழிவழி நினக்கு அடியவர் யாங்கள்! நின் அருளால் வாழ்ந்தனம்! நிறைந்த நெருப்பினைப் போன்று விளங்கும் செந்நிறம் உடையவனே! வெண்மையான நீற்றிலே முழுகியிருப்பவனே! எம் ஈசனே! சிற்றிடையினையும், மைதீட்டப்பெற்று விளங்கும் பெரிய கண்களையும் உடைய மடந்தையான உமாதேவியின் மணவாளனே! அழகனே! நீ ஆட்கொண்டு அருளுகின்ற திருவிளையாட்டினிடத்தே உய்தி பெறுபவர்களாகிய, நின் அடியவர்கள் உய்கின்ற வகையால் எல்லாம், யாமும் உய்தி பெற்று அவற்றைக் கடந்துவிட்டோம்! இனியும் பிறந்திறந்து இளைக்காதபடியாக எம்மைக் காத்து அருள்வாயாக, பெருமானே!

### இருஞ்சுனை ஆடுவோம்!

ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்துஆடும்
தீர்த்தன்நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்
கூத்தன்இவ் வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்

ஆர்ப்பரவம் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துஉடையான் பொற்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடேலோர் எம்பாவாய். 12

நம்மை எல்லாம் பற்றிப் பிணித்த பிறவித் துன்பமானது அறுபட்டுப்போமாறு, நாம் ஆரவாரித்து ஆடுகின்ற தீர்த்தத் திற்கு உரியவன் அவனே! நன்மைதரும் தில்லைச் சிற்றம் பலத்திலே அழலோடும் ஆடுகின்ற கூத்தினை உடையவனும் அவனே! இந்த வானுலகத்தையும், மண்ணுலகத்தையும், பிற எல்லா உலகங்களையும் காத்தும் படைத்தும் அழித்தும் திருவிளையாடல் செய்கின்றவனும் அவனே! வார்த்தைகளால் அவனைப் போற்றுவோம்! கைவளைகள் ஒலிக்கவும், நீண்ட ஆடைகள் ஒலித்தலாகிய ஆரவாரத்தைச் செய்யவும், அழகிய கூந்தலின் மேலாக வண்டினம் மொய்க்கவும், தாமரை மலர்கள் விளங்கும் பொய்கையிலே முழுகுவோம்! நம்மை எல்லாம் அடியவராக உடையவனது பொன்போலும் திருவடிகளைத் துதித்தவாறே, பெரிய சுனையின் நீரிலே நாம் முழுகி ஆடுவோம்!

## புனல் பாய்ந்து ஆடுவோம்!

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கம் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
தங்கள் மலம்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றுஇசைந்த
பொங்கும் மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்துஆர்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். 13

பசிய குவளையினது கருமையான மலர்களினாலும், செந் தாமரை மலர்களின் இதழ்களினாலும், அடையாளமாகிய நீர்ப்பறவை இனங்களாலும், அதன் பின்னரும், அங்கு எழுகின்ற ஒலியினாலும், தங்கள் அழுக்குகளைப் போக்குவோர் வந்து சேருதலாலும், எங்கள் பிராட்டியையும், எம் பெருமானையும் போன்று நெருங்கிய, பொங்குகின்ற மடுவிலே புகும்படியாகப், பாய்ந்து பாய்ந்து, நம் சங்கு வளையல்கள் ஒலி முழங்கவும், காற்சிலம்புகளும் அவற்றுடன் கலந்தொலிக் கவும், கொங்கைகள் பூரிக்கவும், முழுகிக் குடைந்தாடுகின்ற புனலானது குமிழிட்டுப் பொங்கவும், தாமரை மலர்கள் நிறைந்த நீரிலே பாய்ந்து நாம் ஆடுவோமாக!

(குவளைமலரின் கருமைநிறம் பிராட்டியின் நிறம் போன்றும், செந்தாமரை மலரின் செம்மைநிறம் பிரானின் நிறம் போன்றும் விளங்கும். குருகு வளையலுக்கும், அரவம் பாம்புக்கும் பேராதலால், அவை பிராட்டியும் பிரானும் பூண்டிருக்கும் அணிகளை உணர்த்துவன. இதனால், 'பொய்கை உமாமகேசனுகத் தோற்றந்தருகிறது' என்ற உவமை பெறப் படும்.)

### பாதத்திறன் பாடுவோம்!

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாம்ஆடச்
சீதப் புனல்ஆடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடி
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்துஎடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்! 14

காதுகளிற் பொருந்திய குழைகள் அசைந்தாடவும், பசும் பொன்னலான ஆபரணங்கள் அசையவும், பூமாலை அணிந்த கூந்தலானது அசைந்தாடவும், அதன்மேல் வண்டினம் மொய்த்து ஆடவும், குளிர்ச்சியான புனலிலே நீராடுவோமாக! சிற்றம்பலத்தினைப் போற்றிப் பாடுவோமாக! வேதப் பொருளாக விளங்கும் சிவபெருமானைப் பாடுவோமாக! அவ் வேதப்பொருளாகிய பரமன் நமக்கு உரிமையுடைய வனாகும் வண்ணம் பாடுவோமாக! பரஞ்சோதியாகிய அவனுடைய தன்மையைப் பாடுவோமாக! வளைந்த கொன்றை மலர் மாலையினைப் பாடுவோமாக! அனைத்துக்கும் ஆதியாக விளங்கும் அவனுடைய ஆற்றலைப் பாடுவோமாக! அனைத்தும் ஒடுங்கியகாலத்தும் அவன் ஒருவனேயாகி நின்று விளங்கும் அந்த இறுதிவண்ணத்தினையும் பாடுவோமாக! நம்மையெல் லாம் வேறு வேறுஆகப் பேதப்படுத்தி, நம்மை வளர்த்து, அவன் அடியாராக உயர்த்திய, வளையல்கள் அணிந்த உமா தேவியின் திருவடிகளின் ஆற்றலையும் பாடுவோமாக! இவை எல்லாமும் பாடி நாம் நீராடுவோமாக!

### வாயாரப் பாடுவோம்!

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாய் ஓவாள் சித்தம் களிகூர
நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்

பேரரையற்கு இங்ஙனமே பித்துஒருவர் ஆமாறும்
ஆர்ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல்பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய். 15

*இவள் இறைவன்மீது காதல் உடையவளாயினுள்; அதனால், ஒரோரு சமயம், 'எம்பெருமானே! எம்பெருமானே என்று நீ ஆட்கொள்வையோ?' என்று சொல்லி, நம் பெருமானின் சிறப்பை ஒருபொழுதும் வாய்ஓயாமற் கூறிக் கொண்டே இருப்பாள்! அவனையடைந்து தன் உள்ளமானது களிப்படையும்படியாகத், தன் கண்களில்லை, ஒருபோதும் நீங்காமல் நெடுந் தாரை தாரையாக நீர் துளிர்ப்பப், பூமியிலே ஒரு சமயம் வந்து தோன்றியவளைப் போல்பவள்! அதனை அருளுமாறு வேறு தேவர்களையும் இவள் பணியமாட்டாள். பேரரசனுகிய சிவபெருமானுக்கு இவ்வாறு ஒருவர் பித்தாவாரோ? யார் இவ்வண்ணம் ஆவர்? நம்மை ஆட்கொண்டருளும் ஞானமூர்த்தியாகிய பெருமானின் திருவடிகளைக், கச்சணியப் பெற்ற, பூண் அணிந்த, அழகிய கொங்கைகளை உடைய பெண்களே! நாம் வாயாரப் பாடிப் புகழ்வோமாக! அழகிதாகத் தோற்றும் மலர்கள் நிறைந்த நீரிற் பாய்ந்துபாய்ந்து நாம் நீராடுவோமாக!*

## இன்னருள் பொழிவாய்!

முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துஉடையாள்
என்னத் திகழ்ந்து எம்மைஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்து எம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி யவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய். 16

*எதிரேயுள்ள இக் கடல்நீரினை உட்கொண்டு குறைத்து, வானின்மேல் எழுந்து நம் உடையவள்போலக் கருமையாகத் தோன்றி, எம்மை அடியவராக உடையவளின் சிற்றிடையினைப் போல மின்னலிட்டு அழகுடன் விளங்கி, எம் பெருமாட்டியின் திருவடிகளின்மேல் அணியப்பெற்ற பொற்சிலம்பினைப் போல இடிமுழங்கி, அவள் அழகிய புருவத்தைப் போல வில்லிட்டுத் தோன்றி, நம்மை ஆளுடையாளாகிய பிராட்டியினின்றும் பிரிதல்இல்லாத எம் இறைவனின் அன்பராயினவருக்கு, அவனுக்கும் முன்வந்து, அவ்விடத்தே,*

*அவள் நமக்குச் சுரக்கும் இனிய திருவருளேபோல, மழையே! நீயும் சொரிவாயாக!*

## தாமரைப் பொய்கை ஆடுவோம்!

செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குஉண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட்கு ஆரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய். 17

*செந்தாமரைக் கண்ணனாகிய திருமாலினிடத்தும், நான்கு திசைகளுக்கும் ஒருமுகமாக அமைந்த நான்முகனிடத்தும், மற்றைத் தேவர்களிடத்தும், மற்று எவ்விடத்தும் இல்லாததாகிய ஓர் ஒப்பற்ற பேரின்பம் நம்மிடத்தது ஆகும்படியாக, அவன் அருள் செய்தான்! பூந்தாதுகள் தங்கிய கூந்தலினை உடையாளே! நம்மை எல்லாம் சீராட்டி, இவ்விடத்தே, நம் வீடுகள்தோறும் எழுந்தருளித், தன் செந்தாமரை மலர்போன்ற அழகிய பாதங்களைத் தொழும் பேற்றையும் நமக்குத் தந்து அருள்செய்கின்ற மாவீரன் அவன்! கருணை நிரம்பிய கண்களையுடைய அரசன் அவன்! அடியவர்களுக்கு அரிய அமுதம் போன்றவன்! நம்பெருமான்! நமக்கு நன்மையானது விளங்கும்படியாக அவனைப் பாடித், தாமரை மலர்கள் நிறைந்த நீரிலே பாய்ந்து பாய்ந்து நாமெல்லாம் நீராடுவோமாக!*

*[கொங்கு-மணமும் ஆம். கோதாட்டுதல்-சீராட்டுதல்.]*

## கண்ணார் அமுதம்!

அண்ணா மலையான் அடிக்கமலம் சென் றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமயங்கித் தாரகைகள் தாம்அகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்
கண்ணார் அமுதமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேஇப் பூம்புனல்பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய்.

*திருவண்ணாமலையிலே கோயில் கொண்டிருப்பவனது பாதகமலங்களைச் சென்று பணிகின்ற, மற்றைத் தேவர்*

களுடைய மகுடங்களின் இரத்தினத் தொகை யாவும் ஒளியற்றுப் போவதுபோலப், பெருமை பொருந்திய கதிரவனவன், தன் கதிர்களோடு வந்து கார்மேகக் கூட்டத்திலே மறைந்தனன்! வானகத்துத் தாரகைகள் தம்முடைய தண்மை பொருந்திய ஒளிமழுங்கிப் போயினவையாயின! பெண் உருவாகியும், ஆணுருவாகியும், அலியுருவாகியும் விளங்குகின்ற ஒளியானது சேர்ந்துள்ள ஆகாயம் ஆகியும், பூமியாகியும், இத்தனைக்கும் வேறுபட்ட தனியன் ஆகியும், பெருமை பொருந்திய அமுதமேயாகச் சிவபெருமான் நின்றான்! அவனது திருவடிகளைப் பாடி இந்த அழகிய நீரிலே பாய்ந்து நாம் ஆடுவோமாக!

## எங்கு எழுந்தால் என்ன?

உங்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்என்று
அங்கப் பழஞ்சொல் புதுக்கும் எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன்று உரைப்போம் கேள்
எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்கக்
கங்குல் பகல்எங்கண் மற்றொன்றும் காணற்க
இங்கிப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய். 19

'உன் கையிலே இதோ பிள்ளை;. இனி இது உனக்கே அடைக்கலம் ஆகும்' என்று சொல்லிய அந்தப் பழஞ் சொல்லைப் புதுக்குகின்றது எம் அச்சம். அதனால், எம்பெருமானே! உனக்கு ஒன்று சொல்லுவோம்: 'எம் கொங்கைகள் நின்னுடைய அன்பர் அல்லாரது தோள்களைத் தழுவிச் சேராதிருக்கக் கடவனவாக! எம் கைகள் உனக்கே அல்லாது பிறருக்கு எந்தப் பணியையும் செய்யாதிருக்கக் கடவனவாக! இரவிலும் பகலிலும் எம்முடைய கண்கள் நின்னையன்றி வேறொன்றையும் காணாதிருக்கக் கடவன! எம் இறைவனே! இவ்விடத்து இந்தத் தன்மையாகவே எமக்கு அருள் செய்வையானால், ஞாயிறு எந்தத் திசையிலே எழுந்தாலும் எமக்கு என்ன? (ஒரு குறையும் வாராது என்பது கருத்து.)

## போற்றி! போற்றி!

போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்!
போற்றி அருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள்!
போற்றி எல் லாஉயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்!
போற்றி எல் லாஉயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்!

போற்றிஎல் லாஉயிர்க்கும் ஈறாம் இணையடிகள்!
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்!
போற்றியாம் உய்யஆட் கொண் டருளும் பொன்மலர்கள்!
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்! 20

*நினது முதன்மையாகிய திருவடிமலர்களை எமக்கு அருள் செய்வாயென வணங்குகின்றோம்! நினது முடிவாகிய செந்தளிர்போலும் திருவடிகளை எமக்கு அருள் செய்வாயாக என்று போற்றுகின்றோம்! எல்லா உயிர் இனங்களுக்கும் தோற்றமாக விளங்குன்ற நின்பொன்னடிகளை வணங்குகின்றோம். எல்லாச் சீவர்களுக்கும் இன்பந்தருவனவாக விளங்குகின்ற நின் அழகிய திருவடிகளை வணங்குகின்றோம்! எல்லா உயிர்களுக்கும் இறுதியுமாகிற நின் இணையடிகளை வணங்குகின்றோம்! திருமாலும் நான்முகனும் காணாத நின் திருவடித் தாமரைகளை வணங்குகின்றோம்! யாம் உய்தியடையுமாறு எம்மை அடிமைகொண்டு அருள்பாலிக்கின்ற, அழகிய நின் மலரடிகளைப் போற்றுகின்றோம்! இவ்வண்ணம் போற்றியவாறே நாமெல்லாம் மார்கழி நீர் ஆடுவோமாக!*

# 8. திருவம்மானை

## ஆனந்தக் களிப்பு

(ஒப்புமைபற்றி வந்த ஆறடித் தரவு)

*[தமிழகச் சிறுமியரின் விளையாட்டுக்களுள் அம்மனை ஆடுதலும் ஒன்று. இது, இல்லிலிருந்து பொழுதுபோக்காக ஆடிக் களிப்பது. கழற்சியாடுதல் வேறு; இது வேறு. சந்தத்துடன் கூடிய பாட்டுடன் இந்த ஆடல் நிகழ்தலைக் கண்டிருந்த மணிவாசகர், இறைவனைக் கண்ட தமது ஆனந்த மேலீட்டினைச் சொல்லுவதற்கும், இந்தத் துறையினை மேற்கொள்ளுகின்றனர். இது, திருவண்ணாமலையில் அருளிச் செய்யப்பட்டது.]*

**செங்கண் நெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய**
**பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி**
**எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொண்டு**
**தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்**
**அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடருளும்**
**அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்.** 1

*அம்மானாய்! சிவப்பான கண்களை உடையவனான நெடுமாலும், சிவனடிகளைக்காணும்பொருட்டாக வராகவடிவினன் ஆகினான். நிலத்தைத் தோண்டியுஞ் சென்றான். அப்போது அவனுக்கும் காண்பதற்கு அரியதாகிய சிறப்புடன் சிவனடிகள் விளங்கின. ஒளிவிளங்கும் தாமரைமலரினைப் போன்ற அந்தத் திருப்பாதங்கள், எம்பொருட்டாகப், பூதலத்தே நாம் காண எழுந்தருளி வந்தன. எங்கள் பிறவித்தளையினை அறுத்து, எங்கள் அடியவர் கூட்டத்தையும் தமக்கு அவை அடிமை கொண்டன. தென்னை மரங்கள் செறிவுற்று இலங்கும் சோலைகளாற் சூழப்பெற்றுள்ள, அழகும் நன்மையும் வாய்ந்த, திருப் பெருந்துறையினை உடையவனாகிய சிவபெருமான், அழகிய திருநோக்கினனாகியும், சிறந்த பேரருளாளனாகியும், எங்களை அறைகூவி அழைத்து வீட்டின்பத்தை அருள்பவனாகியும், அவ்விடத்தே, எங்கள் முன்வந்து தோன்றினான்! அழகிய, கருணைததும்புகின்ற, நெடிய கழல்அணிந்த அவனுடைய அத்திருவடிகளையே, நாமும் இப்போது போற்றிப் பாடுவோமாக! ['திருமாலும் காணற்கு அரிதாயிருந்த*

சிவனடிகளை, யாம் எளிதாகவே காணும்படியாக, அவன் தானே எழுந்தருளி வந்து காட்டி, எம்மையும் ஆட்கொண்டு வீடுபேறு அருளினன். அத்தகையவனாகிய பெருந்துறைப் பெருமானின் திருவடிகளைப் போற்றிப்பாடி நாமும் அம்மானை ஆடுவோம்' என்பது கருத்து. அந்தணன்-அழகிய தட்பத்தினை உடையவன். எந்தரம்-எமது கூட்டம்; 'எமது பரிபக்குவ நிலை' எனவும் உரைப்பர். 'தென்னன்-தென்திசைக்கு விருப்பினனும் ஆம்;'தென்னாடுடைய சிவனே' என முன்னர்க் கூறியதனையும் நோக்குக.]

**பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்**
**ஆராலுங் காண்டற் கரியான் எமக்கெளிய**
**பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி**
**வாரா வழியருளி வந்தென் உளம்புகுந்த**
**ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்**
**பேராசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய்.** 2

அம்மானாய்! நிலவுலகிலே உள்ளவர்களும், வானுலகிலே உள்ளவர்களும், பாதாள உலகிலே உள்ளவர்களும், இவற்றிற்குப் புறத்தேயிருப்பதான பிறபிற உலகங்களிலே உள்ளவர்களுமாகிய யாவராலும், காணுவதற்கு அரியவனாகி விளங்கும் பெருமான், சிவபிரான்! அவனே, எங்கட்குக் காணுதற்கு எளிதானவனாக வந்தருளிய பெருமையினை உடையவனும் ஆவான்! அழகும் நன்மையும் வாய்ந்த திருப்பெருந்துறையில் வீற்றிருப்பவனாகவும் அவன் இருப்பான்! அவன், எம்மைச் சிவநேயத்தாற் பித்தேறுமாறும் செய்தான். மீண்டும் பிறவி வராமைக்குக் காரணமாகிய முத்திநெறியினையும் எமக்கு அருளிச் செய்தான். என் மனத்துள்ளே வந்து புகுந்து, தெவிட்டாத அமுதாகியும் நிறைந்தனன்! கொந்தளிக்கும் கடலினிடத்தே, மீனின் பொருட்டாக வலை வீசின, பெருங்கருணைக் கடலாக இருக்கும் அத்தகையானையே நாமும் இப்போது பாடுவோமாக! ['எவ்வுலகத்தாராலும் காணற்கரிய பெருமான், யாம் காணற்கு எளிதாக வந்து அருளிச்செய்து, எமக்கு வீட்டுநெறியும் காட்டினன். அத்தகையவனின் சிறப்பினையே பாடி நாம் ஆடுவோமாக' என்பது கருத்து. மூவேறு உலகத்தவரையும் குறித்துப் பின்னரும் 'புறத்தார்' என்றது, முனிவர்கள் முதலாயினோரை என்பர்.]

**இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்**
**அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி**
**எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்**

**சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்**
**பந்தம் பறியப் பறிமேற்கொண் டான்தந்த**
**அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய். 3**

*அம்மானாய்! தேவர்கோமானாகிய இந்திரனும், திருமாலும், பிரமனும், மற்றைய கடவுளரும், தேவர்களும், ஆகியோரை எல்லாம் விண்ணுலகத்தேயே நிற்கச்செய்த சிவபெருமான், இம் மண்ணுலகினிடத்தே, தானே வந்து நம்பொருட்டாக எழுந்தருளினான். எம்அடியவர் கூட்டத்தையும் தனக்கு அடிமையாக்கிக் கொண்டான். திருத்தோளிலே பூசிய திருவெண்ணீற்றினை உடையவனாக, சிந்தனையை உருகச் செய்கின்ற சிறப்புப் பொருந்தியவனாக, வநதிருந்த அவனே திருப்பெருந்துறையி னிடத்தேயும் வீற்றிருப்பவன்! எம் பிறவித்தளையானது ஒழியுமாறு, குதிரையூர்ந்து வந்தவனாகிய அவன், தானே வந்து அவ்வாறு கொடுத்தருளின முடிவில்லாத சிவானந்தத்தைப் போற்றி,நாமும் இப்போது பாடுவோமாக! ['இந்திரன் முதலிய இறையவர் வானகத்தே அறியாராய் மயங்கிநிற்க, மண்ணகத்திற்கு, நாம் காணுமாறு எழுந்தருளிவந்து, எம்மை ஆட்கொண்டு, குதிரைச் சேவகனாகியும் எழுந்தருளி, எம் பிறவியையும் அறுத்து, எம்பால் இன்பம் நிறைத்தவன் சிவபிரான். அவன் அளித்த அந்த இன்பத்தையே போற்றி நாம் பாடுவோமாக!' என்பது கருத்து. பறிதல்-நழுவுதல். 'பரிமேற்கொண்டான்' என்றது, குதிரைச் சேவகனாகி, மதுரையில் எழுந்தருளிய அவனது திருவிளையாடலை.]*

**வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனுங்**
**கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய**
**தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு**
**ஊன்வந்து ரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து**
**தேன்வந் தமுதின் தெளிவி னொளிவந்த**
**வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 4**

*அம்மானாய்! வானகத்துள்ள தேவர்களும், திருமால் பிரமர்களோடு இந்திரனும், காட்டிடத்தே நின்று உடல் வற்றித் தவம்புரிந்தும், தம்மீது புற்று வளரப்பெற்றவராக நெடுங்காலம் நோன்பு பூண்டும், காணுதற்கு அருமையாளனாக விளங்கியவன் எங்கள் பெருமான்! அவன், தானே முற்பட்டு வந்து, நாயினேனைத், தாயைப்போலத் தலையளி செய்து காத்தருளினான். உடலிடத்தே மயிர்சிலிர்க்கவும், உள்ளத்துள்ளே நெடுடுயிர்ப்பு ஏற்படவுமாகத், தேனினைப் போன்ற இனிமையுடனே வந்தும் என்பாற் கலந்தனன். அமுதத்தின் தெளிவினைப்போல, ஒளியுருவினனாக எழுந்தருளி*

*வந்த, மேன்மையமைந்த அப்பெருமானின் பெருமைமிகுந்த திருவடிகளையே, நாம் இப்போது பாடுவோமாக! ['கடவுளர்கள், கணக்கில் காலம் தவஞ்செய்தும் காண்பதற்கு அரிதாகிய பெருமான், தானே எளிதாக வந்து எமக்கு அருளிச் சிவானந்தத் தேனையும் எம்பால் நிறைத்தனன். அந்தக் கருணையினைப் போற்றி யாம் பாடுவோமாக' என்பது கருத்து. ஊன்-தசை; அது உடலுக்காயிற்று.]*

**கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை**
**வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்**
**கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை**
**வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்**
**தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம்மன்னும்**
**ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய்.** 5

*அம்மானாய்! மெய்ப்பொருள் நூற்களைக் கல்லாத மனத்தையுடைய, கீழ்ப்பட்ட நாயினைப்போன்ற என்னையும், பேராற்றல் உடையவனாகிய சிவபெருமான், அழகும் நன்மையுமுடைய பெருந்துறையானாக இருப்பவன், பித்தேறுமாறு செய்தனன். 'கல்லைப் பிசைந்து கனியாக்கியது'போல, என் கன்மனத்தையும் கனிவித்துத் தன் கருணையாகிய வெள்ளத்தினுள்ளேயும் ஆழ்வித்தனன். என் வினைகளை நீக்கியருளிய அந்தணனானும் அவனே! தில்லைப் பதியிடத்தே புகுந்து, சிற்றம்பலத்திலே நிலைபெற்று விளங்கும், விரையச் செல்லுதலையுடைய அந்த இடபவாகனனையே, நாமும் இப்போது பாடுவோமாக! ['கல்லைக் கனிவித்துப் பயன்படும் கனியாகச் செய்த தன்மையினைப்போல, என் கன்மனத்தையும் தன்பாற் கனியுமாறு செய்தருளிப், பயனுடையதாக்கி ஆட்கொண்ட பெருமானைப் பாடுவோம்' என்பது கருத்து. வல்லாளன்- சர்வ வல்லமை உள்ளவன். 'கல்மனம்' என்றது, உய்திபெறுதலை நாடுகின்ற பக்குவத்தை அடையாதிருந்த தன்மைபற்றியாகும்.]*

**கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்**
**தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்**
**காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்**
**தாள்தா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி**
**நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடெய்த**
**ஆள்தான்கொண் டாண்டவா பாடுதுங்காண் அம்மானாய்.** 6

*அம்மானாய்! தோழியே! ஒருவன் எம்பாற் செய்த மாயத்தினையும் நீ கேட்டனையோ? தீட்டிய சுதைபொருந்திய மதில்கள் பக்கங்களில் சூழ்ந்திருக்க விளங்கும், அழகும் நன்மையும்*

வாய்ந்த, திருப்பெருந் துறையானாகிய அவன், எமக்குக் காட்டத் தகாதனவாய மறைப்பொருள்கள் அனைத்தையும் காட்டினான்! தான் சிவமாதலையும் எமக்குக் காட்டினான்! தன் திருவடித் தாமரைகளையும் எமக்குக் காட்டினான்! தன் கருணையாகிய தேனையும் எமக்கு ஊட்டினான். உலகினர் நம்மைக் கண்டு சிரிக்கவும், நாம் மேலுலகினைச் சென்று அடையவுமாக நம்மைத் தனக்கே அடிமையாக்கியுங் கொண்டான்! அந்த, அவனது அருட்செயலினை நாம் இப்போது பாடுவோமாக! ['அவனருளை அடைதற்கேற்ற பரிபக்குவ நிலையினை அடையாதிருந்த எமக்கு, அவனே எளிவந்து கருணைகாட்டிக் கனிவித்து ஆட்கொண்டான்; அந்தக் கருணையினைப் போற்றிப் பாடுவோம்' என்பது கருத்து. கிறி-மாயம் 'நாட்டார் நகைசெய்ய' என்றது, 'அன்பரை ஆளும் பெருமான், அன்பற்ற தம்மையும் ஆட்கொண்டதான செயலினை நினைந்து உலகினர் நகைப்பர்,' என்பதனால்.]

**ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்**
**சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்**
**மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை**
**நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்**
**தாயான தத்துவனைத் தானே உலகேழும்**
**ஆயானை ஆள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய். 7**

அம்மானாய்! இடையறாது நினைப்பவர்தம் நெஞ்சத்திலே நீங்காது வீற்றிருக்கும் உள்ளீடாகிய பெருமானை, அங்ஙனம் நினையாதவர்க்குத் தொலைவாயிருக்கின்ற தன்மையனை, மாவீரனை, அழகும் நன்மையும் வாய்ந்ததிருப்பெருந்துறையில் எழுந்தருளி இருப்பவனாகிய அந்தணனை, உமையானவள் தன் ஒருபாகத்தே இருத்தலால் தான் உடற்பாதியாகவே இருப்பவனை, நாய்போலும் நம்மையும் அடிமைகொண்டவனாகிய அந்தத் தலைவனைத், தாயாகிய தத்துவப்பொருளைத், தான் ஒருவனே ஏழுலகங்களும் ஆகி அவற்றைக் காத்து அருள்பவனுமாய் இருப்பவனை, நாம் இப்போது பாடுவோமாக! ['அன்பர்க்கு அணுக்கனாகிய பெருமானை, மற்றும் குறித்த அரும்பெருஞ் செயல்களை எல்லாம் உடையவனைப் பாடுவோம்' என்பது கருத்து. இடையறாது தொடர்தல்பற்றி அடியவர்க்கு 'நாய்' என்னுஞ் சொல்லினை அடிகள் அடிக்கடி கையாளுகின்றனர் போலும்!]

**பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்**
**பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்**
**விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்**

**கண்சுமந்த நெற்றிக்கடவுள் கலிமதுரை**
**மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு**
**புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய். 8**

*அம்மானாய்! பண்களைக் கொண்ட பாடல்களைப் பாடுகின்ற பண்பினை உண்டாக்கிஅருளிய பெண்ணைத் தாங்கிய இடப்பாகத்தினை உடையவன் சிவபிரான்! அவன், பெருந்தகைமையினையும் தனக்குரியதாக உடையவன்! பெருந்துறைக்கண்ணும் எழுந்தருளி வீற்றிருப்பவன்! வானகத்து நிறைந்த புகழினையும் உடையவன்! அகன்ற மண்டலங்களுக்கு எல்லாம் அவனே ஆண்டவன்! கண் அமைந்த நெற்றியினையுடைய கடவுளும் அவனேயாவன்! அவன், ஆரவாரமிக்க மதுரைநகரிடத்தே மண்சுமந்து, அதற்கான கூலியையும் பெற்றுக்கொண்டு, அந்தப் பாண்டிய அரசனால் அடியுமுண்டு, அதனால் ஏற்பட்ட புண்கள் விளங்கும் பொன் மேனியினனாகவும் அன்று விளங்கினான். அத்தகைய திருமேனி உடையவனையே நாமும் இப்போது பாடுவோமாக! [விண்சுமந்த கீர்த்தி வியன்மண்டலத்து ஈசனாகிய அவன், அடியவள் ஒருத்திக்காக மண்சுமக்கும் கூலியாளாகி, மன்னனால் அடிபட்டுப் புண்பட்ட மேனியினனாகவும் ஆயினான்! அத்தகைய அளப்பருங் கருணையாளனை, அடியவர்க்கு அடியனாகி உதவுகின்ற பண்பினனை, நாம் பாடுவோமாக' என்பது கருத்து. பாடற் பரிசு-பாடல் வகையும் ஆம்.]*

**துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்**
**கொண்ட புரிநூலான் கோலமா ஊர்தியான்**
**கண்டங் கரியான்செம் மேனியான் வெண்ணீற்றான்**
**அண்டமுத லாயினான் அந்தமிலா ஆனந்தம்**
**பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்**
**அண்டம் வியப்புறுமா பாடுதுங்காண் அம்மானாய். 9**

*அம்மானாய்! ஒற்றைக் கலையாகிய பிறைத்துண்டத்தினைத் தன் சடையிடத்தே அணிந்தவன்! வேதப் பொருளாகவும் தானே இருப்பவன்! பெருந்துறையில் கோயில் கொண்டும் இருப்பவன்! தரித்த முப்புரி நூலினையும் உடையவன்! அழகான இடபவாகனத்தையும் உடையவன்! நீலகண்டத்தையும் உடையவன்! செம்மையான திருமேனியும் கொண்டவன்! வெண்மையான திருநீற்றினையும் அணிந்திருப்பவன்! உலகத் தொகுதிகட்கு எல்லாம் முதல்வனாகவும் விளங்கியவன்! எல்லையற்ற பேரின்பத்தைத் தன்னுடைய பழவடியார்கட்குத் தந்தருளுகின்றவனான அவனது, அந்தச்*

சிறப்பினை, உலகமெல்லாம் அதிசயிக்குமாறு நாம் போற்றிப் பாடுவோமாக! [‘இறைவன், தன் அடியவர்க்கு ‘அந்தமில்லா ஆனந்தத்தை’ அளிக்கின்ற அந்தக் கருணையினை வியந்து நாம் பாடுவோமாக’ என்பது கருத்து. பழஅடியார்-முற்பட்ட பலப்பல பிறவிகளிலும் அடியவராகவே இருந்து, இப்பிறப்பினும் அவனுடைய அடியவராக விளங்குபவர். ‘பழவடியார்க்கு ஈந்தருளும்’ என்றதனால், அவரல்லாத பிறருக்கு அதனைத் தருவதிலன் என்பதும், அவர் இடையறாது முயலுதல் வேண்டுமென்பதும் கூறினார். இதுபற்றியே தம்மைப் ‘புத்தடியோம்’ என்பர் அடிகள்.]

விண்ணாளுந் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளும் மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 10

அம்மானாய்! வானங்களை ஆளுகின்ற தேவர்தலைவர்கட்கும் மேற்பட்டவனாகிய வேதப்பொருள் ஆகியவனை, மண்ணகத்தே ஆட்சி செய்துவருகின்ற மன்னவர்கள் பலருக்கும் மாட்சிமைப்பொருளாகி நிலைபெற்றுள்ளவனைத், தட்பம் அமைந்த தமிழ்மொழியினை வளர்க்கின்ற தண்மையாகிய பாண்டிவள நாட்டினை உடையவனை, உமாதேவியாரால் ஆளப்படுகின்ற இடப்பாகத்தினை உடையவனை, யாவரும் விரும்புகின்ற திருப்பெருந்துறையிலே கோயில்கொண்டு இருப்பவனைப், பெருமைபொருந்திய திருவடிகளைக் காட்டி நாயினேனையும் தனக்கு அடிமை செய்துகொண்ட திருவண்ணாமலையில் உள்ளவனை, யாமும் போற்றிப் பாடுவோமாக! [‘எல்லார்க்கும் மேம்பட்ட சிறப்பினனாக இருந்தும், எமக்கு எளியனாகியே வந்து, கடைப்பட்ட எம்மையும் ஆண்டருளியவனைப் போற்றிப் பாடுவோம்’ என்பது கருத்து. மாண்பு-மாட்சிமைப் பொருள். ‘பாண்டி நாட்டான்’ என்றது. இறைவனே பாண்டியனாக வந்திருந்து ஆண்டதாகிய திருவிளையாடலை உளங்கொண்டு உரைத்ததாம்.]

செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினான்
அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த
அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக வொப்புவித்த உள்ளத்தா ருள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய். 11

அம்மானாய்! செப்பினைப்போலும் திரட்சியமைந்த தனங்களையுடைய உமையம்மையினைத் தன்மேனியின் ஒருபாகமாக உடையவன்; அழகும் நன்மையும் பொருந்திய திருப்பெருந்துறையினை உடையவன்; தன் திருவடிகளை அடைந்தவர்களது உள்ளத்தைத் தவறாமல் உருகப்பண்ணுகின்ற தன்மையினன்; அந்தப் பாண்டிநாட்டையே சிவலோகமாகச் செய்தருளியவன்; கங்கைநதி தங்கிய சடாபாரத்தை உடையவனாகிய அப்பன்; பேரின்பத்தினைத் தருதற்குரிய தனது நெடிய திருவடிகளையே ஒப்புக்கொள்ளுதற்கான பொருளாகக் கொண்டு, அதனிடத்தே தம்மை ஒப்புவித்த உள்ளத்தவர்களது அகத்தே, தான் குடிகொண்டிருக்கின்றவன்; எல்லாவற்றுக்கும் அப்பாலாகிய அப்புறத்துக்கும் அப்புறமாக இருப்பவன்; அத்தகைய பெருமானையே யாமும் இப்போது பாடுவோமாக! ['தன்னை அடைந்தவரது உள்ளத்துட் கலந்து உறைகின்ற இறைவனின் பெருமைகளை நினைந்து, நாம் போற்றிப் பாடுவோமாக' என்பது கருத்து. செப்பு-சிமிழ். அப்பாலைக்கு அப்பாலை-சுட்டுணர்வால் அறியப்படும் அனைத்தையும் கடந்திருப்பவன் அவன் என்பது கருத்து.]

மைப்பொலியுங் கண்ணிகேள் மாலயனோ டிந்திரனும்
எப்பிறவி யுந்தேட என்னையுந்தன் இன்னருளால்
இப்பிறவி ஆட்கொண் டினிப்பிறவா மேகாத்து
மெய்ப்பொருட்கண் தோற்றமாய் மெய்யே நிலைபேறாய்
எப்பொருட்குந் தானேயாய் யாவைக்கும் வீடாகும்
அப்பொருளாம் நஞ்சிவனைப் பாடுதுங்காண் அம்மானாய். 12

அம்மானாய்! அஞ்சனமை தீற்றியதாக விளங்கும் கண்களை உடையவளே! கேட்பாயாக: அரிபிரமர்களோடு இந்திரனும் எவ்வகைப் பிறவிகளினும் தேடாநிற்கவும், அவர்கட்குத் தோன்றாதிருப்பவனாகிய பெருமான், என்னையும், தன்னுடைய இனிதான கருணைப்பெருக்கினாலே, இந்தப் பிறப்பில்தானே எழுந்தருளிவந்து அடிமை கொண்டனன்! இனி, யான் பிறவி எடுக்காவாறும் என்னைக் காப்பாற்றினன்! மெய்ப்பொருள்களின் கண்ணே தான் தோற்றுபவனாகியும், மெய்யே தனக்குரிய நிலைபேறாக உடையவனாகியும், எப்பொருளுக்கும் தானே முதல்வனாகியும், யாவைக்கும் தானே முத்திநிலையாகியும் விளங்குகின்ற அந்தப் பரம்பொருளாகிய நம் சிவபெருமானையே, நாமும் இப்போது பாடுவோமாக! ['என்னைப் பிறவியறுத்துக் காத்து அடிமைகொண்ட மெய்ப்பொருளினைப் போற்றிப் பாடுவோம்' என்பது கருத்து. ஆதியும் அந்தமுமாகிய ஆண்டவனது தன்மையினையே, முதல்வனும் முத்திநிலையுமாகியவன் எனக் குறித்தனர். அவன்

மெய்ப்பொருள் ஆகவே, பிறவெல்லாம் பொய்ப்பொருள் என்பதனையும் அறிதல்வேண்டும் ]

கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை எங்குஞ் செறிந்தானை அன்பர்க்கு
மெய்யானை அல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய். 13

*அம்மானாய்! நம் கைகளிலே விளங்கும் வளையல்கள் ஒலி முழங்கவும், நம் காதுகளிலே விளங்கும் குழைகள் அசைந் தாடவும், கருமை பொருந்திய நம் கூந்தல்கள் அவிழ்ந்து முதுகிடத்தே கிடந்து புரளவும், அதனிடத்து விளங்கும் மலர்களினின்றும் தேனானது பெருகி ஓடவும், அம் மலர்களி லிருந்த வண்டுகள் எழுந்து ஆரவாரிக்கவும்—*

*செம்மேனியனைத், திருவெண்ணீறு அணிந்தவனை, உயிர் கள் தாமாகச்சென்று சேர்ந்து அறிதற் கியலாத இடத்தை உடையவனை, எவ்விடத்தும் செறிவுற்று நிற்பவனை, அன்பர் கட்கு மெய்ப்பொருளாக விளங்குபவனை, அன்பரல்லாத, பிறருக்கு அங்ஙனம் விளங்குதலில்லாத அந்தணனைத். திருவையாற்றில் அமர்ந்திருக்கும் சிவபிரானை, நாம் போற்றிப் பாடுவோமாக! ['இறைவனைப் பாடியவாறு நாம் அம்மனை விளையாடுவோமாக' என்பது கருத்து. கையார் வளைசிலம்ப முதலியன அம்மனை ஆடுதலால் ஏற்படுவன. 'தேன்பாய வண்டொலிப்ப' என்றதனால், 'தேன் பெருகிப் பாய்கின்ற ஆரவாரத்திற்கு அஞ்சி வண்டினம் ஒலிசெய்ய' எனப் பொருள்கொள்ளலும் பொருந்தும்.]*

ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை
ஊனையும் நின்றுருக்கி என்வினையை ஓட்டுகந்து
தேனையும் பாலையுங் கன்னலையும் ஒத்தினிய
கோனவன்போல் வந்தென்னைத்தன்தொழும்பிற் கொண்டருளும்
வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 14

*அம்மானாய்! பேருருவுடைய யானையாகியும், சிற்றுருவு டைய புழுவாகியும், ஆறறிவுடைய மனிதராகியும், பருவுடலற்ற வானவராகியும், மற்றுமுள்ள பிறபிற உயிர் களாகியும் பிறந்தும் இறந்தும் களைத்துப்போயின என்னையும் அவன் வந்து ஆட்கொண்டனன்! என் உள்ளத்தை மட்டு மன்றி என் உடலினையும் நிலையாகக் கசிந்து உருகச்செய் தனன். என் வினைகளை ஓட்டுதலையும் விரும்பித், தேனும்*

பாலும் கன்னலும்போல இனிமைகொண்ட தலைவனாகிய அவன் எழுந்தருளினன். என்னைத் தன்னுடைய தொண்டர் கூட்டத்துள் சேர்த்துக்கொண்டு, அருளுகின்ற, அத்தகைய மேலோனது மலரடிகளையே, நாமும் இப்போது பாடுவோமாக! ['பற்பல பிறவிகளிலும் பிறந்து பிறந்து இளைத்த என்னையும் தடுத்தாட்கொண்டு பிறவிநீத்துக் காத்தவனின் புகழினைப் போற்றிப் பாடுவோம்' என்பது கருத்து.]

சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட் டெச்சன் தலையரிந்து
அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை ஓட்டுகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய். 15

அம்மானாய்! தக்கனது வேள்வியிலே, சந்திரனைத் தேய்த்து அருளியும், இந்திரனைத் தோள்கள் நெரியும்படி தாக்கியும், யாகத்தலைவனின் தலையினை அரிந்தும், அந்தரத்தே செல்லுகின்ற இயல்பினையுடைய பகலவனின் பற்களை உடைத்தும், பிறபிற தேவர்களை நாற்றிசைகளிலும் சிதறுண்டு ஓடச் செய்தும் நிகழ்த்தலை அந்நாளில் விரும்பியவன் சிவபிரான்! செவ்விய பூஞ்சோலைகள் பக்கங்களிலே சூழப்பெற்றுள்ள, அழகும் நன்மையும் வாய்ந்த திருப்பெருந்துறையிடத்தே, அடியவர் பொருட்டாகக் கோயில்கொண்டு இருப்பவனும் அவன். அத்தகையவனது மந்தார மாலையினையே நாமும் போற்றிப் பாடுவோமாக! ['தன்னைப் பகைத்துத் தக்கன் செய்ய முனைந்த யாகத்திற்குச் சென்றிருந்த தேவர்களையும் தண்டித்த பெருமான், தன்னை மறந்து புறமாகியே திரிந்த எனக்குத், தானே எளிவந்து அருளினான்; அவனைப் போற்றுவோம்' என்பது கருத்து. எச்சன்-யாகத் தலைவன்.]

ஊனாய் உயிராய் உணர்வாய்என் னுட்கலந்து
தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய். 16

அம்மானாய்! 'ஊன்பிண்டமான உடலாகவும், அந்த உடலினுள்ளே இருக்கின்ற உயிராகவும், அந்த உடலுயிர்ச் சேர்க்கைக்கண்ணே விளங்கும் உணர்வாகவும், என்னுள் கலந்துநிற்பவன் சிவபெருமான்! தேனாகவும், அமுதமாகவும்,

இனிக்கும் வெல்லக் கட்டியாகவும் என்னுள் கலந்து எனக்கு இனிமை சேர்த்தவனும் அவனே! வானோர்களும் அறிந்திராத வீட்டுநெறியினை எமக்குத் தந்தருளுகின்றவனும் அவனே! வண்டுகள் ஆரவாரிக்கும் மலர்களையுடைய கொன்றை மாலை யினை அணிந்த அண்ணலாகவும், சிறந்த விளக்கம் அமைந்த அளவற்ற அறிவுருவனாகவும் இருப்பவனும் அவனே! அளவற்ற பல்வகையான உயிர்கட்கும் தலைவனாகி நிற்பவனும் அவனே! அத்தகைய பெருமானைப் பாடி, நாமும் அம்மானை யாடுவோமாக! ['தேவரும் அறியாத வீட்டுநெறியினைக் காட்டி, எமக்குப் பேரின்ப நிலையாகிய இனிமையினைச் சேர்த்த சிவபெருமானின் புகழைப் பாடுவோம்' என்பது கருத்து.]

சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்
றூடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய். 17

அம்மானாய்! அழகிய கொன்றை மாலையினைத் தலையிற் சூடுவேன்! சிவனுடைய திரட்சியான தோள்களைத் தழுவிக் கூடுவேன். கூடி, அவனைத் தழுவி, அந்தக் களிப்பினால் மயங்கிநின்று, பின்னர் அவனுடனேயே ஊடுவேன்! அதன் பின்னர், அவனுடைய சிவந்த வாயிதழ்களைப் பெறுவதற்கு உருகியும் நிற்பேன்! உள்ளம உருகியவாறே அவனைத் தேடி யும் அலைவேன்! அப்படித் தேடி அலையும் போதெல்லாம் சிவனடிகளையே சிந்தித்தும் இருப்பேன்! அவனை அடையாத போது வாடுவேன்; அடைந்தபோதோ மகிழ்வேன்! என் காதலனாகிய, கையில் நெருப்பினை ஏந்தி ஆடுகின்ற அவனது சிவந்த திருப்பாதங்களையே நாமும் போற்றிப் பாடுவோமாக! ['இறைவனை அடைந்தபோது மகிழ்வேன்; அவன் கூடிப் பிரிந்த பின்போ கலங்குவேன்; அவனடிகளைப் போற்றி நாம் பாடுவோமாக' என்பது கருத்து. தன்னைத் தலைவியாகவும் சிவனைத் தலைவனாகவும் கொண்டு உரைத்தது இது.]

கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மாலயனும் காண்பரிய வித்தகனைத்
தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் உள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய். 18

அம்மானாய்! கிளியின் முதிராத மழலையினைப்போல மென்மொழிகளைப் பேசுகின்ற உமையம்மையின், ஒளிவிளங்கும் இடப்பாகத்தினை உடையவனை; வெளிவந்து முயன்ற திருமாலும் பிரமனும் காணற்கு அரிதாகி அன்று நின்ற அறிவனை; அனைவருக்கும் தெளிவுதருகின்ற தேனை; பெருந்துறையில் எமக்கு எளிதாகுமாறு வந்து தோன்றி, என்னை விரும்பி, எனக்காக இரக்கப்பட்டு, நினைத்தற்கும் அரிதான இன்னருளினாலே ஒளியுருவனாகத் தோன்றி, என்னுடைய உள்ளத்தின் உள்ளேயும் ஒளிவிளங்குமாறு அருள்புரிந்த அந்தணனாகிய சிவபெருமானை; நாம் இப்போது பாடுவோமாக! ['நமக்கு இரங்கித், தானே வந்து தோன்றி அருள்புரிந்த சிவபெருமானைப் போற்றிப் பாடுவோம்' என்பது கருத்து. பிற தேறல்கள் மயக்கத்தை விளைவிப்பன. சிவப்பெருந் தேறலோ தெளிவினைத் தருவது. அதனால், 'தெளிவந்த தேறல்' என்றனர்.]

முன்னானை மூவர்க்கும் முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
என்னானை என்னப்பன் என்பார்கட் கின்னமுதை
அன்னானை அம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய். 19

அம்மானாய்! முப்பெரும் கடவுளர்க்கும் முற்பட்டவனாகிய பரம்பொருளை, எல்லாப் பொருளுமாகவும் அவை எல்லாவற்றுக்கும் பிற்பட்டவனாகவும் விளங்குபவனைத், தலைக்கோலம் உடையவனை, விரும்பத்தக்க திருப்பெருந்துறையிலே பொருந்தியிருந்தவனை, சிதாகாயத்து உள்ளவனை, மாது பொருந்திய இடப்பாகத்தை உடையவனை, அழகிய திருவானைக்காவில் உள்ளவனை, தென்பாண்டி நாட்டினை உடையவனை, எனக்கு இனியானை, 'என் அப்பனே' என்று அழைப்பவர்கட்கு இனிக்கும் அமுதாக ஆவானை, அத்தகைய மேலோனையே, நாமும் பாடுவோமாக! ['அப்பனே! என அன்பால் அழைப்பவர்கட்கு இனிக்கும் அமுதாகின்ற பெருமானைப் பாடுவோம்' என்பது கருத்து. 'மாது' என்றது அருட்சக்தியாகிய உமையம்மையை. ஆதியும் அந்தமுமான அளப்பில் ஆற்றலுடைய முதல்வனாகியபோதும், அவன், அடியார்க்கு எளியனாகி வந்துதவும் அளப்பரிய பெருங்கருணையினனும் ஆவான் என்க.]

பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய்.

*அம்மானாய்! 'இன்ன தன்மையன்' என்று அன்பரல்லாத பிறருக்கு அறிதற்கும் அரியவனான பெருமானாகிய அவனே, திருப்பெருந்துறையிடத்தே நாம் காணுமாறு வந்து எழுந்தருளி இருந்தனன்; வெற்றிக் குதிரையின் மேலாக எழுந்தருளி வந்து, தன்னுடைய அடியவரது குற்றங்களை நீக்கி, அவர்களுடைய நற்குணங்களை ஏற்று அவரைச் சீராட்டினன்; பற்பல பிறவிகளினும் வந்துசூழ்ந்த குடும்பத் தொடர்பினை அறுப்பவனான, அத்தகையவனின் பழமையான புகழினையே பாடற்பொருளாகக் கொள்வோம். பாசமானது அறவே நீங்குமாறு, நாம் அவனை அடையும்பொருட்டாக, நம்மைத் தானேவந்து பற்றிக்கொண்ட, அந்தப் பேரின்பத்தினையே நாமும் இப்போது பாடுவோமாக! ['நாம் பற்றறப் பற்றுவான் நம்மைப் பற்றிய பேரானந்தத்தைப் பாடுவோம்' என்பது கருத்து. பெற்றி-தன்மை. குணம்-நற்குணம்; அது இறையடி சேர்தலான ஒழுக்கம்.]*

# 9. திருப் பொற்சுண்ணம்

(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

*[இதுவும் அடிகள் தில்லையில் அருளியதேயாகும். இறைவனுக்குப் பெண்கள் பொற்சுண்ணம் இடிப்பதாகவும், அப்போது அவர்கள் அவனைப் போற்றிப் பாடுவதாகவும் அமைந்தது இது.]*

முத்துநல் தாமம்பூ மாலைதூக்கி
முளைக்குடந் தூபம்நல் தீபம்வைம்மின்
சத்தியும் சோமியும் பார்மகளும்
நாமக ளோடுபல் லாண்டிசைமின்
சித்தியுங் கௌரியும் பார்ப்பதியும்
கங்கையும் வந்து கவரிகொண்மின்
அத்தன் ஐயா றன்அம் மானைப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 1

*நன்முத்துக்களால் தொடுக்கப்பெற்ற முத்துமாலைகளையும் பூமாலைகளையும் எங்கணும் தொங்கவிடுங்கள்! முளைக்குடம் தூபம் சிறந்த தீபம் ஆகியவற்றை முறைப்பட வையுங்கள்! சத்தியும் சோமியும் நிலமகளும் நாமகளோடு கூடிப் பல்லாண்டு பாடுங்கள்! சித்தியும் கௌரியும் பார்வதியும் கங்கையும் வந்து வெண்சாமரம் இரட்டுங்கள்! எமது தந்தையும், திருவையாற்றை உடையவனுமாகிய எம் தலைவனின் புகழைப்பாடி ஆடுதற்பொருட்டுத் திருப்பொற்சுண்ணத்தை நாம் இடிப்போமாக! [முளைக்குடம்-முளைப் பாலிகை. தாமம்-மாலை. சோமி-திருமகள். பார்மகள்-நிலமகள். சித்தி-கணபதியின் சக்திகளுள் ஒன்று. பொற்சுண்ணம்-முழுக்காட்டுதற்குப் பயன்படுத்தப்படும் மணப் பொடி.]*

பூவியல் வார்சடை எம்பிராற்குப்
பொற்றிருச் சுண்ணம் இடிக்கவேண்டும்
மாவின் வடுவகி ரன்னகண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் தொண்டர் புறநிலாமே
குனிமின் தொழுமினெங் கோனெங்கூத்தன்
தேவியுந் தானும்வந் தெம்மையாளச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. 2

*அழகுவிளங்கும் நீண்ட சடையினைப் பொருந்திய எம் பெருமானுக்குத் திருப்பொற் சுண்ணத்தை நாம் இடிக்க வேண்டும். மாவடுவின் பிளப்புப்போன்ற கண்களை உடைய வர்களே! அனைவரும் வாருங்கள்! வந்து என்னோடுங்கூடப் பாடுங்கள்! அவன் புகழைக் கூவுங்கள்! தொண்டர்களே! நீங்களெல்லாரும் வெளியே நில்லாதீர்கள்; உள்ளே வந்து பாடி ஆடுங்கள்! பெருமானை வணங்குங்கள். எம் கோமானும் எம் கூத்தப்பிரானுமான அவன், தேவியாரும் தானுமாகஎழுந் தருளிவந்து எம்மை எல்லாம் ஆட்கொள்ளும் பொருட்டாகச் செம்பொன்னின் நிறமாகச் செய்யப்பெறுகின்ற சுண்ணத் தினை நாம் இடிப்போமாக! [பூ-அழகு. மாவடு-மாம்பிஞ்சு. குனித்தல்-ஆடுதல். கூவுதல்-களித்துக் கூவுதல்.]*

சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பக நாட்டியெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடியெடுமின்
அந்தரர் கோன்அயன் தன்பெருமான்
ஆழியான் நாதன்நல் வேலன்தாதை
எந்தரம் ஆளுமை யாள்கொழுநற்
கேய்ந்த பொற்சுண்ணம் இடித்துநாமே. 3

*அழகான திருநீற்றை அணிந்து, திருமெழுக்கிட்டு, தூய தான பொற்பொடியைச் சிதறி, நவநிதிகளைப் பரப்பிவைத்து இந்திரனது கற்பகமரத்தை நாட்டி, எவ்விடத்தும் அழகிய சுடர்விளக்குகளை ஏற்றிவைத்துக் கொடி எடுங்கள்! தேவர் களின் கோமானை இந்திரன், பிரமன் ஆகியோருக்கு முதல் வனாய், திருமாலுக்கு நாதனாய், வேலாயுதப் பெருமானுக்குத் தந்தையாய் விளங்குபவனும், எம் இனத்தை ஆண்டருளு கின்றவனும் ஆகிய, உமையாளின் நாயகனுக்குப் பொருந்திய திருப்பொற்சுண்ணத்தை நாம் இடிப்போமாக! [சுந்தரம்-அழகு. நிதி-நவநிதிகள். எந்தரம்-எம்மொத்த தகுதியினரும் ஆம். ஆழியான்-சக்கரத்தை உடையவன், திருமால்.]*

காசணி மின்கள் உலக்கையெல்லாம்
காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடைய அடியவர்கள்
நின்று நிலாவுக என்றுவாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடிப்
பாச வினையைப் பறித்துநின்று
பாடிப் பொற்சுண்ணம் இடித்துநாமே. 4

உலக்கைக்கு எல்லாம் பூண் அணியுங்கள்! சருங்காலி மரத்திஞல் ஆகிய உரலை மணிவடத்தால் சுற்றி அலங்கரியுங்கள். 'சிவனிடத்து அன்புடைய அடியவர்கள் நிலைபெற்று மேவுக' என்று வாழ்த்தித், தேசம் முழுவதும் புகழ்ந்து கொண்டாடுகின்ற காஞ்சிமா நகரிடத்துள்ள திருவேகம்பனது-செம்பொன் விளங்கும் திருக்கோயிலைப் பாடிப், பாசவினைகளைக் கொய்து நின்று, அவன் புகழினைப் பாடியவாறே, நாம் பொற்சுண்ணம் இடிப்போம் வாருங்கள்! [விழாக்கோலம் கொள்ளும்போது, அதற்காகப் பொற்சுண்ணம் இடிக்கும் உரலையும் உலக்கையையுங்கூட அலங்கரிக்கின்றனர். பாசவினை-வினையாகிய பாசம்.]

அறுகெடுப் பார்அய னும்அரியும்
அன்றிமற் றிந்திர ஞேடமரர்
நறுமுது தேவர்க ணங்களெல்லாம்
நம்மிற்பின் பல்லதெடுக்க வொட்டோம்
செறிவுடை மும்மதில் எய்தவில்லி
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி
முறுவற்செவ் வாயினீர் முக்கணப்பற்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 5

அயனும் அரியும் பெருமானைப் போற்றுதற்கு முதலில் அறுகெடுப்பார்கள். அவர்களையன்றி, இந்திரனேடு பிற அமரர்களும், நல்ல முதிய தேவகணங்கள் யாவும், எமக்குப் பிறகேயல்லாது முன்பாக அறுகெடுக்க யாம் விடவே மாட்டோம். செறிவுடைய மும்மதில்களை எய்தழித்த வில்லினையுடைய திருவேகம்பனின் சொம்பொற் கோயிலைப் பாடிப், புன்சிரிப்புடன் கூடிய சிவந்த வாயிதழ்களை உடையவர்களே! முக்கண்களையுடைய அப்பனைத் முழுக்காட்டுதற்கு நாம் இப்போது திருப் பொற்சுண்ணத்தை இடிப்போம். வருவீர்களாக! [அறுகு-குடவிளக்கு முதலாயின; அறுகம் புல்லுமாம். 'நறுமுது' என்பதனை நறுமுறு எனக்கொண்டு 'நன்மை முறுகுதல் பெற்ற' எனவும் பொருள் கூறுவர். முறுவல்-புன்சிரிப்பு ]

உலக்கை பலஓச்சு வார்பெரியர்
உலகமெ லாம்உரல் போதாதென்றே
கலக்க அடியவர் வந்துநின்ருர்
காண உலகங்கள் போதாதென்றே
நலக்க அடியோமை ஆண்டுகொண்டு
நாணமலர்ப் பாதங்கள் சூடத்தந்த
மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
மகிழ்ந்து பொற்சுண்ணம் இடித்துநாமே. 6

பெரியோர்கள், உலக்கைகள் பலவற்றைக் கைக்கொண்டு ஓச்சுவார்கள்! உலகமெல்லாம் உரலாக அமைந்தாலும் போதாது என்னும்படியாகக், கலந்து கொள்வதற்கு விரும்பிய அடியவர்களும் வந்து நின்றார்கள். அவனும் வந்து அருளினான். அந்த அற்புதக் காட்சியைக் காண்பதற்கு உலகங்கள் பற்றாதென்று கூறலாம். நன்மைசிறக்க அடியேங்களை அவன் ஆண்டுகொண்டு, அவனுடைய அன்றலர்ந்த புதிய மலர்போல விளங்கும் திருவடிகளை எம் தலைமேற் சூடுவதற்கும் தந்தருளினான். மலையரையனுக்கு மருமகனை அவனைப் பாடிப்பாடி உள்ளம் மகிழ்ந்தவர்களாக நாம் இப்போது பொற்சுண்ணம் இடிப்போமாக! [ஓச்சுதல்-உலக்கையிடுதல். நலக்க-நன்மை உண்டாக.]

சூடகந் தோள்வளை ஆர்ப்ப ஆர்ப்பத்
　　தொண்டர் குழாமெழுந் தார்ப்பஆர்ப்ப
நாடவர் நந்தம்மை ஆர்ப்பஆர்ப்ப
　　நாமும் அவர்தம்மை ஆர்ப்பஆர்ப்பப்
பாடக மெல்லடி யார்க்குமங்கை
　　பங்கினன் எங்கள் பராபரனுக்கு
ஆடக மாமலை அன்னகோவுக்
　　காடப் பொற்சுண்ணம் இடித்துநாமே. 7

கைவளைகளும் தோள்வளைகளும் குலுங்கி ஆரவாரிக்கட்டும்! தொண்டர் கூட்டங்கள் எழுந்து முழங்கட்டும்! நாட்டிலுள்ளவர்கள் அவனடியவரான நம்மை இகழ்ந்து ஆரவாரிக்க ஆரவாரிக்க், நாமும் இறையருளை அநுபவியாது நிற்கும் அவரை எள்ளி ஆரவாரிப்போமாக! மென்மையான பாதங்களில் ஒலிமுழங்குகின்ற பாடகங்கள் விளங்கும் அம்மைபாகனாகிய எங்கள் முழுமுதலுக்குப் பொன்மலைபோல விளங்கும் கோமானுக்குத், திருமுழுக்காட்டுதற்கு, நாம், திருப் பொற்சுண்ணத்தினை இப்போது இடிப்போம், வாருங்கள்! [நாடவர் ஆர்த்தல், அடியவரைப் பித்தரெனக் கருதி. அடியவர் ஆர்த்தல, அவரை அறியாமை அகலாதவர் எனக் கருதி. ஆடகம்-பொன் வகைகளுள் ஒன்று; பிற கிளிச்சிறை சாதரூபம், சாம்புநதம் என்பன.]

வாள்தடங் கண்மட மங்கைநல்லீர்
　　வரிவளை ஆர்ப்பவண் கொங்கைபொங்கத்
தோள்திரு முண்டந் துதைந்திலங்கச்
　　சோத்தெம்பி ரானென்று சொல்லிச்சொல்லி
நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங்காட்டி
　　நாயிற் கடைப்பட்ட நம்மையிம்மை

ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி
ஆடப் பொற்சுண்ணம் இடித்துநாமே. 8

வாள்போன்ற ஒளியுடைய பெரிய கண்களையுடையவரான இளமையுடைய மங்கைப்பருவப் பெண்களே! வரிகளையுடைய கைவளைகள் ஆரவாரிக்கவும், வளவிய கொங்கைகள் பூரித்து எழவும், தோளும் நெற்றியும் திருநீற்றினால் ஒருங்கு சேர்ந்து விளங்கவும், 'எம்பெருமானே! அஞ்சலி' என்று சொல்லிச் சொல்லி, மலரும் பருவங்கொண்ட அன்றலரும் புதிய தாமரைமலர் போன்ற திருவடிகளைக் காட்டி, நாயினுங் கீழ்ப்பட்ட நம்மையும் ஆட்கொண்ட சிவனின் சிறப்புக்களை, ஓயாது பாடிப்பாடி ஆடுதற்குப், பொற்சுண்ணம் இடிப்போம், வாருங்கள்! [வாள்-ஒளி. முண்டம்-நெற்றி; உடல் முழுமையும் ஆம். நாண்மலர்-அன்றலரும் புதுமலர். வண்ணங்கள்-சிறப்புக்கள்: வகைகள்.]

வையகம் எல்லாம் உரலதாக
மாமேரு என்னும் உலக்கை நாட்டி
மெய்யெனும் மஞ்சள் நிறையஅட்டி
மேதகு தென்னன் பெருந்துறையான்
செய்ய திருவடி பாடிப்பாடிச்
செம்பொன் உலக்கை வலக்கைபற்றி
ஐயன் அணிதில்லை வாணனுக்கே
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 9

வையகம் முழுவதையுமே உரலாகக் கொள்வோம்! மகாமேருவான உலக்கையை அதனிடத்தே நாட்டுவோம்! 'மெய்ம்மை' என்னும் மஞ்சளை அதனிடத்தே நிறைய இடுவோம்! மேன்மைபொருந்திய அழகும் நன்மையும் வாய்ந்த திருப் பெருந்துறையுடையானது செம்மையாகிய திருவடிகளைப் பாடிப்பாடி நாம் சுண்ணம் இடிப்போமாக! செம்பொன் உலக்கையினை வலக்கையிற் பற்றியவராக, ஐயனாகிய, அழகு விளங்கும் தில்லைப்பதியிலே வாழும் சிவபெருமானுக்குத் திருமுழுக்காட்டுதற்குத், திருப்பொற் சுண்ணத்தை நாம் இடிப்போமாக! [அட்டுதல்-போடுதல்; இடுதல்.]

முத்தணி கொங்கைகள் ஆடஆட
மொய்குழல் வண்டினம் ஆடஆடச்
சித்தஞ் சிவனொடும் ஆடஆடச்
செங்கயற் கண்பனி ஆடஆடப்
பித்தெம் பிரானொடும் ஆடஆடப்
பிறவி பிறரொடும் ஆடஆட

அத்தன் கருணையொ டாடஆட
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே 10

முத்துவடங்கள் அணிந்த நம் கொங்கைகள் அசைந்தாடவும், கூந்தலிடத்து மொய்த்துள்ள வண்டினங்கள் ஆர்ப்பரிக்கவும், நம் மனம் சிவனோடும் கலந்து கூத்தாடவும், செங்கயல் போன்ற நம் கண்களிடத்தே ஆனந்தக்கண்ணீர் வீழ்ந்தாடவும், நமது பித்தானது எம்பெருமானோடு இணைந்துநின்று ஆடவும், பிறவியானது நம்மையன்றிப் பிறருடனே சேர்ந்து கூத்தாடவும், அத்தனின் கருணையோடு கலந்து அடியவர் கூத்தாடவும், இறைவனைத் திருமுழுக் காட்டுதற்கு, நாம் பொற்சுண்ணம் இடிப்போமாக! [மொய் குழல்-நெருங்கிய குழலும் ஆம்; குழல்-கூந்தல். கண்கள் செவ்வரி படர்ந்தன என்பார் 'செங்கயல்' என்றனர். பித்து-மால்; மயக்கம்; அது பிரானோடு ஆடுதல்; அவனைப்பற்றியே பித்துக்கொண்டு விளங்குதல்.]

மாடு நகைவாள் நிலாவெறிப்ப
வாய்திறந் தம்பவ ளந்துடிப்பப்
பாடுமின் நந்தம்மை ஆண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்
தேடுமின் எம்பெரு மானைத்தேடிச்
சித்தங் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமின் அம்பலத் தாடினானுக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 11

பக்கங்களிலே நகையாகிய ஒளிநிலா கதிர்வீசவும், வாய் மலர்ந்து அழகிய பவளம்போன்ற இதழ்கள் துடிக்கவும், பெருமானைப் போற்றிப் பாடுங்கள்! அவன் நம்மை ஆண்ட வகையினையும், நம்மைத் தொண்டாக்கிக்கொண்ட வண்ணத்தையும் பாடிப்பாடித் தேடுங்கள்! எம் பெருமானைத் தேடிச் சித்தம் களிப்படையத் திகைத்துத் தெளிந்து கூத்தாடுங்கள்! பொன்னம்பலத்திலே நடனஞ் செய்தவனுக்குத் திருமுழுக் காட்டும் பொருட்டாகப், பொற்சுண்ணத்தை நாம் இடிப் போம், வாருங்கள்! [மாடு-பக்கம். நகை-சிரிப்பு. துடித்தல்-பதைத்தல்.]

மையமர் கண்டனை வானநாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன்தன்னை
ஐயனை ஐயர்பி ரானைநம்மை
அகப்படுத் தாட்கொண் டருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர்மெய்யைப்
போதரிக் கண்ணிணைப் பொற்றொடித்தோள்

**பையர வல்குல் மடந்தைநல்லீர்**
**பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 12**

*செந்தாமரை மலர்போன்றவும் செவ்வரி உடையவுமான இரு கண்களையும், பொன்வளை தரித்த இரு தோள்களையும், பாம்புப்படம் போன்ற அல்குல் தடத்தினையும் உடைய, அழகியமாதர்களே! கருமையமைந்த கழுத்தினை உடையவனை, வானகத்தார்க்கு அமுதமாயிருப்பவனை, மாணிக்கம்போலச் செம்மேனியினனாக விளங்கும் கூத்தப் பெருமானை, ஐயனை, தலைவர்க்கும் தலைவனை, நம்மைத் தன்னருளுக்கு உட்படுத்தி அடிமைகொண்டு தனது அருமையினைக் காட்டுகின்றவனை, பொய்யர்க்குப் பொய்யனாகவும் மெய்யர்க்கு மெய்யனாகவும் இருப்பவனைப் பாடியவாறே, நாம் பொற்சுண்ணத்தை இடிப்போம் வாருங்கள்!*

**மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்**
**வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்**
**என்னுடை ஆரமு தெங்களப்பன்**
**எம்பெரு மான்இம வான்மகட்குத்**
**தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்**
**தமையன்எம் ஐயன் தாள்கள்பாடிப்**
**பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்**
**பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 13**

*மின்னற்கொடி போன்ற இடையினையும், செம்பவளம் போன்ற வாயிதழ்களையும், கருமையான கண்களையும், வெண்மையான பற்களையும், பண்ணினிமை தங்கிய மெல்லிய பேச்சினையும் உடையவர்களே! என்னை ஆளாக உடைய அரிய அமுதம், எங்கள் அப்பன், எம் பெருமான், இமவானின் மகளான பார்வதிக்குத் தன்னுடைய நாயகன், மகன், தகப்பன், தமையன், எங்கள் கடவுள் ஆகிய சிவபெருமானது திருவடிகளைப் பாடி, பொற்சுணங்கு விளங்கும் பூணணிந்த முலைகளையுடைய மங்கைப் பருவத்துப் பெண்களே! நாம் திருப்பொற் சுண்ணம் இடிப்போம் வாருங்கள். ['இமவான் மகட்குத் தன்னுடைய கேள்வன், மகன், தகப்பன், தமையன் சிவபிரான் ஆவான். இதனைச் சிவசக்தி இணைப்பாலே ஏற்படும் பல்வேறான அமைதிகளை யொட்டிப் பொருத்திக் கூறுவார்கள். பொன் - தேமல்.]*

**சங்கம் அரற்றச் சிலம்பொலிப்பத்**
**தாழ்குழல் சூழ்தரு மாலையாடச்**
**செங்கனி வாயித ழுந்துடிப்பச்**
**சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்**

கங்கை இரைப்ப அராஇரைக்குங்
கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலிற் கொங்கைபொங்கப்
பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 14

*செவ்விய நகையணிந்தவர்களே! நம் கையிடத்துச் சங்க வளையல்கள் ஒலிக்கவும், காலிடத்துச் சிலம்புகள் ஒலி செய்யவும், நீண்ட குழலைச் சூழ்ந்திருக்கும் வளைந்த தலைமாலை ஆடவும், செவ்விய கொவ்வைக்கனி போன்ற வாயிதழ்கள் துடிக்கவும், சிவலோகத்தைப் பாடிப் பொற்சுண்ணம் இடிப் போம், வாருங்கள்! கங்கையாறு இரைச்சலிடப், பாம்பும் இரைச்சலிடும் திரட்சியாகிய சடைமுடியினை உடையானது திருவடிகட்குப் பொங்கிய காதலினால், கொங்கைகள் விம்மிப் புடைக்க, நாம், இப்போது திருப் பொற்சுண்ணத்தை இடிப் போம், வாருங்கள்!*

ஞானக் கரும்பின் தெளியைப் பாகை
நாடற் கரிய நலத்தைநந்தாத்
தேனைப் பழச்சுவை ஆயினானைச்
சித்தம் புகுந்துதித் திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்
பானல் தடங்கண் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 15

*கருங்குவளை மலரினைப் போன்ற கண்களையுடைய மடந் தைப் பருவத்துப் பெண்களே! சிவஞானமாகிய கரும்பின் சாரத்தைச், சர்க்கரைப் பாகை, எய்துவதற்கு அரிதாகிய நன்மையினைச், சுவை குன்றாத தேனை, முப்பழங்களின் சுவை யாயினவனை, உள்ளத்தே புகுந்து தித்திப்பதற்கு வல்லமை உடைய கோமானை, எம் பிறவித்தளையினை அறுத்து எம்மை அடிமைகொண்ட இறைவனைக், கூத்தப் பெருமானை, நாவி னிடத்தே தழும்பேறும்படியாக இடைவிடாது துதித்துப் பொற்சுண்ணத்தை நாம் இடிப்போம் வாருங்கள்! [நந்துதல்-கெடுதல். ஞானம்-சிவஞானமாகிய மெய்யறிவு.]*

ஆவகை நாமும்வந் தன்பர்தம்மோ
டாட்செய்யும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர் கனாவிலுங் கண்டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவகம் ஏந்திய வெல்கொடியான்
சிவபெரு மான்புரஞ் செற்றகொற்றச்

சேவகன் நாமங்கள் பாடிப்பாடிச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. 16

*அன்பர்களோடு நாமும் வந்து, உய்திக்குரிய வகையாக நம்மையும் ஆட்கொள்ளும் செயலைச்செய்த பெருமானின் சிறப்புகளைப் பாடுவோம்! விண்ணுலகத்திலேயுள்ள தேவர்கள், கனவிலும் கண்டுணராத அவனது செந்தாமரை மலரினைப் போன்ற திருவடிகளை, நமக்குக் காட்டுகின்ற செல்வமாகிய வீரத்தைத் தாங்கிய வெற்றிக் கொடியினை உடையவன் சிவபெருமான்! அவன், முப்புரங்களை அழித்த வெற்றியினையுடைய மாவீரனும் ஆவான். அவனது திருநாமங்களைப் பாடிப்பாடிச் செம்பொன்னைப் போல ஒளிரும் திருப்பொற் சுண்ணத்தினை நாமும் இடிப்போம், வாருங்கள்!*

தேனக மாமலர்க் கொன்றைபாடிச்
சிவபுரம் பாடித் திருச்சடைமேல்
வானக மாமதிப் பிள்ளைபாடி
மால்விடை பாடி வலக்கையேந்தும்
ஊனக மாமழுச் சூலம்பாடி
உம்பரும் இம்பரும் உய்யஅன்று
போனக மாகநஞ் சுண்டல்பாடிப்
பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 17

*தேனைத் தன்னகத்தே கொண்டிருக்கும் பெருமை பொருந்திய கொன்றைமலரினைப் பாடுவோம்! சிவலோகத்தைப் பாடுவோம்! திருச்சடைமேல் விளங்கும் வானத்தை இடமாகவுடைய பெருமைபொருந்திய இளஞ்சந்திரனைப் பாடுவோம்! பெரிதான இடபத்தினைப் பாடுவோம்! வலக்கையிலே ஏந்தியிருக்கும், பகைவரது தசையினைக் கொண்டதாகிய மழுச்சூலத்தைப் பாடுவோம்! வானகத்தாரும் மண்ணகத்தாரும் பிழைக்கும் வண்ணம், அந்நாளிலே நஞ்சினை உணவாக உண்ணுதலைச் செய்த, அவனது அருளினைப் பாடுவோம். இவற்றைப் பாடியவாறே திருப் பொற்சுண்ணத்தை நாமும் இடிப்போம், வாருங்கள்! [போனகம் - உணவு.]*

அயன்தலை கொண்டுசெண் டாடல்பாடி
அருக்கன் எயிறு பறித்தல்பாடி
கயந்தனைக் கொன்றுரி போர்த்தல்பாடிக்
காலனைக் காலால் உதைத்தல்பாடி
இயைந்தன முப்புரம் எய்தல்பாடி
ஏழை அடியோமை ஆண்டுகொண்ட
நயந்தனைப் பாடிநின் றுடியாடி
நாதற்குச் சுண்ணம் இடித்துநாமே. 18

*பிரமனின் தலையினைக் கிள்ளிக் கையிடத்தே கொண்டு செண்டாடிய அவனது திறத்தைப் பாடுவோம்! அருக்கனின் பல்லைப் பிடுங்கிய அவனது செயலைப் பாடுவோம்! கயந்த ஞகிய யானையைக் கொன்று அதன் தோலை உரித்துப் போர்த் துக் கொண்ட அவனது தீரத்தைப் பாடுவோம்! காலனைக் காலால் உதைத்தருளிய அவனது தன்மையைப் பாடுவோம்! தம்முள் பொருந்தினவாகிய முப்புரங்களையும் அம்பெய்து அழித்த வீரத்தைப் பாடுவோம்! ஏழைமை கொண்ட அடி யேங்களை ஆட்கொண்டருளின பெருங்கருணையாகிற அந்த நன்மையினைப் பாடுவோம்! இவற்றைப் பாடி நின்று, ஆடி யாடி, இறைவனுக்கான திருப்பொற்சுண்ணத்தை, நாமும் இடிப்போம், வாருங்கள்! [செண்டு-பூப்பந்து. கயம்-யானை.]*

வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி
மத்தமும் பாடி மதியும்பாடிச்
சிட்டர்கள் வாழுந்தென் தில்லைபாடிச்
சிற்றம் பலத்தெங்கள் செல்வம்பாடிச்
கட்டிய மாசுணக் கச்சைபாடிக்
கங்கணம் பாடிக் கவித்தகைம்மேல்
இட்டுநின் றுடும் அரவம்பாடி
ஈசற்குச் சுண்ணம் இடித்துநாமே. 19

*அவனது, வட்டவடிவமாகிய கொன்றைமலர் மாலை யினைப் பாடுவோம்! அவனது ஊமத்த மலரையும் பாடு வோம்! அவனது பிறையையும் பாடுவோம்! பெரியோர் கள் வாழுகின்ற அழகிய தில்லைநகரத்தினையும் பாடுவோம்! திருச் சிற்றம்பலத்திலேயுள்ள எங்கள் செல்வத்தைப் பாடு வோம்! அவன்கட்டியுள்ள பாம்புக் கச்சையையும் பாடுவோம்! அவன் அணிந்துள்ள கங்கணத்தையும் பாடுவோம். மூடின கையின்மேல் விட்டு ஆட்டிய பாம்பினைப் பாடுவோம்! இவற் றைப் பாடியவாறே, ஈசனுக்கு நாம் திருப்பொற்சுண்ணத் தினை இடிப்போம், வாருங்கள்!*

வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாய்இருள் ஆயினார்க்குத்
துன்பமு மாய்இன்பம் ஆயினார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயினார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினாருக்கு

ஆதியும் அந்தமும் ஆயினாருக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 20

வேதங்களும், அவற்றுள் சொல்லப்படுகின்ற வேள்வி முறைகளும் ஆயினவர்க்கு, மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்கு, ஒளியும் இருளும் ஆயினார்க்குத், துன்பமும் இன்பமும் ஆயினார்க்குப், பாதியுமாகி முழுதுமாகியும் ஆயினார்க்குப், பந்தமும் ஆகி அதனை நீக்கியருளும் வீடும் ஆயினார்க்கு, ஆதியுமாகி அவற்றிற்கு அந்தமும் ஆயினார்க்குத் திருமுழுக்காட்டுதற்கு, நாம், திருப் பொற்சுண்ணத்தினை இடிப்போம், வாருங்கள்!

# 10. திருக் கோத்தும்பி

## சிவனோடு ஐக்கியம்

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா)

*['கோத்தும்பி' என முடிகின்ற இச் செய்யுட்களை அடிகள் தில்லையில் அருளினர். அரச வண்டினை விளித்து இறைவனின் திருவடிக் கமலங்களாகிய மலரிடத்தே சென்று ஊதும்படி யாக ஏவுகின்ற முறையிலே அமைந்த செய்யுட்கள் இவை. தம் மனத்தைச் சிவனோடு ஐக்கியப்படுத்துதல் இவற்றின் நோக்கம் ஆகும்.]*

**பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த**
**நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும்**
**மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச்**
**சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.** 1

*அரச வண்டே! தாமரைப்பூவிலே ஏறித்தங்கும் நான்முகனும், இந்திரனும், அழகு பொருந்திய நாவிடத்துத் தங்குபவளாகிய கலைமகளும், திருமாலும், நான்மறைகளும், பெருமைமிகுந்த முச்சுடர்களும், மற்றுமுள்ள தேவர்களும், தாமே தம் முயற்சியால் அறியவொண்ணாத சிறப்பினவாய, இடபம் ஊர்ந்த சிவபிரானின் திருவடிமலர்களுக்கே சென்று நீயும் ஊதக்கடவாயாக!*

**நானார்என் உள்ளமார் ஞானங்க ளாரென்னை யாரறிவார்**
**வானோர் பிரானென்னை ஆண்டிலனேல் மதிமயங்கி**
**ஊனா ருடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்**
**தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ.** 2

*அரசவண்டே! தேவர்களின் பெருமானாகிய சிவபிரான், என்னைத் தானே வந்து அடிமைகொண்டிலனேல், நான் தான் யாரோ? என் உள்ளந்தான் எத்தகையதோ? என் அறிவுதான் எவ்விதமோ? என்னை உலகில் அறிபவர்தாம் யாவரோ? இவை யாவுமே இல்லையாகும். ஆதலால், மதி மயக்கங்கொண்டு, ஊன்பொருந்திய உடைந்த கபாலத்திலே பிச்சையைத் தேர்கின்ற பொன்னம்பலவனது, தேன்பொருந்திய தாமரை மலர்போலுந் திருவடி மலர்களிடத்தேயே, நீயும் சென்று ஊதுவாயாக!*

தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 3

*அரச வண்டே! தினையளவு உள்ளதாகிய ஒரு பூவினிடத்திலே சென்று இனித் தேனினை உண்ணாதே! நினைக்குந்தோறும், காணுந்தோறும், பேசுந்தோறும், எப்போதும், எலும்பனைத்தும் உள்ளே நெகிழ்ச்சி கொள்ளும்படியாகப் பேரானந்தத்தேனைச் சொரிகின்ற கூத்துடையானின் திருவடி மலர்களிடத்தேயே சென்று, நீயும் ஊதுவாயாக!*

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்ஆட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 4

*அரசவண்டே! கண்ணப்ப தேவரை ஒப்பதாகிய ஒப்பற்ற அன்பில்லாமையினை என்பாற் கண்டபின்னரும், என் அப்பன், அன்பிலாத என்னையும், தனக்கு அடிமையாகச் செய்து கொண்டான். நன்னெறி உடையவனாகுமாறு என்னைப் பணித்து, என்னை வருகவென்றும் அழைத்தான். அத்தகைய மேலான கருணையையுடைய, திருநீறாகிய அழகிய நீறணிந்த பெருமானின் திருவடிமலர்கட்கே சென்று, நீயும் இனி ஊதுவாயாக!*

அத்தேவர் தேவர் அவர்தேவ ரென்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேதும் இல்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 5

*அரசவண்டே! 'அந்தத் தேவரே தேவர்! அவர் ஒருவரே தேவர்!' என்றெல்லாம், பொய்த்தேவர்கள் பலரையும்பற்றிக் கூறிப் புலம்புகின்ற நிலவுலகத்தின்கண்ணே, பற்றுச் சிறிதேனுமின்றி, எனது உலகப்பற்று நீங்கும்படியாக, நான் பற்றி நின்ற உண்மையான தேவதேவனுடைய திருவடி மலர்கட்கே சென்று, நீயும் ஊதுவாயாக!*

வைத்த நிதிபெண்டீர் மக்கள்குலங் கல்வியென்னும்
பித்த உலகிற் பிறப்போ டிறப்பென்னுஞ்
சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 6

*அரசவண்டே! ஈட்டிவைத்த செல்வம், பெண்டிர், மக்கள், குலம், கல்வி என்னும் பித்தங்கொண்ட இந்த உலகத்*

திலே, பிறப்பு இறப்பு என்கின்ற மனோவிகாரத்தின் கலக்கத்தைத் தெளியச்செய்த, ஞானவடிவாகிய தேவனின் திருவடிகளுக்கே சென்று, இனி நீயும் ஊதுவாயாக!

சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனைக்
கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரைநாம் உருவறியோஞ்
சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 7

அரசவண்டே! சங்கரனைச் சற்றே நினைக்கவே, நினைத்த மனத்திலே அமுதமாக இன்பமும் தோன்றி விளைகின்றது. அத் தகையவனைத் தீயவனை யானும் மறந்துவிடுவேனோ? அவனுடைய திருவடிகளைப் பொருந்தாத பாவஞ்செய்த அடிமைகளது வடிவத்தையும்கூட நாம் கண்ணுற்றுப் பார்க்க மாட்டோமே! அதனால், மேன்மையாகிய பெரியோனின் திருவடிமலர்களுக்கே சென்று, நீயும் இனி ஊதுவாயாக.

ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை ஏற்றுவித்த
என்தாதை தாதைக்கும் எம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 8

அரசவண்டே! ஒரு பொருளாக முளைத்தெழுந்து, எத்தனையோ கிளைகளைப்போக்கி, என்னையும் நன்றாக நிலைபெறுமாறு வைத்து, நாயைச் சிவிகையிலே ஏற்றுவித்த பெருங் கருணையைச் செய்த என் தந்தையை, என் தாதைக்கும் தாய்க்கும் தலைவனை, குறையாத செல்வனை, அவனுடைய திருவடிமலர்களிடத்தேயே சென்று, ஊதி, நீயும் இனிப் பயன்பெறுவாயாக!

கரணங்கள் எல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 9

அரசவண்டே! கரணங்கள் எல்லாவற்றையும் கடந்து நின்ற நீலகண்டன் அவன்! அவனுடைய திருவடிகளைச் சென்று அடைதலுந்தான், எனக்கு இறப்புப் பிறப்பென்னும் இரண்டானும் வரக்கூடிய மயக்கம் எல்லாம் தொலைந்தது. அவற்றைத் தொலைவித்த கருணைக் கடலாயிருப்பவனின் திருவடிகட்கே சென்று, நீயும் இனி ஊதுவாயாக!

நோயுற்று மூத்துநான் நுந்துகன்று யிங்கிருந்து
நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாந்
தாயுற்று வந்தென்னை ஆண்டுகொண்ட தன்கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 10

*அரசவண்டே! நோய்வாய்ப்பட்டும், வயது முதிர்ச்சி அடைந்தும், தாயினால் தள்ளப்பெற்ற கன்றினைப்போல யான் இவ்விடத்தே இருந்தேன். நாயினேனான நான், அடைந்த செல்வத்தை விரும்பி அதற்கேற்ப நடத்ததற்கு அறியாத வண்ணமெல்லாம் மாறுபட்டும் நடந்தேன். அப்போது, தாய்போன்று வந்து அவனே என்னைத் தடுத்து ஆட்கொண்டான். அத்தகைய, குளிர்ந்த பேரருளொளி பொருந்திய பெருமானின் திருவடி மலர்களிடத்தேயே சென்று, நீயும் இனி ஊதுவாயாக!*

வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே
கல்நெஞ் சுருக்கிக் கருணையினால் ஆண்டுகொண்ட
அன்னந் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 11

*அரசவண்டே! 'வன்மையான நெஞ்சத்தை உடைய கள்வன் இவன், மனவலிமை கொண்டவன்' என்று கருதி என்னை அவன் ஒதுக்கவில்லை. கல்லைப்போன்ற என் மனத்தினையும் அவன் கனிந்து உருகும்படியாகவே செய்தான். தன் பெருங்கருணையினாலே வந்து என்னையும் ஆண்டுகொண்டான். அன்னங்கள் திளைத்திருக்கும் அழகிய தில்லைப்பதியிலுள்ள. அவனுடைய, பொற்கழலணிந்த திருவடி மலர்களிடத்தேயே சென்று, நீயும் இனி ஊதுவாயாக!*

நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேதும் இல்லாதென் செய்பணிகள் கொண்டருளுந்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 12

*அரச வண்டே! நாயினைப் போன்றேனைத் தன் திருவடிகளைப் போற்றிப் பாடுமாறு செய்த நாயகன் அவன்! பேய் போன்ற எனது உள்ளத்துக் குற்றங்களைப் பொறுத்தருளும் பெருமை உடையவன் அவன்! இகழ்ச்சி எதுவுமின்றி, என்னுடைய செய்தொண்டுகளை ஏற்றருளுகின்ற தாய்போன்றவனும் அவன்! அத்தகைய ஈசனின் திருவடிமலர்களிடத்தேயே சென்று, நீயும் ஊதுவாயாக!*

நான்தனக் கன்பின்மை நானுந்தா னும்அறிவோம்
தானென்னை ஆட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்
ஆன கருணையும் அங்குற்றே தானவனே
கோனென்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ, 13

*அரசவண்டே! நான் அவனிடத்தே அன்பில்லாதிருத்தலை நானும் அவனுமேதாம் அறிவோம். ஆனால், அவன் வந்து ஆட்கொண்டு அருளியதனையோ எல்லாருமே தெரிவார்கள். உண்டாகிய கருணையும் அவ்விடத்தே மிகுந்து பெருகத், தானாகிய அவனே என் கோமானுமாகி என்னை வந்து கலந்தனன். அத்தகைய அருளாளனின் திருவடி மலர்களிடத்தேயே சென்று, நீயும் ஊதுவாயாக!*

கருவாய் உலகினுக் கப்புறமாய் இப்புறத்தே
மருவார் மலர்க்குழல் மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 14

*அரச வண்டே! உலகினுக்கு எல்லாம் மூலவித்தாகியும், அதற்கு அப்பாலாகியும் விளங்குபவன் அவன். இவ்விடத்தே மணம்நிறைந்த மலரையணிந்த கூந்தலையுடைய உமையோடுங் கூடியவனாகவந்து அவன் எழுந்தருளினான். அந்தணனாகிக் காட்சிதந்து என்னையும் ஆட்கொண்டான். அத்தகைய திருவான தேவனின் திருவடிமலர்களிடத்தேயே சென்று, நீயும் ஊதுவாயாக!*

நானும்என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலுந் தாழ்சடையோன் ஆண்டிலனேல்
வானுந் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 15

*அரச வண்டே! தாழ்ந்த சடையினை உடையோனாகிய பெருமான், தானும் தன் தையலுமாக வந்து என்னை ஆட்கொண்டிலனேல், நானும் என்சிந்தையும், எம்நாயகனுக்கு எவ்விடத்தேம் ஆவோமோ? வானமும் பத்துத்திசைகளும் பெருங்கடல்களும் ஆகிய பெருமானது தேன்துளிக்குஞ் செய்ய திருவடிமலர்களையே, நீயும் சென்று இனி ஊதுவாயாக!*

உள்ளப் படாத திருவுருவை உள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரான்எம் பிரான்என்னை வேறேஆட்
கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 16

*அரச வண்டே! மனத்தால் நினைக்கவும் ஒண்ணாத திருவுருவத்தினை, அவனருளால் காணப்பெறுதலும், கள்ளப் படாத களிப்புமிகுந்த பெருங்கருணை வெள்ளத்தை உடைய எம்பிரான், அடியேனை, வேறாகவே செய்து ஆட்கொண்டனன். அந்தப் பெருமானின் திருவடிமலர்களுக்கே சென்று, நீயும் இனி ஊதுவாயாக!*

பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள்தோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட
ஐயாவென் ஆருயிரே அம்பலவா என்றவன்றன்
செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 17

*அரச வண்டே! நிலையில்லாதனவாகிப் பொய்ப்பட்டுப் போகின்ற தன்மையினையுடைய செல்வங்களிடத்தே சென்று அழுந்திக் கிடந்தேன். நாள்தோறும் அவற்றையே உண்மையாக எண்ணியும் கிடந்தேன். அத்தகைய என்னையும் தடுத்து ஆட்கொண்டான். 'ஐயனே! என் அரிய உயிரே! அம்பலவனே!' என்று போற்றி, அவனது செந்நிறத் தாமரை மலரினைப்போன்ற திருவடிமலர்களுக்கே சென்றடைந்து, நீயும் ஊதுவாயாக!*

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. 18

*அரச வண்டே! புலித்தோலும், மென்துகிலும், குண்டலமும், சுருள்தோடும், பால்வெள்ளை நீறும், பசுமையான மணச்சாந்தும், பைங்கிளியும், சூலமும், திரண்ட வளைகளும் உடையதான தன் பழமைக் கோலமே உடையான அவன்! அவனை நோக்கி, அவன் திருவடிமலர்களிடத்தேயே நீயும் குளிர்ச்சியாகச் சென்று ஊதக்கடவை! [உமையொருபாக வடிவம் கூறப்பெறுகின்றது. தோல், குழை, நீறு, சூலம் முதலியவற்றை இறைவனுக்கும், துகில், தோடு, சாந்து, வளை, கிளி ஆகியவற்றை இறைவிக்கும் கொள்க.]*

கள்வன் கடியன் கலதியிவன் என்னாதே
வள்ளல் வரவர வந்தொழிந்தான் என்மனத்தே
உள்ளத் துறுதுய ரொன்றொழியா வண்ணமெல்லாந்
தெள்ளுங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 19

*அரச வண்டே! 'இவன் கள்வன்; இவன் கொடியவன்; இவன் கீழானவன்' என்று கருதி, என்னை அருட்கொடையாளனாகிய அவன் கழித்துவிடவில்லை. நாளுக்குநாள் என்*

மனத்தின்கண்ணே மெல்லமெல்ல வந்து புகுந்து, அவ்விடத்தேயே கலந்து மறைந்தனன். என் மனத்திற் பொருந்திய துன்பங்கள் எல்லாவற்றையும் ஒன்றும் விட்டுப்போகாத வண்ணம் தெளிவுதந்தும் ஒழித்தனன். அத்தகையவனின் திருவடி மலர்களிடத்தேயே சென்று நீயும் ஊதுவாயாக!

பூமேல் அயனோடு மாலும் புகலரிதென்
றேமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேல் தவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 20

அரச வண்டே! தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் நான்முகனோடு, திருமாலும் சொல்லுதற்கு அரிதாகுமென்று தடுமாறி நிற்கவும், அடியனேன் கண்டு இறுமாந்து நிற்கவும், நாயினுக்கு மேலான ஆசனமிட்டதுபோல, எனக்கு நன்மையாக, என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு அருளியவன் தீயின் கொழுந்தே தன் மேனியாக உடைய சிவபிரான் ஆவான்! அவனுடைய திருவடிமலர்கட்கே சென்று, நீயும் இனி ஊதுவாயாக! ['புகல்-சொல்லுதல்.]

# 11. திருத் தெள்ளேணம்

## சிவனோடு அடைவு

(நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா)

[இதுவும் தில்லையில் அருளப்பட்டதே யாகும். தெள்ளேணம் என்பதும் மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்று. இதனைத் தெம்மாங்குபோல்வது என்பார்கள்.]

திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாம் அறியவோர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்
ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 1

திருமாலும், பன்றிவடிவெடுத்து நிலத்தைப் பிளந்து சென்று முயன்று தேடியும் அறியமுடியாத தன் திருவடிகளை, வடிவத்தோடு நாம் அறியும்படியாக ஓர் அந்தணக் கோலத்தோடு எழுந்தருளிவந்து நமக்குக் காட்டி, நம்மையும் அவன் ஆட்கொண்டருளினன். அத்தகைய சிறப்பினனான, தனக்கொரு பெயரும் வடிவமும் ஒன்றுமில்லாத தன்மையனுக்கு, நாம், ஆயிரந்திருநாமங்களை அமைத்துப்பாடித் தெள்ளேணம் கொட்டுவோமாக! ['ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாப் பெருமானுக்கு, நாம், நம் ஆர்வத்தால் ஆயிரம் திருநாமங்களைச் சூட்டித் துதித்துத் தெள்ளேணம் கொட்டுவோம்' என்பது கருத்து. 'கொட்டுவோம்' என்பது, கைகொட்டியாடும் ஆடல் இதுவென்பதனைக் காட்டும்.]

திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேர் அறுத்தபின் யாவரையுங் கண்டதில்லை
அருவாய் உருவமும் ஆயபிரான் அவன்மருவும்
திருவாரூர் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 2

அழகு நிறைந்த திருப்பெருந்துறையிலே எழுந்தருளி வந்திருந்த பெருமான், என் பிறவிக்குக் கருவான வினைகளை வேரறுத்த பின்னர், யான் அங்குக் கூடியிருந்தார் யாவரையும் கண்டதுமில்லை. அருவமாகியும் உருவமாகியும் நின்று அருள்செய்கின்ற பெருமான் அவனே! அவன் எழுந்தருளியிருக்கிற திருவாரூரின் சிறப்பைப்பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக! ['அவன் ஆட்கொண்ட பின்னர் அவனை

யன்றி வேறு எதனையும், எவரையும் காணாத நிலையடைந்த தன்மையினை, 'யாவரையும் கண்டதில்லை' எனக் கூறினர்.]

அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்குந்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பதுகேட் டுலகமெல்லாஞ்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 3

அரிக்கும் பிரமனுக்கும், இவரல்லாத பிற தேவர் கட்கும், 'இன்னபடி'யென்று தெரிவிக்கும்படிக் கல்லாமல் மறைந்துநின்றது முழுமுதற் பொருளாகிய சிவம். அது, 'தானே வந்து நம்மை மனமுருக்கும்படியாகச் செய்து ஆட்கொள்ளுதலையும் செய்தது' என்பதனைக் கேட்டு, உலக மெல்லாம் சிரிக்கவே செய்யும்! அத்தகைய சிவத்தின் பெருங் கருணைத் திறத்தினைப் பாடி நாம் இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக! [உலகத்தார் சிரிப்பது, அப்படிச் சொல் பவர்கள் சொல்வதனை நம்பாத இகழ்ச்சியினால் ஆகும்.]

அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயங் காத்தென்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமாய வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 4

பயனற்றவரான பிற தேவர்களது, பயனில்லாத பிறபிற கதிகளிற் சென்றுசென்று அழுந்தாமல், பிறவியாகிய மாயா காரியத்தினின்றும் என்னைக் காத்தருளி, என்னைத் தனக்கே அடிமையாக்கிக் கொண்ட பரஞ்சுடர், சிவபெருமான்! அவன் எழுந்தருளிவந்து புதுமையாகிய செவ்விதான ஒளியினை எனக்கு அருளிச் செய்தலும், 'நாம்' என்ற தற்போத நினைவு நம்மினின்று ஒழிந்தது! 'யான் சிவமாந் தன்மை யினைப் பெற்ற' அந்த விதத்தைப் பாடி, நாம் அனைவரும் தெள்ளேணம் கொட்டுவோமாக! [அவம்-பயனின்மை. நாம் ஒழிந்து சிவமான தன்மை யாவது, சீவத்துவம் நீங்கிச் சிவத்துவமான நிலைமை.]

அருமந்த தேவர் அயன்திருமாற் கரியசிவம்
உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக் கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் உளம்புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 5

அருமருந்தன்ன தேவர்களான அயனுக்கும் திருமாலுக் கும் காணற்கு அரிதாயிருப்பது சிவமாகிய பரம்பொருள்! அது, உருவத் திருமேனிகொண்டு வந்து, நிலவுலகத்தார் களிப்படையுமாறு அந்நாளிற் காட்சி தந்தது. என்னை

அடிமை யாக்கிக் கொண்டு அருளிச்செய்து, என் பிறவித் தொடர் வெந்தொழியும்படியாகக் கடைக்கணித்தும் அன்று உதவியது. அங்ஙனம் அருளி, என்னுடைய மனத்தகத்தும் அது புகுந்ததனால், எனக்கு மேன்மை உண்டாகிய அந்த விதத்தைப்பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக!

அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்
வரையாடு மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்
உரையாட உள்ளொளியாட ஒண்மாமலர்க் கண்களில்நீர்த்
திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 6

தன்னுடைய இடையின்கண், ஆடுமியல்பினையுடைய நாகத்தினைக் கச்சாகக் கட்டின பெருமான் சிவன்! அவன், மலைமகளாகிய உமையாளைத் தன் பாகத்திற் கொண்டவனாக இவ்வுலகத்தின் மீதும் எழுந்தருளி வந்தனன்! எம்மையும் ஆட்கொண்டனன்! அந்தத் திறத்தை, உரை தடுமாற, மனத்தே அறிவின் ஒளி விளங்க, ஒட்பமாகிய பூப்போன்ற பெருங்கண்களிலே ஆனந்தக்கண்ணீர் அரும்பி அலைபோல அசைந்தாடப், பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக! ['வரையாடும் மங்கை' என்பதற்கு 'மலையிடத்து விளையாடியருளின பார்வதிதேவி' எனவும் பொருள் கொள்வர்.]

ஆவா அரிஅயன்இந் திரன்வானோர்க் கரியசிவன்
வாவாவென் றென்னையும் பூதலத் தேவலித் [தாண்டு கொண்டான்
பூவார் அடிச்சுவ டென்தலைமேற் பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 7

அரி, அயன், இந்திரன், வானவர்கள் ஆகியோருக்கெல்லாம் அடைதற்கும் அருமையானவன் சிவபெருமான்! அவன், 'ஐயோ' வென இரங்கி, நிலவுலகத்துத் தானே வந்தருளி, என்னையும் 'வருக'வெனத் தன்பால் அழைத்து, ஆட்கொண்டருளினன். மலர்போன்ற தன் திருவடிகளை என் தலைமீது அவன் நாட்டுதலும், யான், தெய்வத்தன்மையினை அடைந்தேன். அந்த விதத்தைப்பாடி, நாம், இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக!

கறங்கோலை போல்வதோர் காயப்பிறப்போ டிறப்பென்னும்
அறம்பாவ மென்றிரண்டச் சந்தவிர்த்தென்னை [ஆண்டு கொண்டான்
மறந்தேயுந் தன்கழல்நான் மறவாவண்ணம் நல்கியஅத்
திறம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 8

சுருளோலைபோலச் சுழல்கின்ற உடம்பின், தோற்றத்துடன் இறப்பும் என்கின்ற நல்வினை தீவினை என்னும் இரு வினைகளின் பயத்தினையும் போக்கிச், சிவபிரான் என்னைவந்து ஆட்கொண்டனன்! மறந்துங்கூட, நான் தன்னுடைய திருவடிகளை மறவாதபடிக்கு, எனக்குள்ளே நிறைந்து நின்றும் அருளினன்! அந்தப் பெருங்குணத்தினைப் பாடலாகப் பாடி, நாம், இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக! [இரு வினைப் பாசங்களே பிறப்பிறப்பிற்குக் காரணமாவன. அதனால், 'பிறப்போடு இறப்பென்னும் அறம் பாவம்' என்றனர்.]

கல்நா ருரித்தென்ன என்னையுந்தன் கருணையினாற்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி
மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்
தென்னாதென் னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. 9

மின்னற்கொடியைப் போன்ற துவள்கின்ற இடையினையும், செம்மையான பவளம்போன்ற வாயிதழ்களையும், வெண்மையான பற்களையும் உடைய, பெண்களே! 'கல்லிலே நார் உரித்தா'லென்னக், கல்மனத்தனாகிய என்னையும் தன் கருணையினால் கனிவித்துத் தன் பொன்மயமான திருவடிகளைக் காட்டி ஆட்கொண்ட பெருமான் சிவபிரான்! அத்தகைய பெருமானின் புகழினைப் பாடித், 'தென்னவனே! தென்னவனே!' என்று அழைத்து, நாம், இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக! ['தென்னா' என்றது, தென்னாடுடைய சிவன் ஆதலால். 'கல்நா ருரித்தன்ன' என்றது, அவனது செயற்கரிய செயலை வியந்து கூறியதாம்.]

கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
புனவே யனவளைத் தோளியொடும் புகுந்தருளி
நனவே எனைப்பிடித்தாட் கொண்டவா நயந்துநெஞ்சஞ்
சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. 10

தேவர்கள், தம் கனவினுங்கூடக் காண்பதற்கு அரியவரான திருப்பாதங்களை உடையவன், எங்கள் பெருமான்! அவன், காட்டு மூங்கிலைப் போன்றவும், தொடியணிந்தவுமான தோள்களையுடைய உமாதேவியோடும் கூடியவனாக அன்று எழுந்தருளினான்! நனவிலேயே என்னைப் பற்றித் தனக்கு அடிமையாக்கியும் கொண்டான்! அந்தவிதத்தை மனத்தால் விரும்பிச், சினவேல் போன்று விளங்கும் கண்களில் ஆனந்தக் கண்ணீர் நிறையப், பாடியவாறு, நாம் இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக! [கனை கழல்-ஒலிக்கின்ற வீரக் கழல்.]

**கயல்மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக்கலந் தாண்டலுமே**
**அயல்மாண் டருவினைச் சுற்றமுமாண் டவனியின்மேல்**
**மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய**
**செயல்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 11**

*கயல்மீனினுங் காட்டில் மாட்சிமைப்பட்ட கண்களை யுடைய உமாதேவியினைத் தன் இடப்பாகமாக உடையவன், என்னைக் கலந்து ஆண்டு அருளுதலுமே, அயன்மை அற்று, அரிய வினைவசத்தாலே வந்துற்ற சுற்றமும் அற்று, உலக விச்சைகளில் மேற்கொண்டிருந்த மயக்கமும் அற்று, எஞ்சி யுள்ள சொல்லும் ஒழிந்து, என்னுடைய உடலின் செய்கை யும் அற்றுப்போயினதே! அந்த விதத்தைப் பாடி, நாம் இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக! [அயல்-அயன்மை; அது பகைமை. சுற்றம்-உறவு. 'பகையும் உறவும் அற்று' என்பது கருத்து.]*

**முத்திக் குழன்று முனிவர்குழாம் நனிவாட**
**அத்திக் கருளி அடியேனை ஆண்டுகொண்டு**
**பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி**
**தித்திக்கு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 12**

*முனிவர் கூட்டங்கள் எல்லாம் முத்தியின் பொருட்டாக உழன்று மிகவும் வாட்டங் கொண்டிருப்பவும், அவர்க்கு அருளாது, யானைக்கு அன்று அருளிச்செய்தவன், எம் பெருமான்! அத்தகைய கருணையாளன், அடியேனையும் வந்து ஆட்கொண்டருளினன். பக்தியாகிய கடலுள் என்னை அழுந்து வித்த பரஞ்சுடர் அவனே! எனக்கு, அவன் தித்திக்கும் அந்த வகையினைப்பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக! [யானைக்கு அருளியது, திருவானைக்காவில்.]*

**பார்பாடும் பாதாளர் பாடும்விண்ணோர் தம்பாடும்**
**ஆர்பாடுஞ் சாரா வகையருளி ஆண்டுகொண்ட**
**நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்**
**சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 13**

*நிலவுலகத்தாரிடத்தும், பாதாள உலகினிரிடத்தும், வானகத்தாரிடத்தும், மற்றும் எவ்வுலகினரிடத்தும் போய்ச் சேராத வகையாக எனக்கு அருள்செய்து, என்னையும் அடிமைகொண்டு அருளினன்! இறைவனின் நேர்ச்சியாகிய அந்தத் திருவிளையாடலைப்பாடி, நினைத்தற்கு அருமையான ஒப்பற்ற பெருமை உடையவனது புகழ்ப் பாடல்களையும் பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக! [பிறவியறுத்து ஆட்கொண்டமையினால், தேவகதி, மக்கள் கதி, நரகர் கதி*

*யாகிய முக்கதிகளினும் சென்று உழலாமையினை அடையப் பெற்றதாகக் கூறினர்.]*

மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்
பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தாற்
சேலேர்கண் நீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. 14

*திருமாலும் பிரமனும் மற்றுமுள்ள தேவர்களும், மறை முதலிய நூல்களும், புகுந்தறிதற்கு அருமையானவன் இறைவன்! அவன் நுண்ணியனாகி எழுந்தருளி வந்தான். அடியேனின் அருகே போந்து, அடியேனுக்கு இரங்கி, மனமுருக்குகின்ற அவனுடைய பேரியல்பினாலே ஆட் கொண்டும் அருளினான்! அந்த விதத்தை, அழகிய கண்களில் நீர்ததும்பப் பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக!*

உருகிப் பெருகி உளங்குளிர முகந்துகொண்டு
பருகற் கினிய பரங்கருணைத் தடங்கடலை
மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 15

*உள்ளம் உருகியும், உடல் பூரித்தும், நெஞ்சம் குளிரும் படியாக முகந்துகொண்டு பருகுவதற்கு இனிதான பெருங் கருணைக்கடல் போல்பவனை அடைந்து, அத் தென்னவனது நெடிய கழல்களையே நினைந்து, அடியேமாகிய எங்களுடைய செல்வத்தினைத் துதித்து, நாம் எல்லாம், தெள்ளேணம் கொட்டுவோமாக!*

புத்தன் புரந்தராதி அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்தன் அணிதில்லை அம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணங் கொட்டாமோ. 16

*புத்தனும், இந்திரன் முதலான தேவர்களும், அயனும், திருமாலும் போற்றி செய்கின்ற பித்தன், திருப்பெருந் துறையில் எழுந்தருளிய பெருமான் ஆவான்! அவனே என் பிறவியை அறுத்தருளிய அத்தன்! அவனே, அழகிய தில்லைப் பதியுள் அம்பலத்தே நடனம் இட்டிருப்பவன்! அவனுடைய அருளுருவான திருவடிகள் என் சித்தத்தினுள்ளே புகுந்து என்னையாண்ட விதத்தைக் குறித்துப் பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக! [புத்தன் - புதுமை உடையவன்.]*

**உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாஞ்**
**சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்**
**கவலை கெடுத்துக் கழலிணைகள் தந்தருளுஞ்**
**செயலைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 17**

*பொய்ச்சமயங்களும் பொருத்தமற்ற நூல்களும் ஆகிய, மெலிவுக்குக் காரணமான கடலுள் அகப்பட்டவனாகிக் கிடந்து, தடுமாறுகின்ற என் கவலையினை அழித்துத், தன்னுடைய இரு திருவடிகளையும் தந்தருளுகின்ற இறைவனின் திருவருட்செயலினைத் துதித்து, நாம், இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக! [உவலை-பொய். சவலை-மெலிவு. கவலை-துன்பம்; கவலை.]*

**வான்கெட்டு மாருதம் மாய்ந்தழல்நீர் மண்கெடினுந்**
**தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்**
**கூன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டென் உள்ளமும்போய்**
**நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 18**

*ஆகாயம் அழிந்து, வாயுவும் அழிந்து, தீயும் நீரும் மண்ணும் ஆகியனவும் அழிந்துபோயினும், தான் அழிதலென்பது இல்லாமல், அசைவில்லாத இயல்புடையவனாக நிலைத்து இருப்பவன், இறைவன்! அவன் பொருட்டாக, என் உடம்பும் ஒழிந்து, உயிரும் அழிந்து, உணர்வும் கெட்டு, என் உள்ளமும் அழிந்து, 'நான்' என்னும் தற்போதமும் அழிந்து நின்றேன்! அங்ஙனம் என்னைச் செய்வித்த அவன் திறத்தினைப் பாடி, நாம், இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக!*

**விண்ணோர் முழுமுதல் பாதாளத் தார்வித்து**
**மண்ணோர் மருந்தயன் மாலுடைய வைப்படியோம்**
**கண்ணார வந்துநின்றான் கருணைக் கழல்பாடித்**
**தென்னாதென் னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. 19**

*தேவர்களுக்கு முழுமுதலாக இருப்பவன்! பாதாளத்தார்க்கும் மூலகாரணம் ஆகியவன்! மண்ணகத்தார்க்கும் மருந்தாக விளங்குபவன்! நான்முகனுக்கும் திருமாலுக்கும் சேமநிதி போன்றவன்! அத்தகையவன், அடிமைகளாகிய யாம் கண்ணாரக் காணுமாறு எழுந்தருளிவந்தும் நின்றான்! அத்தகைய அவனது, கருணைவடிவான திருப்பாதங்களைப் பாடித் 'தென்னவா! தென்னவா!' என்று கூவி, நாம் இப்போது தெள்ளேணம் கொட்டுவோமாக!*

குலம்பாடிக் கொக்கிற கும்பாடிக் கோல்வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாள்தோறும்
அலம்பார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 20

*சிவபெருமானாகிய அவனது மேன்மையைப் பாடுவோம்! அவன் சூடியுள்ள கொக்கிறகினைப் பாடுவோம்! அழகிய வளையணிந்தவளான இறைவியின் நன்மைகளைப் பாடுவோம்! அவன் நஞ்சத்தை உண்ட, அந்த அருளினைப் பாடுவோம்! நாள்தோறும், நீர்நிறைந்து அசைகின்ற குளங்களையுடைய தில்லைநகரின் அம்பலத்திடத்தே நின்று, கூத்தியற்றுகின்ற அவனது சிலம்பாடலைப் பாடுவோம்! இங்ஙனமெல்லாம் பாடி, நாம் தெள்ளேணம் கொட்டுவோமாக! [கொக்கிறகு சூடியது, இறைவன், வேடுவனாகி வேண்டுருக்கொண்ட போதாகும்.]*

# 12. திருச் சாழல்

## சிவனுடைய காருணியம்

(நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா)

*['சாழல்' என்பதும், மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்று தான். ஒருத்தி கேட்பதும், அதற்கு மற்றொருத்தி விடை கூறுவதுமாக இப்பாட்டு நிகழும். இதுவும் தில்லையிலே அருளப்பெற்றதெனவும், ஈழவரசன் புதல்வியை ஊமை நீக்கிப் பேசுவித்தபோது சொல்லியது எனவும் உரைப்பர். வினா, புத்தனது எனவும்; விடை, ஊமைப்பெண் கூறியது எனவும் சிலர் கொள்வார்கள்.]*

**பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்**
**பேசுவதுந் திருவாயால் மறைபோலுங் காணேடீ!**
**பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை**
**ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ! 1**

*அவன் பூசுவதும், வெண்மையான சாம்பல்! அவன் பூண்பதுவும், சீறுகின்ற பாம்பு! அவன் திருவாயினால் பேசுவதும், வேதம் போலும்? இந்த அதிசயத்தைப் பாரேடி!*

*அவன் பூசுவதையும், பேசுவதையும், பூண்பதையும் கருதிக்கொண்டு என்னடீ பயன்? அவனே எவ்வுயிர்க்கும் ஈசனுவான்! அதனால், அனைத்துக்கும் அவ்வவற்றிற்குத் தக்கபடி இதஞ்செய்பவனும் அவனே இருக்கின்றான், சாழலோ! ['அதனால், அவனையே பணிவோம்' என்பது கருத்து.]*

**என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தானீசன்**
**துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது என்னேடீ?**
**மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்**
**தன்னையே கோவணமாய்ச் சாத்தினன்காண் சாழலோ! 2**

*என் அப்பன் எனவும், எம் பெருமான் எனவும், எல்லார்க்கும் தானே ஈசன் எனவும் கூறப்பெறுகின்றவன், தைத்த துணியினைத் தானணியும் கோவணமாகக் கொள்ளுகின்ற அத் தன்மையன்தான் என்பது என்னேடீ?*

*நிலைபெற்ற கலைகளுட் செறிந்த பொருள்கள் பலவும் அடங்கின நான்கு மறைகளும், பெரிய சரடாகக் கொண்ட அதனையே, அவன் கோவணமாகச் சாத்தியருளினன் என்று*

அறிவாயாக, சாழலோ! [வேதங்களை அரைக்கயிருகவும், வேதப் பொருள்களையே கோவணமாகவும் கொண்டவன் சிவன்; அதனுல் அவனைக் கோவணதாரி என எளிமையாகக் கொள்ளுவது தவறென்பது கருத்து.]

**கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை**
**தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ!**
**தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினுங்**
**காயில் உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ! 3**

*அவனுக்குக் கோயிலோ சுடுகாடாயிருக்கிறது! கொல்லும் இயல்புடைய புலித்தோலே அவனுக்குரிய நல்ல ஆடையாக இருக்கின்றது! அவன் தாயும் அற்றவன்; தந்தையும் அற்றவன்! தான் தனியனுகியவன் அவனும்! இதனைப் பாரேடீ!*

*தாயுந் தந்தையும் இல்லாதவனுய்த், தான் தனியனுகவே அவன் இருந்தனனுனுலும், அவன் சினந்தால், உலகனைத்துமே கற்பொடியாக ஆகிவிடுமே, சாழலோ! ['அத்தகைய ஆதியும் அந்தமும் அற்ற பெருமானைப் போற்றுவோம்' என்பது கருத்து.]*

**அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை**
**வயனங்கள் மாயா வடுச்செய்தான் காணேடீ!**
**நயனங்கள் மூன்றுடை நாயகனே தண்டித்தால்**
**சயமன்றே வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ! 4**

*பிரமனையும், மன்மதனையும், யமனையும், சந்திரனையும், அடையாளங்கள் அழியாதபடி வடுவுண்டாக்கினுன் அவன் என்பார்கள்! அதனைக் காணேடீ!*

*முக்கண்களை உடைய தலைவனே அங்ஙனம் அவர்களைத் தண்டித்தால், தேவர்கட்கு அதனுல் வெற்றியல்லவோ, தாழ் குழலாய், சாழலோ! ['நாயகன் தண்டித்தது வானவர்க்குச் சயமாகியது, அவருள்ளும் தீமைசெய்தவர் தக்கபடி ஒறுக்கப் படுவார் என்கின்ற அறநெறியின் உறுதித்தன்மை அதனுல் விளக்கமுறுதலால்.]*

**தக்கனையும் எச்சனையுந் தலையறுத்துத் தேவர்கணம்**
**தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதான் என்னேடீ?**
**தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி அருள்கொடுத்தங்**
**கெச்சனுக்கு மிகைத்தலைமற் றருளினன்காண் சாழலோ! 5**

*தக்கனையும் யாககர்த்தாவையும் தலைகளை அறுத்தும், தேவர்கணங்களுள் தொகுதியாகக் கூடிவந்தவர்களை எல்லாம் அழித்தும், அவன் செய்ததுதான் என்னேடீ?*

கூடி வந்த தேவர்கணங்களை அழித்தருளினாலும், மீண்டும் அவர்களுக்கு அவன் அருளினையும் நல்கினான். அவ்விடத்து யாககர்த்தாவுக்கு மிகுதியாகிய ஒரு தலையையும் அருளிச்செய்தனன் அன்றோ, சாழலோ! [மிகைத்தலைக்கு, ஆட்டுத்தலை எனவும் உரைப்பர். இதனால், 'அவன் அருளாளனாகிய சிறப்பை நினைந்து போற்றுவோமாக' என்பது கருத்து.]

அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றதுதான் என்னேடீ ?
நிலமுதற்கீழ் அண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தால் ஆங்காரந் தவிரார்காண் சாழலோ! 6

பூவிலுறையும் நான்முகனும், திருமாலும் அறியாமல் திகைக்கும்படியாக, அழலுருவாகிப் பாதாள முதல் அண்ட முடியினையும் பொருந்த, அவன் நின்றதுதான் என்னேடீ?

பாதாளலோகம் முதலாக அண்டமுடியளவும் பொருந்த இறைவன் அன்று நில்லாதிருந்தால், அயன் அரியாகிய அவ்விருவரும், தம்முடைய பகைகாரணமாகத், தம்பால் எழுந்த ஆங்காரத்தினைக் கைவிடமாட்டார்களே சாழலோ! [அதனால் அவன், 'அவர்களின் ஆங்காரத்தைப் போக்கி ஆட்கொள்ளும் பொருட்டாகவே, அழலுருவாகி நின்றனன்' என்பது கருத்து.]

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன்சடையிற் பாயுமது என்னேடீ?
சலமுகத்தால் அவன்சடையிற் பாய்ந்திலளேல் தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ! 7

மலைமகளை ஒரு பங்கில் வைத்தலுமே, மற்றொருத்தியாகிய கங்கையானவள், நீருருவத்தோடு, அவனுடைய சடையிலே பாய்வதுதான் என்னேடீ?

நீருருவத்தோடு அவனுடைய சடையிலே அவள் அன்று பாய்ந்திலளாயின், தரணியெல்லாம் பாதாளத்திடத்தே சென்று அழுந்துமாறு அவள் உக்கிரத்தோடு பாய்ந்துவிட, அதனால் பெருங்கேடும் உண்டாகிவிடுமே, சாழலோ? ['உலகின் கேட்டை நீக்கவே அவன் கங்கையைச் சடையிற் கரந்தனன்' என்பது கருத்து.]

கோலால மாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த
ஆலாலம் உண்டான் அவன்சதுர்தான் என்னேடீ?
ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ! 8

*கோலாகலமாகி ஒலிக்கின்ற கடலினிடத்திலே, அன்று எழுந்த ஆலகால நஞ்சினை, உண்டவனின் சதுரப்பாடுதான் என்னேடீ?*

*அவன் அந்த ஆலகாலத்தை உண்டிலனாயின், அந் நாளிலே, பிரமனும் திருமாலும் உள்ளிட்ட மேம்பட்ட தேவர்கள் எல்லாரும் மடிந்திருப்பார்களே, சாழலோ? ['நஞ்சினை அவன் உண்டது தேவர்களைக் காத்தற்பொருட்டாகவே' என்பது கருத்து.]*

தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ!
பெண்பா லுகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ! 9

*தென்திசைக்கண் விரும்பி, தில்லைப்பதியின்கண் உள்ள அம்பலத்திலே நடனஞ் செய்கின்றவன், பெண் பாகத்தையும் விரும்பினான்; அதனால், அவன் ஒரு பெரிய பெண்பித்தன் ஆவான் காணேடீ!*

*அவன், பெண்பாகத்தை விரும்பிலனாயின், இரு நிலத்தோர்கள் ஆண்பெண் உறவினை அறியாத பேதைமை உடையவர்களாகி, யோக நிலையை மேற்கொண்டு, மேலுலகத்தையே அடைந்துவிடுவார்கள் என்று அறிவாயாக, சாழலோ! ['உலகில் ஆண்பெண் உறவற்றுப் போம்' என்பது கருத்து.]*

தானந்தம் இல்லான் தனையடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ!
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ! 10

*தான், தனக்கொரு முடிவில்லாதவனாகிய பெருமான், தன்னை வந்தடைந்த நாயினேனையும் ஆனந்த வெள்ளத்தில் திளைக்குமாறு அழுந்தச் செய்து, எனக்கொரு முடிவினை விளைவித்தனன் என்பதைக் காணேடீ!*

*ஆனந்த வெள்ளத்தே அழுந்துவித்த அவனது திருவடிகள், வானகத்தே வாழ்கின்ற தேவர்கட்கும் ஒப்பற்ற பெரும் பொருளாகும் என்பதனை அறிவாயாக, சாழலோ! ['அவன் திருவடிகளைப் பெறுதற்கரிய பெரும்பொருளாகக் கருதித் தேவர்களும் போற்றித் துதிப்பார்கள்' என்பது கருத்து.]*

நங்காய்ஈ தென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோள்மேலே காதலித்தான் காணேடீ!
கங்காளம் ஆமாகேள் காலாந்தர த்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ! 11

பெண்ணே! நரம்போடு எலும்பினையும் அணிந்தவனாகத் தோள்மேல் முழுஎலும்புக் கூட்டினையும் விரும்பினனே சிவன்! இஃது, என்ன தவமோ, காணேடீ?

முழு எலும்புக்கூடு அவனுக்கு வந்த விதத்தைக் கேட்பாயாக: பேரூழியின் முடிவிலே, அயன் அரியென்னும் இருவருடைய காலத்தையும் முற்றுவிக்கக் கருதியே, அவர்களது எலும்புக்கூடுகளை அவன் அங்ஙனம் தரித்தனன், சாழலோ! [கங்காளம் மாலயன் ஒடுக்கத்தையும், பிற எலும்புகள் நரம்புகள் பிறவுயிர்களினது ஒடுக்கத்தையும் குறிக்கும்.]

கானார் புலித்தோல் உடைதலையூண் காடுபதி
ஆனா லவனுக்கிங் காட்படுவார் ஆரேடீ?
ஆனாலுங் கேளாய் அயனுந் திருமாலும்
வானவர் கோவும் வழியடியார் சாழலோ! 12

காட்டிலுள்ள புலித்தோலே அவனது உடை; தலையோடே அவனது உண்கலம்; மயானமே அவன் வாழும் இடம்; இங்ஙனமானால், அவனுக்கு இவ்விடத்தில் ஆட்படுபவர்தாம் யாவரோடீ?

அவன் அத்தகையவனேதான் ஆனாலும், திருமாலும், பிரமனும், வானுலகினர் தலைவனான இந்திரனும், அவனுக்கு வழிவழியாக அடியவர்களாயிருப்பவர்கள் என்பதைக் கேட்டறிக, சாழலோ! ['படைத்தற் கடவுளும், காத்தற் கடவுளும், யோக பூமியின் மன்னனும் சிவனடியார் ஆகவே, யாம் அவனடியாராவது பெறுதற்கரிய பேறு' என்பது கருத்து.

மலையரையன் பொற்பாவை வாள்நுதலாள் பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடீ?
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங்காண் சாழலோ! 13

மலையரசனது பொற்பாவை போல்வாளும், ஒளிபொருந்திய நெற்றியை உடையாளுமாகிய பெண்செல்வத்தை, உலகறியத், தீமுன்னர்ச் சிவபிரான் மணந்து கொண்டான் என்பது, என்னேடீ?

அங்ஙனம், அவன், உலகறிய அவளைத் தீமுன்னர் மணம் வேட்காது கைவிட்டனனாயின், உலகனைத்துமுள்ள கலைநூல்கள் கூறிய எல்லாப் பொருள்களுமே நிலைதடுமாற்றம் அடைந்துவிடுமே, சாழலோ! ['சிவன் பார்வதியை மணந்தது உலகிற்கு அருளுதற்பொருட்டே' என்பது கருத்து.]

**தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்**
**தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ?**
**தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்**
**ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ! 14**

*தேன் பாய்கின்ற தண்ணிய வயல்கள் சூழ்ந்த தில்லை நகரத்துச் சிற்றம்பலத்தே, கூத்தனாக உள்ளவன், தானே ஆலங்காட்டிற் போய் ஊர்த்துவதாண்டவம் புரிந்ததுதான் என்னேடீ?*

*தான் புகுந்து, அன்று, அவன் நடனம் செல்திலனேல், இந்த உலகமெல்லாம், ஊன்பொருந்திய வேற்படையினை உடையவளான காளிக்கு, உண்பொருளாகி அழிந்துபோய் விடுமே, சாழலோ? [காளியின் கோரதாண்டவத்தை நிறுத்தி உலகைக் காக்கவே அவன் ஊர்த்துவதாண்டம் செய்தனன்" என்பது கருத்து ]*

**கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேறாதே**
**இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ!**
**தடமதில்கள் அவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்**
**இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ! 15**

*மதயானையையும், குதிரையையும், தேரினையும் விரும்பி அவற்றின்மீது ஏறிச்செல்லாமல், இடபத்தினை விரும்பி அவன் ஏறினவிதத்தினை எனக்கு விளங்குமாறு சொல்லேடீ!*

*அகன்ற கோட்டைகளான முப்புரங்களாகிய மூன்றனையும், நெருப்பினாலே அவன் நீறாக்கின அந்த நாளிலே, திருமாலே இடபமாகி உருக்கொண்டு பெருமானைத் தாங்கினான்; அதனாலேயே அவன் காளையைத் தனக்குரிய வாகனமாகக் கொண்டனன், சாழலோ! [தடமதில்கள்-முப்புரங்கள்.]*

**நன்றாக நால்வர்க்கும் நான்மறையின் உட்பொருளை**
**அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ!**
**அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் ஆயிடினுங்**
**கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ! 16**

*பண்டை நாளிலே, கல்லால மரத்தின் கீழே வீற்றிருந்து, உலகிற்கு நன்மையுண்டாகுமாறு, நான்கு முனிவர்களுக்கும், பெருமான், நான்மறைகளின் உட்பொருளைச் சொல்லியருளினன், என்பதைக் காணேடீ!*

*அந்நாளிலே, அவன் கல்லாலின் கீழேயிருந்து அறநெறியை உரைத்தனன் ஆயிடினும், அறம்பிறழ்ந்துவிளங்கிய*

முப்புரக் கோட்டைகளையும் கூட்டோடே நீறுசெய்தவனும் அவனேகாண், சாழலோ! ['அன்பர்க்கு அறநெறி காட்டி ஆட்கொள்பவன் ஆயினும், தீமையுடையவரை அழிக்கின்ற வன்மையுடையவனும் அவனுவான்' என்பது கருத்து. நால்வர்-சனகாதியர். நான்மறையின் உட்பொருள் என்றது தர்மார்த்த காமமோட்சம் ஆகியவற்றை; இவற்றை அறம் பொருள் இன்பம் வீடு என்பது தமிழ் மரபு.]

அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலி திரியும்
நம்பனையுந் தேவனென்று நண்ணுமது என்னேடீ?
நம்பனையும் ஆமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாவென் றேத்தினகாண் சாழலோ. 17

பொதுச்சபையிலே கூத்தாடிக் கொண்டு, உண்ணும் உணவிற்குப் பிச்சையேற்றுத் திரிகின்ற சிவபெருமானையும், 'ஒரு கடவுள்' என்று சொல்லி, அடைதற்கு விரும்புவதுதான் என்னேடீ?

அவன் கடவுளாகும் அந்த விதத்தையும் கேட்பாயாக; அத்தகைய நம்பனையே நால்வேதங்களும் அறியாதனவாகி, 'எம்பெருமானே! ஈசனே!' என்று துதித்தன என்பதனையும் அறிவாயாக, சாழலோ! [அவன் பிச்சனுயினும், நான் மறைப் பொருளுக்கும் எட்டாத நாதன்' என்பது கருத்து.]

சலமுடைய சலந்தரன்தன் உடல்தடிந்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ?
நலமுடைய நாரணன்தன் நயனம்இடந் தானடிக்கீழ்
அலராக இடஆழி அருளினன்காண் சாழலோ! 18

சினமுடைய சலந்தராசுரனின் உடலினை வெட்டி, அவனைக் கொன்ற வலிமைமிகுந்த சக்கரப்படையினை, நன்மை செய்யும் நாராயணனுக்குச் சிவபிரான் அருளிச் செய்த தன்மைதான், என்னேடீ?

நன்மை செய்வானுன நாரணன், தன்னுடைய கண்ணையே தோண்டிச் சிவபிரானது திருவடிக்கீழ் அருச்சனை மலராகத் தூவின அந்தப் பக்திப் பெருக்கினுல் காண், சாழலோ! [திருமால், சிவபெருமானை ஆயிரமபூக்களுடன் அருச்சிக்க, அப்போது ஒரு பூக் குறையவும், தன் செந்தாமரைக்கண்ணை இடந்து அப்பினுன் என்பது புராணவரலாறு. சலந்தரன்-ஓர் அசுரன்.]

அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமான் உண்டசதுர் எனக்கறிய இயம்பேடீ!
எம்பெருமான் ஏதுடுத்தங் கேதமுது செய்திடினுந்
தன்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ! 19

புள்ளிகளையுடைய புலித்தோலே ஆடையாகும்; ஆலகால நஞ்சே உணவாகும்; அத்தகைய எம்பெருமானுடைய சதுரப் பாட்டினை எனக்கும் சொல்வாயடி!

எம்பெருமான், எதனை உடுத்தாலும், எதனை அமுது செய்தாலும், அவன், தன் பெருமையினைத் தான் அறியாத தன்மையினன் என்பதனை அறிவாயாக, சாழலோ! [அம்பரம்-ஆடை. சதுர்-சதுரப்பாடு; சாமர்த்தியம்.]

அருந்தவருக் காலின்கீழ் அறமுதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ?
அருந்தவருக் கறமுதல்நான் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ! 20

அரிய தவமியற்றிச் சிறந்த, உலகப் பற்றுக்களையும் கடந்த சனகாதியர்களுக்குக், கல்லால நீழலின்கண் வீற்றிருந்து, அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கு, உறுதிப் பொருள்களையும் அருளுதற்கான காரணத்தை நானும் அறியும்படியாகச் சொல்வாயடீ!

அருந்தவர்களாகிய அவர்கட்கு அறமுதலாகிய நான்கு உறுதிப்பொருள்களையும் அவன் அன்று அருளிச் செய்திலனாயின், திருந்திய அவர்கட்கும் உலகவியற்கைகள் தெரியாமற் போய்விடும் என்றறிவாயாக, சாழலோ! [நான்கு முனிவர்களும் உலகவியற்கையினை அறியார்; அதனால் உலகும் அறியாதுபோம்' என்பது கருத்து. உறுதிப்பொருள்; அறம் பொருள் இன்பம் வீடு ஆகியன.]

# 13. திருப் பூவல்லி

## மாயா விசயம் நீக்குதல்

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா)

*[இதனையும் அடிகள் திருத்தில்லையிலேயே அருளிச் செய்தனர். 'பூவல்லி' என்பது, மகளிர் பூக்கொய்து விளையாட்டயர்கின்ற ஒன்றாகும். இங்ஙனம், அவர் கொய்தாடுவது 'அல்லி மலரினை' என்பார்கள். அல்லி, மாலையில் மலர்வது. ஆதலின், இந்த ஆடலும் மாலைக்காலத்திற்கு உரியதாகும் எனலாம். மாயா விசயம் நீக்குதல் என்றது, ஆன்மாவை மாயா காரியங்களின் பிணிப்பினின்றும் நீக்கி இறையருளில் ஒன்றுபடுத்தல் என்ற கருத்தினை உள்ளடக்கியது இப்பகுதி, என்பதற்காகும்.]*

**இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே**
**துணையான சுற்றங்கள் அத்தனையுந் துறந்தொழிந்தேன்**
**அணையார் புனற்றில்லை அம்பலத்தே ஆடுகின்ற**
**புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 1**

*எம்பெருமான், தமக்குத் தாமே ஒப்பாக விளங்கும் திருவடிகளை என் தலைமேல் வைத்தருளிய அந்தப் பொழுதிலேயே, எனக்கு, அதுகாறும் துணையாக நான் கருதியிருந்த சுற்றங்கள் அனைத்தையும் மாயாகாரணமென்று தெளிந்தேன். அவற்றைக் கைவிட்டு, அவற்றின் பாசத்தினின்றும் விடுபட்டேன். அணைபொருந்திய, நீர்வளம் சூழ்ந்திருக்கின்ற, தில்லையம்பலத்திலே கூத்தாடிநிற்கின்ற பிறவிக்கடலைக் கடத்தற்குரிய தெப்பமாவானின் சிறப்பினைப் பாடி, நாம் கொடியினின்றும் பூக்களைப் பறிப்போமாக. ['புணை' என்றது, திருவடிகளை. அவனுடைய திருவடியடைதலும், உடற்பற்றின் காரணமாக அமைந்த உறவின்மீதுள்ள பற்றுக்கள் முற்றவும் ஒழிந்தன என்பதும், பிறவிக்கடலைக் கடத்தற்கான பிடிப்புக் கிடைத்தது என்பதும் கருத்தாகும்.]*

**எந்தையெந் தாய்சுற்றம் மற்றுமெல்லாம் என்னுடைய**
**பந்தம் அறுத்தென்னை ஆண்டுகொண்ட பாண்டிப்பிரான்**
**அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த**
**பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ. 2**

*என் தந்தையும், என் தாயும், என் சுற்றமும் ஆகிய உறவெல்லாம், என்னுடைய பிறவித்தளையினை அறுத்து, என்னைத் தனக்கே அடிமைகொண்ட பாண்டிப்பிரான் ஆகிய அவன் ஒருவனே ஆவான்! அழகான திருவிடை மருதூரிலே, ஆனந்தத் தேனைது இருந்த மரப்பொந்தினைப் போன்ற வனுகிய, அப்பெருமானைப் போற்றி, நாம், அல்லிப் பூவைக் கொய்வோமாக! ['பந்தம் அறுத்துத் தானே நமக்குரிய உறவாகிப் பேரானந்தத் தேனினை நம்மை அருந்துவிக்கும் பெருமானைப் போற்றி நாம் பூக்கொய்வோம்' என்றனர்.]*

நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்
தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்
மாயப் பிறப்பறுத் தாண்டானென் வல்வினையின்
வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ. 3

*நாயினும் கீழ்ப்பட்ட நம்மையும் ஒரு பொருளாக வைத்துத், தாயினும் மிகுதியான தயையினை உடையவனும் தன் வயத்தனுமாகிய பெருமானுனவன், நம்முடைய வஞ்சப் பிறப்பினை அறுத்து, நம்மையும் தனக்கு ஆட்கொண்டருளினுன். அதனுல், நம்மைப்பற்றி நிற்கும் கொடிய வினையின் வாயிலே புழுதியைக் கொட்டிவிட்டு, நாம் அல்லிப்பூவினைக் கொய்வோமாக! ['வல்வினை என்னை ஏதும் செய்தற்கு இயலாது' என்பது கருத்து.]*

பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கன்எச்சன் இந்துஅனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரரால்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 4

*செம்மை பொருந்திய, தில்லையென்னும் திருப்பதிக்கு அரசனுகிய கூத்தப் பெருமானைப் போற்றித் துதியாதே, மதிப்பிழந்த தக்கனும், சூரியனும், யாககர்த்தாவும், சந்திரனும் அக்கினிதேவனும் வானளாவிய பூதப் பெரும் படையினை உடைய வீரபத்திரப் பெருமானுல் அந் நாளிற் புண்பட்டுப் போயினர். அந்த வகையைப் பாடி நாம் பூக்கொய்வோமாக! ['இறைவனை மதியாதவர்கள் அழிவடைவர்' என்பது கருத்து.]*

தேனுடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊனுடி நாடிவந் துள்புகுந்தான் உலகர்முன்னே
நானுடி ஆடிநின் றேலமிட நடம்பயிலும்
வானுடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ. 5

வண்டினம் மொய்க்கின்ற கொன்றை மலர்களைச் சடையிலே சூடியவன் சிவபெருமான். அவன், மானுட உடலினை விரும்பி மேற்கொண்டு, எம்மை நாடியும் வந்தான். வந்து, உலகத்தவரின் முன்பாகவே, என் உள்ளத்துள்ளும் புகுந்து கொண்டான். இப்போது, நான், அவனை விரும்பிக் கூத்தாடி நின்று ஓலமிட்டுக் கூவவும், அவன் தில்லைப்பதியுள் நடனமாடியே நின்றான். வானநாடரின் கோமானான அவனுக்கே, நாம் சென்று பூக்கொய்வோமாக! [இறைவன், தம்மை உடனழைத்துச் செல்லாது போயினதனைக் கூறுவார். 'நான் நாடி, ஆடிநின்று ஓலமிட, நடம்பயின்று நிற்பவனானன்' என்றனர்.]

எரிமூன்று தேவர்க் கிரங்கியருள் செய்தருளிச்
சிரமூன் றறத்தன் திருப்புருவம் நெரித்தருளி
உருமூன்று மாகி உணர்வரிதாம் ஒருவனுமே
புரமூன் றெரித்தவா பூவல்லி கொய்யாமோ. 6

எரிகின்ற தன்மையுடைய அருக்கன் சோமன் அக்கினியாகிய முத்தேவர்களுக்கும் இரங்கி அருள்செய்து அருள் பாலித்தும், அவரது மூன்று தலைகளும் அற்று வீழுமாறு தன் திருப்புருவத்தினை நெரித்தருளியும், அந்த முத்தீ வடிவமும் தானேயாகி விளங்கியும், அறிதற்கரிதாகி அருவுருவாகியும் விளங்கும், ஒருவனாகி நின்ற பெருமான், முப்புரங்களையும் எரித்த அந்தச் சிறப்பினைப்பாடி, நாம் பூக் கொய்வோமாக!

வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 7

தன்னை வணங்குவதற்காகவே எனக்குத் தலையினை அமைத்தான்! தன்னுடைய நெடிய சிலம்புகள் விளங்கும் திருவடிகளைப் போற்றித் துதிப்பதற்காகவே எனக்கு வாயினை அமைத்தான்! நான் சேர்ந்து கூடியிருப்பதற்காகவே தன்னுடைய சிறந்த அடியார்களது கூட்டத்தையும் வைத்தான்! அத்தகையனாகிய எம்பெருமான், தெய்வத் தன்மையோடுங் கூடியவனாக, அழகிய தில்லையம்பலத்திலே கூத்தியற்றுகின்ற, அந்தப் பெருங்குணத்தினை வியந்து பாடியவாறே நாம் பூக்கொய்வோமாக. [அணங்கு-அழகும் ஆம்; உமையம்மை காண நின்றாடும் அம்பலக் கூததாதலின், அணங்கென்பது அம்மையைக் குறிப்பதாகும் என்பாரும் உளர்.]

நெறிசெய் தருளித்தன் சீரடியார் பொன்னடிக்கே
குறிசெய்து கொண்டென்னை ஆண்டபிரான் குணம்பரவி
முறிசெய்து நம்மை முழுதுடற்றும் பழவினையைக்
கிறிசெய்த வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 8

*என்னை நன்னெறியிலே பொருந்துமாறு செய்து அருளிய வனுகத், தனது சிறந்த அடியவர்களின் திருவடிகளுக்கே தொண்டு செய்ய என்னை இலக்காக்கிக் கொண்டு, என்னையும் ஆட்கொண்ட பெருமான் அவன். அவனது, அந்த அருட் குணத்தினைத் துதித்து, எம்மை அவனுக்கு அடிமையாக்கி, எம்மை முற்றவும் சூழ்ந்துவருத்திய பழவினையை அவன் இல்லை யாக்கின அந்த விதத்தையும் பாடி, நாம் பூக்கொய்வோமாக! [முறி-அடிமை. உடற்றல்-வருத்துதல். கிறி-பொய்.]*

பன்னாட் பரவிப் பணிசெய்யப் பாதமலர்
என்ஆகம் துன்னவைத்த பெரியோன் எழிற்சுடராய்க்
கல்நா ருரித்தென்னை யாண்டுகொண்டான் கழலிணைகள்
பொன்னுன வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 9

*பலநாளும் துதித்துப் பணிவிடை செய்வதற்காகத், தனது திருவடிமலர்களை என் மனத்திலே பொருந்துமாறு வைத்தருளின, பெருமையினை உடையவன் அவன்! எழி லுடைய சுடருருவாகிக், கல்லிலே நாருரித்ததுபோல என்னை யும் அவன் ஆண்டு கொண்டனன். அவனது அத்திருவடி யினைகள் பொன்போலும் இயல்புமாருது எனக்கருளி நிற்கும் அந்தத் தன்மையினைப் பாடி, நாம் பூக்கொய்வோமாக! [அடிகள் பொன்னுனது, இடையருத அன்பு மனத்திடையே நிலைபெற்றிருக்கத் துதிக்கப்பெறுவதனுல் ]*

பேராசை யாமிந்தப் பிண்டமறப் பெருந்துறையான்
சீரார் திருவடி யென்தலைமேல் வைத்தபிரான்
காரார் கடல்நஞ்சை உண்டுகந்த காபாலி
போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமொ. 10

*பேராசை காரணமாக ஏற்படுகின்ற இந்த உடற்பிண்ட மானது அற்றொழியும் வண்ணம், திருப்பெருந் துறையினை உடையவனுன சிவபெருமான், சிறப்புமிகுந்த தன் திருவடி களை என் தலைமேலாக அன்று வைத்தருளினுன். அப் பெரு மான், கருமை பொருந்திய கடல் நஞ்சினை உண்டு களித்த, பிரமகபாலத்தை ஏந்தியவனும் ஆவான். அவனுடைய, போருக்கு இலக்காயிருந்த முப்புரங்களின் அழிவெய்திய இயல்பினைப் பாடி, நாம் பூககொய்வோமாக! ['புரம்பாடல்-' புரங்களை நீறுக்கிய செயலினை வியந்து பாடல். கபாலி-பிரம கபாலத்தை ஏந்தியவன். கார்-கருமை; அச்சமும் ஆம்.]*

பாலும் அமுதமுந் தேனுடனும் பராபரமாய்க்
கோலங் குளிர்ந்துள்ளங் கொண்டபிரான் குரைகழல்கள்
ஞாலம் பரவுவார் நன்னெறியாம் அந்நெறியே
போலும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 11

*தேனோடு, பாலும் அமுதமும் கலந்தாற்போன்று விளங்கும் மேலான பொருளாகித், திருக்கோலம் குளிர்ந்து, என் உள்ளத்தை இடமாக்கிக் கொண்டருளிய பெருமான், அவன்! ஒலிமுழங்கும் வீரக்கழலணிந்த அவனுடைய திருவடிகளை உலகில் போற்றுகின்றவர்களுடைய நன்னெறியாகிய, அந்த நெறியையே ஒப்ப விளங்குகின்ற அவனது புகழினைப்பாடி, நாம் பூக்கொய்வோமாக! ['கோலங் குளிர்ந்து' என்றது, ஒளிப்பிழம்பாகிய பிரான் காட்சிக்கு இனியனாகுமாறு எழுந்தருளியதனை.]*

வானவன் மாலயன் மற்றுமுள்ள தேவர்கட்கும்
கோனவ னாய்நின்று கூடலிலாக் குணக்குறியோன்
ஆன நெடுங்கடல் ஆலாலம் அமுதுசெய்யப்
போனகம் ஆனவா பூவல்லி கொய்யாமோ. 12

*வானவர் கோமானாகிய இந்திரன், திருமால், பிரமன் மற்றுமுள்ள தேவர்கள் ஆகியவர்கட்கெல்லாம் தலைவன் அவனேயாக நின்றும், அவர்கட்கெல்லாம் காணக்கூடாதவாறு விளங்கும் குணங்குறிகளை உடையவன் சிவபெருமான். அவன், நெடுங்கடலுள் எழுந்த ஆலகாலவிடத்தை எடுத்துப் பருக, அதுவே அவனுக்கு உணவாக அமைந்த அந்த விதத்தைக் குறித்துப் பாடி, நாம் பூக்கொய்வோமாக! [குணம்-முக்குணம்; குறி-நாமம் முதலியன.]*

அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாள்தோறும்
நின்றார ஏத்தும் நிறைகழலோன் புனைகொன்றைப்
பொன்தாது பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 13

*அந்நாளிலே, கல்லால நீழலின்கீழ் வீற்றிருந்து, அரியவான மறைகளைத் தான் அருளிச்செய்தவன் சிவபிரான். தேவர்களும் மாமுனிவர்களும் நாளதோறும் நன்றாக நிலையுடைய மனத்தினராய் மிகுதியாகத் துதிக்கின்ற குணங்கள் நிறைந்த திருவடிகளை உடையவனும் அவன். அவன் புனையும் கொன்றைமலரின் பொன்னிற மகரந்தத்தூளைப் பாடி, நாம் பூக்கொய்வோமாக!*

படமாக என்னுள்ளே தன்னிணைப்போ தலையளித்திங்
கிடமாகக் கொண்டிருந் தேகம்பம் மேயபிரான்
தடமார் மதில்தில்லை அம்பலமே தானிடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 14

*என் உள்ளத்திரையிலே தீட்டிய படத்தைப் போலத், தனது இரு திருவடிமலர்களும் என் நெஞ்சிடத்தே நிலைபெற்றிருக்குமாறு அருளிச்செய்து, இவ்விடத்தையே (உடலையே) தனக்குரிய இடமாகவும் ஆக்கிக்கொண்டு வீற்றிருந்து, புறத்தே, திருவேகம்பத்திலும் கோயில்கொண்டிருக்கின்ற பெருமான், அவன்! நீர்நிலைகள் சூழ்ந்த திருமதில்களையுடைய தில்லைப் பொதுச்சபையினையே தான் ஆடுதற்குரிய இடமாகக் கொண்டு, கூத்தியற்றும் அவனைப் பாடியவாறு, நாம் பூக்கொய்வோமாக! [படம்-ஓவியப்படம்.]*

அங்கி அருக்கன் இரரவணன்அந் தகன்கூற்றன்
செங்கணஅரிஅயன் இந்திரனுஞ் சந்திரனும்
பங்கமில் தக்கனும் எச்சனுந்தம் பரிசழியப்
பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 15

*அக்கினி, சூரியன், இராவணன், உடல்களை அழிப்பவனாகிய எமன், சிவந்த கண்களையுடைய திருமால், அயன், இந்திரன், சந்திரன், குறைவற்றிருந்த் தக்கன், யாக கர்த்தாவான எச்சன் ஆகியோரை எல்லாம், அவர்தம் மதிப்புக் கெடும்படியாகச் சினந்துஎழுந்த பெருமானின் சிறப்பினைப் பாடி, நாம் பூக்கொய்வோமாக! [சிவனுக்கு மாறுபட்டு அதனால் ஒறுக்கப்பட்டோர் இவர். சிவநெறிக்குப் புறமே பேசித் திரிகின்றவரும், இவ்வாறே ஒறுக்கப்படுவர்' என்பது கருத்தாகும்.]*

திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு
மண்பால் மதுரையிற் பிட்டமுது செப்தருளித்
தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 16

*வலிமையுடன் போர்செய்வதற்கு வல்ல இடபத்தினைத் தனக்குரிய ஊர்தியாக உடையவன்! சிவபுரத்தார்க்குத் துணையான போரேறு போன்றவன்! நிலவுலகிடத்து, மதுரை நகரிலே பிட்டமுது செய்து, வாணிச்சிக்கு அருளியதனால், பிரம்பினால் பாண்டியன் அடித்துத் தன்னை வேலைகொள்ள, அந்த வேளையிற் புண்பட்டவனாகியும் நின்றவன்! அவனது, அந்தச் சிறப்பினைப்பாடி நாம் பூக்கொய்வோமாக!*

முன்னாய மாலயனும் வானவருந் தானவரும்
பொன்னார் திருவடி தாமறியார் போற்றுவதே
என்னாகம் உள்புகுந் தாண்டுகொண்டான் இலங்கணியாம்
பன்னாகம் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 17

*முதன்மையாளராகிய திருமாலும் பிரமனும், மற்றுமுள்ள வானவரும், தானவர்களும், சிவபிரானின் பொன்னொளி பொருந்திய திருவடிகளைத் தாம் கண்டறியாதவராக் காட்டுதற்கு வேண்டிப் போற்றிவருவர்! அவர் நிலைமை அங்ஙனமாயினும், அவன், என் உள்ளத்துத் தானே வந்து புகுந்தனன்; என்னைத் தனக்கு அடிமையாக்கியும் கொண்டனன்; அத்தகையவனின், விளங்கும் அணியாகிய பல பாம்புகளையும் போற்றிப்பாடி, நாம் பூக்கொய்வோமாக! ['பெருமானின் அணியாக விளங்கும் நாகங்களைப் பாடுவோம்' என்பது கருத்து.]*

சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 18

*சிறப்பமைந்த சிவபிரானின் திருவடிகளிலே விளங்கும் திண்மையான சிலம்புகளின் ஒலிக்கே, வெறுக்காத ஆசை மேற்கொண்டு, அடியனேன் அகம் மகிழ்வு கொள்ளுமாறு, தேர்கள் நிறைந்த வீதிகளையுடைய திருப்பெருந் துறையினுக்கு உரிய பெருமான் திருநடனம் செய்தருளினான் அந்தப் பேரானந்தக் காட்சியைப் பாடி, நாம் பூக்கொய்வோமாக!*

அத்தி யுரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்
பித்த வடிவுகொண் டிவ்வுலகிற் பிள்ளையுமாம்
முத்தி முழுமுதலுத் தரகோச மங்கைவள்ளல்
புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ. 19

*கயாசுரனாகிய யானையைக் கொன்று, அதன் தோலினை உரித்துப் போர்த்தருளும் பெருந்துறைப் பதிக்குரிய பெருமான், பித்தனைப்போல வடிவங்கொண்டதுடன், இவ்வுலகில் அடியார்க்கு மகவாகவும் அந்நாளிலே ஆகினான். முத்திக்கு முழுமுதலாகிய, அந்த உத்தரகோச மங்கைக்குஉரியவனாகிய வள்ளல், என் அறிவினிடத்துப் புகுந்துகொண்ட அந்தத் திறத்தினைப் பாடி, நாம் பூக்கொய்வோமாக!*

மாவார வேறி மதுரைநகர் புகுந்தருளித்
தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்
கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்
பூவார் கழல்பரவிப் பூவல்லி கொய்யாமோ. 20

*விரும்பும் வண்ணம் குதிரைமீது ஏறியமர்ந்து, மதுரைப் பெருநகரிலே புகுந்தருளி, ஒளிபொருந்திய தன் திருக்கோலமானது விளங்கப் பாண்டியனுக்குக் காணுமாறு காட்டியவன் பெருந்துறைக்கு உரியவனாகிய பெருமான்! அவன், தலைவனாகி வந்து எம்மைக் குற்றேவல் கொண்டும் அருளினான். அங்ஙனம் எழுந்தருளிவந்த அவனது, மலரனைய திருவடிகளைப் போற்றி, நாம் பூக்கொய்வோமாக, [இப்பாடல், சில பிரதிகளில் இல்லை.]*

# 14. திருவுந்தியார்

## ஞான வெற்றி

(கலித் தாழிசை)

['உந்தி பறத்தல் என்பது மகளிரது விளையாட்டுக்களுள் ஒன்று என்பர். தில்லையில் அருளப்பெற்ற திருபாட்டே இதுவுமாகும். 'ஞானத்தின் வெற்றி' இதனுடைய பொருண்மை.]

**வளைந்தது வில்லு விளைந்தது பூசல்**
**உளைந்தன முப்புரம் உந்தீபற**
**ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற. 1**

மேருவாகிய வில்லும் அந்நாளில் வளைந்தது; முப்புரத்துடன் மேற்கொண்ட போரும் விளைந்தது; அதனால் அம் முப்புரங்களும் வருந்தின என்றே உந்தீபற! அவை ஒருங்கே வெந்து அழிந்ததனை நினைந்தே, உந்தீபற!

**ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்**
**ஓரம்பே முப்புரம் உந்தீபற**
**ஒன்றும் பெருமிகை உந்தீபற. 2**

ஏகம்ப நாதரது கைகளிலே, அப்போது இரண்டு அம்புகளைக் கூட யாம் கண்டிலோம்; ஓர் அம்பே முப்புரத்தையும் அழிப்பதற்கு அவருக்குப் போதுமானதாயிருந்தது என்று உந்தி பற! அந்த ஒன்றுங்கூடப் பெரிதும் மிகையானதாகும் என்று உந்தீ பற! [ஒன்றும் மிகையானது, அவன் சிரித்தே எரித்தழித்த சிறப்பினால்.]

**தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்**
**அச்சு முறிந்ததென் றுந்தீபற**
**அழிந்தன முப்புரம் உந்தீபற. 3**

தேவர்கள் வருந்தி முயன்று தேரினைச் செய்துவிட்டதும், அதன்பால், பெருமான் தாம் அடியிட்டு ஏறியதும், அத் தேரின் அச்சு முறிந்து விட்டதென்று சொல்லி உந்தீ பற! ஆனாலும், அன்று முப்புரங்களும் அழிந்தனவென்று, உந்தீ பற! ['தேவரின் செருக்கறத் தேரச்சு முறிந்ததும் இறையருள்; மால் இடபமாகித் தாங்கியதும் இறையருள்; முப்புரம் அழிந்ததும் இறையருள் என்பது கருத்து.]

உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்
டெய்யவல் லானுக்கே உந்தீபற
இளமுலை பங்கனென் றுந்தீபற. 4

*திரிபுரங்களை எரித்த அந்நாளிலும், உய்தி பெறுதற்கு வல்லவர்களாயிருந்த தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன் மாலி என்னும் மூவரைமட்டும் அழியாது காத்து, தன் வாயிற் காவலாளராக ஏற்றுக்கொண்டனன். அவரை விட்டுப் பிறரை எல்லாம் அழியும்படியாக எய்தற்கு வல்ல பெருமானுக்கு என்றே, உந்தீ பற! இளமை மாறாத தனங்களையுடைய மங்கையினை ஒரு பாகத்தே உடையவன், அவனென்றே கூறி, உந்தீ பற! [மூவர்க்கு அருளியதன் அருளுதல் தன்மை, அருட்சக்தியின் கூடுதலால் ஏற்பட்டது என்பதனால் 'இளமுலை பங்கனென்று உந்தீ பற' என்றனர்.]*

சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வாபாடி உந்தீபற
உருத்திர நாதனுக் குந்தீபற. 5

*வீரபத்திரர் பூதப்படையுடனே சாடினபோது, தக்கனின் வேள்விக்கூடமானது சரிந்துபோகத், தேவர்கள் எல்லாம் அச்சமுற்று உயிர்பிழைக்கக் கருதி ஓடியதனைப் பாடி, உந்தீ பற! உருத்திரர்களின் தலைவனுக்கே உந்தீ பற! ['உருத்திரர்கள் தலைவன் சிவபிரான் என்பதனைச் சித்தாந்த நூலகள் உரைக்கும்.]*

ஆவா திருமால் அவிப்பாகங் கொண்டன்று
சாவா திருந்தானென் றுந்தீபற
சதுர்முகன் தாதையென் றுந்தீபற. 6

*அந்தத் தக்கனது வேள்வியிலே, திருமால் தனக்குரிய அவிப்பாகத்தினை ஏற்றுக்கொண்டபோது, வீரபத்திரரால் தன் மார்பிடத்து அடியுண்டு மூர்ச்சித்தபோதும், சாவாமல் இருந்தான் என்று, உந்தீ பற! அவன், சதுர்முகனாகிய பிரமனுக்குத் தகப்பனென்று சொல்லி, உந்தீ பற! ['ஆவா' இரக்கக் குறிப்பு.]*

வெய்யவன் அங்கி விழுங்கத் திரட்டிய
கையைத் தறித்தானென் றுந்தீபற
கலங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 7

*அக்கினியானவன் அவியில் விருப்பமுடையவனாகி, அதனை விழுங்குதலை எண்ணித் திரட்டியபோது, திரட்டிய அக் கைகளை வீரபத்திரர் அன்று தறித்தாரென்று உந்தீ பற!*

*அங்ஙனம் தறித்ததும் வேள்விக் கூடமே கலங்கிற்று என்று உந்தீ பற!*

பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்
பார்ப்பதென் னேயேடி யுந்தீபற
பணைமுலை பாகனுக் குந்தீபற. 8

*பார்வதி தேவியைப் பகையென்று சொல்லி நிந்தித்த தக்கனை, இறையவன், அவன் அவளுக்குத் தகப்பனென்று கருதிப் பார்ப்பதுதான் என்னேடீ, உந்தீபற? பருத்த முலைகளையுடைய பார்வதி பாகனுக்கே அது விளங்குமென்று உந்தீபற!*

புரந்தர னாரொரு பூங்குயி லாகி
மரந்தனி லேறினார் உந்தீபற
வானவர் கோனென்றே உந்தீபற. 9

*இந்திரன், ஓர் அழகான குயிலின் உருவினை எடுத்தவனாகி மரத்தினில் ஏறி அன்று பதுங்கினான் என்றே, உந்தீபற! அவன்தான், வானவரின் கோமான் என்று சொல்லி, உந்தீபற!*

வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை
துஞ்சின வாபாடி உந்தீபற
தொடர்ந்த பிறப்பற உந்தீபற. 10

*வெவ்விய சினத்தையுடைய யாககுருவின் தலையானது வெட்டுண்டு விழுந்ததனைப்பாடி, உந்தீபற! தொடர்ந்து வரும் நம் பிறப்பு நீங்குமாறு பாடி, உந்தீபற!*

ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி உந்தீபற
கொங்கை குலுங்கநின் றுந்தீபற. 11

*ஆட்டினது தலையினைத் தக்கனுக்குத் தலையாகச் சேர்த்து வைத்த அந்த விதத்தைப் பாடி, உந்தீபற! கொங்கைகள் குலுங்குமாறு நின்றுஆடி, உந்தீபற! [விதியின் மகனான தக்கனையும் 'விதி' என்றனர். விதி-பிரமன்.]*

உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே
கண்ணைப் பறித்தவா றுந்தீபற
கருக்கெட நாமெலாம் உந்தீபற. 12

*அவியுணவு உண்ணப்புகுந்த 'பகன்' என்பவன் ஒளித்து ஓடாதபடிக்கு, அவனுடைய கண்ணைப் பறித்தவிதத்தைக் குறித்துப்பாடி, உந்தீபற! நாம் எல்லாம் பிறவிகெட்டு*

வீடடையுமாறு வேண்டி, உந்தீபற! [பகன்-பன்னிரு சூரியருள் ஒருவன்.]

நாமகள் நாசி சிரம்பிர மன்படச்
சோமன் முகன்நெரித்த துந்தீபற
தொல்லை வினைகெட உந்தீபற. 13

நாமகள் மூக்கு அறுபடவும், பிரமன் சிரம் அறுபடவும், சந்திரன் முகம் தேய்க்கப்பெற்றதுவும் கூறி, உந்தீபற! நம் தொல்லைவினை கெடுவதற்காக வேண்டி, உந்தீபற!

நான்மறை யோனும் மகத்திய மான்படப்
போம்வழி தேடுமா றுந்தீபற
புரந்தரன் வேள்வியி லுந்தீபற. 14

பிரமனும், யாகாதிபதியானவனும் தண்டனைப்படவே, இந்திரன், அந்த வேள்விக்களத்தினின்றும் தப்பி ஓடுவதற்கான வழியைத்தேடின விதத்தைக் குறித்துப் பாடி, உந்தீபற! ['அகத்து இயமான்' எனக்கொண்டு 'உள்ளிருக்கும் உயிர்' எனவும் உரைப்பர்.]

சூரிய னார்தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற
மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 15

சூரியனாருடைய கோவைக் கனிபோன்ற வாயினிடத்துள்ள பற்களைத் தகர்த்து உதிர்த்தவிதத்தைப் பாடி, உந்தீபற! வேள்வி அப்போது கலங்கிற்று என்று சொல்லி, உந்தீபற! ['ஆர்'விகுதி, இழிவுகுறித்தது.]

தக்கனா ரன்றே தலையிழந் தார்தக்கன்
மக்களைச் சூழநின் றுந்தீபற
மடிந்தது வேள்வியென் றுந்தீபற. 16

தக்கன் தன் மக்களால் சூழப்பெற்று நின்றபோதுங்கூட, அந் நாளிலே, தன் தலையினை இழந்தானென்று, உந்தீபற! அப்போது அந்த வேள்வியும் மடிந்ததென்று, உந்தீபற! ['மக்களைச் சூழ நின்று' என்றது, அவன் மக்களும் அவனையோ வேள்வியையோ காத்தற்கு வலியிழந்து நின்றனர் என்பதனால்.]

பாலக னார்க்கன்று பாற்கடல் ஈந்திட்ட
கோலச் சடையற்கே யுந்தீபற
குமரன்தன் தாதைக்கே உந்தீபற. 17

உபமன்யுவாகிய குழந்தையின் பொருட்டாக, அந்நாளிற் பாற்கடலைக் கொடுத்தருளிய அழகிய சடையுடையானுக்கே,

*உந்தீபற! குமரப்பெருமானின் தாதைக்கே, உந்தீபற! [பசியால் உபமன்யு அழ, சிவபெருமான் பாற்கடலை அவனுடைய பசிதணிக்குமாறு ஏவினார் என்பது புராண வரலாறு.]*

நல்ல மலரின்மேல் நான்முக னார்தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரால் அரிந்ததென் றுந்தீபற. 18

*நல்ல, தாமரை மலரின்மேல் வீற்றிருக்கின்ற நான் முகனின் தலையினை, விரைய அரிந்ததும் இறை செயலே என்று, உந்தீபற! அதுவும் நகத்தாற் கிள்ளியதென்று சொல்லி உந்தீபற!*

தேரை நிறுத்தி மலையெடுத் தான்சிரம்
ஈரைந்தும் இற்றவா றுந்தீபற
இருபதும் இற்றதென் றுந்தீபற. 19

*தன்னுடைய தேரினை நிறுத்திவிட்டு, அது மேற் செல்லுதற்குத் தடையாக நின்ற கைலைமலையினைப் பெயர்த்து எடுக்கமுயன்ற இராவணனின், பத்துத் தலைகளும் இற்ற தான வகையினைக் குறித்து, உந்தீபற! பத்துத் தலைகள் மட்டு மன்றி, அவனுடைய இருபது தோள்களும் அன்று நெரிந்தன வென்று, உந்தீபற!*

ஏகாச மிட்ட இருடிகள் போகாமல்
ஆகாசங் காவலென் றுந்தீபற
அதற்கப்பாலுங் காவலென் றுந்தீபற. 20

*வானிலேயுள்ள வெப்பத்திற்கஞ்சிப் போர்வையிட்டுச் செல்லும் இருடிகள், வெப்பத்தால் அழிந்து போகாதபடி ஆகாசத்தில் அவர்களைக் காப்பவன் சிவனென்று, உந்தீபற! அதற்கப்பாலும் அவனே அவரைக் காவல் செய்திருப்பவன் என்றியம்பி, உந்தீபற! [ஏகாசம்-உத்தரீயம். இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை. முதலிரண்டு அடிகளை ஒருத்தி பாடி ஒரு பிரச்சினையைக் கூறுவதாகவும், அதற்கு மற்றவள் மூன்றுவது அடியைக்கூறி விடையிறுப்பதாகவும் இச் செய்யுட்களைக் கொள்ளலாம். கொள்ளவே, இருவர் எதிர் முகமாக இருந்து பாடியவாறே, பந்தினை உந்தி விளையாடுகிற ஒருவகை விளையாட்டு இதுவெனக் கருதலாம்.]*

# 15. திருத் தோணோக்கம்

## பிரபஞ்ச சுத்தி

(நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா)

*[இதுவும் தில்லையில் அருளப்பட்டதே யாகும். பெண்கள், ஒருவர் தோளினை மற்றவர் நோக்கியபடியாகப் பாடிக் கொண்டு, ஆடிமகிழும் ஒருவகை விளையாட்டு தோணோக்கம் எனப்படுவது. இதற்குப் பாடுகின்ற பாணியிலே அடிகள் இச் செய்யுட்களைச் செய்துள்ளனர்.]*

**பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே எனக்கருதிப்**
**பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே**
**தீர்த்தாய் திகழ்தில்லை அம்பலத்தே திருநடஞ்செய்**
**கூத்தா உன்சேவடி கூடும்வண்ணந் தோணோக்கம். 1**

*விளங்குகின்ற தில்லையம்பலத்தின் கண்ணே, திருநடனம் செய்கின்ற கூத்தப்பெருமானே! கானலை, மலர்கள் பூத்து நிரம்பியிருக்கின்ற தடாகத்து நீர் இதுவாகுமெனக் கருதி, மொண்டு கொள்ளுதற்கு முயலுகின்ற பேதைமைக்குணம் எனக்கு உண்டாகாமல், என் அறியாமையினை நீக்கி அருளினாய்! நின்னுடைய செவ்விய திருவடிகளைக் கூடும் பொருட்டு யாங்கள் தோணோக்கம் ஆடுவோமாக! ['பொய்ம்மைகண்டு மயங்காதபடி என்னைத் தெளிவித்த நின்னடிகளைச்சேர்தற்பொருட்டுத் தோணோக்கம் ஆடுவோம்' என்பது கருத்து.]*

**என்றும் பிறந்திறந் தாழாமே ஆண்டுகொண்டான்**
**கன்றால் விளவெறிந் தான்பிரமன் காண்பரிய**
**குன்றாச் சீர்த்தில்லை அம்பலவன் குணம்பரவித்**
**துன்றார் குழலினீர் தோணோக்கம் ஆடாமோ. 2**

*நெருக்கம் பொருந்திய கூந்தலை உடையவரே! கன்றினாலே விளாங்கனியினை எறிந்தவனான திருமாலும், பிரமனும்,காண்பதற்கு அரியவனாக விளங்கியவன் சிவபிரான். அத்தகையவன், எக்காலத்தும் பிறந்திறந்து துன்பத்துள் அழுந்தாமல் எம்மையும் ஆட்கொண்டருளினான். குறை வற்ற சிறப்பு வாய்ந்த, தில்லை அம்பலத்தானுடைய, அத்தகைய பெருங்குணத்தினைப் போற்றிப் பாடி நாம்*

எல்லாம் தோணேக்கம் ஆடுவோமாக! ['மாலயனும் காணரியா மாண்பினன், எமக்கு எளிதாக வந்தருளி, எம்மைப் பிறப்பிறப்பாகிய கடலுட்படாது காத்தனன்; அவனது பெருங்கருணையினைப் 'பாடித் தோணேக்கம் ஆடுவோ' மென்பது கருத்து.]

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணேக்கம் ஆடாமோ. 3

பொருள்களைக் கொண்டு செய்கின்ற வழிபாடு போலத் தோன்றும்படியாகச், செருப்பணிந்த தமது சிறப்பான பாதத்தையும், வாயாகிய கலசத்தையும், ஊனாகிய அமுதத்தையும் கொண்டு, விருப்பங்கொண்டவராக, வேடனாரான கண்ணப்பர் அந்நாளில் வழிபாடாற்றினர். அதனால், உடல் குளிர்ந்து, அக் கண்ணப்பதேவரின் பெருமையினை அனைவரும் அறியுமாறு, அவர்பால் அருள் நிரம்பப்பெற்று, அதனை ஏற்றருளி நின்ற பெருமானின் வகையைக் குறித்து, நாம் தோணேக்கம் ஆடுவோமாக! ['ஆகமநெறியுட் படாத வழிபாடு என்றாலும், அன்பின் மிகுதியாற் செய்ததனால், அதனை உகந்து ஏற்று உளங்குளிர்ந்தனன் இறைவன்' என்க. 'மெய்குளிர்ந்து அங்கு சேடறிய விருப்புற்று நின்றது' கண்ணப்ப தேவராகவும் கொள்வர்.]

கற்போலும் நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால்
நிற்பானைப் போலஎன் நெஞ்சினுள்ளே புகுந்தருளி
நற்பாற் படுத்தென்னை நாடறியத் தானிங்ஙன்
சொற்பால தானவா தோணேக்கம் ஆடாமோ. 4

கல்லைப்போன்ற என் மனமானது கசிந்து உருகும்படியாகக், கருணையினால் என்முன் நிற்பவனைப் போல என் நெஞ்சினுள்ளே புகுந்தருளினான்; என்னை நன்னெறிப் படுத்தி நாட்டார் அறியுமாறு, தான் இங்ஙனம் செய்த சொல்லின் பாற் பட்டதாயின சிறப்பினைக் கூறி, நாம் தோணேக்கம் ஆடுவோமாக! ['சொற்பாலதானது' இறைவனின் பெருங் கருணையினை வியந்து, அடியவர் எங்கும் பாராட்டிப் பேசும் தன்மையினாற் சிறப்புற்றது. பால்-பகுதி]

நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணேக்கம் ஆடாமோ. 5

நிலம், நீர், நெருப்பு, உயிர், நெடிய விசும்பு, நிலா, பகலவன், அறிவுருவாகிய புருடன் என்னும் எட்டினோடும் எட்டு வகையாகிக் கலந்து நின்ற கடவுளே, உலகங்கள் ஏழெனவும், திசைகள் பத்தெனவும், தான் ஒருவனே பலவாகி நின்ற விதத்தைக்குறித்து, நாம் தோணோக்கம் ஆடுவோமாக! ['அட்டமூர்த்தமாகவும், ஏழுலகங்களாகவும், பிற அனைத்துமாகவும் விளங்கும் இறையவன் ஒருவனே என்பதைக் குறிப்பிட்டு ஆடுவோம்' என்பது கருத்து.]

புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்தம் மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினால் தோணோக்கம் ஆடாமோ. 6

புத்தன் முதலாகிய அற்ப அறிவினையுடைய பல சமயவாதிகளும், தத்தம் மதங்களில் தடுமாற்றம் அடைந்து நிற்கச், சித்தத்தையே சிவமாக்கிச், செய்தவற்றையே தவமாக்குகின்ற அப்பனின் கருணையினால், நாம் தோணோக்கம் ஆடுவோமாக! ['சித்தம் வேறு சிவம் வேறு; செயல் வேறு தவம் வேறு என்பாரின் கருத்தை மறுத்துச் சித்தம் சிவமாகவும், செய்தொழிலே தவமாகவும் செய்த பெருமானின் கருணையினைக் குறித்து நாம் தோணோக்கம் ஆடுவோம்' என்பது கருத்து.]

தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம். 7

தம் நெஞ்சிடத்தே தீது எதுமில்லாத மாண்பினையுடைய சண்டேசுவர நாயனார், தாமியற்றிய சிவபூசையினைச் சிதைத்தவர் சாதியால் வேதியரென்பதையும், முறையால் தகப்பன் என்பதையும் பாராது, அவரது இரு கால்களையும் வெட்டினர். ஈசனது திருவருளினால், தேவர்கள் வணங்குமாறு, பாவச் செயலையே புண்ணியமாக ஆக்கிக் கொண்டனர். அங்ஙனம் ஆகக்கொண்ட திருவருட்செயலைக் குறித்து யாம் தோணோக்கம் ஆடுவோமாக! [''தண்டியடிகளின் பாவச்செயலையே புண்ணியச் செயலாகக் கொண்டு அவர்க்குச் சிவகதி அளித்தருளிய புகழ்தற்குரிய செயலைப் பாடி ஆடுவோம்' என்பது கருத்து.]

மானம் அழிந்தோம் மதிமறந்தோம் மங்கைநல்லீர்
வானந் தொழுந்தென்னன வார்கழலே நினைந்தடியோம்
ஆனந்தக் கூத்தன் அருள்பெறில்நாம் அவ்வணமே
ஆனந்த மாகிநின் றுடாமோ தோணோக்கம். 8

*மங்கைப் பருவத்துப் பெண்களே! தன்மானம் அழியப் பெற்றோம்! தற்போதம் கழலப் பெற்றோம்! வானவர் தொழுகின்ற தென்னவனின் திருவடிகளையே நினைந்த அடியோமாகிய நாம், ஆனந்தக் கூத்தனின் அருளைமட்டும் பெற்றுவிட்டால், நாமும் அவ்வண்ணமே பேரானந்தம் உற்றவராகி நின்று தோணோக்கம் ஆடமாட்டோமோ? [மானம்-தன் முனைப்பு. மதி-தானென உணரும் உணர்வு. தென்னன-சிவன்.]*

எண்ணுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்
கண்ணுதல் எந்தை கடைத்தலைமுன் நின்றதற்பின்
எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணோக்கம். 9

*சிவபூசையில் மதிப்பினை உடையராயிருந்த மூன்று அசுரர்களும், முப்புரங்கள் எரிந்தபோது, அந்த எரிதழலினின் றும் பிழைத்துக், கண்ணுதலோனாகிய எந்தையின் வாயிலின் கண் காவலாளராய் நின்றனர். அதன்பின், எண்ணற்ற இந்திரர்களும், எத்தனையோ பிரமர்களும், பூமியை உண்டாக்கிய திருமால்களும் பலர் தோன்றியும் இறையருள் சித்திக்கப் பெறாது அழிந்தனர்! இந்த அதிசயத்தைப் பாடி நாம் தோணோக்கம் ஆடுவோமாக! [இதனால், இறையவர் பதவி பெற்றாரினும் சிவநேயம் உடையவரே சிறப்பு உடையவராவர்' என்பது கூறப் பெற்றது. இராக்கதர் என்றது, அசுரர்களை.]*

பங்கயம் ஆயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்கண் இடந்தரன் சேவடிமேல் சாத்தலுமே
சங்கரன் எம்பிரான் சக்கரம்மாற் கருளியவா
றெங்கும் பரவிநாம் தோணோக்கம் ஆடாமோ. 10

*ஆயிரந் தாமரை மலர்களுள் ஒரு பூக் குறைந்துபோகத் தன் கண்களுள் ஒன்றினைத் தோண்டி எடுத்துப் பெருமானின் திருவடியில் சாத்தினான் திருமால். அந்த அளவிலே, சங்கரனும் எம்பிரானுமாகிய பெருமான், திருமாலுக்குச் சக்கரத்தை அருளினான். அந்த வரலாற்றை நாம் எவ்விடத்தும் பரவச் செய்து, தோணோக்கம் ஆடுவோமாக! [பங்கயம்-சேற்றின் கண் முளைப்பது; தாமரை.]*

காம னுடலுயிர் காலன்பற் காய்கதிரோன்
நாமகள் நாசிசிரம் பிரமன் கரம்எரியைச்
சோமன் கலைதலை தக்கனையும் எச்சனையும்
தூய்மைகள் செய்தவா தோணோக்கம் ஆடாமோ. 11

*மன்மதனது உடலையும், காலனது உயிரையும், காயுங் கதிரோனது பற்களையும், நாமகளது மூக்கினையும், பிரமனது தலையையும், அக்கினியினது கையினையும், சந்திரனது கலைகளையும், தக்கன் எச்சன் ஆகியவரது தலைகளையும் போக்கி, அவர்களைத் தூய்மைகள் செய்தருளிய செயலை நினைந்து, நாம் தோணோக்கம் ஆடுவோமாக!*

பிரமன் அரியென் றிருவருந்தம் பேதைமையால்
பரமம் யாம்பரமம் என்றவர்கள் பதைப்பொடுங்க
அரனார் அழலுருவாய் அங்கே அளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ. 12

*பிரமன் திருமால் என்று சொல்லப்படும் இரு கடவுளரும் தம்முடைய அறியாமையினால், 'யாமே பரம்பொருள்! யாமே பரம்பொருள்' என்று கூறி வாதாடினர். அவர்களின் பதற்றம் அடங்குமாறு, சிவபிரான், அழலுருவாக, அவ்விடத்தே எல்லைகடந்த பரம்பொருளாகி நின்றனன். அந்த வரலாற்றைப் பாடி, நாம் தோணோக்கம் ஆடுவோமாக! ['அளவிறந்து' என்றது, பிரமனும் மாலும் முடியடி தேடிச் சென்றுங் காணாததனை.]*

ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
ஊழிமுதற் சிந்தாத நன்மணிவந் தென்பிறவித்
தாழைப் பறித்தவா தோணோக்கம் ஆடாமோ. 13

*ஏழையேனாகிய அடியவன், எத்தனையோ காலம் எல்லாம், மிக மேலான கடவுளைத் தொழாமல், வீணான முயற்சிகளுக்கே செலவிட்டேன். ஊழிமுதலான காலத்தும் அழியாத, சிறந்த மாணிக்கமாக விளங்கும் சிவபிரான், தானே எழுந்தருளிவந்து, என் பிறவிக்கிழங்கினைப் பிடுங்கி எறிந்தனன். அதனைப் பாடி, நாம் தோணோக்கம் ஆடுவோமாக!* [பாழுக்கு இறைத்தல்-பாழ்நிலத்துக்கு நீர் இறைத்தல்; இது வீணுக்கு உழைத்தல் என்னும் பொருளினைக் குறிப்பதாக வந்தது. தாழ்-வேர்; கிழங்கு.]

**உரைமாண்ட உள்ளொளி உத்தமன்வந் துளம்புகலும்**
**கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே**
**இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோடத்**
**துரைமாண்ட வாபாடித் தோணோக்கம் ஆடாமோ. 14**

*சொல்லிறந்த உள்ளொளியாகிய உத்தமனான சிவபிரான் எழுந்தருளி வந்து, என் உள்ளத்தே புகுதலும், கரைகடந்த பெரிய காமப் பெருங்கடலைத் தாண்டுதலையும் செய்தேன். இரையற்ற இந்திரியப் பறவைகளும் அச்சமுற்று ஓடி ஒழிந்தன. அவ்வாறு, அவற்றுக்கு இருப்பிடமற்றுப் போன விதத்தினைப் பாடி, நாம் தோணோக்கம் ஆடுவோமாக!* [துரை-துறை; வழி. கதி.]

# 16. திருப் பொன்னூசல்

## அருட்சுத்தி

(ஒப்புமைபற்றி வந்த ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா)

[*உத்தரகோச மங்கையில், அடிகள் அருளியது இப்பதிகம். ஊசலாடும் மகளிரது பாடற்பாணியிலே அமைந்தது. 'அருட் சுத்தி' பெறுவது, இதன் பயன்.*]

சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாரா யணன்அறியா நாண்மலர்த்தாள் நாயடியேற்கு
ஊராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா அமுதின் அருள்தா ளிணைபாடிப்
போரார்வேற் கண்மடவீர் பொன்னூசல் ஆடாமோ. 1

*போர்த்தொழில் அமைந்த வேல்போலும், கண்களை யுடைய பெண்களே! சிறப்புமிகுந்த பவளமே கால்களாகவும் முத்துமாலையே கயிறாகவும் கொண்ட, அழகுமிகுந்த, பொற் பலகையின்மேல் ஏறி, இனிதாக அமர்ந்து கொண்டு, நாராயணனும் அறியாது போயின, அன்றலர்ந்த தாமரை மலர்போன்ற திருவடிகளை, நாயினைப்போன்ற அடியனேனுக் கும் இருப்பிடமாகத் தந்தருளும், உத்தரகோச மங்கை யிலுள்ள, தெவிட்டாத அமுதினது, அருள் பொருந்திய தாளிணைகளைப் பாடி, நாம் எல்லாம் பொன்னூசல் ஆடுவோமாக! ['ஊர்' என்றது, நிலையான இருப்பிடம் என்பதற்கு. 'திருவடிகளே அருள்வடிவின' என்பார், 'அருட் டாளிணை' என்றனர்.]*

மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத
வான்தங்கு தேவர்களுங் காணா மலரடிகள்
தேன்தங்கித் தித்தித் தமுதூறித் தான்தெளிந்தங்
கூன்தங்கி நின்றுருக்கும் உத்தர கோசமங்கைக்
கோன்தங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றங் கனநடையீர் பொன்னூசல் ஆடாமோ. 2

*மேன்மையான மயில்களைப்போன்ற சாயலினையும், அவ்விடத்தே அன்னங்களைப்போன்ற நடையினையும், உடைய*

மாதர்களே! மூன்றாக விளங்குகின்ற கண்களை உடையவனின், வானிடத்தே தங்கும் மூப்பற்ற தேவர்களும் காணாத மலரடிகள், தேனின் சுவைதங்கியவாய், தித்திப்பவாய், அமுது ஊறுகின்றவாய், தான் தெளிவுபயந்து உடம்பில் தங்கி நின்று உருகச்செய்வனவாய் விளங்குவனவாகும். உத்தர கோச மங்கைக்கு மன்னனாகிய அப்பெருமான், வீற்றிருக்கின்ற திருவிடைமருதூரைப் பாடி, நாம் பொன்னூசல் ஆடுவோமாக!

மூன்னீறும் ஆதியும் இல்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடி இமையோர்கள் தாம்நிற்பத்
தன்னீ றெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி உத்தர கோசமங்கை
மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 3

'ஆபரணங்களை அணிந்தவும், தேமல்கள் விளங்குகின்றவுமான, தனங்களை உடையவர்களே! நினைக்கின்ற இறுதியும் முதலும் இல்லாதவன் சிவபெருமான். அவன், பலநூறு கோடியினராகிய முனிவர் கூட்டங்களும், தேவர் கூட்டங்களும் தன் தரிசனப் பொருட்டாகக் காத்து நிற்கவும், அவர்க்கு அருளாதே, தன் திருவெண்ணீற்றினை எனக்குத் தானே வந்து அளித்தருளினன். தன்னுடைய கருணைவெள்ளத்துள் சேர்ந்ததாகவும், தன் பெருமை வளர நிலைபெற்றதாகவும் விளங்கும், அழகிய, உத்தரகோச மங்கையின்கண் உள்ள, ஒளிமிகுந்த மேன்மாடங்களையுடைய, பெருமையமைந்த அவனது திருமாளிகையினைப் பாடி, நாம் பொன்னூசல் ஆடுவோமாக!

நஞ்சமர் கண்டத்தன் அண்டத் தவர்நாதன்
மஞ்சுதோய் மாடமணி உத்தர கோசமங்கை
அஞ்சொலாள் தன்னோடுங் கூடி அடியவர்கள்
நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்
புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூசல் ஆடாமோ. 4

தொகுதியாகப் பொருந்திய, வெள்ளிய, சங்கு வளையல்களை அணிந்தவர்களே! நஞ்சுதங்கிய கழுத்தினை உடையவனாகியும், அண்டங்களில் உள்ளவர்கட்கு எல்லாம் நாதனாகியும், மேகங்கள் படிகின்ற மேன்மாடங்களை யுடையதும் அழகியதுமான திருவுத்தரகோச மங்கையிலே, அழகான சொல்லினையுடைய உமையம்மையோடுங் கூடியவனாக எழுந்தருளி, அடியார்களுடைய உள்ளத்தே நின்று, அமுதத்தைச்

*சுரந்து அருள்செய்து, அவர்தம் இறப்புப் பிறப்புக்களை அறுப்பவனாகியும் இருக்கும் சிவபிரானது, தூயதான புகழினைப் பாடியவராக, நாம் பொன்னூசல் ஆடுவோமாக!*

ஆணோ அலியோ அரிவையோ என்றிருவர்
காணாக் கடவுள் கருணையினால் தேவர்குழாம்
நாணாமே உய்யஆட் கொண்டருளி நஞ்சுதனை
ஊணாக உண்டருளும் உத்தர கோசமங்கைக்
கோணார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ. 5

*அழகிய, அணிகள் நிறைந்தவான, தனங்களை உடையவர்களே! அனற்பிழம்பாக நின்ற பெருமானை, ஆணோ அலியோ பெண்ணோ என்று அறியாதாராய், பிரமவிட்டுணுக்களாகிய இருவரும் திகைத்து நிற்குமாறு, செய்தருளிய கடவுள் சிவபிரான். அவன், தனது பெரிதான அருளினாலே, தேவர் கூட்டம் எல்லாம் அழியாமல் பிழைக்கும்படியாக, அந் நாளிலே, ஆலகால நஞ்சினைத் தன் உணவாக ஏற்று உண்டவனாக, அவர்களை ஆட்கொண்டும் அருளினான்! அத்தகையவனை, உத்தரகோச மங்கையிடத்து வீற்றிருப்பவனாகிய, வளைவுபொருந்திய மதியானது விளங்கும் சடைமுடியினை உடைய, கூத்தப்பெருமானின் மெய்க்குணங்களைத் துதித்தவராக, நாம் பொன்னூசல் ஆடுவோமாக! [நாண்' அச்சம் என்ற பொருளில் வந்தது. கோண்-வளைவு.]*

மாதாடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை ஆட்கொண்டென் தொல்பிறவித்
தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன்பால்
போதாடு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 6

*தாமரைப் போதுகளைப்போல அசைந்துகொண்டிருக்கின்ற, பூண்கள் அணிந்த, தனபாரங்களை உடையவர்களே! உத்தரகோச மங்கை என்னும் பதியிடத்தேயுள்ள, பூந்தாதுகள் திளைத்த கொன்றைப் பூவினைச் சூடியிருக்கின்ற சடையினை உடையவனாகிய, சிவபெருமான், உமையாகிய மங்கை தங்கியிருக்கின்ற இடப்பாகத்தினை உடையவனும் ஆவான். அவன், நாய்போலும் என்னையும், தன்னுடைய அடியவர்களுள் ஒருவனாக ஏற்றுக்கொண்டு, பாராட்டினான். தனக்கே என்னை அடிமையாக்கிக் கொண்டும் அருளினான்! பழைமையாக வந்துகொண்டிருக்கும் என்னுடைய பிறவித்துயராகிய துன்பங்கள், மேலும் நீட்டியாவண்ணம், நான் அவற்றி*

னின்றும் விடுபட்டு விளங்குமாறு, என் பிறவித்தளையினையும் அவனே அறுத்தருளினன்! அத்தகைய பெருமானது, காதுகளில் அசைந்தாடிக் கொண்டிருக்கின்ற குண்டலங்களைப் பாடி, அவன்மீது கொண்ட அன்பினாலே கசிந்து, நாம் பொன்னூசல் ஆடுவோமாக! [ஆடு-புணர்தல்; பொருந்தல். கோதாட்டல்-பாராட்டல். ஓடுதல்-நீட்டித்தல்: போது-பேரரும்பு; அது கொங்கையின் வடிவினைக் குறித்து நின்றது. 'பிறவித் தளையினை அறுப்பவனைப் பாடுவோம்' என்பது கருத்து.]

உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி ஆடு மணிமயில்போல்
என்னத்தன் என்னையும்ஆட் கொண்டான் எழில்பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 7

பூண்கள் விளங்கும் முலைகளையும், திருமகளுக்கு ஒப்பான அழகினையும், உடைய பெண்களே! மனத்தால் நினைத்தற்கும் அரியவான சிறப்புக்களையுடைய திருவுத்தரகோச மங்கைப் பதியினிடத்தே, நிலைபெற்றுப் பொலிவுபெற்றிருந்த பெருமையுள்ள மறையவன், சிவபெருமான்! அவனுடைய புகழையே சொல்லி, அவனடிகளையே பணிந்து வணங்க, அங்ஙனம் வணங்கியவரின் பாவங்களை எல்லாம் முற்றவும் அறுத்து அருளிச்செய்பவனும் அவனேயாவான்! என் அத்தன், என்னையும் ஆட்கொண்டு அருளியவன், அவனது அழகினை எல்லாம் வியந்து பாடி, அன்னத்தில் மேலேறி ஆடுகின்ற அழகுமயில் போல்கின்ற நாம், இப்போது, பொன்னூசல் ஆடுவோமாக! [பொலிதல்-விளங்குதல். பொன் ஒத்த-பொற்சுணங்குகள் படர்ந்த எனினும் ஆம். 'பாவங்களைப் பற்றறுக்கின்ற பரமனைப் போற்றிப் பாடுவோம்' என்பது கருத்து.]

கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்
சால அமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து
ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்
சீலந் திகழும் திருவுத்தர கோசமங்கை
மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்
பூலித் தகங்குழைந்து பொன்னூசல் ஆடாமோ. 8

அழகிய மலையுச்சியினின்றும் இறங்கிவந்து, நிலத்தின் கண்ணுள்ள மிகுதியான அமுதினை உண்டு, ஆழ்ந்த கடலின் அலையினைப்போல மேலெழுந்து, உலகில் மிகுந்து பரவிய,

*அத்துணைச் சிறப்பு வாய்ந்த குதிரைகளை மேற்கொண்டு நடாத்திவந்து, நம்மையும் ஆட்கொண்டவன் அவன்! நன்னெறி விளங்கும் திருவுத்தரகோச மங்கையிலுள்ள, திருமாலும் அந்நாளிலே அறியவொண்ணுதிருந்த, அந்தப் பெருமானை, நாமும் வாயாரப் புகழ்ந்து பாடி, உடல் பூரித்த வராக, உள்ளம் குழைந்து, பொன்னூசல் ஆடுவோமாக! [அமுது-உணவு. இது, குதிரைச் சேவகனுகி வந்து அடிகளைக் காத்த திருவிளையாடலைவியந்து கூறியது. பூலித்தல்-பூரித்தல்; உடல் புளகித்தல்.]*

**தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை**
**தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி**
**எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்**
**பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட**
**கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்**
**பொங்குலவு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.** 9

*விளக்கம் பொருந்திய பூண்களை அணிந்திருக்கின்ற, தனங்களை உடையவர்களே! தென்னைகள் விருத்தியடையா நின்ற சோலைகளாற் சூழப்பெற்றிருக்கும், திருவுத்தரகோச மங்கையில் தங்கி விளங்கும், ஒப்பற்ற சோதியுருவானது, எங்களின் பிறவித்தளையினை முற்றவும் அறுத்தது, எங்கள் இனத்தையும் தனக்கு ஆட்கொள்ளும் பொருட்டாக, இடப் பாகத்தில் விளங்குகின்ற தேவியும் தானுமாக அன்று எழுந் தருளியும் வந்தது; எம்மையும் தனக்கு பணிகொண்டது. அத்தகைய, மணந்தங்கிய கொன்றைமாலையினை அணிந்த, சடையினனுகிய சிவபிரானது, கல்யாண குணங்களைப் பரவி, நாம் பொன்னூசல் ஆடுவோமாக! [பங்குலவுகோதை-உமை யம்மை. கொங்கு-மணம்; தேனும் ஆம்.]*

# 17. அன்னைப் பத்து

## ஆத்தும பூரணம

(கலி விருத்தம்)

[இதனையும், தில்லைப்பதியிலேயே அடிகள் அருளிச்செய் தனர் என்பர். இறைவனைத், தன் காதலனாகக் கொண்ட கன்னியொருத்தி, தன் தாயிடத்தே, தன் உள்ளத்தைத் திறந்துகூறி வாடுவதாகத், தாய் கூறுகின்ற முறையிலே அமைந்தவை இச்செய்யுட்கள். ஆன்மா இறையோடு கலந்து நிறைவுபெறுகின்றது இதன் பொருண்மை என்பதனைப் பழைய குறிப்பாகிய 'ஆத்துமபூரணம்' என்பது விளக்கும். இதனையும் மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்றாகவே கொள்ளுதல் பொருந்தும். தோழியொருத்தி, தலைவி தன் காதலனை நினைந்து புலம்புதலைச் சொல்வதாகவும், மற்றொருத்தி அதனைத் தானும் உணர்ந்ததனைச் சொல்வ தாகவும், அப்போது கொள்க. இரு தோழியரும், இவ்வாறு பாடியவாறே ஆடித், தலைவியின் காதலைப் பெருகச்செய்து களிப்பர் என்க.]

**வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்**
**நாதப் பறையினர் அன்னே என்னும்**
**நாதப் பறையினர் நான்முகன் மாலுக்கும்**
**நாதரிந் நாதனார் அன்னே என்னும். 1**

அன்னையே! அவர், வேதங்களாகிய சொற்களின் பொரு ளாக விளங்குபவர்; வெண்மையான திருநீற்றினைப் பூசியிருப் பவர்; செம்மைவிளங்கும் திருமேனியினை உடையவர்; நாத தத்துவமாகிய பறையினை உடையவர்' என்பாள், அவள்!

'நாதமாகிய பறையினை உடையஅவர், நான்முகனுக்கும் திருமாலுக்கும் தலைவராகவும் விளங்குபவர்! அவரே இந்த நாயகர், அன்னையே!' என்றும், அவள் கூறுவாள்.

**கண்ணஞ் சனத்தர் கருணைக் கடலினர்**
**உள்நின் றுருக்குவர் அன்னே என்னும்**
**உள்நின் றுருக்கி உலப்பிலா ஆனந்தக்**
**கண்ணீர் தருவரால் அன்னே என்னும். 2**

'அன்னையே! அவர், அஞ்சனமை தீட்டியிருக்கின்ற கண்களை உடையவர்; கருணைக் கடலாக விளங்குபவர்; என்னுள்ளே நிலைபெற்று என்னை உருகச்செய்பவர்' என்பாள்.

'உள்ளத்தே நிலைபெற்று உருகச்செய்து, அழிவற்ற ஆனந்தக் கண்ணீரைத் தருபவரும் அவரே, அன்னையே!' என்றும், அவள் உரைப்பாள்.

நித்த மணாளர் நிரம்ப அழகியர்
சித்தத் திருப்பரால் அன்னே என்னும்
சித்தத் திருப்பவர் தென்னன் பெருந்துறை
அத்தர் ஆனந்தரால் அன்னே என்னும். 3

'அன்னையே! அவர், என்றைக்கும் மணவாளராக இருப்பவர்; நிரம்பவும் அழகினை உடையவர்; என் சித்தத்திலே நிலைபெற்றிருப்பவர்' என்பாள்.

'மனத்திலே நிலைபெற்றிருக்கும் அவர், அழகிய நல்ல திருப் பெருந்துறையில் கோயில் கொண்டிருக்கின்ற இன்ப உருவினரான அத்தரே யாகும், அன்னையே!' எனவும், அவள் கூறுவாள்.

ஆடரப் பூணுடைத் தோல்பொடிப் பூசிற்றோர்
வேடம் இருந்தவா றன்னே என்னும்
வேடம் இருந்தவா கண்டுகண் டென்னுள்ளம்
வாடும் இதுவென்னே அன்னே என்னும். 4

'அன்னையே! அவரது, ஆடுகின்ற பாம்பாபரணமும், உடையான புலித்தோலும், மணப் பொடியான திருவெண்ணீறும் அமைய, அவருடைய ஒப்பற்ற அந்த வேடந்தான் இருந்தவாறு என்னே!' என்பாள் அவள்.

'வேடம் இருந்த அந்த வகையினைக்கண்டு, என் உள்ளம் அவர்மேல் பித்தாகி நலிகின்றதே? இதுவும் என்னையோ, அன்னாய்?' என்றும், அவள் கூறுவாள்.

நீண்ட கரத்தர் நெறிதரு குஞ்சியர்
பாண்டி நன் னாடரால் அன்னே என்னும்
பாண்டி நன் னாடர் பரந்தெழு சிந்தையை
ஆண்டன்பு செய்வரால் அன்னே என்னும். 5

'அன்னையே! அவர், நீண்ட கையினை உடையவர்; நெறிந்த சடையினை உடையவர்; நன்மை பொருந்திய பாண்டிய நாட்டினர்' என்பாள்.

'நன்மைபொருந்திய பாண்டிய நாட்டினரான அவர், பரவி எழுந்த என் மனத்தைத் தமக்கே ஆட்கொண்டு,

எனக்கு அன்பும் செய்வார், அன்னையே!' என்றும், அவன் உரைப்பாள்.

உன்னற் கரியசீர் உத்தர மங்கையர்
மன்னுவ தென்நெஞ்சில் அன்னே என்னும்
மன்னுவ தென்நெஞ்சில் மாலயன் காண்கிலார்
என்ன அதிசயம் அன்னே என்னும். 6

'அன்னையே! நினைத்தற்கு அரிதாகிய சிறப்புக்கள் அமைந்த, உத்தரகோச மங்கைக்கு உரியவரான அவர், என் நெஞ்சிலே நிலைபெறுவதுதான் ஏனோ?' என்பாள்.

'என் மனத்தில், மாலும் அயனும் காண்கிலாத சிறப்பு உடையவர் வந்து நிலைபெறுவதுதான் என்ன அதிசயமோ, அன்னையே?' எனவும், அவள் கூறுவாள்.

[மாலயன் காண்கிலார், தானே வந்து நிலைபெற்றது பற்றி, அதனை 'அதிசயம்' என வியந்தனர்.]

வெள்ளைக் கலிங்கத்தர் வெண்திரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னே என்னும்
பள்ளிக் குப்பாயத்தர் பாய்பரி மேற்கொண்டென்
உள்ளங் கவர்வரால் அன்னே என்னும். 7

'அன்னையே! அவர், வெண்பட்டு ஆடையினை உடையவர்; திருநீற்றுப் பூச்சினால் வெண்மையாக விளங்குகின்ற திருநெற்றியினை உடையவர்; ஆநந்த நித்திரையாகிய மேற்போர்வையினை உடையவர்' என்பாள்.

'ஆநந்த நித்திரையாகிய மேற்போர்வையினை உடைய அவரே, பாய்ந்துசெல்லும் குதிரைமேலாக ஏறியமர்ந்து, வந்து, என் உள்ளத்தைக் கவர்ந்த கள்வருமாவர், அன்னையே!' எனவும், அவள் கூறுவாள்.

தாளி அறுகினர் சந்தனச் சாந்தினர்
ஆளெம்மை ஆள்வரால் அன்னே என்னும்
ஆளெம்மை ஆளும் அடிகளார் தங்கையில்
தாள மிருந்தவா றன்னே என்னும். 8

'அன்னையே! தாளிக்கொடியினையும் அறுகினையும் உடையவர்; சந்தனச்சாந்தினை அணிந்தவர்; அவரே எங்களை ஆளாக ஆட்கொள்பவர்' என்பாள்.

'எம்மை ஆளாக ஆட்கொள்ளும் அடிகளாரின் கையிலே, தாளமிருந்த வகைதான் யாதோ, அன்னையே?' எனவும், அவள் கேட்பாள்.

[தாளம்-பிரணவம் ஒலிக்கின்றதற்கு உரியது.]

தையலோர் பங்கினர் தாபத வேடத்தர்
ஐயம் புகுவரால் அன்னே என்னும்
ஐயம் புகுந்தவர் போதலும் என்னுள்ளம்
நையுமிது வென்னே அன்னே என்னும். 9

*'அன்னையே! அவர், மாதினை ஒருபாகத்தே கொண்டவர்; தவவேடத்தையும் உடையவர்; பிச்சை புகுதலையும் செய்பவர்' என்பாள்.*

*'பிச்சை புகுந்த அவர் அகன்று போதலும், என் உள்ளமும் நைகின்ற இதுதான் என்ன காரணமோ, அன்னையே?' எனவும், அவள் வினவுவாள்.*

கொன்றை மதியமும் கூவிள மத்தமும்
துன்றிய சென்னியர் அன்னே என்னும்
துன்றிய சென்னியின் மத்தம்உன் மத்தமே
இன்றெனக் கானவா றன்னே என்னும். 10

*'அன்னையே! கொன்றை மாலையோடு பிறையும், ஊமத்த மலரும் பொருந்திய, சென்னியினை உடையவர் அவர்' என்பாள்.*

*'பொருந்திய சடையிடத்து ஊமத்தமே, இப்பொழுது, எனக்கும் உன்மத்தம் ஏற்படக் காரணமாயினது என்னையோ, அன்னையே?' எனவும், அவள் கேட்பாள்.*

*['ஊமத்தம், பித்தாக்கலைச் செய்யும் இயல்புடையது. அதனால், தான் பித்தாயினதற்கு அதுவே காரணம்போலும்?' எனக் கேட்கின்றனள்.]*

# 18. குயிற் பத்து

## ஆத்தும இரக்கம்

(ஆசிரிய விருத்தம்)

*[இதனையும், தில்லையில் அருளப்பட்டதென்றே கூறுவார்கள். காதலனைப் பிரிந்த தலைவியானவள், குயிலை விளித்துத், தன் காதலன் தன்னிடம்வந்து மீண்டும் ஒன்றுசேரும்படியாகக் கூவுமாறு பாடுகின்ற பாணியிலே, அமைந்த செய்யுட்கள் இவை. ஆன்மா இறையோடு கூடாதிருக்கின்றதனை நினைந்து, அதற்கு இரங்குவது இதன் பொருளமைதி.]*

கீத மினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக் கப்பால்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதி குணமொன்று மில்லான் அந்தமி லான்வரக் கூவாய். 1

*இன்னிசைபோல இனிமையாகக் கூவுகின்ற குயிலே! யான் கூறும் இதனையும் கேட்பாயாக: எங்கள் பெருமானின் திருப்பாதங்கள் இரண்டினையும்பற்றிக் கேட்டால், அவை, பாதாளம் ஏழினுக்கும் அப்பாலாகவும் இருப்பனவாகும். அவனுடைய சோதிமயமான அழகிய திருமுடி எங்குளதென்று சொல்வோமானால், அது, சொல்லின் அளவையும் கடந்துநின்ற ஒரு தொன்மையினை உடையதாம். அவன், தனக்கு ஓர் ஆதியென்பதும் குணம் என்பதும் இல்லாதவனும் ஆவான். அவன், தனக்கொரு அந்தம் அற்றவனாகவும் இருப்பவன். அத்தகைய அவனையே, இவ்விடத்து, என்பால் வருமாறு விளித்து, நீயும், எனக்காகக் கூவுவாயாக!*

ஏர்தரும் ஏழுல கேத்த எவ்வுரு வுந்தன் னுருவாய்
ஆர்கலி சூழ்தென் னிலங்கை அழகமர் வண்டோ தரிக்குப்
பேரரு ளின்ப மளித்த பெருந்துறை மேய பிரானைச்
சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய். 2

*ஏழுலகங்களும் துதிக்கும்படியாக, அழகுடைய எத்தகைய ஓர் உருவமும் தனது திருவுருவேயாக ஆகி, ஆரவாரித்தலையுடைய கடலால் சூழப்பெற்ற தென்னிலங்கையிலே, அழகமைந்த வண்டோதரிக்குப், பெருங்கருணையோடுங் கூடிய பேரின்பத்தைக் கொடுத்தவன், திருப்பெருந்*

*துறைக்கண்ணே விரும்பி வீற்றிருக்கும் சிவபெருமானே ஆவான்! அத்தகைய பெருமானை, நின் சிறப்பான வாயினால், குயிலே, நீயும், எனக்கு உதவுமாறு கூவி அழைப்பாயாக! [வண்டோதரி-மண்டோதரி; இராவணனின் தேவி. இவள், சிவபூசையில் சிறந்தவள். இவளுக்குப் பெருமான் அருளியது போன்று தமக்கும் அருளுதல் வேண்டுமென்பது கருத்து.]*

**நீல வுருவிற் குயிலே நீள்மணி மாடம் நிலவும்**
**கோல அழகில் திகழுங் கொடிமங்கை உள்ளுறை கோயில்**
**சீலம் பெரிதும் இனிய திருவுத் தரகோச மங்கை**
**ஞாலம் விளங்க இருந்த நாயக னைவரக் கூவாய். 3**

*நீல நிறத்தையுடைய குயிலே! நெடிதான, இரத்தின மயமான மாளிகைகள் விளங்குகின்ற, பேரழகோடும் திகழ்கின்ற, ஒரு பூங்கொடியைப் போலும் வனப்புடைய உமையம்மையானவள் உள்ளிடத்தே இருந்தருளும், கோயிலையுமுடைய, குணத்தால் பெரிதும் இனிதான, திருவுத்தரகோச மங்கைப் பதியினிடத்தே, உலகம் மெய்யறிவினதாக விளங்க வேண்டுமென்னும் கருணையினாலே, எழுந்தருளியிருந்த என் தலைவனை, என்பால் வந்தருளுமாறு, நீயும் கூவுவாயாக!*

**தேன்பழச் சோலை பயிலுஞ் சிறுகுயி லேயிது கேள்நீ**
**வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல்**
**ஊன்பழித் துள்ளம் புகுந்தென் உணர்வது வாயவொ ருத்தன்**
**மான்பழித் தாண்டமெல் நோக்கி மணாளனை நீவரக் கூவாய் 4**

*தேன்போன்ற இனிமையினை உடைய பழங்களைத் தருகின்ற, சோலைகளிலே சஞ்சரிக்கின்ற சிறு குயிலே! நீ இதனையும் கேட்பாயாக: வானகத்தாரை ஆட்கொள்ளக் கருதாது பழித்து ஒதுக்கி, இம் மண்ணகத்தே, தானே வந்தருளி, மனிதர்களைத் தனக்கு அடிமைகொண்ட வள்ளல் அவன்! என் உடம்பினை இகழ்ந்து ஒதுக்கி, என் நெஞ்சத்துள்ளே புகுந்து, என் அறிவுருவாகிய ஒப்பற்றவனும் அவனே ஆவான்! மானினது நோக்கத்தைப் பழித்து அடிமை கொண்ட, மென்மையான நோக்கினை உடையவளான, உமையம்மைக்கு மணாளனாகிய அவனை, நீயும், என்பால் வருமாறு கூவுவாயாக! [உடம்பினை இகழ்ந்து ஒதுக்கியது, உடற்கட்டைவிட்டு நீங்கி, முத்தியடைதற்காக விரைந்ததனைக் கூறியதாகும்.]*

சுந்தரத் தின்பக் குயிலே சூழ்கடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசை அறுப்பான்
முந்தும் நடுவும் முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய். 5

*அழகான இசையினாலே இன்பத்தைத் தருகின்ற குயிலே! சூழ்ந்த கிரணங்களையுடைய ஞாயிற்றினைப்போலப், பரமாகாயத்தே நின்றும் இறங்கிவந்து, இம் மண்ணுலகிலுள்ள அடியார்களுடைய பற்றினை முற்றவும் அறுப்பவன், சிவபிரான்! முதலும், நடுவும், முடிவும் ஆகிய மூவரும் அறியமாட்டாத செம்மையாகிய திருவடிகளை உடையவனை, நம் பற்றாகிய பகையினை அழிக்கின்ற வீரனை, என்பால் வருமாறு, நீயும் கூவி அழைப்பாயாக! ['மூவர்' என்றது பிரம விஷ்ணு ருத்திரர் ஆகிய முக்கடவுளரை. இவர்களும் 'அறியாச் சிந்துரச்சேவடி' எனவே, இறைவனின் சிறப்பும் தலைமையும் கூறப்பட்டது என்று அறிதல் வேண்டும். சிந்துரம்-செம்மை. ஆசு-குற்றம்; ஆசையாகிய பற்று.]*

இன்பந் தருவன் குயிலே ஏழுல கும்முழு தாளி
அன்பன் அமுதளித் தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய். 6

*குயிலே! எனக்கு நீ உதவினால், நினக்கு யான் இன்பத்தைத் தருவேன். ஏழுலகங்களையும் முற்றவும் ஆள்கின்ற பெருமானும், யாவரிடத்தும் அன்புடையவனாக இருப்பவனும் சிவபிரானே ஆவான். அவன், அன்பர்க்குச் சிவஞானமாகிய அமுதத்தைத் தந்தருளி, அவருள்ளே ஊறுகின்ற ஆனந்தமயமாகவும் கலந்து விளங்குபவன்! விண்ணினின்றும் எழுந்தருளிவந்த தேவனும் அவனேயாவான்! தூய பொன்னும மணியும் என்பவற்றின் சுவடுகளைப் போன்றவாக விளங்குகின்ற, கட்டமைந்த புள்ளிகளையுடைய, நல்ல குதிரையின் மீதாக, எழுந்தருளியும் வந்தவன் அவன்! அந்தப் பெருமானைக், கோகழித் தலைவனை, கொம்பிடத்தேயிருந்து இசைபயிலும் குயிலே, நீயும், என்பால் வருமாறு கூவி அழைப்பாயாக! ['கோகழி' என்றது திருவாவடுதுறையினை.]*

உன்னை உகப்பன் குயிலே உன்துணைத் தோழியும் ஆவன்
பொன்னை அழித்தநன் மேனிப் புகழில் திகழும் அழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங் கன்வரக் கூவாய். 7

குயிலே! யான் நின்னை விரும்புவேன்; நினக்குத் துணையிருக்கின்ற தோழியும் நான் ஆவேன். வனப்பினால் பொன்னையும் வெற்றிகொண்டு, நன்மை பொருந்திய திருமேனியினாலும், புகழினாலும் விளங்குகின்ற அழகன், என் காதலன்! அவன், யாவர்க்கும் அரசனும் ஆவான்! குதிரையின் மீதேறி எனக்கு அருளுதற்பொருட்டாக வந்த வள்ளலும் அவனாவான்! திருப்பெருந் துறையினிடத்தே எழுந்தருளிய, தென்னவன் சேரலன் சோழன் ஆகிய மூவேந்தரும் போற்றும் சிறப்பினையுடைய, புயங்கமென்னும் கூத்தினை இயற்றுவானாகிய அவனை, என்பால் வருகவென்று, நீயும் கூவுவாயாக! [தென்னவன் சேரலன் சோழன் ஆகிய மூவேந்தருமாகி விளங்குபவன் எனவும், இறுதி அடிக்குப் பொருள்கொள்வர். புயங்கன்-புயங்கம் எனப்படும் கூத்தினை உடையவன்; பாம்பாபரணன் எனவும் கொள்வர்.]

வாஇங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு நான்முகன் தேடி
ஓவியவ ருன்னி நிற்ப ஒண்தழல் விண்பிளந் தோங்கி
மேவிஅன் றண்டங் கடந்து விரிசுட ராய்நின்ற மெய்யன்
தாவி வரும்பரிப் பாகன் தாழ்சடை யோன்வரக் கூவாய். 8

குயிற் பிள்ளையே! நீ இங்கே வருவாயாக! திருமாலோடு நான்முகனும் தேடிச்சென்றும் காணாமையினால், முடிவில் தேடுதலின்றும் நீங்கியவராக, அவ்விருவரும் தியானித்து நிற்க, ஒட்பமாகிய அனற்பிழம்பாக ஆகாயத்தைப் பிளந்து மேற்சென்று பொருந்தி, அந்நாளிலே, அண்டங்களையும் கடந்து விரிசுடராய் நின்ற, திருமேனியினை உடையவன் என் காதலன்! தாவிவருகின்ற குதிரைகட்குப் பாகனாகவும் வந்த, அந்தத் தாழ்ந்தசடையினை உடையவனையே, என்பால் வருமாறு, நீயும் கூவி அழைப்பாயாக! [பிள்ளை, பருவங் குறித்தது; சிறுகுயில் என்பது பொருள்.]

காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில் வாழுங் குயிலே
சீருடைச் செங்கம லத்தில் திகழுரு வாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசம் அறுத்தெனை யாண்ட
ஆருடை அம்பொனின் மேனி அமுதினை நீவரக் கூவாய். 9

கருநிறம் பொருந்திய பொன்னைப்போல விளங்கும் திருமேனியினை உடைய, மணம் நிறைந்த சோலையிடத்தே வாழ்கின்ற, குயிலே! சிறப்பினையுடைய செந்தாமரையினைப் போல விளங்குகின்ற திருமேனியினைக் கொண்ட செல்வன் சிவபிரான்! அவன், நிலவுலகத்தே எழுந்தருளிவந்து, தன் திருப்பாத தரிசனத்தையும் எனக்குத் தந்து, என் பாசத்

தையும் அறுத்து, என்னைத் தனக்கு அடிமையாகவும் கொண்டருளினான். ஆத்திமாலையினையுடைய, அழகிய பொன்மேனியினானை, அந்த அமுதுபோல்பவனை, என்பால் வருமாறு, நீயும் கூவி அழைப்பாயாக! [ஆர் உடை-அருமையினை உடையவும் ஆம்.]

கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயி லேயிது கேள்நீ
அந்தண னாகிவந் திங்கே அழகிய சேவடி காட்டி
எந்தம ராம்இவ னென்றிங் கென்னையும் ஆட்கொண் டருளுஞ்
செந்தழல் போல்திரு மேனித் தேவர்பி ரான்வரக் கூவாய். 10

பூங்கொத்துக்கள் பொருந்திய, பெருஞ்சோலையிலே தங்கியிருந்து, கூவுகின்ற குயிலே! இதனையும் நீ கேட்பாயாக: இவ்வுலகிடத்தே அந்தணக் கோலத்துடனே எழுந்தருளி வந்து, அழகிய தன் சேவடிகளைக் காட்டி, 'எம் அன்பரில் இவனும் ஒருவனாகும்' என்று சொல்லி, இங்கு, என்னையும் ஆட்கொண்டு அருளினான் அவன்! செவ்விய தழலினைப் போலும் திருமேனியினை உடைய, அந்தத் தேவர்களின் பெருமானை, என்பால் வருகவென்று, நீயும் கூவி அழைப்பாயாக! [கொந்து-கொத்து, அணவுதல்-பொருந்துதல்.]

# 19. திருத் தசாங்கம்

## அடிமைகொண்ட முறைமை

(நேரிசை வெண்பா)

*['தசாங்கம்' என்பது, அரசனுக்கு உரியவாகக் கூறப்படுகின்ற பத்து உறுப்புக்கள். அவை, நாமம், நாடு, ஊர், ஆறு, மலை, புரவி, படை, பறை, தார், கொடி என்பன. இறையாகிய சிவபிரானுக்குரிய இவற்றைப் போற்றிப்பாடுவதாக இச் செய்யுட்கள் விளங்குகின்றன. காதலி ஒருத்தி, தன்னைக் கூடிப் பிரிந்துசென்றுள்ள காதலனிடத்தே கிளியினைத் தூது உரைத்துவருமாறு வேண்டுகின்ற முறையிலே, தம்மை ஆட்கொண்டு சென்ற பெருமானை, மீளவும் வந்து தமக்கு வீடருள விரும்பி வேண்டுகின்றனர், மணிவாசகர்.]*

**ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோன்**
**சீரார் திருநாமம் தேர்ந்துரையாய்—ஆரூரன்**
**செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்**
**எம்பெருமான் தேவர்பிரான் என்று.**

*அழகு பொருந்திய இளங்கிளியே! எங்களுடைய திருப்பெருந்துறைக் கோமானது, சிறப்புப் பொருந்திய திருநாமங்களைத், 'திருவாரூரனே! செம்மையாகிய பெருமானே!' எனவும், வெண்தாமரை மலரவனான பிரமனும், பாற்கடலில் துயில்பவனான திருமாலும் போற்றி உரைப்பதுபோல, 'எம்பெருமானே! தேவர் பிரானே!' எனவும், ஆராய்ந்து, நீயும் சொல்வாயாக!*

**ஏதமிலா இன்சொல் மரகதமே ஏழ்பொழிற்கும்**
**நாதன்நமை ஆளுடையான் நாடுரையாய்—காதலவர்க்கு**
**அன்பாண்டு மீளா அருள்புரிவான் நாடென்றுந்**
**தென்பாண்டி நாடே தெளி.** 2

*குற்றமில்லாத, இனிய சொற்களைப் பேசுகின்ற, பச்சைக் கிளியே! ஏழுலகிற்கும் நாதனாக விளங்குபவனும், நம்மை அடிமையாக உடையவனுமான பெருமானின், நாட்டினைக் குறித்தும் நீ சொல்லுவாயாக! எம் காதலை உடையவரான அவருக்கு, அன்பினாலே ஆட்கொண்டு, மீளவும் பிறவியை*

அடையாது அருள்புரிகின்ற நாடாக இருப்பது, எக்காலத்தும் தென்பாண்டி நாடேயாகும் என்றும் அறிவாயாக! [மரகதம்-பச்சை மணி; அதனைப்போலும் நிறமுடைய கிளியினை 'மரகதம்' என்றனர். 'சிவனுக்கு உரியதான திருநாடு தென் பாண்டி நாடே' என்பது கருத்து. 'மன்னுமா மகேந்திரம் அதனிற்சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்' என்றபடி, இறைவன், உலகத்தின் உய்திப்பொருட்டாக அறமுதலாகிய உறுதிப்பொருள்களை உரைத்தருளிய மகேந்திரம் விளங்குகின்ற சிறப்புத் தென்பாண்டி நாட்டிற்கு உரியதாகும். இதுபற்றியே, அவனுக்கு உரிய நாட்டினைத் 'தென் பாண்டி நாடு' என்றனர் எனலும், பொருந்தும். அன்றி, அவன் தடாதகைப் பிராட்டியை மணந்து பாண்டிப் பிரானாகி இருந்த திருவிளையாடலை உளங்கொண்டு உரைத்ததுமாகும்.]

தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும்
மாதாடு பாகத்தன் வாழ்பதியென்—கோதாட்டிப்
பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்
உத்தர கோசமங்கை யூர். 3

மகரந்தம் பொருந்திய மலர்களையுடைய, சோலையிடத்தே இருக்கின்ற இயல்பினையுடைய, கிளியே! 'நம்மை ஆட்கொள்ளுகின்ற உமாதேவியாரால் ஆளப்படுகின்ற இடப்பாகத்தினை உடைய பெருமான், வாழ்ந்திருக்கின்ற ஊர்தான், எதுவோ? என்று கேட்பாயானால், அது, பக்தர்கள் எல்லாம், 'உலகத்திடத்தே இருக்கின்றதான ஒரு சிவபுரம்' எனப் பாராட்டிக் கொண்டாடுகின்ற சிறப்பினையுடைய, உத்தரகோச மங்கை என்கின்ற ஊரேயாகும்' என்று, அறிவாயாக. [தாது-மகரந்தம். தத்தை கிளி.]

செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீநஞ் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையான் ஆறுரையாய்—தையலாய்
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காணுடையான் ஆறு. 4

சிவந்த வாயினையும் பசுமையான சிறகினையும் உடைய செல்வியே! 'நம்முடைய சிந்தையிடத்தே வந்து சேர்ந்த அப்பனாகிய திருப்பெருந் துறையுடையானது ஆறு எதுவெனச் சொல்வாயாக? பெண்ணே! அது யாதெனில், 'பெருமையமைந்த மனத்தினது ஆணவ மலத்தினைக் கழுவிப் போக்குவதற்காக வந்திறங்கும் ஆனந்தவெள்ளமே அவனுக்குரிய ஆறாகும்' என்று அறிவாயாக! ['தையலாய்' என்றதனால், கிளி, பெட்டை என்பது விளங்கும்.]

கிஞ்சுகவாய் அஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவும் மலைபகராய்—நெஞ்சத்து
இருளகல வாள்வீசி இன்பமரு முத்தி
அருளுமலை என்பதுகாண் ஆய்ந்து. 5

*முருக்கம் பூவினைப்போலச் சிவந்து தோன்றும் வாயினை யுடைய, அழகிய கிளியே! அழிவில்லாத பெருந்துறைப் பதியினது கோமான், உறைகின்ற மலையினைப் போற்றிப் பேசுவாயாக. அதுதான் யாதென்னில், ''நெஞ்சத்தின் அறியாமையாகிய இருளானது அகலுமாறு, தன் ஞானஒளியினைப் பரப்பி, இன்பம் பொருந்திய முத்தியாகிய பேரின்பத்தினை அருளுகின்ற மலை, என்று சொல்லப் படுவதான மகேந்திர மலையேயாகும்' என்பதனை, நீயும் ஆராய்ந்து அறிவாயாக! [அன்றி, அருளாகிய பெருமலையே அவனுக்கு உரியதான மலை என்றும் கொள்ளலாம்.]*

இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே
ஒப்பாடச் சீருடையான் ஊர்வதென்னே—எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப்பெண் ணேத்திசைப்ப
வான்புரவி யூரும் மகிழ்ந்து. 6

*என் கிளியே! நீயும் நின் கூட்டிடத்தே சென்று புகுந்து கொள்ளாதே! இவ்விடத்தே வந்து இதனைச் சொல்வாயாக! ஒப்புமையற்ற சிறப்பினை உடையவனான நம் பெருமான் ஊர்ந்துவரும் வாகனந்தான் என்னவோ? அது யாதெனில் 'எப்போதும் தேனைப்போன்று இனிக்கின்ற உள்ளத்தினராய்த், தெய்வப்பெண்கள் வாழ்த்திப் பாடியிருப்ப, வானமாகிய புரவியின் மீதிலேயே அவன் மகிழ்வுடன் ஊர்ந்து வருபவன்' என்று அறிவாயாக. [வான்-ஆகாயம்; சிதாகாயத்தை உணர்த்துவது என்பர்.]*

கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய்—ஏற்றார்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயும்
கழுக்கடைகாண் கைக்கொள் படை. 7

*கொம்புத் தேனைப்போல இனிக்கின்ற பேச்சினை உடைய கிளியே! குற்றமற்ற திருப்பெருந்துறைக்கு மன்னனாகிய நம் பெருமான், தனக்கு மாறுபட்டவர்களை வெற்றிகொள்ளுகின்ற படை, யாதென்று சொல்வாயாக? அது யாதெனில், 'அவனை எதிர்த்தவர்களுடைய மலமானது பற்றிச் சேராத, உள்ளத்திலுள்ள மும்மலங்களையும் பாய்ந்து அழிக்கின்ற, சூலப் படையே அவன் கைக்கொள்ளும் படையென்று' நீ அறிவா*

யாக, [மும்மலம்; ஆணவம், கன்மம், மாயை. இதனால், அவனை எதிர்த்தவர் மும்மலமும் ஒழியப் பெற்றவராகிநற்கதி அடைவர் என, அவனது கருணைப்பெருக்கும் கூறப்பெற்றது. கழுக்கடை-சூலம்.]

இன்பான் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசியம்பாய்—அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை. 8

இனிய பாலினைப்போலச் சுவைதரும் பேச்சினையுடைய கிளியே! எங்கள் பெருந்துறைக் கோமானது திருமுன்பிலே முழங்குகின்ற முரசம் யாதெனச் சொல்வாயாக! அதுதான் யாதோ வெனில், 'உயிர்கள் மீதுள்ள அன்பினாலே, பிறவி யாகிய உயிர்ப் பகையானது கலங்கி நீங்கும்படியாகப், பேரானந்தத்தோடு ஓங்குகின்ற, பெருமைமிகுந்தநாதமாகிய பறையே யாகும்' என்று அறிவாயாக. [நாதம்-நாததத்துவம். நாதப் பறையே அவனுக்குரிய முரசமென்பது கருத்து.]

ஆய மொழிக்கிள்ளாய் அள்ளூறும் அன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தாரென்—தீயவினை
நாளுமணு காவண்ணம் நாயேனை ஆளுடையான்
தாளிஅறு காம்வந்த தார். 9

ஆராய்ந்த பேச்சினையுடைய கிளியே! என்பும் உருகுமாறு அன்பு செய்கின்றவர்களிடத்தே, பொருந்தியிருக்கின்ற திருப் பெருந் துறையானின், மேனிமிசை விளங்குகின்ற மாலைதான் என்னவோ? அதுதான் யாதென்னில், 'கொடிய வினைப் பயனானது எந்நாளும் என்னைவந்து நெருங்காதபடிக்கு, நாயினைப் போன்றேனையும் ஆட்கொண்டவன் விரும்பி யணிந்த மாலையானது, தாளியும் அறுகும் ஆகும்' என்று அறிவாயாக. [அள்ளூறுதல்—என்பும் உருகுதல்.]

சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடிகூறாய்—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி ஏர்காட்டும்
கோதிலா ஏறும் கொடி. 10

சோலைகளிடத்தே வாழ்கின்ற பச்சைக் கிளியே! தூய்மை யான தன்மையினையுடைய திருப்பெருந்துறைக் கோமானின் அழகு விளங்கும் கொடி, யாதெனக் கூறுவாயாக? அது யாதெனில், 'மிகவும் பகைகொண்டு வந்தாரும் அஞ்சும்படி யாக, அவருக்கு மேலாக விளங்கித் தோன்றி அழகினைச் செய் கின்ற, குற்றமில்லாத இடபக் கொடியே யாகும்' என்று அறிவாயாக. [நீர்-நீர்மை-தன்மை.]

# 20. திருப் பள்ளிஎழுச்சி

## திரோதான சுத்தி

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[திருப்பெருந் துறையிலே அடிகள் அருளிச் செய்தது இதுவாகும். 'திரோதான சுத்தி,' அதாவது மறைப்பு நீக்கம் என்பது இதன் பயன். இறைவனைத் துயிலெழுப்புவதாக அமைந்த சிறப்பினை உடையதும் இதுவாகும்.]*

**போற்றியென் வாழ்முத லாகிய பொருளே**
**புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்**
**டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்**
**எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்**
**சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்**
**திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே**
**ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்**
**எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே.** 1

*என் வாழ்வுக்கு முதற்காரணமாகிய மெய்ப்பொருளே! நின்னை வணங்குகின்றோம்! பொழுதும் விடிந்தது! இணையான நின் மலர்ப்பாதங்களுக்குப் பொருத்தமான மலர்களைக் கொணர்ந்து தூவி, நின்னைத் துதித்து, நின் திருமுகத்திலே எமக்கு அருளோடும் மலர்கின்ற, அழகிய, நின் புன் முறுவலையே பற்றுகக்கொண்டு, நின் திருவடிகளை யாமும் தொழுகின்றோம்!*

*இதழ்களை உடைய தாமரைமலர்கள், சேற்றினிடத்தே, மலர்ந்து இதழ்விரிக்கின்ற, தண்மையான வயல்கள் சூழ்ந்த, திருப்பெருத்துறையிலே வாழ்கின்ற, எம் சிவபேருமானே! உயர்ந்த இடபமாகிய ஏற்றுக்கொடியினை உடையவனே! எம்மை அடிமையாகக் கொண்டிருப்பவனே! எம்பெருமானே! திருப்பள்ளியினின்றும் துயிலெழுந்து எமக்கும் அருள்புரிவா யாக!*

**அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்**
**அகன்றது உதயம்நின் மலர்த்திரு முகத்தின்**
**கருணையின் சூரியன் எழவெழ நயனக்**
**கடிமலர் மலரமற்று அண்ணல்அங் கண்ணும்**

திரள்நிரை அறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே!
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகட லேபள்ளி எழுந்த ளாயே! 2

சூரியனானவன், இந்திரனின் திசையான கீழ்த்திசையினை அணுகிவிட்டனன். இரவின் இருளும் போய் அகன்றது. உதயமும் வந்தது. நின்னுடைய தாமரை மலர்போன்ற அழகிய திருமுகத்திலே கருணையாகிய சூரியனும் எழுந்தனன். அவன் எழஎழக் கண்களாகிய மணமலர்களும் மலர்ந்தன. மேலும், பெருமை பொருந்திய அழகிய கண்களைப்போல் கின்ற வண்டினங்கள் நிரை நிரையாக முரல்வனவுமாயின. இவற்றை எல்லாம் நீ உணர்வாயாக. திருப்பெருந்துறையிலே வாழ்கின்ற எம் சிவபெருமானே! நின் அருளாகிய பெருஞ் செல்வத்தை எமக்குத் தருவதற்காக, எழுந்தருளி வருகின்ற ஆநந்தமலையே! ஆநந்தக் கடலே! திருப்பள்ளியினின்றும் நீயும் எழுந்தருள்வாயாக!

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளியொளி உதயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாள்இணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே!
யாவரும் அறிவரி யாய்எமக்கு எளியாய்!
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே! 3

இனிய குரலினையுடைய குயில்கள் கூவின. கோழிச் சேவல்களும் கூவின. பறவைகள் ஒலி செய்தன. காலைச் சங்குகள் ஒலி முழங்கின. தாரகைகள் ஒளி மழுங்கின. கதிரவனும் உதயகாலத்திற்கு ஒருப்பட்டவனாயினன். தேவனே! எமக்கு, விருப்பத்துடன் நன்மைதருகின்ற, நெருங்கிய கழலணிந்த, நின் இரு பாதமலர்களையும் காட்டுவாயாக! திருப்பெருந்துறையிலே கோயில்கொண்டிருக்கும் எம் சிவபெருமானே! யாவராயினும், அவராலும் அறிதற்கு அரியவனாக விளங்குபவனே! எமக்கு எளியவனாகி அருள் பாலிப்பவனே! எம்பெருமானே! நின் திருப்பள்ளியினின்றும் எழுந்தருள்வாயாக!

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்

சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையும் ஆண்டுகொண்டு இன்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 4

*இன்னிசை மிழற்றும் வீணையினை உடையவரும் யாழினை உடையவரும் ஒருபால் நிற்கின்றனர். வேதங்களோடு வேறு பல தோத்திரங்களையும் சொல்பவர் ஒருபால் நிற்கின்றனர். நெருங்கிய தொடுக்கப்பட்ட மலர்களை ஏந்தின கையினர் ஒரு பால் குழுமியுள்ளனர். வணங்குதலை உடையவரும், துவளுதலை உடையவரும் ஒருபால் உள்ளனர். சென்னியிலே அஞ்சலியாகத் தம் கைகளைக் கூப்பியவர் ஒருபால் உள்ளனர். திருப்பெருந்துறையிலே கோயில்கொண்டிருக்கின்ற சிவபெருமானே! அடியேமையும் ஆட்கொண்டு, இனிய அருளினைச் செய்கின்ற எம்பெருமானே! நின் திருப்பள்ளியினின்றும், எழுந்தருள்வாயாக!*

பூதங்கள் தோறும்நின் றாய்எனில் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயற்றிருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்அரி யாய்எங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்துஎம்மை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 5

*பூதங்கள்தோறும் நின்று அவற்றை இயக்குகின்றனை என்பது அல்லாமலும், போக்கும் வரவும் இல்லாதவன் என நின்னைப் புலவோர்கள் கீதங்களாற் பாடுதலையும் ஆடுதலையும் அல்லாமலும், நின்னைக்கண்டு, நின் மெய்யான முழுத் தன்மைகளையும் அறிந்தவரை, யாம் கேட்டும் அறியோம். குளிர்ச்சியைக் கொண்ட வயல்கள் சூழ்ந்த, திருப்பெருந் துறையிலே கோயில்கொண்டிருக்கும் மன்னவனே! சிந்தித்து உணர்வதற்கும் அருமையானவனே! எம் கண்காண எமக்கு முன்பாக எழுந்தருளி வந்து, எம் குற்றங்களை அறுத்து, எம்மை ஆட்கொண்டு, அருள்புரிகின்ற எம் பெருமானே! நின் திருப்பள்ளியினின்றும் எழுந்தருள்வாயாக.*

பப்பற வீட்டிருந்து உணரும்நின் அடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத்து இயல்பின்
வணங்குகின் றார்அணங் கின்மண வாளா

செப்புறு கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப்பு அறுத்துஎமை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 6

*ஒப்பற்ற துறவுநிலையிலே இருந்து, உன் நிலையினை அறிந்தவர்கள், பிறவித் தளையினை அறுத்தவர்களாவர். அவர்கள் எல்லாரும், மானிடத்தாரின் இயல்பினையுடைய மைதீட்டப் பெற்ற கண்களையுடைய மாதர்களும், வந்து நின்னை வணங்குகின்றனர். உமாதேவியின் மணவாளனே! சிறந்த தாமரைமலர்கள் மலர்கின்ற, குளிர்ச்சியான வயல்கள் சூழ்ந்த, திருப்பெருந்துறையிலே கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானே! இந்தப் பிறவியாகிய துன்பத்தை அறுத்து, எம்மை ஆட்கொண்டு, அருள்புரியும் எம்பெருமானே! நின் திருப்பள்ளியினின்றும் எழுந்தருள்வாயாக!*

அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு
அரிதென எளிதென அமரரும் அறியார்
இதுவவன் திருவுரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண்டு இங்கெழுந்து அருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுஎமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 7

*அது பழச்சுவை போன்றது! அது அமுதாக விளங்குவது! அது அறிவதற்கும் அரிதானது! அது அடியவர்க்கு எளிமையானது! அதனைத் தேவர்களும் அறியமாட்டார்கள்! என்பார் நின்னைப் பலரும். அங்ஙனமாகவும், இது அவனது திருமேனி, இவனே அவன் என்று சொல்லும்படியாக, எம்மை ஆண்டு கொண்டவனாக, இவ்விடத்தே எழுந்தருளியவனையினை! தேன் பெருகுகின்ற பொழில்கள் சூழ்ந்த, திருவுத்தரகோச மங்கையில் உள்ளவனே! திருப்பெருந்துறையிலே கோயில் கொண்டிருக்கும் மன்னவனே! எங்களைப் பணிகொள்ளும் விதம்தான் யாதோ? அதனை யாமும் கேட்போம்! எம்பெருமானே! நின் திருப்பள்ளியினின்றும் எழுந்து அருள்வாயாக!*

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்
பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி

அந்தண ளுவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே. 8

*முற்பட்ட முதலும் நடுவும் இறுதியும் நீயே ஆயினை! முத்தேவர்களும் நின்னை அறியும் ஆற்றல் உடையவரல்லர்! எனின், நின்னை அறிபவர்தாம் வேறு யாவரோ? உமாதேவியும் நீயுமாக நினது அடியவரது பழங்குடில்கள் தோறும் எழுந்தருளினீர்! அத்தகைய பரமனே! செந்தீயை நிகர்த்த நின் திருமேனி வண்ணத்தையும் காட்டித், திருப்பெருந்துறையிலே வாழ்கின்ற நின் திருக்கோயிலையும் காட்டி, அருள் உடைய அந்தணன் நீயாவதையும் காட்டி, எழுந்தருளி வந்து, எம்மை ஆண்டருளினாய்! அருமையான அமுதமே! நின் திருப்பள்ளியினின்றும் இப்போது எழுந்தருள்வாயாக!*

விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப்பொரு ளேயுன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாய்உல குக்குயி ராளுய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 9

*வானகத்திலேயுள்ள தேவர்களும், நின்னருகே சேர்தற்குச் சக்தியற்றவராக விளங்கும், மேலான பரம்பொருளே! நினது திருத்தொண்டிற்கே உரிமைகொண்ட அடியவர் யாங்கள்! எம்மை, இம் மண்ணுலகத்தே வந்து வாழச் செய்தவனே! வளப்பமிகுந்த திருப்பெருந்துறையில் கோயில் கொண்டிருப்பவனே! வழி வழி நினக்கு அடியவராகுபவர் யாங்கள்! எம் கண்ணினிடத்தே அகலாது நின்று, எமக்குக் களிப்பினைத் தருகின்ற தேனே! பாற்கடலிலே தோன்றிய அமுதமாக எமக்கு வாழ்வு அளிப்பவனே! கரும்பினும் இனியவனே! விரும்புகின்ற அடியவர்களின் எண்ணத்தினுள் அகலாது இருப்பவனே! உலகுக்கு உலகமானவனே! எம் பெருமானே! நின் திருப்பள்ளியினின்றும் இப்போது எழுந்தருள்வாயாக!*

புவனியிற் போய்ப்பிற வாமையின் நாள்நாம்
போக்குகின் றேம்அவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்

அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே. 10

பூமியிலே போய்ப் பிறவாமையினாலே, நாம் வீணாக நாட்களைக் கழிக்கின்றோம்; இந்தப் பூமியானது, சிவபெருமான் நாம் உய்யும்படியாக நமக்கு அருள்செய்து அடிமை கொள்ளுகின்ற இடமென்று நோக்கித், திருமாலாகிய அவனும் விருப்பம் எய்தினான். மலரவனாகிய பிரமனும் அங்ஙனமே ஆசைப்பட்டான். திருப்பெருந்துறையிலே கோயில் கொண்டிருப்பவனே! நினது பரந்த மெய்க்கருணையும் நீயுமாக, இப்பூமியின் கண்ணே எழுந்தருளி வந்து, எம்மை அடிமை கொள்ளுவதற்கு வல்லமை உடையவனே! அரிய அமுதமே! திருப்பள்ளியினின்றும் எழுந்துவந்து எமக்கும் அருள்வாயாக!

# 21. கோயின்மூத்த திருப்பதிகம்

## அநாதியாகிய சற்காரியம்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[அடிகள், தில்லையில் அருளிச் செய்ததே இந்தத் திருப்பதிகமும ஆகும். இதன் பொருள், என்றைக்கும் உளதாகிய இறைவனின் அருள்தலாகிய செயற்பாட்டினைக் குறித்துப் போற்றுதல் ஆகும்.]*

**உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி**
**அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தாஞல் அடியேன்உன்**
**அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்**
**முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே. 1**

*பொன்னம்பலத்திலே திருநடனம் செய்திருக்கின்ற, எமது. ஈறில்லாத முதற்பொருளே! உடையவளாகிய சிவசக்தியோ நின்னிடத்தே உள்ளீடாகப் பொருந்தியிருக்கின்ருள். அந்த உடையவளிடத்தேயோ நீயும் பொருந்தியிருக்கின்றனை. அடியேனின் உள்ளத்துள்ளோ, நீவிர் இருவீருமாகவே வந்து கலந்திருக்கின்றீர்கள். அப்படிக் கலந்திருப்பது உண்மையாஞல், என்னுடைய கருத்தானது நிறைவேறும் வண்ணம், என் எதிரே நின்று, அடியனேனும் நின் அடியார் கூட்டத்து நடுவிலே இருப்பதாகின்ற திருவருளினைச் செய்தருள்வாயாக! ['என் உள்ளத்து, உடையாளுடன் நீயும் வந்து கலந்திருப்பது உண்மையாஞல், என்னையும் நின் அடியவர் கூட்டத்து ஒருவஞக்கி, எனக்கும் முத்தி அருள்வாயாக' என்பது கருத்து. உடையாள்-அனைத்தையும் உடையவள். சத்தியும் சிவமுமாகவே இறைவன் உயிரிற் கலந்துள்ளனன் என்பது இதஞல் விளங்கும். 'என் கருத்து என்பது, 'பிறவித்தளையினை அறுத்து வீட்டுலகாகிய பேரின்பத்தினை அடைதல்.']*

**முன்னின் ருண்டாய் எனைமுன்னம் யானும் அதுவே முயல்வுற்றுப்**
**பின்னின் றேவல் செய்கின்றேன் பிறபட் டொழிந்தேன் [பெம்மானே**
**என்னின் றருளி வரநின் று போந்தி டென்ஞ விடில்அடியார்**
**உன்னின் றிவஞர் என்ஞரோ பொன்னம் பலக்கூத் [துகந்தானே. 2**

பொன்னம்பலத்திலே திருக்கூத்து ஆடியிருத்தலை விரும்பியருளின பெருமானே! முன்னே, அடியேனை, என் முன்பாகத் தோன்றி நின்று, நீயே ஆட்கொண்டனை! அதன் பின்னர் யானும், அதனையே மீளவும் அடைதற்காக முயன்று, நின் அருளினையே பின்பற்றி நிற்பவனாகி, நினக்கே இடையறாது பணிசெய்து வருகின்றேன். அங்ஙனம் செய்வதில் நான் என்னையறியாதே பிறபட்டுப் போயும் கெட்டொழிந்தேன். பெருமானே! என்னிடத்தே நிலைபெற்றுத், திருவருள் மேற்படும்படியாக நின்று, 'நீ என்னுடன் வீடு புகுந்திடுக' என்று கூறுவிட்டால், நின் அடியவர்களானோர், நின் எதிரே நின்று, 'இவன் யார்?' என்று வினவி, என்னையும் ஒதுக்கிவிட மாட்டார்களோ? ['அங்ஙனம் அவர்கள் ஒதுக்கி என்னைக் கழித்துவிடாத வகையினால், என்னையும் கருணைகாட்டி ஆண்டருள்க' என்பது கருத்து. 'முன்னம் முன்னின்று' என்பது, இறைவன் ஞானதேசிகனாகி எழுந்தருளிவந்து அருள்செய்ததனைக் குறிப்பதாம்.]

உகந்தா னேஅன் புடைஅடிமைக் குருகாவுள்ளத் துணர்விலியேன்
சகந்தான் அறிய முறையிட்டால் தக்கவா றன் றென்னாரோ
மகந்தான் செய்து வழிவந்தார் வாழ வாழ்ந்தாய் அடியேற்குன்
முகந்தான் தாரா விடின்முடிவேன் பொன்னம் பலத்தெம்
[முழுமுதலே. 3

பொற்சபையிலே ஆடுகின்ற, எங்களது முழுமுதற் பொருளே! அன்பினையுடைய அடிமைத் திறத்துக்கு உகந்தவனே! அன்பினால் உருகாத மனத்தையுடைய, உணர்வற்றவனாகிய யான், உலகமறிய முறையிட்டால், அது நின்னருள் கைகூடுவதற்குத் தகுதியானவொரு நெறியாகாது என்று கேட்டோர் சொல்லமாட்டார்களோ? யாகங்கள் செய்து, முறையோடு நின்னை நாடிவந்த முனிவர்கள், நிலையான வாழ்வினைப் பெறும்படியாக, நீயும் அவர்கள்பால் வாழ்ந்திருந்தனை! எனக்கும் இரங்கி நின் திருமுகத்து இன்னருளைத் தராவிடில், யான் முற்றவும் அழிந்தேபோவேனே! ['என்னை அழியுமாறு கைவிட்டு விடாது, தடுத்தாட்கொண்டு காத்தருள் புரிவாயாக' என்பது கருத்து. முகந்தருதல்- அருளுதல். 'அன்பினால் உருகாத யான், உலகறிய நின்னருளை வேண்டி முறையிடுதல் நின்னை அடைதற்கான நெறியாகாது; அதனால், நீயே என்பொருட்டு இரங்கியருளல் வேண்டும்' என வேண்டுகின்றனர்.]

முழுமுத லேஐம் புலனுக்கும் மூவர்க்கும் என்தனக்கும்
வழிமுத லேநின் பழவடி யார்தி ரள்வான் குழுமிக்

கெழுமுத லேயருள் தந்தி ருக்கஇரங் குங்கொல் லோஎன்று
அழுமது வேயன் றிமற்றென் செய்கேன் பொன்னம்
[பலத்தரைசே. 4

*பொன்னம்பலத்தே ஆடிநிற்கின்ற எம் அரசனே! அனைத்திற்கும் முழுமுதலான பொருளே! ஐம்புலன்களுக்கும், மனம் புத்தி அகங்காரமாகிய மூன்று அந்தக் கரணங்களுக்கும் புருடனாகிய எனக்கும், தோன்றி இயங்குவதற்குக் காரணமான நிமித்தப் பொருளே! நினது பழவடியார் கூட்டத்துடன் விண்ணுலகிலே கூடி, அவர்களுடன் பொருந்தி யிருக்கின்றமுதல்வனே!' 'எனக்கும் அருள்தந்து என்னுள்ளும் இருப்பதற்கு நீயும் இரங்குவை கொல்லோ!' என்று அழுதிருக்கும் அதுவேயன்றி, யான், மற்று என்னதான் செய்வதற்கு வல்லேன்? ['இறைவனே! நீ என் பொருட்டு இரங்கி வந்து அருளாவிடில், 'என்று வந்து அருள்வானோ இறைவன்?' என அழுதிருக்கும் வகையன்றி, யானே என்முனைப்பாக யாது செய்வதற்கு வல்லேன்? அதனால், 'என்பால் கருணை கொண்டு எழுந்தருளிவந்து எனக்கும் உய்தியருள்வாயாக' என்பது கருத்து. கெழுவுதல்-பொருந்துதல். பழவடியார்-முன்னரேயே சிவப்பேரின்பத்தில் திளைத்திருக்கும் அடியவர் கூட்டத்தார்.]*

அரைசே பொன்னம் பலத்தாடும் அமுதே என்றுன் அருள்நோக்கி
இரைதேர் கொக்கொத் திரவுபகல் ஏசற் றிருந்தே வேசற்றேன்
கரைசேர் அடியார் களிசிறப்பக் காட்சி கொடுத்துன்
[அடியேன்பால்
பிரைசேர் பாலின் நெய்போலப் பேசா திருந்தால் ஏசாரோ. 5

*'அரசனே! பொன்னம்பலத்திலே திருநடனம் செய்திருக்கும் அமுதனே!' என்று போற்றி, நின்னருளினை எதிர் நோக்கியவாறு, இரையினை ஆய்ந்து கொண்டிருக்கும் கொக்கினைப்போல, இரவும் பகலும் கவலையோடிருந்து, யான் மெலிந்தே போயினேன்! முத்திக் கரையினைச் சேர்தற்குரிய அடியார்களுக்குக், களிப்புமிகும்படியாகக் காட்சி கொடுத்து, நினது அடியவனாகிய என்பால், பிரைகலந்த பாலிடத்தே மறைவாக அடங்கியிருக்கின்ற நெய்யினைப் போல நீ வெளிப்படாதிருந்து, என்னுடன் பேசாதுமிருந்தால், 'நின்னை அருளில்லாதவன்' என்று உலகத்தார்கள் ஏசமாட்டார்களோ? ['இறைவனே! எனக்கு நீ அருளாதிருந்தால் அது நின்னுடைய பெருங்கருணைக்கே பழியாகும்' என்பது இது. 'இரைதேர் கொக்கு ஒத்து' என்றது, பொறிபுலன் யாவும் ஒடுங்கி, இறையருள் ஒன்றினையே நாடிக் காத்திருந்த தன்மையினை.]*

ஏசா நிற்பர் என்னை உனக் கடியா னென்று பிறரெல்லாம்
பேசா நிற்பர் யான்தானும் பேணு நிற்பேன் நின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந் திருவோ லக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடும் எந்தாய் இனித்தான் இரங்காயே. 6

பொன்னம்பலத்திடத்தே நடனம் செய்திருக்கின்ற எந்தையே! ஒளியுருவானே! ஈசனே! என்னை நின் அடியவரெல்லாரும், 'இவன் அன்பிலன்' எனக்கூறி ஏசாநிற்பார்கள். ஆனல், பிறரெல்லாம், 'நினக்கு அடியவன் யான்' என்று பேசாநிற்பார்கள். யானும் நின்னருளையே விரும்பியவனாக நிற்பேன். அடியவர் சூழ்ந்திருக்கின்ற நின் திருவோலக்கக் காட்சியினை, நானும் கண்டு சேவிக்கும்வண்ணம், இனியாயினும் எனக்கு இரங்கி அருள்செய்வாயாக! ['பெருமானே! முத்தி அருளுவதற்கு எனக்கு உரிய காலம் வரவில்லை என நீ கருதினலும், அடியவர் புடைசூழ நீ வீற்றிருக்கின்ற அந்த அரிய காட்சியையேனும் தந்தருள்வாயாக' என்பது கருத்து. தேசன்-ஒளிமேனியன் ஈசன்-ஆண்டவன். பேணுதல்-விரும்புதல்.]

இரங்கும் நமக்கம் பலக்கூத்தன் என்றென் றேமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்தாண்டாய் ஆள்வா ரிலிமா டாவேனோ
நெருங்கும் அடியார் களும்நீயும் நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வரஎங்கள் வாழ்வே வாவென் றருளாயே. 7

எங்கள் வாழ்வே! 'நமக்கும் அம்பலக் கூத்தன் இரங்கியருள்வான்' என்று நினைந்து நினைந்து, ஆனல், அதனைப் பெருது ஏமாந்திருக்கின்ற என்னையும், அருமையான கற்பனை ஒன்றினைக் கற்பித்துவந்து, நீயும் அன்று ஆண்டருளினை! இனியும், ஆள்பவரை உடையதல்லாத மாட்டினைப்போல, யானும் ஆகிவிடுவேனோ? நெருங்குகின்ற அடியவர்களும் நீயுமாக நிலைத்து மகிழ்கின்ற அந்தப் பக்கத்தினைச் சார்ந்து நானும் வரும்படியாக, 'வா'வென்று என்னையும் நீ கருணைகொண்டு அழைத்தருளாயோ? ['இறைவனே! காவலன் இல்லாத மாட்டைப்போல என் நிலையும் ஆகாதபடி, என்னையும், நின் அடியவர்கள் கூட்டத்துள் ஒருவனாக ஏற்றுக் கொண்டருள்க' என்பது கருத்து. 'ஆள்வார் இலா மாடு' என்றது, அது தன் மனப்போக்கிலே சுற்றியலைந்து, மந்தையைவிட்டும் விலகிச் சென்று, வழிதவறி ஒழிவது போலத் தம் நிலையும் ஆகிவிடாது இருத்தலை விரும்பிக் கூறியதாகும்.]

அருளா தொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர்இங்குப்
பொருளா என்னைப் புகுந்தாண்ட பொன்னே பொன்னம்
[பலக்கூத்தா
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து வருந்து வேனை வாவென்றுன்
தெருளார் கூட்டங் காட்டாயேல் செத்தே போனாற் சிரியாரோ. 8

*பொன்னம்பலக் கூத்தனே! என்னையும் ஒரு பொருளாக மதித்து, இவ்விடத்தே எழுந்தருளி வந்து, என்னுட்புகுந்து, என்னையும் அந்நாளில் ஆட்கொண்டருளிய பொன்போன்றவனே! நீ எனக்கு அருள்செய்யாது கைவிட்டனையானால், நின் அடியவனாகிய என்னையும், 'அஞ்சேல்' என்று கூறி ஆதரவளிப்பவர்தாம் யாவரோ? மயக்கம் நிறைந்த மனத்துடனே, நின்னைப் பிரிந்து வருந்தியிருக்கின்ற என்னையும், வருகவென்று அழைத்து, நின் தெளிவுகொண்ட அடியவரது திருக்கூட்டத்தினையும் எனக்குக் காட்டி அருளாயேல், அதனால் ஏக்கமுற்று யானும் செத்தே போயினேனானால், உலகத்தவர், நின்னைக் குறித்துப் பேசி நகையாட மாட்டார்களோ? ['நீ அருளாவிடில் யான் இறந்தே போவேன்; அப்போது, என்னை இறக்குமாறு கைவிட்ட நின் செயலைக்குறித்து உலகோர் நின்னை நகையாடுவர்; அதனை நினைந்தேனும் எனக்கு அருள்செய்வாயாக' என்பது கருத்து. மருள்-மயக்கம். தெருள்-தெளிவு.]*

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வே றிருந்துன் திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடுந் தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ நம்பி இனித்தான் நல்காயே. 9

*அண்ணலே! நினது அன்பர்கள் நின் ஆனந்தத்தை அடைந்த களிப்பினாலே சிரிப்பவர்களாகவும், உள்ளம் களிப்பவர்களாகவும், கூடிக்கூடி நின் திருவார்த்தையினை விரித்துப் பேசுபவர்களாகவும, அத்தகைய பேச்சுக்களைக் கேட்பவர்களாகவும், அவற்றை மெச்சிப் பாராட்டுபவர்களாகவும், வேறுவேறாகத் தனித்திருந்து நின் திருநாமத்தைத் தியானிப்பவர்களாகவும், 'பொற்சபையில் கூத்தாடும் தலைவனே' எனப் போற்றுபவர்களாகவும் விளங்குவார்கள். அவர்களுக்கு முன்னால், நாயினேன், நகைப்புக்கு இடமான பொருளாக இருப்பேனோ? இனியாயினும் எனக்கு அருள்செய்வாயாக! ['நின்னை அடைந்த ஆனந்தத்திலே திளைக்கும் அடியவர் முன்பாக, நகைப்பிற்கிடமான ஒரு பொருளாக யான் இனியும் இருக்கமாட்டேன்; என்னையும் கடைத்தேற்றி*

*அவர்களுள் ஒருவனாக ஆகும்படி செய்தருள்க' என்பது கருத்து. நரிப்பு-இகழ்ச்சி.]*

**நல்கா தொழியான் நமக்கென்றும் நாமம் பிதற்றி நயனநீர்**
**மல்கா வாழ்த்தா வாய்குழறா வணங்கா மனத்தால் நினைந்துருகிப்**
**பல்கா லுன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம் பலமென்றே**
**ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி அருளாய் என்னை உடையானே! 10**

*என்னை அடிமையாக உடையவனே! 'எனக்கு நல்காது கைவிடான்' என்று நினைந்து, நின் திருநாமங்களையே பிதற்றிக் கொண்டு, கண்களில் நீர்நிரம்பி வழிய நின்னை வாழ்த்தி, வாய்குழறி, வணங்கி, மனத்தால் நினைந்து உருகிப், பலகாலும் நின்னையே என்னுட் பாவனைசெய்து, போற்றித் துதித்துப், 'பொன்னம்பலம்' என்று சொல்லியபடியே தளராநிற்கின்றவன் யான்! என் உயிருக்கும் இரங்கித் திருவருள் புரிவாயாக! ['சிவபிரான் நமக்கு அருள்செய்யாது இரான்' என்ற உறுதியுடன், நின்னையே பலபடியாக உளங் கொண்டு போற்றிவரும் என்னையும் காத்தருள்க' என்பது கருத்து.]*

# 22. கோயில் திருப்பதிகம்

## அநுபோக இலக்கணம்

(எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[அடிகளால் தில்லைப்பதியிடத்தே அருளிச்செய்யப் பட்டது இதுவுமாகும். இறைவனின் அருளாகிய இன்பத்தே திளைத்த அடிகள், அந்த இன்பத் திளைப்பின் விளைவாக, அவனைப் போற்றுவது இது.]

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே. 1

தேனினது தெளிவினைப் போன்றவனே! திருப் பெருந்துறையிலே வீற்றிருக்கும் சிவபெருமானே! முடிவற்ற பதங்கள் யாவினையும், கடந்து விளங்கும் ஆநந்த மயனே! என்னுடைய அன்புமயம் ஆயினவனே! என் நற்கதிக்கு மாறுபட்டு நின்று, என்னை மயக்குகின்ற, ஐம்புலன்களின் வாயில்களை அடைத்து, ஞான அமுதமே சுரந்துநின்று, என் மனத்துள் தோன்றுகின்ற பரஞ்சுடரே! நின்னை உள்ளவாறு கண்டு யானும் தரிசிக்கும்படியாக, நீயும், என் முன்னே வந்து அருள்வாயாக! ['பெருமானே! நினது உண்மையான சொரூபநிலையினைக் கண்டு நான் அநுபவிக்குமாறு வந்தருளிச் செய்க' என்பது கருத்து.]

அன்பினால் அடியேன் ஆவியோ டாக்கை
ஆனந்த மாய்க்கசிந் துருக
என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனொர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பும் முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத் தரைசே. 2

*அனைத்துக்கும் முற்பட்டதாயும், அவை தோன்றிய போது அவை அனைத்தும் தானே ஆகியும், வியாபித்திருக்கின்ற முதற்பொருளே! முடிவில்லாத முதல்வனே! தெற்கின் கண் உள்ளதான, திருப் பெருந்துறையிடத்தே வீற்றிருப்பவனே! சிவபெருமானே! சிறப்பினையுடைய சிவபுரத்திற்கு அரசனே! நின்பால் எழுகின்ற அன்பினாலே, அடியேனின் உயிரோடு உடலும் ஆனந்தமயமாகிக் கசிந்து உருகும்படியாக, எனக்குக் கிடைத்தற்குத் தகுதியில்லாத நினது இனிய அருளினையும் கொடுத்தருளினாய்! இந்த உபகாரத்திற்கு ஈடாகத் தருவதற்கு, ஒருவிதக் கைம்மாற்றையும், யான் உடையவனல்லேனே! ['பெருமானே! நின் அருளுக்கு யாதும் கைம்மாறு செய்வதற்கும் இயலாத கடையனேன் யான். என்னையும் காத்தருள்க' என்பது கருத்து. பரம்-பாரம்; தாங்குவதற்கு ஒண்ணாத தன்மை. கைம்மாறு-பதிலுதவி.]*

அரைசனே அன்பர்க் கடியனே னுடைய
அப்பனே ஆவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோர் உணர்வே
யானுன்னை உரைக்குமா றுணர்த்தே. 3

*அன்பர்களுக்கு அரசனே! அடியனேனுடைய அப்பனே! உயிரோடு உடம்பும், உட்டுளைதோறும் கனியும்படியாகப் புகுந்துநின்று உருகப்பண்ணிப், பொய்மையாகிய அறியாமை இருளினை ஒழித்த, மெய்ச்சுடரே! அலை எறியாநின்று நிலை பெற்ற தெளிவாகிய அமுதக்கடலே! திருப்பெருந்துறையில் கோயில்கொண்டிருக்கும் சிவபிரானே! சொல்லும் உணர்வும் கடந்து, உணரப்படுவதாகிய ஒப்பற்ற பேரறிவே! யான் நின்னைப் போற்றி உரைக்கும் வகையினை நீயே எனக்கு உணர்த்தியருள்வாயாக! ['பெருமானே! நின்னைத் துதிப்பதற்கும் யான் வகையறியேன்; அதனையும் என்னுள் நின்று நீயே எனக்கு உணர்த்தி அருள்வாயாக' என்பது கருத்து.]*

உணர்ந்தமா முனிவர் உம்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி எல்லா உயிர்கட்கும் உயிரே
எனைப்பிறப் பறுக்கும்எம் மருந்தே
திணிந்ததோர் இருளில் தெளிந்ததூ வெளியே

திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கள்தா மில்லா இன்பமே உன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே. 4

பரஞானத்தாலே உணர்தற்குரிய அனைத்தையும்உணர்ந்த மாமுனிவர்களும், தேவர்களும், பிற பெரியோர்களும் ஆகிய இவர்களுடைய அறிவுக்கும், தெரிவதற்கு அருமையாகிய பொருளே! ஒப்பற்றவனே! எல்லா உயிர்கட்கும் உயிராக இருப்பவனே! என்னைப் பிறப்பறுத்துக் காத்தருளும் எனது அமுதமே! செறிந்ததாகிய ஒப்பற்ற இருளினின்றும் தெளிந்த தூய வானமே! திருப் பெருந்துறையிடத்தே எழுந்தருளி யிருக்கும் சிவபிரானே! முக்குணங்களின் தொடர்பற்ற பேரானந்தமே! நின்னை அடைந்த எனக்கு, இனி என்னதான் குறையிருக்கிறது? ['பெருமானே! நின்னை ஆண்டவனாக அடைந்த அடியேனுக்கு இனி யாதொரு குறையும் இல்லை' என்பது கருத்து.]

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறு நீர்போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் உடலிடங் கொண்டாய்
இனியுன்னை யென்னிரக் கேனே. 5

எத்தகையவொரு குறையும் இல்லாது, அனைத்தின் நிறைவுடனும் விளங்கும், பொருளே! குற்றமற்ற அமுதமே! முடிவற்ற செழுமையாகிய ஒளிக் குன்றமே! வேதமுமாகி, அவ்வேதங்களின் உட்பொருளும் ஆகி, எழுந்தருளி வந்து, என் மனத்திடையே நிலைபெற்ற இறைவனே! கரை கடந்த வெள்ளத்தைப்போல என் உள்ளத்தே பாயாநின்ற, அருள் வெள்ளமாகிய திருப்பெருந்துறைச் சிவபிரானே! இறைவனே! நீ என் உடலையே நினக்குரிய இடமாகக் கொண்டுவிட்டனை! இனி, நின்னை, யான் எதனை வேண்டி இரந்து நிற்பேன்? ['சிவனே! என் உடலையே நினக்கு இடமாகக்கொண்டு நீ கலந்துவிட்ட பிறகு, எனக்கு வேண்டுவதென்பது, இனி யாதுமே இல்லை' என்பது கருத்து.]

இரந்திரந் துருக என்மனத் துள்ளே
எழுகின்ற சோதியே இமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச்சே வடியாய்
திருப்பெருந் துறையுறை சிவனே

நிரந்தஆ காயம் நீர்நிலம் தீகால்
ஆயவை அல்லையாய் ஆங்கே
கரந்ததோர் உருவே களித்தனன் உன்னைக்
கண்ணுறக் கண்டுகொண் டின்றே. 6

*யான் நின்னையே இரந்திரந்து உருகும்படியாக, என் மனத்துள்ளே தோன்றி, எழுகின்ற சோதியே! இமையவர்களின் சென்னிமீது விளங்குகின்ற, செந்தாமரை மலரினைப் போன்ற, திருவடிகளை உடையவனே! திருப் பெருந்துறையிலே வீற்றிருக்கும் சிவபிரானே! எவ்விடத்தும் நிறைந்த ஆகாயம், நீர், நிலம், தீ, காற்று ஆகிய ஐம்பூதங்களோடு கலந்து அவையாயும், அவை அல்லாதாயும் நிலவுகின்றவனே! அவ்விடத்தே, கரந்து நிற்பதாகிய ஒரு வடிவினை உடையவனே! இந்நாளில், நின்னைக் கண்ணுரக் கண்டு யான் களிப் படைந்தேனே! ['சிவனே! நின்னைக் கண்ணுரக்கண்டு களிப் படைந்த எனக்கு இனியும் ஒரு குறையும் உளதாமோ?' என்பது கருத்து. 'ஓர் உருவே' என்றது, இறைவன் அருள் திருமேனி கொண்டு, ஞானசாரியனாகி எழுந்தருளி வந்து தமக்குக் காட்சியளித்த பேரருளினை வியந்து உரைத்ததாம்,]*

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலால் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றும் நீயல்லை அன்றியொன் றில்லை
யாருன்னை அறியகிற் பாரே. 7

*இந்நாளிலே, எனக்கும் அருளிச்செய்து, என்பால் நிலவியிருந்த அறியாமையிருளை அகற்றி, என் மனத்தகத்தே தோன்றுகின்ற ஞானசூரியனைப் போன்று நிலைபெற்ற, நினது தன்மையினை நினையாதே அறிந்தேன். நீயன்றிப் பிறிதொரு பொருளும் இல்லாமையால், வேறு பொருள்களின் நினைப்பெல்லாம் அற்றுப்போக, நின்னையே நினைந்தும் நின்றேன். அனைத்தினும் போய்ப் போய்க் கலந்தும், அனைத்தினும் நுட்பமாய் அணுவாகித் தேய்ந்து தேய்ந்தும், ஒரு பொருளே யாகி நின்றும், விளங்குகின்ற, திருப் பெருந்துறையிடத்தே வீற்றிருக்கின்ற, சிவபெருமானே! நீயோ, ஒரு பொருள் எனக் குறித்தற்கும் அல்லை! நீயன்றி ஒரு பொருள் என்பதுவும் இருக்குமாறு இல்லை! இங்ஙனமாயின், நின்னை அறிவதற்கு வல்லவர்தாம் யாவரோ? ['இறைவனே! சுட்டி அறியப்*

படாதும், ஆயின் அனைத்தினும் நுட்பமாய்க் கலந்தும் விளங்குகின்ற நின்னைத், தம் அறிவொன்றின் துணையினால் மட்டுமே அறிபவர் யார்? ஆதலால், நீயே நின்னை எனக்கு அறியக் காட்டிக் கருணை பாலித்தல் வேண்டும்' என்பது கருத்து.]

பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதேல் அரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை எழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஆருற வெனக்கிங் காரய லுள்ளார்
ஆனந்தம் ஆக்குமென் சோதி. 8

பூமண்டலமும், அதற்கு மேலுள்ளவாகிய பதங்களும், பிற அண்டங்களும், ஆகிய அனைத்துமாகித் தோன்றி, எங்கணும் வியாபித்ததாகிய, ஒப்பற்ற பரந்த ஒளிப்பரப்பே! நீரிடத்தே பொருந்தியுள்ள நெருப்பினைப் போன்றவனே! நினைவதாயின், அந் நினைப்பிற்கும் அருமையாகி விளங்கும் நின்மலனே! நின் கருணைப்பெருக்கின் சீர்மை அமைந்த மெய்யன்பரது மனத்திலே உண்டானதாகிய, ஒப்பற்ற தேனினைப் போன்றவனே! திருப் பெருந்துறையிடத்தே வீற்றிருக்கும் சிவபெருமானே! இவ்விடத்து எனக்கு உறவினர் தாம் யாவரோ? எனக்கு அயலவராக உள்ளவர்தாம் யாவரோ? இன்பத்தை உண்டாக்குகின்ற சோதியே! இதனைச் சொல்லியருள்வாயாக! ['எனக்கு உறவும் அயலுள்ளாரும் நீயேயன்றிப் பிறரில்லை' என்பது கருத்து. பதம்-பதவிகள். அண்டம்-பல்வேறு உலகங்கள்.]

சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்
ஒருவனே சொல்லுதற் கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்கும்ஆ னந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் இணையடி தந்தே. 9

சோதியாகத் தோன்றுகின்ற உருவத் திருமேனியினை உடையவனே! அருவமாகின்ற ஒப்பற்ற பெருமானே! சொல்லுதற்கும் அரிதாகிய பெருமையுடைய முதலே! நடுவே! முடிவே! பிறவிக்கட்டினை அறுத்தருளுகின்ற பேரானந்தக்

*கடலே! தீதில்லாத நன்மையினை உடைய, திருவருள் மலையே! திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவபிரானே! எழுந்தருளி வந்து, நின் இரண்டு திருப்பாதங்களையும் தந்து, விட்டு, நீ போவதாகிய அந்த ஒரு வகைதான் யாதோ? அதனை யாதென எனக்குச் சொல்வாயாக! ['பெருமானே! நின் திருவடிகளைத் தந்தருளிய பின்னரும், என்னைவிட்டுப் பிரிந்துபோயின நின் தகைமைதான் யாதோ?' என்பது கருத்து.]*

**தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்**
**சங்கரா ஆர்கொலோ சதுரர்**
**அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்**
**யாதுநீ பெற்றதொன் றென்பால்**
**சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்**
**திருப்பெருந் துறையுறை சிவனே**
**எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்**
**யான்இதற் கிலன்ஓர்கைம் மாறே.** 10

*உன்னை எனக்குத் தந்தருளி, அதற்கு ஈடாக என்னை ஏற்றுக்கொண்டனை! சங்கரனே! இந்தப் பரிமாற்றத்திலே நம்மிருவருள் சதுரப்பாடு உடையவர்தாம் யாவரோ? யான் நின்னை அடைந்ததனால் முடிவில்லாத பேரானந்தத்தினைப் பெற்றேன். நீ என்னை அடைந்ததனால் பெற்றதுதான் யாது? யாதும் இல்லையே? என் சிந்தையினையே நீ உறைகின்ற ஒரு கோயிலாக ஆக்கிக்கொண்ட எம்பெருமானே! திருப்பெருந்துறையுள் வீற்றிருக்கும் சிவனே! எந்தையே! ஈசனே! என் உடலினையே நீ வாழும் இடமாகக் கொண்டுவிட்ட நினக்கு, யான் எத்தகைய கைம்மாறும் செய்வதற்கும் இயலேனே! ['என்னுட் புகுந்து உயிர்க்குஉயிராகிக் கலந்த நினக்கு யான் என்ன கைம்மாறு செய்வேன்?' என்பது கருத்து.]*

# 23. செத்திலாப் பத்து

## சிவானந்தம் அளவறுக் கொணுமை

(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[சிவபெருமான், மணிவாசக அடிகட்குத், திருப்பெருந் துறையிலே குருபரனுக எழுந்தருளி அருள்பாலித்ததும், தம் உள்ளத்தே சிவானந்தவெள்ளம் ஊறிப் பெருக்கெடுக்க நின்ற அடிகள், அந்த ஆனந்தம் அளவுகடந்ததாக விளங்கிய அநுப வத்தை, இச் செய்யுட்களால் உரைத்துப் போற்று கின்றனர்.]*

பொய்யனேன் அகம்நெகப் புகுந்தமு தூறும்
புதும லர்க்கழ லிணையடி பிரிந்தும்
கையனேன் இன்னுஞ் செத்திலேன் அந்தோ
விழித்திருந் துள்ளக் கருத்தினை இழந்தேன்
ஐயனே அரசே அருட்பெருங் கடலே
அத்தனே அயன் மாற்கறி யொண்ணுச்
செய்யமே னியனே செய்வகை அறியேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 1

*என் ஐயனே! மன்னனே! அருளாகிய பெருங்கடலே! பிரமனும், திருமாலும் தேடியும் காணமுடியாததாக விளங் கிய சிவந்த திருமேனியனே! திருப் பெருந்துறையிலே எழுந் தருளிவந்த சிவபிரானே! பொய்யனேனுகிய எனது உள்ளம் நெகிழ்வுறுமாறு, அமுதூறுகின்ற புதுமலர்கள் போன்ற வான, கழல்கள் விளங்கும் நின் இணையடிகள் என்னுட் புகுந் தன! இப்போதோ, அவற்றைப் பிரிந்தும், சிறுமையாள னுகிய யான், இன்னமும் சாவாதே இருக்கின்றேனே? அந்தோ! விழித்துக்கொண்டிருக்கும் போதிலேயே, என் உள் ளத்தே கருத்தினை இழந்தவனுகியும் யான் நின்றேனே! ['இனி, யான் உய்யும் வகைதான் யாதோ?' என்பது முறை யீடு. பெருமான் வந்தருளிய அன்றே, தாம் அவனடிகளை முற்றவும் சாராது போயினதனை நினைந்து, அடிகள், இங் ஙனம் மனநொந்து உரைக்கின்றனர். கையனேன் —சிறுமை யேன்; சிறுமை என்பது சிற்றறிவும் சிறு தொழிலும். 'உள்ளக் கருத்து' ஆவது, பிறவித்துயரினின்றும் நீக்கம் பெறுதலாகிய நினைவு.]*

புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டி யாய்அண்ட வாணரும் பிறரும்
வற்றி யாரும்நின் மலரடி காணு
மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றி னுய் பதையேன் மனமிக உருகேன்
பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச்
செற்றி லேன்இன்னுந் திரிதரு கின்றேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 2

திருப் பெருந்துறையிடத்தே எழுந்தருளிய சிவபெருமானே! புற்றுககளால் மூடப்பெற்றவர்களாகவும், அவ்விடத்து மரங்கள் முளைத்தெழப் பெற்றவர்களாகவும், நீரையும் காற்றையுமே உண்பவர்களாகவும், விண்ணுலகத்தோர்களும் பிறரும் உடலிளைப்புற்று நின்று, நின்னடிகளைக் காணுதலை வேண்டித் தவம்புரிந்தும், அவர்களாலும் கண்டறியப் படாதனவாக நின் மலரடிகள் விளங்குவனவாயின! மன்னவனே! அத்தகைய பெருமையுடைய நீ, ஒரு வார்த்தையால் என்னையும் நின் அடியவர் கூட்டத்தே உட்படுத்தியவனாகப் பற்றிக்கொண்டனை! அந்த வாய்ப்பினைப் பெற்றபோதும், யான், நின்னையடையும் பொருட்டாகப் பதைத்தும், மனம் உருகியும், வருந்தமாட்டேனாக இருந்தேன்! தாங்க வொண்ணாத இந்த உடலினை வாட்டுதலையும் செய்திலேன்! இன்னமும், அதனைச் சுமந்தே திரிகின்றேனே! ['இறைவனே! நீயே கருணைகொண்டு எழுந்தருளிவந்து என்னை ஆட்கொண்டும், யான், அதனை ஏற்று, என் உயிரை விடுத்து, நின்பாற் சேர்ந்திலேனே?' என்பது முறையீடு. 'ஒரு சொல்' என்றது, பிரணவத்தை. 'மரமாய்' என்பதற்கு, 'உணர்வும் ஒடுங்கி நின்றபடி' எனவும் பொருள் கொள்வார்கள்.]

புலைய னேனையும் பொருளென நினைந்துன்
அருள்பு ரிந்தனை புரிதலுங் களித்துத்
தலையி னால்நடந் தேன்விடைப் பாகா
சங்கரா எண்ணில் வானவர்க் கெல்லாம்
நிலைய னேஅலை நீர்விட முண்ட
நித்த னேஅடை யார்புர மெரித்த
சிலைய னேயெனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 3

இடபத்தை ஊர்தியாக உடையவனே! சங்கரனே! எண்ணற்ற வானவர்களுக் கெல்லாம் ஆதாரமாக இருப்பவனே! கடலிடத்தே தோன்றிய நஞ்சினை, அந்நாளிலே உண்டருளிய அழியாத் தன்மையனே! பகைவர்களது முப்புரங்களையும்

*எரித்து நீறுக்கின வில்லினை உடையவனே! புலையனுகிய என்னையும் ஒருபொருளாக மதித்து, நின்னுடைய திருவருளினைத் தந்தருளினை! அங்ஙனம் நீ அருள்புரிந்ததும், அதனுற் களிப்புற்று, நான் தலையினுல் நடந்தேன்! என்னைச், செத்திட நீ அருளாயோ? [தலையினுல் நடத்தல்-முறையற்றுத் தலைகீழாக நடத்தல். நிலை-ஆதாரம். பணித்தல்-செய்வித்தல். 'நின் அருள்பெற்ற யான் அதற்கேற்ப நடவாது, அதற்கு மாருகவே நடந்தேனே!' என்பது கருத்து. 'என்னை, இப்போதேனும் செத்து நின்னடியினைச் சார்ந்திருத்தற்கு அருளாயோ?' என்பது முறையீடு.]*

அன்ப ராகிமற் றருந்தவம் முயல்வார்
அயனும் மாலுமற் றழலுறு மெழுகாம்
என்ப ராய்நினை வார்எ னைப்பலர்
நிற்க இங்கெனை எற்றினுக் காண்டாய்
வன்ப ராய்முரு டொக்கும்என் சிந்தை
மரக்கண் என்செவி இரும்பினும் வலிது
தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 4

*அழகிய திருப் பராய்த்துறையினை உடையவனே! சிவலோகனே! திருப் பெருந்துறையில் வீற்றிருப்பவனே! பிரமனும், திருமாலும், நின்பாற் பேரன்புடையவர்களாகி, நின்னருளைப் பெறுதலையும் விரும்பி, நெருப்பினைச் சேர்ந்த மெழுகினைப்போல உருகாநின்ற என்பினை உடையவர்களாகி, நின்னையே நினைவிற்கொண்டு, அருந்தவம் செய்கின்ருர்கள்! அவர்களன்றி, ஏனையராகிய விண்ணவர் பலரும், அவ்வாறே நின்னை வேண்டி நிற்கின்றனர். இருக்கவும், இவ்விடத்தே, என்னையும் வந்து எதற்காகவோ நீ ஆட்கொண்டனை? என் மனமோ, வலிய பராய்க்கட்டையினைப் போல்வதாகும்! என் கண்களோ, மரத்தைப் போல்வனவாகும்! என் செவிகளோ, இரும்பினைக்காட்டிலும் வலியனவாகும்! ['நின்னை அடைவதற்கு விரும்பி முயல்கின்ற அன்பர் பலரும் நிற்க, என்னையும் வந்து நீ ஆட்கொண்ட நின் கருணைக்கு ஏற்றவாறு, நான் நடந்திலேனே? என்னைப் பொறுத்தருள்க!' என்பது கருத்து. முருடு-கட்டை. பராய்-ஒருவகை வலியமரம்.]*

ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐய னேஎன் றுன் அருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே
நாத னேஉனைப் பிரிவறு அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்

காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தந் தேவர்பி ரானே
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 5

பெருமையும் அழகுமுள்ள தேவர்களுக்கும், பெருமானாக இருப்பவனே! திருப் பெருந்துறையிலே எழுந்தருளிய சிவ பிரானே! என்னை ஆட்டுவிக்கும் பிறதேவர்களுடைய நியமிப்புக்களை எல்லாம் ஒழித்து, அன்பினாலே, 'ஐயனே!' என்று வேண்டி. நின்னுடைய அருளின்வழியினையே யான் மேற்கொண்டு இருப்பேன்! எவ்வுலகத்தவரான தேவர்களும், தேடுவதற்கு அரிதாகிய பொருளாக விளங்குகின்ற, மெய்ப் பொருளே! நாதனே! நின்னைப் பிரியாமைக்கு ஏதுவாகிய அருளினைக் காட்டுவாயாக! தேவனே! அதனைக் காட்டி, நின் கழலிணைகளையும் காட்டி, என் உடற்கட்டாகிய இந்தப் பொய்யினையும் நீக்கி, எனக்கும் அருள்செய்யாயோ? [சேட்டைத் தேவர்-சேடு ஐ தேவர்-பெருமையும் அழகும் உடைய தேவர். ஆட்டுத் தேவர்-உயிர்களை ஆட்டுவிக்கும் தேவர்கள். நாட்டுத் தேவர்-பிறபிற உலகங்களினும் உள்ள தேவர்கள். 'தம் உடற்கட்டினை நீக்கியருளுமாறு இறைவனை அடிகள் வேண்டுவது' இது.]

அறுக்கி லேன்உடல் துணிபடத் தீப்புக்
கார்கி லேன்திரு வருள்வகை யறியேன்
பொறுக்கி லேன்உடல் போக்கிடங் காணேன்
போற்றி போற்றியென் போர்விடைப் பாகா
இறக்கி லேன்உனைப் பிரிந்தினி திருக்க
என்செய் கேன்இது செய்கஎன் றருளாய்
சிறைக்க ணேபுனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 6

கரைகட்டிய இடங்களிலே எல்லாம், நீரானது நிலைபெற்றிருக்கின்ற வயல்களாற் சூழப்பெற்றுள்ள, திருப் பெருந்துறையிலே எழுந்தருளிவந்த, சிவபெருமானே! உடலானது துண்டு துண்டாகப் போகும்படி, அதனை அறுத்துச் சிதைக்கவும் யான் மாட்டேன். தீயினிடத்தே புகுந்து சாம்பராகி, அதனிடத்துத் தங்குதலையும் யான் செய்யமாட்டேன். எனினும், உடலினைத் தாங்கமாட்டாதும் யான் வருந்துகின்றேன். நின் திருவருள் வகைதான் யாதென்பதனையும் யான் அறியேன். வேறொரு போக்கிடத்தையும் யான் அறியேன்! 'போற்றி போற்றி!' போர்த்தொழிலில் சிறந்த இடபத்தை ஊர்தியாக உடையவனே! செத்தொழியாத யான், நின்னைப் பிரிந்து இனிதாக இருப்பதற்கு, எதனைத்தான் இனிச் செய்

வேனோ? 'இது செய்க' என்று நீயே அதனையும் எனக்கு அருளிச்செய்வாயாக! ['நின்னைப் பிரிந்து இருக்கமுடியாத எனக்குப்,பிரிந்திருப்பதுதான் முறையென நீ கருதினையானால், பிரிந்தும் இனிதாக இருப்பதற்குச் செய்வதற்கான ஒன்றினை யேனும் உரைப்பாயாக' என்பது கருத்து.]

மாய னேமறி கடல்விடம் உண்ட
வான வாமணி கண்டத்தெம் அமுதே
நாயி னேன்உனை நினையவும் மாட்டேன்
நமச்சி வாயஎன் றுன்னடி பணியாப்
பேயன் ஆகிலும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய ளுகிநின் றலறுவ தழகோ
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 7

மாயத்தை உடையவனே! அலைகள் மடங்கி வீழ்கின்ற கடலிடத்தே உண்டான நஞ்சினை, அந்நாளிலே உண்டருளிய வானவனே! நீலமணி போன்ற கழுத்தினையுடைய எம் அமுதனே! நாயினேன் நின்னை நினைக்கவும் மாட்டேன். 'நமச்சிவாய' என்று சொல்லி, நின் திருவடிகளைப் பணியாத பேய்த்தன்மை உடையவனும் ஆவேன். ஆயினும், எனக்கும் நின் பெருநெறியினைக் காட்டி அருளாயோ? பிறை விளங்கு கின்ற சடையினை உடைய தலைக்கோலப் பெருமானே! திருப் பெருந்துறையிலே எழுந்தருளிய சிவபிரானே! யான், இனி யும் நினக்குத் தொலைவினனாகி நின்று அலறுவது, நின் கருணைக்குத்தான் அழகாகுமோ? ['யான் நின்னடிகளை அடை தற்குத் தகுதியுடையவன் அல்லனாயினும், என்னைக் கைவிடாது காத்தருளல் வேண்டும்' என்பது கருத்து. மணி- நீலமணி. 'பெருநெறி' என்றது, முத்தியினை.]

போது சேரயன் பொருகடற் கிடந்தோன்
புரந்த ராதிகள் நிற்கமற் றென்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
குறிக்கொள் கென்றுநின் தொண்டரிற் கூட்டாய்
யாது செய்வதென் றிருந்தனன் மருந்தே
அடிய னேன்இடர்ப் படுவதும் இனிதோ
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 8

குளிர்ச்சியினைக் கொண்டதான பெருநீர் நிலைபெற்ற வயல்கள் சூழவிருக்கின்ற, திருப் பெருந்துறையிலே எழுந் தருளிய, சிவபிரானே! தாமரை மலரிடத்தே வீற்றிருக்கின்ற வனாகிய பிரமனும், அலைமோதும் கடலினிடையே துயில்வோ

ஞன திருமாலும், மற்றும் இந்திரன் முதலாகிய தேவர் தலைவர்களும், நின் அருளுக்காகக் காத்திருக்கவும், ஒன்றுக்கும் பற்றாத என்னைச் சீராட்டி, நின் ஒலிக்கும் கழல்களணிந்த திருவடிகளையும் காட்டி, 'அந்தக் குறிப்பிலேயே குறிக்கொண்டு நிற்பாயாக!' வென்று பணித்து, நின் தொண்டரோடு என்னையும் சேர்த்துக் கொள்வாயாக! அமுதமே! இனி யாது செய்வதென்று அறியாது, யான் கவலையுற்று இருந்தேன். நின் அடியவனாகிய யான், அவ்வாறு இடர்ப்படுதல் நினக்கே இனிதாகுமோ? ['யான் துன்பப்பட்டு உழல்வது நினக்கே இனிதாகுமோ? அதனால், எனக்கு அருள்வாயாக' என்பது கருத்து. குறிக்கொள்ளல்-உறுதியாகப் பற்றி நிற்றல்.]

ஞாலம் இந்திரன் நான்முகன் வானவர்
நிற்க மற்றெனை நயந்தினி தாண்டாய்
காலன் ஆர்உயிர் கொண்டபூங் கழலாய்
கங்கை யாய்அங்கி தங்கிய கையாய்
மாலும் ஓலமிட் டலறும்அம் மலர்க்கே
மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்
சேலும் நீலமும் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 9

கயல்மீன்களும் நீலமலர்களும் பொருந்தியிருக்கின்ற, வயல்களாற் சூழப்பெற்ற, திருப் பெருந்துறையிலே எழுந்தருளிய சிவபெருமானே! உலகத்தாரும், இந்திரனும், பிரமனும், மற்றைய தேவர்களும் இருக்கவும், என்னை விரும்பி வந்து அந்நாளிலே இனிதாக நீயும் ஆண்டருளினை! காலனது அரிய உயிரினைக் கவர்ந்த திருவடியை உடையவனே! கங்கையைச் சடையிடத்தே கொண்டிருப்பவனே! திருமாலும் ஓலமிட்டு அலறுநிற்கின்ற, அந்த நின் திருவடி மலர்களுக்கே, மரக்கண்ணனாகிய என்னையும் வந்தடையுமாறு நீ பணித்தருள்வாயாக! ['பெருமானே! திருமாலும் காணப்பெறாது ஓலமிட்டு அழைத்துக், காட்டியருள வேண்டி நிற்கும், சிறப்புடைய நின் திருவடிகட்கு, என்னையும் அடிமையாகச் செய்தருள்க' என்பது கருத்து.]

அளித்து வந்தெனக் காவஎன் றருளி
அச்சந் தீர்த்தநின் அருட்பெருங் கடலில்
திளைத்துந் தேக்கியும் பருகியும் உருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவன் அறியா

வான வாமலை மாதொரு பாகா
களிப்பெ லாம்மிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே. 10

*திருப் பெருந்துறையிலே எழுந்தருளிய சிவபிரானே! 'பாஞ்ச சன்னியம்' என்னும் சங்கினைத் தரித்த கையினனான திருமாலோடு, பிரமனும் அறியவொண்ணாத பெரியோனே! மலைமாதினை நின் ஒரு பாகத்தே உடையவனே! 'கயிலை' என்னும் பெருமலையிடத்தே வீற்றிருக்கின்ற கருணைக்கடலே! எனக்குக் கிருபைசெய்து வந்து, எனக்கு 'ஐயோ'வென்று இரங்கியும் அந்நாளில் அருளினாய்! என் பிறவியச்சைத் தவிர்த்த, நின் அருளாகிய அந்தப் பெருங்கடலிற் குளித்தும், அதனிடத்துத் தேக்கியும், அதனைப் பருகியும், நான் உருக மாட்டாதவனாய் அப்போது நின்றேனே! யான் கொண்ட களிப்பெல்லாம் துன்பமாகிப் பெருக, இப்போது மிகவும் கலங்கியுள்ளேனே! ['என்னை, மீளவும் வந்தருளிக் காத்து ஆட்கொள்வாயாக' என்பது கருத்து. தேக்குதல்-தேக்கெறிதல்; நிறைந்து போதல்; திகட்டுதல். திளைத்தல்-மூழ்கித் திளைத்தல்.]*

# 24. அடைக்கலப் பத்து

## பக்குவ நிண்ணயம்

(கலவைப் பாட்டு)

*[இறைவனின் திருவடிகட்கே தம்மை அடைக்கலப் பொருளாக ஒப்புவித்தவராக, அடிகள் செய்தருளிய திருப் பாட்டுக்கள் இவை. இவற்றினைத் திருப் பெருந்துறைக்கண் அடிகள் செய்தருளியதாகக் கொள்வர்.]*

**செழுக்கமலத் திரளனநின் சேவடி சேர்ந்தமைந்த**
**பழுத்தமனத் தடியருடன் போயினர் யான் பாவியேன்**
**புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா**
**அழுக்குமனத் தடியேன் உடையாய் உன் அடைக்கலமே. 1**

*என்னை ஆளாக உடையவனே! செழுமையான தாமரை மலர்த்திரளைப் போன்ற, நின்னுடைய செவ்விய திருவடிகளை அடைந்து, அமைவுபெற்ற கனிந்த மனத்தினை உடையவரான அடியவர்கள் எல்லாரும், நின்னோடும் முத்தியுலகிடத்தே அந்நாளிற் சென்றனர். யானோ பாவியேன்! புழுக்கள் தமக்குரிய வாழிடமாகக் கொண்டுள்ள, இந்தப் புன்மையான உடற்கூட்டினையும், தீமையான கல்வியினையும், ஞானம் இல்லாத அழுக்கு மனத்தினையும் உடையவன்! யானும் நினக்கு ஓர் அடைக்கலமே! ['நின் மெய்யடியார் போலாத யானும், நினக்கு அடைக்கலமாவேன்! என்னையும் காத்தருள்க' என்பது கருத்து.]*

**வெறுப்பன வேசெய்யும் என்சிறு மையைநின் பெருமையினாற்**
**பொறுப்பவ னேஅராப் பூண்பவ னேபொங்கு கங்கைசடைச்**
**செறுப்பவ னேநின் திருவரு ளால்என் பிறவியைவேர்**
**அறுப்பவ னேஉடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 2**

*என்னை ஆளாக உடையவனே! வெறுக்கத்தக்க செயல்களையே செய்கின்ற என்னுடைய சிறுமையினை, நின்னுடைய பெருமைகாரணமாகப் பொறுத்தருள்கின்றவனே! பாம்புகளைப் பூண்பவனே! பெருகிவந்த கங்கையாற்றினைச் சடையிடத்தே தரித்து அடக்கினவனே! நின் திருவருளினாலே, என் பிறவித் தளையினை வேரோடும் சேதிப்பவனே! யானும்*

*நினக்கு ஓர் அடைக்கலப் பொருளே! ['என்னையும் கைவிடாது காத்தருள்க' என்பது கருத்து.]*

பெரும்பெரு மான்என் பிறவியை வேரறுத்துப் பெரும்பிச்சுத்
தரும்பெரு மான்சது ரப்பெருமான்என் மனத்தி னுள்ளே
வரும்பெரு மான்மல ரோன்நெடு மாலறி யாமல்நின்ற
அரும்பெரு மான்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 3

*என்னை அடிமையாக உடையவனே! அனைத்துக் கடவுளருக்கும் பெரியவனான பெருமானே! என் பிறவியினை வேரோடும் அறுத்து, எனக்குப் பெரிதான பித்தினைத் தருகின்ற பெருமானே! சதுரப் பாட்டினை உடைய பெருமானே! என் மனத்தினுள்ளாக வந்தருளும் பெருமானே! பிரமனும் நெடுமாலும் அறியாமல் நின்றருளிய, அறிதற்கரிய பெருமானே! யானும் நினது அடைக்கலமே! [பிச்சு-பித்து, சதுர்-சதுரப்பாடு; சாதுரியம்.]*

பொழிகின்ற துன்பப் புயல்வெள் ளத்தில்நின் கழற்புணைகொண்
டிழிகின்ற அன்பர்கள் ஏறினர் வான்யான் இடர்க்கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக் காமச் சுறவெறிய
அழிகின்ற னன்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 4

*உடையவனே! சொரிகின்ற துன்பமாகிய பெருவெள்ளத்திலே, நின் திருவடிகளாகிய தெப்பத்தைத் துணைகொண்டு, நின்னோடும் இறங்கிவந்து, நினது அன்பர்கள் அனைவரும், மேலுலகத்திற்கு ஏறிச் சென்றுவிட்டனர்! யானோவென்றால், துன்பக்கடலிடத்தே, சுழியிலகப்பட்டு, மாதராகிய திரைகள் மோதவும், காமமாகிய சுறாமீன் தாக்கியழிக்கவும், அழிந்து போகின்றேன். அத்தகைய அடியவனாகிய யானும், நின் அடைக்கலமே! [எனக்கும் அருள்வாயாக!]*

சுருள்புரி கூழையர் சூழலிற் பட்டுன் திறம்மறந்திங்கு
இருள்புரி யாக்கையி லேகிடந் தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மான்அன்ன நோக்கிதன் பங்கவிண் ணோர்பெருமான்
அருள்புரி யாய்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 5

*அஞ்சனம் தோய்ந்த விசாலமான கண்களையும், அச்சத்தைக் காட்டுகின்ற மான்போன்ற பார்வையினையும் உடைய, உமையம்மையினை, நின் ஒருபாகத்தே கொண்டிருப்பவனே! சுருளாகச் செய்யப்பெற்ற கூந்தலை உடையவரான மாதரது சூழ்ச்சியிலே அகப்பட்டு, நின் திறத்தினை மறந்து, இவ்வுலகிலே அஞ்ஞான இருளினை வளர்க்கின்றதான உடம்பிலே கட்டுண்டு கிடந்து, யானும் இளைத்துப்போயினேன்! யானும் நினக்கு அடைக்கலமே! [எனக்கும் அருள்வாயாக!]*

மாழையைப் பாவிய கண்ணியர் வன்மத் திடவுடைந்து
தாழியைப் பாவு தயிர்போல் தளர்ந்தேன் தடமலர்த்தாள்
வாழியெப் போதுவந் தெந்நாள் வணங்குவன் வல்வினையேன்
ஆழியப் பாவுடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 6

கருணைக் கடலாகிய என் அப்பனே! என்னை ஆளாக உடையவனே! மாவடுவின் பிளவைப் போன்றவும், மை பரவியுள்ளவுமான கண்களையுடைய பெண்களிடத்தே, வலிய மத்திட்டுக் கடைதலாற் சிதறுண்டு மிடாவிலே பரவிச் சுழல்கின்ற தயிர்த் துளிகளைப்போல, யானும் சிதறுண்டு மனம் தளர்ந்தேன். பெருமையுள்ள தாமரை மலரைப் போன்றவான நின் திருவடிமலர்களை, எப்போது வந்து, எந்நாளிலே, யானும் வணங்குவேனோ? யானும் நினக்கோர் அடைக்கலமே! [எனக்கும் அருள் புரிவாயாக!]

மின்கணி ஞர்நுடங்கும் இடையார் வெகுளிவலையில் அகப்பட்டுப்
புன்கண னாய்ப்புரள் வேனைப் புரளாமற் புகுந்தருளி
என்கணி லேஅமு தூறித்தித் தித்தென் பிழைக்கிரங்கும்
அங்கண னேஉடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 7

உடையவனே! மின்னுகின்ற கண்களை உடையவரும், துவளுகின்ற இடையினை உடையவருமாகிய மாதரது, சினமாகிய வலையினிடத்தே சிக்கிக்கொண்டு, துன்பத்தை உடையவனாகி, யானும் பெரிதும் உழல்கின்றேன். அங்ஙனம் சிக்குண்டு யான் உழலாவண்ணம், என்னுள்ளத்தே புகுந்தருளி, அமுதமாகச் சுரந்து, தித்தித்து, என் பிழைக்கு இரங்கியருளுகின்ற. அழகிய கிருபையாகிய கண்ணோட்டத்தினை உடையவனே! யானும் நினக்கோர் அடைக்கலமே!

மாவடு வகிரன்ன கண்ணிபங் கானின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேயிடு வாய்நின் குறிப்பறியேன்
பாவிடை யாடு குழல்போற் கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடு வேன்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 8

உடையவனே! மாவடுவின் பிளவினைப் போன்ற கண்களையுடைய உமையம்மையினை ஒருபாகத்தே கொண்டவனே! நின் மலரடிகளிடத்தேயே என்னையும் கூவி அழைத்துக் கொள்வாயாக! அல்லது, நரகத்திற்கே என்னையும் ஆளாக்குவாயாக! நின் குறிப்பு யாதென யான் அறியேன். பாவினிடத்தே ஆடுகின்ற குழலைப்போல, என் உள்ளமானது உலகப் பற்றுக்களிலே மறைந்து திரிவதாயிற்றே! ஐயோ! யான் கெட்டே போவேனே! நினக்கே, யானும் ஓர் அடைக்கலம்! ['என்னைக் கெட்டுப்போமாறு விடாது காப்பாயாக' என்பது கருத்து.]

பிறிவறி யாஅன்பர் நின்அருட் பெய்கழல் தாளிணைக்கீழ்
மறிவறி யாச்செல்வம் வந்துபெற் றார்உன்னை வந்திப்பதோர்
நெறியறி யேன்நின்னை யேஅறி யேன்நின்னை யேஅறியும்
அறிவறி யேன்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே. 9

*உடையவனே! நின்னைப் பிரிவதனை அறியாத அன்பர்கள் நின் அருளுருவாகிய கழல் அணிந்த திருவடியிணைகளின் கீழாக வந்தடைந்து, தடைப்படுதல் என்பதில்லாத நிலையான முத்திச்செல்வத்தினையும் பெற்றார்கள். யான், நின்னைப் புகழ்தலாகிய ஒரு வகையினையும் அறியாதவனாக நிற்கின்றேன்! நின்னையே முற்றமும் அறியமாட்டாதும் போயினேன்! நின்னை அறிகின்ற மெய்யறிவினையும் தெரிந்திலேன்! யானும் நினக்கு ஓர் அடைக்கலமே! ['என்னையும் காத்தருள்வாயாக' என்பது கருத்து.]*

வழங்குகின் றாய்க்குன் அருளார் அமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை யேன்என் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேன்உடை யாய்அடி யேன்உன் அடைக்கலமே! 10

*உடையவனே! நின் அருளாகிய அரிய அமுதத்தினை வழங்குகின்ற உனக்கு, இசைய, அதனை வாரி உட்கொண்டு விழுங்குகின்றபோது, எனக்கு அதற்கான நல்லூழ் இல்லாததனால், தொண்டையில் விக்குகின்ற தன்மையினனும் யான் ஆயினேன். ஒலிக்கின்ற அரிய தேனையொத்த தண்ணீரைப் பருகுதற்குக் கொடுத்து, என்னையும் பிழைக்கச்செய்து, ஆட்கொண்டு அருளாயோ? அதனை நினைந்து வருந்துகின்ற யானும், நினக்கோர் அடைக்கலமே! ['அதனால், என்னையும் கைவிட்டு விடாதே காத்து அருளுவாயாக' என்பது கருத்து.]*

# 25. ஆசைப் பத்து

## ஆத்தும இலக்கணம்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[திருப் பெருந்துறையிலே, தம்மை வந்து ஆட்கொண்டருளிய சிவபெருமானை விளித்து, அடிகள், தமது ஆசையினை வெளியிடுவதாக அமைந்த பாடல்கள் இவை. ஆத்தும இலக்கணத்தை உரைப்பது இதன் பொருண்மை.]*

**கருடக் கொடியோன் காண மாட்டாக் கழற்சே வடியென்னும்**
**பொருளைத் தந்திங் கென்னை யாண்ட பொல்லா மணியேயோ**
**இருளைத் துரந்திட் டிங்கே வாவென் றங்கே கூவும்**
**அருளைப் பெறுவான் ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே.** 1

*'கருடக் கொடியோனை திருமாலும் காணவொண்ணாத, கழலணிந்த திருவடிகள்' என்னும், அரிய செல்வத்தைக் கொடுத்து, இவ்விடத்தே, என்னையும் ஆட்கொண்டருளிய தொளைபடாத மாணிக்கமே! 'நின் அறியாமை இருளினைக் கைவிட்டு இங்கே வருவாயாக' என்று கூவி, என்னை வீட்டு உலகிற்கு நீ அழைக்கின்றதான, அந்த அருளினைப் பெறுவதனையே நானும் விரும்பினேன். அம்மானே, இதனை அறிவாயாக! ['கண்டாய் என்பதனை முன்னிலை அசையாகவும் கொள்வார்கள். 'பொருள்' என்றது, அருட்செல்வத்தினை; அது, அதுவொன்றே நிலையான பொருள் ஆனதால்.]*

**மொய்ப்பால் நரம்பு கயிறாக மூளை என்பு தோல்போர்த்த**
**குப்பா யம்புக் கிருக்க கில்லேன் கூவிக் கொள்ளாய் கோவேயோ**
**எப்பா லவர்க்கும் அப்பா லாம்என் னாரமு தேயோ**
**அப்பா காண ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே.** 2

*நெருக்கத்தையுடைய நரம்புகளே கயிறுகளாகவும், மூளை எலும்பு தோல் என்னும் இவைகளைப் போர்த்த ஒரு சட்டையாகவும் கொண்டிருக்கும், இவ்வுடம்பினுள்ளே புகுந்து இருத்தற்கு, இனியும் யான் இயலாதவன் ஆவேன்! என்னைக் கூவியழைத்து நீ ஆட்கொள்வாயாக! இறைவனே! எப்பாலவர்க்கும் அப்பாலாகிய என் அரிய அமுதனே! அப்பனே! யான் நின்னைக் காணவே ஆசைப்பட்டேன், அம்மானே! [குப்பாயம்-சட்டை. மொய்ப்பு-நெருக்கம்]*

சீவார்ந் தீமொய்த் தழுக்கொடு திரியுஞ் சிறுகுடி லிதுசிதையக்
கூவாய் கோவே கூத்தா காத்தாட் கொள்ளுங் குருமணியே
தேவா தேவர்க் கரியானே சிவனே சிறிதென் முகநோக்கி
ஆவா வென்ன ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 3

*கோமானே! கூத்தப் பெருமானே! அடியேனை ஆட்கொள்ளுகின்ற குருமணியே! சீயானது ஒழுகி, ஈக்கள் அதனிடத்தே மொய்க்க, அழுக்கோடும் திரிகின்ற சிறு குடிலாகிய இந்த உடலானது அழியும்படியாக, என்னை, நின்பாற் கூவி அழைத்துக் கொள்வாயாக! தேவனே! தேவர்க்கும் அரியவனே! சிவனே! சிறிதே என் முகத்தினை நோக்கி, 'ஐயோ' வென இரங்கியருளும் வண்ணம் யான் ஆசைப்பட்டேன், கண்டாய், அம்மானே!*

மிடைந்தெலும் பூத்தை மிக்கழுக் கூறல் வீறிலி நடைக்கூடம்
தொடர்ந்தெனை நலியத் துயருறு கின்றேன் சோத்தம் எம்
[பெருமானே
உடைந்துநைந் துருகி உன்னொளி நோக்கி உன்திரு மலர்ப்பாதம்
அடைந்துநின் றிடுவான் ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே. 4

*எம் பெருமானே! எலும்புகள் நெருங்கி, ஊத்தை மிகுந்து, அழுக்கும் ஊறி நிற்பதாகிச், சிறப்பற்ற இடமாயிருக்கும் இந்த நடைகூடமாகிய உடலானது, என்னைத் தொடர்ந்து வந்து வருத்துதலால், நானும் துயருறுகின்றேன். அதனை நீக்குமாறு வேண்டி, நினக்கே அஞ்சலி செய்வேன்! மனம் உடைந்து, நைந்து உருகப்பெற்று, நின் அருள் ஒளியினையே எதிர்நோக்கியும் நிற்பேன்! நினது மலர்ப் பாதங்களையே அடைந்து நிலைபெறுதற் பொருட்டும் யான் ஆசைப்படுகின்றேன், அம்மானே! ['என் ஆசையினை முற்றுவிப்பாயாக' என்பது கருத்து.]*

அளிபுண் ணகத்துப் புறந்தோல் மூடி அடியே னுடையாக்கை
புளியம் பழமொத் திருந்தேன் இருந்தும் விடையாய் பொடியாடீ
எளிவந் தென்னை ஆண்டு கொண்ட என்னா ரமுதேயோ
அளியேன் என்ன ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 5

*இடப ஊர்தியானே! திருநீறு அணிந்தவனே! உள்ளே கனிந்த புண்ணனது, புறத்தே தோலினால் மூடப்பெற்று இருப்பதுபோல விளங்கும், அடியேனுடைய சரீரத்துப், புளியம்பழத்தைப் போலவே யானும் பற்றற்று இருந்தேன், அங்ஙனம் இருந்தும், எனக்கு எளிதாகவே வந்தருளி, என்னையும் நீ ஆட்கொண்டு அருளினை! என் அரிய அமுதமே! அம்மானே! 'யான் நின் கிருபையினை உடையவன்' என்று*

*சொல்லும் வண்ணமே ஆசைப்பட்டேன்! ['அதனை நீ நிறை வேற்றுதல் வேண்டும்' என்பது கருத்து. அளிதல்-கனிதல்.]*

**எய்த்தேன் நாயேன் இனியிங் கிருக்க கில்லேன் இவ்வாழ்க்கை**
**வைத்தாய் வாங்காய் வானோர் அறியா மலர்ச்சே வடியானே**
**முத்தா உன்றன் முகவொளி நோக்கி முறுவல் நகைகாண**
**அத்தா சால ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 6**

*வானோரும் அறிய வியலாத, தாமரைமலரைப் போன்ற, செவ்விய பாதங்களை உடையவனே! நாயேன் இந்த உடலினைச் சுமந்து இளைத்துப் போய்விட்டேன். இனியும், இவ்வுலகிலே அதனோடுங் கூடியவனாக இருக்கவே மாட்டேன். இந்த வாழ்க்கையினை எனக்கு அமைத்து வைத்தாய். அமைத்த நீயே, அதனை நீக்கியும் அருள்வாயாக! முத்தனே! நின் முகக் காந்தியினை நோக்கி, அவ்விடத்து முறுவல்நகையினையும் காண்பதற்கே, அத்தா, அம்மானே, யானும் ஆசைப்படுகின்றேன்! [வாங்குதல்-வளைத்துக் கொள்ளல். முத்தன்-முத்திகு நாயகன். 'முகவொளி நோக்கி முறுவல் காண என்றது' பெருமானின் அருட்கண் நோக்கினை விரும்பிக் கூறியதாகும்.]*

**பாரோர் விண்ணோர் பரவி யேத்தும் பரனே பரஞ்சோதீ**
**வாராய் வாரா வுலகந் தந்து வந்தாட் கொள்வானே**
**பேரா யிரமும் பரவித் திரிந்தெம் பெருமான் எனஏத்த**
**ஆரா அமுதே ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 7**

*மண்ணுலகத்தவர்களும், விண்ணுலகத்தார்களும், வணங்கித் துதிக்கின்ற மேலோனே! பரஞ்சுடரே! வருவாயாக! மீட்டும் பிறவிக்கு வாராமையாகிய முத்தியுலகினை எனக்குத் தந்து, என்னை அடிமை கொள்பவனே! ஆரா அமுதே! அம்மானே! நின் திருநாமங்கள் ஆயிரத்தையும் சொல்லியவாறே எங்கணும் திரிந்து, 'எம்பெருமானே' என நின்னைத் துதித்திருக்கவே, யானும் ஆசைப்பட்டேன்! ['என் ஆசையானது நிறைவேற நீயே அருள்பாலிக்கவேண்டும்' என்பது கருத்து.]*

**கையால் தொழுதுன் கழற்சே வடிகள் கழுமத் தழுவிக்கொண்**
**டெய்யா தென்றன் தலைமேல் வைத்தெம் பெருமான்பெருமானென்**
**றையா என்றன் வாயா லரற்றி அழல்சேர் மெழுகொப்ப**
**ஐயாற் றரசே ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 8**

*திருவையாற்றுக்கு வேந்தனே! நின் கழலணிந்த சேவடிகளைக் கையாலே தொழுது போற்றியும், பொருந்தத் தழுவிக் கொண்டும், இளைக்காமல் என் தலைமேலாக வைத்தும், 'எம்பெருமானே பெருமான்!' என்றும், 'ஐயனே!' என்றும், என்*

வாயினால் அரற்றியவாறே, நெருப்பைச்சேர்ந்த மெழுகினைப் போல உருகிக் கசிவதற்கே யானும் ஆசைப்பட்டேன், அம்மானே! ['அந்த ஆசையினைத் தீர்ப்பாயாக' என்பது கருத்து. கழுமல்-பொருந்துதல். ஐயாறு-திருவையாறு.]

செடியா ராக்கைத் திறமற வீசிச் சிவபுர நகர்புக்குக்
கடியார் சோதி கண்டு கொண்டென் கண்ணிணை களிகூரப்
படிதா னில்லாப் பரம்பர னேஉன் பழஅடி யார்கூட்டம்
அடியேன் காண ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 9

ஒப்பற்ற மேலோனே! அம்மானே! குற்றம் நிறைந்த இந்த உடலின் தன்மையினை அறவே ஒழித்துவிட்டுச், சிவபுரத்தே புகுந்து, விளக்கம் நிறைந்த சோதிவடிவான நின்னைக் கண்டு, என் இருகண்களும் களிகொள்ளவும், நின் பழவடியார் கூட்டத்தைக் கண்டு, அவருடன் ஒன்றுபடவுமே நான் ஆசைப்பட்டேன்! [கடி-விளக்கம். படி-ஒப்பு. 'இறையாகிய நின்னைக் காணவும், நின்னடியவர் கூட்டத்தைக் காணவுமே விரும்பினேன்' என்பது கருத்து.]

வெஞ்சே லனைய கண்ணார்தம் வெகுளி வலையில் அகப்பட்டு
நைஞ்சேன் நாயேன் ஞானச் சுடரே நானோர் துணைகாணேன்
பஞ்சே ரடியாள் பாகத் தொருவா பவளத் திருவாயால்
அஞ்சேல் என்ன ஆசைப் பட்டேன் கண்டாய் அம்மானே. 10

செம்பஞ்சுக் குழம்பினை ஊட்டிய, அழகிய பாதங்களை உடையாளான உமாதேவியின் பாகத்தினையுடைய, ஒப்பற்றவனே! விருப்பந் தருகின்ற கெண்டைமீனைப் போன்ற, கண்களை உடையவராகிய மாதர்களது, சினமாகிய வலையிலே சிக்கி, நாயினேன் சிதைவுற்றுப் போயினேன்! ஞான சூரியனே! யான் ஒரு துணையினையும் காண்கிலேன். நின் பவளம்போன்ற திருவாயினாலே, 'அஞ்சேல்' என்று சொல்லி, என்னையும் ஏற்றருளுதற்கே விருப்பங்கொண்டேன்! ['என் விருப்பத்தை நிறைவேற்றி அருள்வாயாக' என்பது கருத்து. வெம்-விரும்பத்தக்க. சேல்-கெண்டைமீன்.]

# 26. அதிசயப் பத்து

## முத்தி இலக்கணம்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[இறைவன் திருப் பெருந்துறையிலே, குருமணியாக எழுந்தருளித், தம்மையும் ஆட்கொண்டு, அடியவர் கூட்டத் திற் சேர்த்துக்கொண்ட, அந்தக் கருணையினை வியந்து கூறி யன இச் செய்யுட்கள்.]*

வைப்பு மாடென்றும் மாணிக்கத் தொளியென்றும் மனத்திடை
[உருகாதே
செப்பு நேர்முலை மடவர லியர்தங்கள் திறத்திடை நைவேனை
ஒப்பி லாதன உவமனி லிறந்தன ஒண்மலர்த் திருப்பாதத்து
அப்பன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 1

*தேடிவைத்த செல்வமென்றும், மாணிக்கத்தின் ஒளி யென்றும், மனத்திலே நினைந்து உருகாமல், செப்பினை நிகர்த்த தனங்களையுடைய, மாதர்களது மாயத் திறத் திடையே சிக்கி வருந்துவேனை, ஒப்பற்றனவும், உவமைகடந்த னவும், ஒள்ளியவும், மலர்போன்றவுமாகிய திருவடிகளை யுடைய அப்பனாகிய சிவபெருமான் ஆட்கொண்டருளித், தன் அடியவர்களுள் ஒருவனாகச் சேர்த்துக்கொண்ட, அந்த அதிசயத்தையும் நாம் கண்டோமே! [வைப்பு-சேமிப்பு நிதி. மாடு-செல்வம். மாணிக்கம் என்றது, செம்மாணிக்கத்தை. 'இறைவனை நினையாமல் நின்ற எம்மையும் கருணையினாலே ஆட்கொண்டருளின அந்த அதிசயத்தைக் கண்டோம்' என்பது கருத்து.]*

நீதி யாவன யாவையும் நினைக்கிலேன் நினைப்பவ
[ரொடுங்கூடேன்
ஏத மேபிறந் திறந்துழல் வேன்தனை என்னடி யானென்று
பாதி மாதொடுங் கூடிய பரம்பரன் நிரந்தர மாய்நின்ற
ஆதி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 2

*நீதியாவன எவற்றையும் நினைக்கமாட்டேன்; அங்ஙனம் நினைப்பவரோடும் சேரமாட்டேன்; குற்ற வடிவாகவே பிறந் தும் இறந்தும் உழலாநிற்பேன். அத்தகையனாகிய என்னையும்*

'என் அடியவன் இவன்' என்று கருதினன். தன் மேனியிற் பாதி பெண்ணேடும் கூடியிருப்பவனுகிய சிவப் பரம் பொருளும், அழிவின்றி நிலைபெற்ற ஆதிமுதல்வனுமாகிய பெருமான், என்னை ஆட்கொண்டருளித், தன் அடியாரோடும் சேர்த்துக் கொண்டான். அந்த அதிசயத்தையும் யான் கண்டேனே! [நீதி-நியாயம். ஏதம்-குற்றம். 'ஏதமே பிறந்து இறந்து உழல்வேனையும் ஆண்டருளிய அதிசயத்தைக் கண்டோம்' என்பது கருத்து.

முன்னை என்னுடை வல்வினை போயிட முக்கண துடையெந்தை
தன்னை யாவரும் அறிவதற் கரியவன் எளியவன் அடியார்க்குப்
பொன்னை வென்றதோர் புரிசடை முடிதனில் இளமதி
[யதுவைத்த
அன்னை ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 3

முக்கண்களை உடையவனுகிய எம் அப்பன், தன்னை எவரும் அறிதற்கு அரியவனுக விளங்குபவனேனும், தன் அடியவர்கட்கு மிகவும் எளியவனுகவே இருப்பவன்! பொன்னையும் வெற்றிகொண்டதாகிய ஒளியமைந்ததும், ஒப்பற்றதும், கட்டப்பெற்றதுமான தன் சடைமுடிமீது, பிறையினைத் தரித்தவனும் அவன்! என் வலிய வினைகள் அகன்று போமாறு, அவன், என்னையும் வந்த ஆண்டருளித் தன் அடியவரோடுஞ் சேர்த்துக்கொண்ட அந்த அதிசயத்தையும் நாம் கண்டோமே! ['என் முன்னைவினை ஒழிய ஆண்டருளித் தன் அடியவரோடும் கூட்டிக்கொண்ட, அதிசயத்தைக் கண்டோமே!' என்பது கருத்து.]

பித்த னென்றெனை உலகவர் பகர்வதோர் காரணம் இதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் திருவருட் கூடிடும் உபாயம தறியாமே
செத்துப் போய்அரு நரகிடை வீழ்வதற் கொருப்படு கின்றேனை
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 4

உலகத்தார்கள், என்னைப், 'பித்துக்கொண்டவன் இவன்' என்று சொல்லுவதற்கான ஒரு காரணமாகிய இதனையும் கேட்பீராக: இணங்கிச்சென்று, தன் திருவருளை அடைகின்ற உபாயத்தினை அறியாமல், இறந்து, பொறுத்தற்கரிய நகரத்திடையே வீழ்வதற்கே இசைகின்ற என்னையும், அத்தனுகிய அவன் ஆண்டருளித், தன் அடியாரோடும் சேர்த்துக் கொண்ட, அந்த அதிசயத்தையும் யாம் கண்டோமே! ['நரகுக்கே தகுதியான தீயேனையும் அவன் தன் கருணையினல் வந்து ஆட்கொண்டனன்' என்பது கருத்து]

பரவு வாரவர் பாடுசென் றணைகிலேன் பன்மலர் பறித்தேத்தேன்
குரவு வார்குழ லார்திறத் தேநின்று குடிகெடு கின்றேனை
இரவு நின்றெரி யாடிய எம்மிறை எரிசடை மிளிர்கின்ற
அரவன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 5

இறைவனைத் துதிக்கின்றவராகிய அடியவர்களிடத்தே சென்று யான் சேரவும் மாட்டேன். பல மலர்களையும் பறித்துச்சென்று இறைவனின் திருவடிகளைத் துதிக்கவும் மாட்டேன். குராமலரை அணிந்த, நீண்ட கூந்தலை உடையவரான மாதரது சார்பிலே சிக்கிநின்று, குடிகெடுகின்றவனாய் இருப்பேன். அத்தகைய என்னையும், இடையாமத்தே நின்று எரியுடனே ஆடிய எம் இறைவனும், எரிபோலும் செஞ்சடையிடத்தே ஒளிர்கின்ற பாம்பினை உடையவனுமாகிய சிவபெருமான், ஆண்டருளித், தன் அடியோரோடும் சேர்த்துக் கொண்ட, அந்த அதிசயத்தையும் கண்டோமே!

எண்ணி லேன்திரு நாமவஞ் செழுத்தும்என் ஏழைமை [யதனாலே
நண்ணி லேன்கலை ஞானிகள் தம்மொடு நல்வினை நயவாதே
மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற் கொருப்படு கின்றேனை
அண்ணல் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 6

என்னுடைய பேதைமையினாலே, நின் திருநாமமாகிய ஐந்தெழுத்தினையும் நினைத்திலேன் ஆயினேன். கலைஞானத்தை உடையவரான பெரியார்களோடு சேர்தலையும் செய்திலேன். நல்ல செயல்களை விரும்பாதே, மண்ணிலே பிறந்தும் இறந்தும், மண்ணோடு மண்ணாவதற்கே யானும் ஒருப்படுகின்றவன் ஆயினேன். அத்தகைய என்னையும், அண்ணலாகிய அவன் ஆட்கொண்டு, தன் அடியவரோடும் சேர்த்துக் கொண்ட, அந்த அதிசயத்தையும் யாம் கண்டோமே! [ஒருப்படுதல்-சம்மதப்படுதல்.]

பொத்தை ஊன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகிய [பொய்க்கூரை
இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப் [படுவேனை
முத்து மாமணி மாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 7

துளைகளுள்ள தசைச் சுவரும், புழுக்கள் பொதிந்து உளுத்துக் கசிதலாகி ஒழுகிய பொய்யுமாகிய கூரை வேய்ந்த வீடாகிய இதனையே மெய்யெனக் கருதிநின்று, துன்பக் கடற்சுழியிலே அகப்படுகின்றவனாகிய என்னையும்,

சிறப்புப் பொருந்திய முத்து, மாணிக்கம், வயிரம், பவளம் ஆகியஇவற்றின் முழுச்சோதியும் கலந்தாற்போன்ற திருமேனி வண்ணத்தை உடையவனுன அத்தன், ஆண்டருளித், தன் அடியாரோடும் சேர்த்தனன், அந்த அதிசயத்தையும் யாம் கண்டோமே! [பொத்தை-துளை. அசும்பு-கசிவு.]

நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் [புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து நுகமின்றி [விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத் தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 8

முன்னே தன்னோடுங் கூடியிராத வகையாக, என்னைத் தன்பால் நின்றும் அவன் நீக்கினுன். உடற்கூட்டிலே சென்று புகுமாறும் விட்டனன். இப் பிறவியிலே, என்னைத் திருநோக்கினுலே பார்த்து, நுண்ணியதும் நொடி பொழுதில் உரைத்தற்கு அரியதுமான சொல்லையும் சொன்னுன். நுகத்தடியாகிய தொடர்பில்லாமல், தன் திருவடிகளிலே என்னைப் பிணித்துப் பற்றியும் எடுத்தான், முன், யான் செய்த பொய்ம்மைகள் அந்நிலையே கெடுமாறு, என் களங்கத்தையும் தொலைத்தான். அங்ஙனம் எழுந்தருளு கின்ற ஒளிப்பிழம்பாகிய பெருமான், என்னைத் தன் அடிமை யாக்கி ஆட்கொண்டு தன் அடியாரோடும் கூட்டினுன். அந்த அதிசயத்தையும் யாம் கண்டோமே!

உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே. 9

பொருந்தியஉடம்பிடத்தேயுள்ள பொருளாய் அமைந்து, நறுமலரிடத்தே எழுகின்ற மணத்தினைப் போல, அறிந்து பற்றுவதற்கு ஏற்றதாகிய, ஒரு நிலையில்லாத பரம்பொரு ளாகிய (பற்றப்படாத பொருள்) அதனைப் பாராதே, பெற வேண்டிய முறைப்படி பெற்ற வினைப்பயன்களையே அநுபவித் திருக்கின்ற பித்தர்களின் சொற்களை மெய்யெனக் கொள் ளாமலிருக்கும்படியாக, அத்தனுகிய சிவபெருமான் என்னை ஆண்டருளித், தன் அடியவரோடும் சேர்த்துக் கொண்ட, அந்த அதிசயத்தையும் யாம் கண்டோமே! [நாற்றம்-மணம்.]

இருள்தி ணிந்தெழுந் திட்டதோர் வல்வினைச் சிறுகுடி
[லிதுவித்தைப்
பொருளெ னக்களித் தருநர கத்திடை விழப்புகு கின்றேனைத்
தெருளும் மும்மதில் நொடிவரை யிடிதரச் சினப்பதத்
[தொடுசெந்தீ
அருளும் மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய அதிசயங்
[கண்டாமே. 10

*அறியாமை இருளானது செறிவுற்றுத் தோன்றியதாகிய, கொடிய வினைகாரணமாக அமைந்த, சிறிய குடில் இந்த உடம்பு ஆகும்! இதனையே நிலையான மெய்ப்பொருள் எனக் கருதிக், களித்துக், கடத்தற்கரிதாகிய நஞ்சினிடத்திலே சென்று விழுதற்குப் புகுகின்றவனாகிய என்னைத், தெளிந்த முப்புரங்களும் நொடிப்பொழுதிலே இடிந்தொழியச் சினக் குறியோடு செந்தீயினை அருளிச் செய்தவனான, உண்மை நெறியின் பயனாகிய சிவபெருமான், எனது பொய்ந்நெறியினை ஒழித்தருளிய, அந்த அதிசயத்தையும் கண்டோமே! [இருள்-அறியாமை இருள்.]*

# 27. புணர்ச்சிப் பத்து

## அத்துவித இலக்கணம்

(ஆசிரிய விருத்தம்)

[இதனையும், 'திருப் பெருந்துறையில் அடிகள் அருளிச் செய்தனர்' என்பார்கள். அத்துவிதக் கொள்கையினை உட் பொருளாகக் கொண்ட பகுதி இதுவாகும். இதனை, 'அத்துவித இலக்கணம்' என்னும் பழைய குறிப்பு உணர்த்தும்.]

சுடர்பொற் குன்றைத் தோளா முத்தை
வாளா தொழும்பு கந்து
கடைபட் டேனை ஆண்டு கொண்ட
கருணா லயனைக் கருமால் பிரமன்
தடைபட் டின்னுஞ் சார மாட்டாத்
தன்னைத் தந்த என்னா ரமுதைப்
புடைபட் டிருப்ப தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 1

ஒளிவிடுகின்ற பொன்மலையினைப் போல்கின்றவனை, தொளைக்கப்படாத முத்தை ஒப்பவனை, கடைப்பட்டவனாகிய என்னையும் ஆட்கொண்டு, பயனற்ற என் தொண்டினையும் விரும்பியருளிய, கருணைக்கு ஓர் இருப்பிடமாக விளங்குபவனை, கரியமாலும் பிரமனும் தடைசெய்யப்பட்டு இன்னமும் சென்றடைய இயலாதே விளங்குகின்ற தன்மையினையுடைய தன்னை எனக்குத் தந்தருளிய அரிய அமுதனை, என் பொள்ள லில்லாத மணியினைச் சேர்ந்து, பக்கத்திலே பொருந்தி யிருப்பதுதான் எந்நாளோ? ['இறைவனைச் சார்ந்து, அவனருகே நீங்காது இருக்கப்பெறுவது எந்நாளோ? என்பது கருத்து. சுடர்தல்-ஒளிவிடுதல்.]

ஆற்ற கில்லேன் அடியேன் அரசே
அவனி தலத்தைம் புலனாய
சேற்றி லழுந்தாச் சிந்தை செய்து
சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணல்போல் நெக்குநெக் குள்ளே
உருகி ஓல மிட்டுப்

போற்றி நிற்ப தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியை புணர்ந்தே. 2

*அரசனே! அடியனேன் இவ்வுலக வாழ்வினை இனியும் பொறுக்கமாட்டேன். பூதலத்திலே, ஐம்புலன்கள் என்னும் சேற்றிலே ஆழ்ந்துவிடாதபடியாகச், சிவனாகிய நின்னடிகளையே யானும் சிந்தை செய்திருப்பேன். 'சிவனே! எம்பெருமானே!' என்று போற்றித் துதித்து, மணலிடத்து ஊற்றினைப் போல நெகிழ்ந்து நெகிழ்ந்து, மனம் உள்ளுருகி, ஓலமிட்டு அழைத்து, எனது பொள்ளாத மணியான நின்னைக் கலந்து போற்றி நிலைபெறுவதுதான் எந்நாளிலோ? ['ஐம்புலச் சேற்றில் அழுந்தாமல், நின்னடிகளைச் சார்ந்திருப்பது எந்நாளோ?' என்பது கருத்து.]*

நீண்ட மாலும் அயனும் வெருவ
நீண்ட நெருப்பை விருப்பிலேனை
ஆண்டு கொண்ட என்ஆ ரமுதை
அள்ளூ றுள்ளத் தடியார்முன்
வேண்டுந் தனையும் வாய்விட் டலறி
விரையார் மலர் தூவிப்
பூண்டு கிடப்ப தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 3

*நெடுமாலும் பிரமனும் அஞ்சும்படியாக, நெடிதுயர்ந்து நின்ற நெருப்புருவத்தின்பால் விருப்பற்ற என்னையும், ஆண்டு கொண்டருளிய அரிய அமுதம் போல்வானை, அள்ளூறுகின்ற மனத்தினை உடைய அடியார்களின் முன்பாக, வேண்டுமளவும் வாய்விட்டு அலறி, மணம் பொருந்திய மலர்களைத் தூவி, அவனடிக்கான திருத்தொண்டினை மேற்கொண்டு, என் பொள்ளாத மணியான அவனைச் சேர்ந்துகிடப்பதுதான் எந்நாளிலோ? ['இறைவனின் பாதங்களை மலரிட்டுப் போற்றித் தொண்டுபூண்டு, அவனுடன் கலந்து செயலற்றிருப்பது எந்நாளோ?' என்பது கருத்து. 'பூண்டு' என்றது, அடிமைத்திறம் பூண்டு நிற்றலை.]*

அல்லிக் கமலத் தயனும் மாலும்
அல்லா தவரும் அமரர்கோனுஞ்
சொல்லிப் பரவும் நாமத் தானைச்
சொல்லும் பொருளும் இறந்தசுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறையின் அமுதை அமுதின்சுவையைப்
புல்லிப் புணர்வ தென்றுகொல் லோஎன் 4
பொல்லா மணியைப் புணர்ந்தே.

அக விதழ்களையுடைய தாமரைமலரிடத்தே வீற்றிருக்கின்ற பிரமனும், திருமாலும், மற்றைய தேவர்களும், இந்திரனும் சொல்லித்துதிக்கின்ற திருநாமத்தை உடையவனை, சொல்லும் பொருளும் கடந்து நிற்கின்ற சோதியனை, நெல்லிக்கனியினையும் தேனையும் பாலையும் நிறைவான இனிய அமுதினையும் போல்பவனை! அமுதின் சுவையினை ஒப்பவனை! எனது தொளைபடாத மாணிக்கத்தினை! யான் இறுகப்பற்றிக் கலப்பதுதான் எந்நாளிலோ? ['இறைவனைப் புல்லிப் புணர்வது என்பது அவனருளில் முற்றவும் கலந்து விடுதல். 'அதனை என்று தருவானோ இறைவன்?' என்று துதிக்கின்றார் அடிகள்.]

திகழத் திகழும் அடியும் முடியுங்
காண்பான் கீழ்மேல் அயனும்மாலும்
அகழப் பறந்துங் காண மாட்டா
அம்மான் இம்மா நிலமுழுதும்
திகழப் பணிகொண் டென்னை ஆட்கொண்
டாவா என்ற நீர்மை யெல்லாம்
புகழப் பெறுவ தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 5

செல்லச் செல்ல மிகவும் விளங்குகின்ற அடியையும் முடியையும் காணும் பொருட்டாகக், கீழும் மேலுமாகத் திருமாலும் அயனும் அகழ்ந்தும் பறந்தும் சென்றும், காண வொண்ணாத அந்தப் பெருமான், இந்த மாநிலம் முழுதுமே விளங்குமாறு, என்னை வந்து அடிமைகொண்டு ஆட்கொண்டருளினான். 'ஐயோ' என்று எனக்கு இரங்கியருளிய, அவனுடைய குணங்கள் எல்லாவற்றையும் புகழக்கிடைப்பதும், என் பொல்லாத மணியினைச்சேர்ந்து கலந்திருப்பதும் எந்நாளிலோ? ['அவனுடைய குணங்களைப் புகழும் ஆற்றலைப் பெறுவது எந்நாளோ?' என்கின்றனர்.]

பரிந்து வந்து பரமா னந்தம்
பண்டே அடியேற் கருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தில்
அருமா லுற்றேன் என்றென்று
சொரிந்த கண்ணீர் சொரிய உள்நீர்
உரோமஞ் சிலிர்ப்ப உகந்தன்பாய்ப்
புரிந்து நிற்ப தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 6

என்மேற் பரிவுகொண்டு எழுந்தருளி வந்து, முன்பே, அடியனேனுக்கு மேலான இன்பத்தினை அவன் அருள் செய்

*யவும், அவனைப் பிரிந்து,பெரிய நிலவுலகத்திலே கடத்தற்கரிய மயக்கமுற்றேன் என்று சொல்லிப், பொழிந்தகண்ணீரானது பொழிந்தபடியே இருக்கவும், உள்ளம் கசியவும், உரோமம் சிலிர்க்கவும், அன்புருவாய் உகந்தும், என் தொளைபடாத மணியினைச் சேர்ந்து காதலித்து, யான் நிற்பதுதான் எந்த நாளிலோ?*

நினையப் பிறருக் கரிய நெருப்பை
நீரைக் காலை நிலனை விசும்பைத்
தனையொப் பாரை யில்லாத் தனியை
நோக்கித் தழைத்துத் தழுத்தகண்டம்
கனையக் கண்ணீர் அருவி பாயக்
கையுங் கூப்பிக் கடிமலராற்
புனையப் பெறுவ தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே, 7

*பிறருக்கு நினைதற்கும் அரிதான நெருப்பு நீர் காற்று நிலம் வானம் ஆகிய ஐந்தும் ஆயினவனை, தன்னை ஒப்பவர் யாருமில்லாதே இருக்கின்ற தனித்தன்மையினை உடையவனை, நோக்கி, உடல் பூரித்துத், தழுதழுத்த தொண்டை கனைப் புறக், கண்ணீரானது அருவிபோலப் பாயாநிற்கக், கைகளைக் குவித்து, என் தொளைபடாத மணியினைச் சேர்ந்து, மணமுள்ள மலர்களினாலே அணிசெய்யப் பெறுவதும் எந்நாளிலோ?*

நெக்கு நெக்குள் உருகி உருகி
நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்
நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தாற் கூத்தும்நவிற்றிச்
செக்கர் போலுந் திருமேனி திகழ
நோக்கிச் சிலிர்சி லிர்த்துப்
புக்கு நிற்ப தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 8

*உள்ளம் நெக்குநெக்கு இடைவிடாது உருகி நின்றும், இருந்தும், கிடந்தும், எழுந்தும், சிரித்தும், அழுதும், தொழுதும், வணங்கியும், வாழ்த்தியும், பலவகையாகக் கூத்தாடலைச் செய்தும், செவ்வானம்போல விளங்கும் திருமேனியினை விளங்கப் பார்த்து, மெய் சிலிர்சிலிர்த்து, என் தொளைபடாத மணியினைச் சேர்ந்து, யான் புகுந்து நிற்பதுதான் எந்நாளிலோ?*

தாதாய் மூவே ழுல குக்குந்
தாயே நாயேன் தனையாண்ட
பேதாய் பிறவிப் பிணிக்கோர் மருந்தே
பெருந்தேன் பில்க எப்போதும்
ஏதா மணியே என்றென் றேத்தி
இரவும் பகலும் எழிலார்பாதப்
போதாய்ந் தணைவ தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 9

*'மூவேழான உலகங்கள் அனைத்திற்கும் தந்தையே! தாயே! நாய்போன்ற என்னையும் வந்து ஆட்கொண்டருளிய, பேதைமை உள்ளவனே! பிறவிப்பிணிக்கு ஒப்பற்ற மருந்தே! பெருந்தேன் சிந்த எப்போதும் விளங்கும் ஞானமணியே!' என்றெல்லாம் சொல்லித் துதித்து, இரவும் பகலும், அழகு நிறைந்த திருவடித் தாமரைமலர்களை ஆராய்ந்து, என் தொளைபடாத மணியைச் சேர்ந்து, அணைவதுதான் எந் நாளிலோ?*

காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதுங்
கண்ணோர் விசும்பின் விண்ணோர்க்கெல்லாம்
மூப்பாய் மூவா முதலாய் நின்ற
முதல்வா முன்னே எனையாண்ட
பார்ப்பா னேஎம் பரமா என்று
பாடிப் பாடிப் பணிந்துபாதப்
பூப்போ தணைவ தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 10

*'எல்லாவற்றையும் காப்பவனும், படைப்பவனும், ஒடுக்குபவனும் ஆகியவனே! இடம் நிறைந்த வானத்தே உள்ளவரான தேவர்களுக்கு எல்லாம், முற்பட்ட முதியவனே! முதிராத முதலாகி நின்ற முதல்வனே! முன்னுளிலே எழுந்தருளிவந்து என்னையும் ஆண்டருளின அந்தணனே! என் பரமனே' என்றெல்லாம் பாடிப்பாடிப் பணிந்து, என் தொளைபடாத மாணிக்கத்தைச் சேர்ந்து, அதன் திருவடிகளாகிய அழகிய தாமரைமலர்களை யான் அடையப் பெறுவதுதான், எந் நாளிலோ?*

# 28. வாழாப் பத்து

## முத்தி உபாயம்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[மணிவாசக அடிகளால், திருப் பெருந்துறையில் அருளிச் செய்யப்பெற்றது இப் பதிகம். 'இனியும் தாம் வாழ்ந்திருக்க இயலாது' என உரைத்து, முத்திக்கான உபாயத்தினை மேற்கொள்ளுகின்றனர், அடிகள்.*

பாரொடு விண்ணாய்ப் பரந்தஎம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 1

*பூமியோடு ஆகாயமாகி எங்கணும் வியாபித்த, எமது மேலோனே! யான், வேறு பற்று யாதும் இல்லாதவன் என்பதனையும் காண்பாயாக! சிறப்புடன் திகழ்பவனே! சிவபுரத்துக்கு அரசனே! திருப் பெருந்துறையில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே! என்னை ஆட்கொண்டருளின நீயே அருளில்லாதவன் ஆயினுல், யான், யாரோடுஞ் சொல்லி நொந்து கொள்வேன்? யாருக்கு என் நிலையினை எடுத்துச் சொல்லுவேன்? நெடிய கடல்சூழ்ந்த உலகத்திலே, யான் இனியும் வாழ்ந்திருக்க மாட்டேன். நின்பால் 'வருக' வென்று அழைத்து, எனக்கும் நீ அருளிச் செய்வாயாக!*

வம்பனேன் தன்னை ஆண்டமா மணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
உம்பரும் அறியா ஒருவனே இருவர்க்
குணர்விறந் துலகமூ டுருவுஞ்
செம்பெரு மானே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எம்பெரு மானே என்னையாள் வானே
என்னைநீ கூவிக்கொண் டருளே! 2

*வம்பனாகிய என்னையும் ஆட்கொண்டருளின மாணிக்கமே! யான் வேறொரு பற்றினையும் உடையவன் அல்லேன். தேவர்களும் அறியவியலாத, ஒப்பற்றவனே! பிரமவிட்டுணுக்களாகிய இருபெருங் கடவுளர்க்கும், அவர்களது உணர்வினைக் கடந்தவனாக, அந்நாளிலே உலகம் அனைத்தையும் ஊடுருவிச் சென்ற, செவ்விய பெருமானே! சிவபுரத்தின் அரசனே! திருப் பெருந்துறையில் எழுந்தருளிய சிவனே! எம் பெருமானே! என்னை ஆள்பவனே! அடியேனைக் கூவி அழைத்து, நினக்கே பணிகொண்டு அருள்வாயாக!*

பாடிமால் புகழும் பாதமே அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேடிநீ ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஊடுவ துன்னோ டுவப்பதும் உன்னை
உணர்த்துவ துனக்கெனக் குறுதி
வாடினேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 3

*திருமால் பாடிப் புகழும்படியான நின் திருவடிகளையே அல்லாமல், யான் வேறொரு பற்றினையும் உடையவன் அல்லேன்! அங்ஙனம் பற்றில்லாதிருந்த என்னைத் தேடிவந்து, முன்னம், நீயே ஆண்டருளினை! சிவபுரத்திற்கு அரசனே! திருப் பெருந்துறையிலே வீற்றிருக்கும் சிவபிரானே! யான் நின்னோடேயே ஊடுவதும்; உவப்பதுவும் நின்னை அடைந்தே; யான் என் நிலையினை உணர்த்துவதும் நினக்கேதான்; அங்ஙனமாகவும், எனக்கு உறுதிப்பொருள் கிடையாதுபோக, யான் பெரிதும் வாடினேன். இவ்வுலகிடத்து வாழ்பவனும் ஆயினேன். என்னையும், 'வருக' என்று அழைத்து அருள் புரிவாயாக!*

வல்லைவா ளரக்கர் புரமெரித் தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எல்லையூ வுலகும் உருவியன் றிருவர்
காணும்நாள் ஆதியீ றின்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 4

*வாளினைக் கையேந்தி, நின்னை எதிர்த்த அசுரர்களது முப்புரங்களையும், விரைவிலேயே எரித்து அழியச் செய்தவனே! நின்னையல்லாது, வேறொரு பற்றுதலும் இல்லாதவன்*

யான் என்பதனைக் காண்பாயாக. தில்லைப்பதியிலே வாழ்கின்ற கூத்தப்பிரானே! சிவபுரத்திற்கு அரசனே! திருப்பெருந்துறையிலே இருக்கின்ற சிவனே! மூன்று உலகங்களையும் ஊடுருவி, அவற்றின் எல்லைகளையும் கடந்து நின்று, அக்காலத்தில், பிரமவிட்டுணுக்கள் அடிமுடி காணப்புகுந்த நாளில், நினக்கு முதலும் இறுதியும் இல்லாமையினால், சமர்த்தனாகி, அவர்க்குக் காணவியலாதபடியாக வளர்ந்து நின்றவனே! யான், இனியும் இவ்வுலகிடத்தே வாழ மாட்டேன்! என்னையும், நின்பால் வருகவென்று அழைத்து அருளிச் செய்வாயாக! [வல்லை-விரைவு; வலிமை.]

பண்ணினேர் மொழியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே உடல்வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 5

பண்களினும் காட்டில் அழகியதான மொழியினை உடையவளாகிய, உமாதேவியினைப் பாகத்தே கொண்டிருப்பவனே! நின்னையன்றி வேறொரு பற்றுக்கோடும் இல்லாதவன் யான். அன்று, உறுதியாகவே என்னையும் வந்து ஆட்கொண்டனை! சிவபுரத்துக்கு அரசனே! திருப் பெருந்துறையிலே எழுந்தருளிய சிவனே! எனது எண்ணம், உடல், வாய், மூக்கு, நாசி, செவி, கண் என்னும் இவைகளை எல்லாம் நின்பாலாகவே வைத்துவிட்டு, அடியனேன், இனியும் இவ்வுலகிலே வாழ்ந்திருக்க மாட்டேன். என்னையும் நின்பால் வருகவென்று அழைத்து அருள்புரிவாயாக!

பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செஞ்செவே ஆண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அஞ்சினேன் நாயேன் ஆண்டுநீ அளித்த
அருளினை மருளினால் மறந்த
வஞ்சனேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 6

பஞ்சினும் மென்மையான அடிகளை உடையவளான உமாதேவியின் பாகத்தை உடையவனே! நின்னையல்லாது, யான், மற்றொரு பற்றுக்கோட்டினையும் உடையவன்

அல்லேன். நீயும், மிகவும் செம்மையாகவே வந்து என்னை ஆண்டருளினாய். சிவபுரத்துக்கு அரசனே! திருப் பெருந் துறையில் எழுந்தருளிய சிவபிரானே! நீ, அந்நாளில் என்னை ஆட்கொண்டு, எனக்கு அருளிச்செய்த கருணையினை, என் மயக்கத்தினாலே மறந்தவனாகி, நாயனையேனாகிய யானும், பயப்பட்டு ஒதுங்கலானேன். அத்தகைய வஞ்சகனாயினும், யான், இனியும் நின்னை அடையாது இவ்வுலகிடத்தே வாழ்பவன் அல்லேன்! என்னையும் வருகவென்று அழைத்து அருள்செய்வாயாக!

பரிதிவாழ் ஒளியாய் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக்
கலந்துநான் வாழுமா றறியா
மருளனேன் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 7

சூரிய மண்டலத்துள்ள ஒளியினைப் போன்ற பேரொளியினை உடையவனே! நின் திருவடிகளை அல்லாமல், யான் வேறொரு பற்றுக் கோட்டினையும் உடையவன் அல்லேன் என்பதனைக் காண்பாயாக! செல்வத்தாற் சிறந்த, அழகிய சிவபுரத்திற்கு அரசனே! திருப் பெருந்துறையிலே எழுந்தருளிய சிவபிரானே! நின் கருணையினையே எதிர்நோக்கி, உள்ளம் கசிந்து உருகி, நின்னுடனேயே இரண்டறக் கலந்து வாழுகின்ற வகையினை, அறிய மாட்டாத மயக்கத்தினை உடையவன் யான். எனினும், இனியும் இவ்வுலகில் வாழ மாட்டேன் என்பதனையும் நீ அறிவாயாக! என்னையும் வருக வென அழைத்து அருள்செய்வாயாக!

பந்தணை விரலாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அந்தமில் அமுதே அரும்பெரும் பொருளே
ஆரமு தேஅடி யேனை
வந்துய்ய ஆண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 8

பந்து பொருந்திய விரல்களை உடையவளான உமை யம்மையினை, இடப்பாகத்தே உடையவனே! நீயல்லாமல் வேறொரு பற்றுக்கோட்டினையும் இல்லாதவன் யானென்பதனை

*அறிவாயாக! செந்நெருப்பினைப் போன்றவனே! சிவபுரத்து அரசனே! திருப் பெருந்துறையில் எழுந்தருளிய சிவனே! முடிவில்லாத அமுதனே! பெறுதற்கரிய பெரும்பொருளே! கிடைத்தற்கரிய அமுதமே! அடியேனை உய்விக்குமாறு அந்நாளிலே வந்து தோன்றி ஆண்டு கொண்டவனே! யான் இனியும் இவ்வுலகில் வாழமாட்டேன்! என்னையும் வருக வென்று அழைத்து ஆண்டருள் செய்வாயாக! [பந்து-திரட்சியும் ஆம்.]*

பாவநா சாவுன் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தந் தேவே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
மூவுல குருவ இருவர்கீழ் மேலாய்
முழங்கழ லாய்நிமிர்ந் தானே
மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 9

*பாவங்களை நாசம் செய்பவனே! நின் திருவடிகளேயன்றி வேறொரு பற்றுதலும் இல்லாதவன் யானென்று காண்பாயாக! தேவர்களுக்கும் மேலாய தேவனே! சிவபுரத்திற்கு அரசனே! திருப் பெருந்துறையில் எழுந்தருளிய சிவபெருமானே! மூவேழு உலகங்களும் உருவும்படியாக வளர்ந்து, பிரமவிட்டுணுக்களாகிய இருவரும் கீழும் மேலுமாகச் சென்று தேடும்படியாக, ஒலிக்கின்ற அனற் பிழம்பாக வளர்ந்து நின்றவனே! யானைத் தோலைப் போர்த்தவனே! யான், இனியும் இவ்வுலகில் வாழமாட்டேன். என்னையும், நின்பால் வருமாறு அழைத்து அருளிச் செய்வாயாக!*

பழுதில்தொல் புகழாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி அணிந்தாய் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவனோ சொல்லாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 10

குற்றமற்ற, பழைமையான புகழினை உடையவளான, உமையம்மையின் பாகனே! நின்னையன்றி யான் வேறொரு பற்றினையும் இல்லாதவன் என்பதனைக் காண்பாயாக! செழுமையான பிறையினை அணிந்தவனே! சிவபுரத்திற்கு அரசனே! திருப் பெருந்துறையிலே எழுந்தருளிய சிவனே! நின்னையன்றிப் பிறர் எவரையும் யான் தொழுவேனோ? துதிப்பேனோ? எனக்கு ஒரு துணையாகவும் நினைப்பேனோ? இளமையான இடபவாகனத்தை உடையவனே! சொல்வாயாக! இனியும் இங்கு வாழமாட்டேன்; என்னையும், நின்பால் வருகவென்று அழைத்து அருளிச்செய்வாயாக! [மதி-சந்திரன்.]

# 29. அருட் பத்து

## மகா மாயாசுத்தி

(எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[இப்பதிகமும், திருப்பெருந்துறையில் அடிகளால் அருளீ செய்யப்பட்டதே யாகும். யான், நின்னை விரும்பி அழைத் தால், 'அஞ்சேல்' என வந்து, நீயும் எனக்கு அருளாயோ?' என, இறைவனை அடிகள் இதன்கண் வேண்டுகின்றனர்.]*

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 1

*சோதியே! சுடரே! சூழ்ந்த ஒளியையுடைய விளக்கே! சுரித்த கூந்தலையும், பருத்த தனங்களையும் உடைய, உமாதேவி யினைப், பாகத்தே கொண்டவனே! மேலானவனே! பாலினது நிறத்தைக்கொண்ட திரு வெண்ணீற்றினை உடையவனே! தாமரை மலரிலே வீற்றிருப்போனாகிய அயனும், திருமாலும் அறியாமற்போயின நீதியாளனே! செல்வம் பொருந்திய திருப் பெருந்துறையிலே நிறைந்த மலர்களையுடைய குருந்த மரத்தின் கீழாகப், பொருந்தியிருந்த சிறப்பமைந்த முதல்வனே! அடியேன், அன்புசெய்து அழைத்தால் 'அஞ்சற்க' என்று எழுந்தருளிவந்து, எனக்கும் அருள்வாயாக!*

நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே உன்னை ஓலமிட் டலறி
உலகெலாந் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர் குருந்தமே வியசீர்
அருத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 2

*கூத்தப் பெருமானே! நின்மலனே! திரு வெண்ணீற்றினை உடையவனே! தேவர்கள் பெருமானே! நெற்றிக்கண்ணினை உடையவனே! நின்னைக் காணுமாறு ஓலமிட்டு அலறி, உலக முழுவதும் தேடியும் யான் நின்னைக் காண்கிலேன். திருத்த மாகிய பொய்கையினை உடைய திருப் பெருந்துறையின்கண், செழுமையாகிய மலர்களையுடைய குருந்தமரத்தின் கீழாக, எழுந்தருளி இருந்த சிறப்பினையுடைய செல்வனே! அடியனேன், நின்னை அன்புடன் அழைத்தால், 'அஞ்சேல்' என்று கூறியவனாக வந்து, எனக்கும் அருளிச் செய்வாயாக!*

எங்கள்நாய கனே என்னுயிர்த் தலைவா
ஏலவார் குழலிமார் இருவர்
தங்கள்நா யகனே தக்கநற் காமன்
தனதுடல் தழலெழ விழித்த
செங்கண்நா யகனே திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 3

*எங்கள் தலைவனே! எனது ஆன்மநாயகனே! மயிர்ச் சாந்தினை அணிந்த நீண்ட கூந்தலை உடையவரான உமை, கங்கை என்னும் தேவிமார் இருவர்கட்கும் நாயகனே! தகுதியாக அழகிய காமனது உடல் தீப்பற்றி அழியுமாறு நோக்கிய, சிவந்த நெற்றிக்கண்ணினை உடைய தலைவனே! திருப் பெருந்துறையில், நிறைந்த மலர்களையுடைய குருந்த மரத்தின் அடியில், எழுந்தருளியிருந்த, சிறப்பமைந்த அருட் கண்ணனே! அடியனேன் அன்புடன் அழைத்தால், 'அஞ்சேல்' என வந்து, எனக்கும் அருள்வாயாக!*

கமலநான் முகனுங் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் நண்ணுதற் கரிய
விமலனே எமக்கு வெளிப்படா யென்ன
வியன்தழல் வெளிப்பட்ட எந்தாய்
திமிலநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அமலனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 4

*தாமரையிடத்தே வீற்றிருப்போனாகிய நான்முகனும், கார்கால மேகத்தினது நிறத்தையுடைய திருமாலும், அடைதற்கு அரிதாக விளங்கிய பாசங்கடந்த பரமனே! அவர்கள் 'எமக்கு வெளிப்படுவாயாக' என்று நின்னை வேண்டப், பெரிய அழலுருவாகி வெளிப்பட்டுத் தோன்றிய எந்தையே! பேரொலியினை உடைய நான்மறைகளும்*

சேர்கின்ற திருப் பெருந்துறையினிடத்தே, நிறைந்த மலர்களையுடைய குருந்தமரத்தடியிலே, விரும்பி வீற்றிருந்த சிறப்பமைந்த, மாசிலாதவனே! அடியனேன் விரும்பி அழைத்தால், 'அஞ்சேல்' என்று கூறிவந்து, எனக்கும் அருள் செய்வாயாக!

துடிகொள்நே ரிடையாள் சுரிகுழல் மடந்தை
துணைமுலைக் கண்கள்தோய் சுவடு
பொடிகொள்வான் தழலிற் புள்ளிபோ லிரண்டு
பொங்கொளி தங்குமார் பினனே
செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 5

உடுக்கையினது வடிவம்பொருந்திய நேரிய இடையினை உடையாளும், சுரிந்த கூந்தலையுடைய மடந்தையுமான உமையம்மையின், துணைமுலைகளின் கண்கள் அழுந்தின தழும்புகள், சாம்பல் சூழ்த்த பேரழலினிடத்தே, இரு புள்ளி களைப்போல விளங்குகின்ற, ஒளிதங்கிய திருமார்பினை உடையவனே! செடிகளைக் கொண்ட பெரிய சோலைகள் சூழவிருக்கும் திருப் பெருந்துறையிடத்தே, வளமிக்க மலர் களையுடைய குருந்தமரத்தடியில், விரும்பி வீற்றிருந்த சிறப்பு வாய்ந்த கடவுளே! நின் அடியவனாகிய யான் அன்பு செய்து அழைத்தால், 'அஞ்சேல்' என அபயமளித்து என்பால் வந்தருள்வாயாக!

துப்பனே தூயாய் தூயவெண் ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்
தொப்பனே உன்னை உள்குவார் மனத்தின்
உறுசுவை யளிக்கும்ஆ ரமுதே
செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அப்பனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 6

பவளத்தைப் போல்பவனே! தூயவனே! தூய திரு வெண்ணீறு படிந்து மின்னும் ஒளியானது வயிரத்தின் ஒளி போல விளங்கும், விளக்கமான ஒளியினை உடையவனே! நின்னை நினைப்பவரது மனத்தில் மிகுந்த சுவையினைத் தந்தருளிச் செய்கின்ற அரிய அமுதமே!. செப்பமாகிய மறைகள் சேர்ந்திருக்கின்ற, திருப்பெருந்துறையிடத்தே செழுமையான மலர்களையுடைய குருந்தமரத்தடியில், மேவிய அப்பனே!

*அடியனேன் அன்புடன் அழைத்தால், 'அஞ்சேல்' என அபயங் கூறியவனாக வந்து, நீயும் அருளிச் செய்வாயாக!*

மெய்யனே விகிர்தா மேருவே வில்லா
மேவலர் புரங்கள்மூன் றெரித்த
கையனே காலாற் காலனைக் காய்ந்த
கடுந்தழற் பிழம்பன்ன மேனிச்
செய்யனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
ஐயனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 7

*அன்பர்க்கு மெய்ப்பொருளாக இருப்பவனே! அல்லாதவருக்குப் பொய்யாகத் தோன்றுபவனே! மேரு மலையினையே வில்லாகக் கொண்டு, அசுரர்களின் மூன்று புரங்களையும் எரித்த, திருக் கையினை உடையவனே! காலினாலே காலனைச் சினந்து உதைத்தருளியவனே! கடுமையான அனற்பிழம்பினை போன்ற மேனியினை உடைய, செம்மையாளனே! வளம் பொருந்திய திருப் பெருந்துறையிடத்துச், செழுமையான மலர்களையுடைய குருந்த மரத்தினடியிலே, விரும்பி வீற்றிருக்கும் சிறப்பினையுடைய அப்பனே! அடியனேன் ஆதரித்து அழைத்தால், 'அஞ்சேல்' என்று கூறிவந்து, நீயும் அருளிச் செய்வாயாக! [விகிர்தம்-பொய்.]*

முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 8

*இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியிருப்பவனே! முதல்வனே! மூன்று கண்களை உடையவனே! முனிவனே! முகிழ்த்தல் தன்மை நீங்காத மலர்களைப் பறித்துவந்து, நின்னடிகளை அருச்சித்து வணங்கிப், பக்தியுடன் நினைந்து போற்றுதலைச்செய்யும் அடியார்களுக்குப், பரகதியான முத்தியைக் கொடுத்து அருள்செய்கின்ற, சித்தனே! வளமான திருப் பெருந்துறையிலே மலர்கள் நிறைந்த குருந்தமரத்தடியிலே, விரும்பி வீற்றிருந்த சிறப்பினையுடைய அப்பனே! அடியனேன் விரும்பி அழைத்தால், 'அஞ்சேல்' என உரைத்து, நீயும் வந்து அருளிச் செய்வாயாக!*

மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையுங் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவங்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே. 9

*மருட்சியினைக் கொண்ட என்னுடைய மனத்தினது மயக்கமெல்லாம் அற்று ஒழியுமாறு நோக்கியருளி, மறுமையுடனே இம்மையினையும் கெடுத்தருளின, மெய்ப்பொருள் ஆகியவனே! புனிதனே! சீறுகின்ற ஒலியுடைய பாம்பும் கங்கையாறும் தங்கிய, செஞ்சடையினை உடையவனே! தெளிந்த நான்மறைகளும் சேர்ந்த திருப் பெருந்துறையினிடத்தே, நிறைந்த மலர்களை உடைய குருந்தமரத்தடியில் விரும்பி வீற்றிருந்த சிறப்பமைந்த அருளாளனே! அடியனேன் அன்புசெய்து அழைத்தால், 'அஞ்சற்க' என்றுரைத்து வந்து நீயும் எனக்கு அருளிச் செய்வாயாக! [இம்மை - இவ்வுலக வாழ்வு. மறுமை-போகவுலக வாழ்வுகள்; இருமையும் ஒழிதலே முத்திக்கு வழியாகும் என்பர்.]*

திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
இருந்தவா றெண்ணி ஏசறு நினைந்திட்
டென்னுடை யெம்பிரான் என்றென்
றருந்தவா நினைந்தே ஆதரித் தழைத்தால்
அலைகடல் அதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி இதுகாண்
போதராய் என்றரு ளாயே. 10

*திருத்தமான, பெரிய சோலைகள் சூழ்ந்திருக்கின்ற திருப் பெருந்துறையிலே, நிறைந்த மலர்களையுடைய குருந்தமரத் தடியிலே, விரும்பி வீற்றிருந்த சிறப்பானது இருந்த விதத்தினை எண்ணி, ஏசற்று நினைந்து, 'என்னுடைய எம்பெருமான்' என்று பலகாற் சொல்லி, அடைந்து அநுபவிக்கும் அவாவினாலே இடையறுது நினைந்து, அன்புசெய்து அழைத்தால், 'பிறவியாகிய அலைமிகுந்த கடலாகிய அதனிடத்தேயிருந்தும், என்பாற் பொருந்துதற்கு நீயும் வருக! கயிலைக்குச் செல்லும் வழி இதுவென்பதையும் காண்க! இவ்வழியே புகுந்து வருவாயாக!' என்று, எனக்கும் அருளிச் செய்வாயாக! [ஏசறல்-துக்கித்தல். கயிலை-வீட்டிற்கு அறிகுறி.]*

# 30. திருக் கழுக்குன்றப் பதிகம்

## குரு தரிசனம்

(எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[இது, திருக்கழுக்குன்றப் பெருமானைத் தரிசித்து மணிவாசக அடிகள் செய்தருளிய பதிகம் ஆகும். பெருமானின் திருமேனிக் காட்சியிலே மனம் ஒன்றுபட்டு, அந்தக் களிப்பாலே அடிகள் வியந்து பாடுகின்றனர்.]*

**பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு**
**மான்உன் நாமங்கள் பேசுவார்க்**
**கிணக்கி லாததோர் இன்ப மேவருந்**
**துன்ப மேதுடைத் தெம்பிரான்**
**உணக்கி லாததோர் வித்து மேல்விளை**
**யாமல் என்வினை ஒத்தபின்**
**கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து**
**காட்டி னாய்கழுக் குன்றிலே. 1**

*எவ்வகைப்பட்ட மாறுபாடும் இல்லாத திருப்பெருந்துறையிலே, எழுந்தருளி வந்த பெருமானாகிய நின் திருநாமங்களைச் சொல்லுவோர்க்கு, நிகரற்ற, உவமையில்லாததாகிய, பேரின்பமே என்றும் உண்டாகும். துன்பங்களை நீக்கிக், கெடுதல் இல்லாததாகிய ஒப்பற்ற பிறவி வித்தானது, இனிமேலும் என்னிடத்தே விளையாமல், என் இருவினைகளும் ஒத்துப் போன பின்பு, பெருமானே! அளவில்லாத நின் திருக்கோலத்தினை, நீ, திருக்கழுக்குன்றிலே வந்து எனக்கும் காட்டியருளினையே! ['நின் கருணையை எங்ஙனம் போற்றுவேன்?' என்பது கருத்து. பிணக்கு-மாறுபாடு. இணக்கு-உவமை. உணக்கு - கெடுதி.]*

**பிட்டு நேர்பட மண்சு மந்த பெருந்து றைப்பெரும் பித்தனே**
**சட்ட நேர்பட வந்திலாத சழக்க னேன்உனைச் சார்ந்திலேன்**
**சிட்ட னேசிவ லோக னேசிறு நாயி னுங்கடை யாயவெங்**
**கட்ட னேனையும் ஆட்கொள் வான்வந்து காட்டி னாய்கழுக்**
**[குன்றிலே. 2**

*பிட்டினைக் கூலியாகப் பெறுவதற்கு, மண்சுமந்து திருவிளையாடலைச் செய்தவனே! திருப் பெருந்துறையிலே*

*எழுந்தருளிய பெரும் பித்தனே! நினது கட்டளைக்கு இணங்க வந்திலாத அறியாமையினை உடையவனாகிய யானும், அன்றே நின்னைச் சார்ந்திலேன்! சிட்டனே! சிவலோகனே! இழிந்த நாயினும் கடைப்பட்ட, கொடிய துன்பத்தை உடையவனாகிய என்னையும் ஆட்கொள்ளும் பொருட்டாகத் திருக்கழுக்குன்றத்திலே எழுந்தருளி நின் திருக்கோலத்தையும் நீ காட்டியருளினையே! [நின் கருணையினை எங்ஙனம் போற்று வேன்? சட்டம்-வேதசிவாகமம் முதலிய நெறிகள். சழக்கு-குற்றம்.]*

மலங்கி னேன்கண் ணின் நீரை மாற்றி மலங்கெ டுத்தபெ
[ருந்துறை
விலங்கி னேன்வினைக் கேட னேன்இனி மேல்வி
[ளைவத றிந்திலேன்
இலங்கு கின்றநின் சேவ டிகள்இ ரண்டும் வைப்பிட மின்றியே
கலங்கி னேன்கலங் காம லேவந்து காட்டி னாய்கழுக்
[குன்றிலே. 3

*பிறவித் துயரிடைப்பட்டுக் கலங்கின என்னுடைய கண்ணீரைத் துடைத்துப், பாசங்களை அழித்தருளிய திருப் பெருந்துறையினை விட்டு, யானும் நீங்கி வந்தேன். வினையாகிய கெடுதியை உடையவனாகிய யான், இனிமேல் உண்டாவது யாதெனவும் உணர்ந்திலேன். விளங்குகின்ற நின் திருவடிகள் இரண்டையும், வைத்தற்குரிய இடமில்லாமல் கலக்கமுற்றும் நின்றேன். யான், இனியும் கலங்காதபடிக்குத், திருக்கழுக் குன்றிலே வந்து, நீயும், நின் திருக்கோலத்தினைக் காட்டி எனக்கு அருளினையே! ['நின் பெருங் கருணையினை எங்ஙனம் போற்றுவேன்?' என்பது கருத்து. மலங்குதல்-கலங்குதல்.]*

பூணொ ணாததொ ரன்பு பூண்டு பொருந்தி நாள்தொறும்
[போற்றவும்
நாணொ ணாததோர் நாணம் எய்தி நடுக்க டலுள் அழுந்திநான்
பேணொ ணாதபெ ருந்து றைப்பெருந் தோணி பற்றி
[யுகைத்தலுங்
காணொ ணாத்திருக் கோலம் நீவந்து காட்டி னாய்கழுக்
[குன்றிலே. 4

*நின் அன்பரல்லாத பிறரால், மேற்கொள்வதற்கும் இயலாதாகிய, ஒப்பற்ற அன்பினைப்பூண்டு, நாள்தோறும், நின்னையடைந்து வணங்குதற்கும், நாணொணாததாகிய ஒப்பற்ற நாணத்தினை அடைந்து, அதனால், பிறவியாகிய கடலின் நடுவேயும் நான் அழுந்தியிருந்தேன்! போற்றுதற்கும் அரிதான திருப் பெருந்துறையானாகிய பெரிய தோணியினைத்*

துணையாகப் பற்றிக்கொண்டு யான் செலுத்துதலும், நீ திருக் கழுக்குன்றிலே வந்து, காணவொண்ணாத நின் திருக் கோலத்தினையும், எனக்குக் காட்டியருளினையே! ['நின் அருளினை எவ்வாறு போற்றுவேன்?' என்பது கருத்து.]

**கோல மேனிவ ராக மேகுண மாம்பெ ருந்துறைக் கொண்ட [லே**
**சீல மேதும் அறிந்தி லாதஎன் சிந்தை வைத்த சிகாமணி**
**ஞால மேகரி யாக நானுனை நச்சி நச்சிட வந்திடுங்**
**கால மேஉனை ஓதநீ வந்து காட்டி னாய்கழுக் குன்றிலே. 5**

அழகான திருமேனியினை உடைய மலையே! மங்கல குணங்களுடனே கூடிய திருப் பெருந்துறையிடத்தே வீற்றிருந்த அருள் மேகமே! நல்லொழுக்கம் எதனையும் அறிந்திலாத என் மனத்தை அமைத்தருளின சிரோன்மணியே! உலகத்தவரே சான்றாக, நான் உன்னை மிகவும் விரும்பிட, நீ வந்துதவும் காலமும் வந்திட, அந்தக் காலத்திலே நானும் நின்னைத் துதித்திருக்க, நீயும் திருக் கழுக்குன்றிலே வந்து, எனக்கும் நின் திருக்கோலத்தைக் காட்டி அருள் செய்தனையே!

**பேதம் இல்லதொர் கற்ப ளித்த பெருந்து றைப்பெரு வெள்ளமே**
**ஏத மேபல பேச நீஎனை ஏதி லார்முனம் என்செய்தாய்**
**சாதல் சாதல்பொல் லாமை யற்ற தனிச்ச ரண்சர ணாமெனக்**
**காத லால்உனை ஓத நீவந்து காட்டி னாய்கழுக் குன்றிலே. 6**

வேறுபாடில்லாததாகிய ஒப்பற்ற கல்வியைத் தந்துதவிய திருப் பெருந்துறையிலே வீற்றிருக்கின்ற அருட்பெருங் கடலே! அயலார்களுக்கு எதிரில், நீ என்னை என்னதான் செய்தனையோ? 'இறத்தல்' என்கின்ற பொல்லாங்கானது இல்லாத ஒப்பற்ற நின் திருவடிகளே எனக்குச் சரணாகும் என, நான் ஆசையோடு நின்னைத் துதிக்கவும், நீ திருக் கழுக்குன்றிலே வந்து, நின் திருக்கோலத்தையும் காட்டி, எனக்கும் அருள் செய்தனையே! [பேதம்-வேறுபாடு. கற்பு-கல்வி; அன்பு மாறாமையும் ஆம்.]

**இயக்கி மாரறு பத்து நால்வரை எண்கு ணம்செய்த ஈசனே**
**மயக்க மாயதொர் மும்ம லப்பழ வல்வி னைக்குள் அழுந்தவும்**
**துயக்க றுத்தெனை ஆண்டு கொண்டுநின் தூய்ம லர்க்கழல் [தந்தெனைக்**
**கயக்க வைத்தடி யார்மு னேவந்து காட்டினாய் கழுக் குன்றிலே. 7**

உத்தரகோச மங்கைப் பதியிலே, ஞானோபதேசம் செய்து இயக்கிமார்கள் அறுபத்துநால்வரையும் நின் எண்குணங் களின் வயமாக்கிக்கொண்ட ஈசனே! மயக்கத்தால் உண்டாவ தாகிய, ஒப்பற்ற மும்மலத் தொடர்பாகிய பழைமையான வல்வினைக் கடலினுள்ளே யான் அழுந்தாநிற்கவும், என் சோர்வினை நீக்கி, என்னை ஆட்கொண்டு அருளி, நினது தூய்மையான மலரடிகளையும் தந்து, அடியேனை மெலிய வைத்து, அடியவர்களுக்கு எதிரிலேயே, திருக் கழுக்குன்றிலே எழுந்தருளிவந்து, நின் திருக்கோலத்தினையும் காட்டி யருளினையே! ['பெருமானே! நின் கருணையினை எவ்வாறு போற்றுவேன்? என்பது கருத்து, துயக்கு-சோர்வு. கயக்க-மெலிய. எண்குணம்-முற்றறிவு.]

# 31. கண்ட பத்து

## நிருத்த தரிசனம்

(கொச்சகக் கலிப்பா)

*[திருத்தில்லையிலே, அம்பலத்தே நின்று கூத்தியற்றுகின்ற பெருமானைக் கண்டு அநுபவித்த மணிவாசக அடிகள், அந்த அநுபவத்தினை வியந்து போற்றியது, இது வாகும்.]*

**இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்**
**அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்**
**சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட**
**அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே. 1**

*ஐம்பொறிகளின் வயப்பட்டு மயங்கி, சாதலுக்கே ஏதுவாகி, வேறுபட்டே திரிந்து சென்று, கடத்தற்கரிய நரகத்திலே வீழ்வேனாகிய எனக்குச், சிந்தையினைத் தெளிவித்துச், சிவமயமாகச் செய்து, என்னையும் ஆண்டருளின, முடிவில்லாத ஆனந்த உருவினை, யான், அழகுகொண்ட தில்லையம்பலத்திலே கண்டேனே! [இந்திரியம்-பஞ்சேந்திரியங்கள்-ஐம்பொறிகள்.]*

**வினைப்பிறவி என்கின்ற வேதனையில் அகப்பட்டுத்**
**தனைச்சிறிதும் நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை**
**எனைப்பெரிதும் ஆட்கொண்டென் பிறப்பறுத்த இணையிலியை**
**அனைத்துலகுந் தொழுந்தில்லை அம்பலத்தே கண்டேனே. 2**

*வினைப்பயனின் காரணமாக வந்துறுகின்ற பிறவியென்கின்ற வேதனைக்குள்ளே அகப்பட்டுத், தன்னைச் சிறிதளவும் நினையாதே தளர்ச்சி அடைந்தவனாகிக் கிடக்கின்ற என்னையும், எவ்வளவோ பெரிய வகையாக வந்து ஆட்கொண்டு, என் பிறவித்தளையினையும் அறுத்தருளிய ஒப்பற்றவனாகிய சிவபெருமானை, எல்லா உலகங்களும் தொழுகின்ற சிறப்பினையுடைய தில்லையம்பலத்திலே, யானும் கண்டேனே!*

**உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் உளம்மன்னிக்**
**கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட**
**திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை**
**அருத்தியினால் நாயடியேன் அணிகொள்தில்லை கண்டேனே. 3**

*இறைவனின் திருவுருவைத் தெரிவதற்கான பக்குவத்தினை யான் அடையாத காலத்திலேயே, என்னுள்ளே வந்து புகுந்து, என் மனத்திலே நிலைபெற்று, என் பிறவியைத் திருத்தி, என் உடலிற் புகுந்து, தன் பெருங்கருணையினாலே என்னை ஆண்டு கொண்டு அருளின, திருத்துருத்தியிலே வீற்றிருக்கும் பெருமானின், தித்திக்கும் திருவடிகளை, ஆசையினால், நாயடியேன், அழகுகொண்ட தில்லையம்பலத்திலே கண்டேனே! [கரு – பிறவி.]*

**கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை**
**வல்லாள னாய்வந்து வனப்பெய்தி யிருக்கும்வண்ணம்**
**பல்லோருங் காணஎன்றன் பசுபாசம் அறுத்தானை**
**எல்லோரும் இறைஞ்சுதில்லை அம்பலத்தே கண்டேனே.** 4

*கல்லாத அற்பஅறிவின் காரணமாகக் கீழ்மைப்பட்டு, நாயினைப்போல இருந்தவனாகிய என்னையும், அறிவுத்திறம் உள்ளவனாக வந்து, யான் அருளழகு பெற்று இருக்கும் வண்ணம், பல்லோரும் கண்டிருக்க, எனது பசுபாசங்களை அறுத்தருளியவனை, எல்லோரும் வணங்குகின்ற தில்லையம் பலத்திலே, யானும் கண்டேனே!*

**சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்**
**ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு**
**பேதைகுணம் பிறருவம் யானெனதென் னுரைமாய்த்துக்**
**கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே.** 5

*சாதி, குலம், குடிப்பிறப்பு என்னும் சுழியிலே அகப்பட்டு, அவற்றால் ஏற்படும் பற்றுக்களாலே அறிவு தடுமாறி, ஆதரவற்றவனாகி இருந்த நாயினேனைத்; துன்பமறுத்து அடிமை கொண்டு, என் பேதைமைக் குணத்தையும், பிறர் வடிவின் நினைவையும், 'யான்' 'எனது' என்னும் செருக்குச் சொற்களையும் மாய்த்துக், குற்றமற்ற அமுதமாக ஆகிய அவனை, அருள் விளங்குகின்ற தில்லையம்பலத்திலே, யானும் கண்டேனே! ['பிறர் உருவம்' என்றது, பிறபிற கடவுளர் பற்றிய நினைவுகளை.]*

**பிறவிதனை அறமாற்றிப் பிணிமூப்பென் றிவையிரண்டும்**
**உறவினொடும் ஒழியச்சென் றுலகுடைய ஒருமுதலைச்**
**செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலம்மன்னி**
**மறையவரும் வானவரும் வணங்கிடநான் கண்டேனே.** 6

*பிறவியை அறவே ஒழித்துப், பிணி மூப்பு என்னும் இவை இரண்டுடன், சுற்றத்தார் என்னும் பற்றினோடும் கூடி ஒழியும் படியாக நீங்கிப்போய், உலகத்தைத் தனக்கே உரிமையாக*

உடைய ஒப்பற்ற முதல்வனைச், செறிவான சோலைகள் சூழ்ந்திருக்கும் தில்லைநகரத்திலே, திருச்சிற்றம்பலத்திலே நிலைபெற்று, மறையவரும் வணங்கிக் கொண்டிருக்க, யானும் கண்டேனே!

பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் அறுத்தருளிப்
பித்தனிவன் என்னஎன்னை ஆக்குவித்துப் பேராமே
சித்தமெனுந் திண்கயிற்றால் திருப்பாதங் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே. 7

எனது பக்தி செய்தலான தன்மையும், அதற்கேற்ற நல்லொழுக்கமும் இல்லாத, பசுபாசங்களை அந்நாளிலே அறுத்தருளினான். 'இவன் பித்தன்' என்று, கண்டோர் எல்லாரும் சொல்லும்படியாக, என்னையும் ஆக்குவித்தான். நான் பெயர்ந்து போகாவண்ணம், என் மனம் என்கின்ற திண்மையான கயிற்றினாலே தன் திருவடிகளைக் கட்டுவித்தும் கொண்டான். இத்தகைய வித்தகனாரான சிவபிரானின் திருவிளையாடலை எல்லாம், விளங்குகின்ற தில்லையம்பலத்திலே, யானும் கண்டேனே!

அளவிலாப் பாவகத்தால் அமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன்றும் அறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு
அளவிலா ஆனந்தம் அளித்தென்னை ஆண்டானைக்
களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே. 8

அளவில்லாத பல்வகை எண்ணங்களாலே அமுக்கப்பட்டு, இவ்வுலகத்தில், அறிவேதும் இல்லாமல், பின் விளைவுகள் யாதொன்றினையும் அறியாதே, யான் வெறுமையாளனாய்க் கிடந்தேன்! அத்தகைய எனக்கு, அளவற்ற ஆனந்தத்தை அளித்து, என்னை ஆண்டருளின பெருமானைக், களவில்லாத வானவரும் வணங்குகின்ற தில்லையம்பலத்திலே, யானும் கண்டேனே! [பாவகம்-எண்ணம். வெறுவியன்-வெறுமையாளன்; வீணன்.]

பாங்கினொடு பரிசொன்றும் அறியாத நாயேனை
ஓங்கியுளத் தொளிவளர உலப்பிலா அன்பருளி
வாங்கிவினை மலம்அறுத்து வான்கருணை தந்தானை
நான்குமறை பயில்தில்லை அம்பலத்தே கண்டேனே. 9

முறையோடு கூடிய குணங்களை ஒரு சிறிதுமே அறியாத நாயினேனையும், எனது உள்ளத்தே ஒளியானது ஓடுங்கி வளருமாறு, கெடுதலில்லாத அன்பினை அருளிச் செய்து, என்னைப் பற்றிநின்ற வினைகளை எல்லாம் நீக்கி, மலங்களையும் அறுத்துத், தன் மேலான கருணையினையுந் தந்தருளியவனை, நான்கு வேதங்களும் முழங்குகின்ற தில்லையம்பலத்திலே

*நானும் கண்டேனே! [பாங்கு-முறைமை; இறைவனை அடை-தற்கான நெறிமுறை ஒழுக்கங்களைப் பற்றிய கோட்பாடுகள். பரிசு-ஒழுக்கம்.]*

பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்கள் அனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே. 10

*பூதங்கள் ஐந்தும் ஆகியும், புலன்கள் ஐந்தும் ஆகியும், மற்றுமுள்ள எல்லாப் பொருள்களும் ஆகியும், பேதப்பட்டு விளங்குவன அனைத்தும் தானேயாகியும், தான் ஒரு பேதப் படுதல் என்பதில்லாத பெருமையினை உடையவனை, எமது துன்பங்களை ஒழித்து எம்மை ஆண்டருளின, மிக்கு விளங்கும் ஒளியினை, மரகதமணியினை, வேதங்கள் தொழுது துதிக்கின்ற விளக்கம் அமைந்த தில்லையம்பலத்திலே, யானும் கண்டேனே! [கேதம்-துன்பம். மரகதம்-பச்சை; அம்மையைப் பாகமாகக் கொண்டதனைக் குறித்தது.]*

# 32. பிரார்த்தனைப் பத்து

## சதாமுத்தி

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[மணிவாசக அடிகள், திருப் பெருந்துறையிலே, இறைவன் குருபரனாகி வந்தருளித், தன் அடியவர் ஒருங்குவரத் தானும் சென்று மறைந்த பின்னர், அவனருளினை வேண்டித் துதிப்பவராகப் பாடியது இதுவாகும்.]*

**கலந்து நின்னடி யாரோ டன்று வாளா களித்திருந்தேன்**
**புலர்ந்து போன காலங்கள் புகுந்து நின்ற திடர்பின்னாள்**
**உலர்ந்து போனேன் உடையானே உலவா இன்பச் சுடர்காண்பான்**
**அலந்து போனேன் அருள்செய்யாய் ஆர்வங் கூர அடியேற்கே. 1**

*நீ என்னைவந்து ஆட்கொண்டருளிய அந்நாளிலே, நினது அடியாரோடும் கலந்துநின்ற யான், சும்மா களிப்படைந்தே நின்றிருந்தேன். காலங்களும் பல அவமே கழிந்து போயின. பிற்காலத்தே, துன்பமும் என்பாற் புகுந்து நின்றது. உடையவனே! அதனால், யான் ஒடுங்கிப் போயினேன். என்றும் கெடாத பேரின்பத்தினைத் தருகின்ற, அருட்சுடராகிய நின்னைக், காணும் பொருட்டாக முயன்று, துன்புற்றும் போயினேன்! அடியேனுக்கும், நின்னிடத்தே அன்புமிகும்படியாக, நீயே கருணைகொண்டு, மீளவும் எழுந்தருளிவந்து, அருளிச் செய்வாயாக!*

**அடியார் சிலருன் அருள்பெற்றார் ஆர்வங் கூர யான்அவமே**
**முடையார் பிணத்தின் முடிவின்றி முனிவால் அடியேன் மூக்கின்றேன்**
**கடியே னுடைய கடுவினையைக் களைந்துன் கருணைக் கடல்பொங்க**
**உடையாய் அடியேன் உள்ளத்தே ஓவா துருக அருளாயே. 2**

*உடையவனே! நின் அடியவருட் சிலர், நின்னிடத்தே மிகுதியான அன்புடையவர் ஆதலினால், அந்நாளிலே, நின் அருளினை அடையப் பெற்றார்கள். முடைநாற்றம் பொருந்திய பிணத்தினைப்போல, முடிவில்லாக் கோபத்தாலே, அடியனேன், பயனின்றி முதிரா நின்றேன். கடியவனான என்னுடைய, கொடிய வினைகளை எல்லாம் நீக்கி, அடியனே*

னது உள்ளத்தில், நினது கருணைக்கடலானது பொங்கவும், என் மனமானது இடையறாது நின்னையே நினைந்து உருகவும், எனக்கும் அருளிச் செய்வாயாக!

அருளா ரமுதப் பெருங்கடல்வாய் அடியா ரெல்லாம்
[புக்கழுந்த
இருளா ராக்கை யிதுபொ றுத்தே எய்த்தேன் கண்டாய்
[எம்மானே
மருளார் மனத்தோர் உன்மத்தன் வருமால் என்றிங்
[கெனைக்கண்டார்
வெருளா வண்ணம் மெய்யன்பை உடையாய் பெறநான்
[வேண்டுமே. 3

உடையவனே! நின் திருவருளாகிய அரிதான அமுதப் பெருங்கடலின்கண், நின் அடியவர் எல்லாரும், அந்நாளிற் சென்று திளைத்தார்கள்! அறியாமை இருளே நிறைந்த உடலாகிய இதனைச் சுமந்து, யானும் மிகவும் இளைத்துவிட்டேன். எம்பெருமானே! 'மருட்சிநிறைந்த மனத்தையுடைய ஓர் உன்மத்தன் இதோ வருகின்றான்' என்று, இவ்வுலகிலே, என்னைக் கண்டவர்கள் அஞ்சாதபடிக்கு, அடியனேன், நின் மெய்யன்பினைப் பெறுதல்வேண்டும். அதற்கும் நீயே அருளிச் செய்வாயாக!

வேண்டும் வேண்டும் மெய்யடியா ருள்ளே விரும்பி
[எனை அருளால்
ஆண்டாய் அடியேன் இடர்களைந்த அமுதே அருமா மணிமுத்தே
தூண்டா விளக்கின் சுடரனையாய் தொண்ட னேற்கும்
[உண்டாங்கொல்
வேண்டா தொன்றும் வேண்டாது மிக்க அன்பே மேவுதலே. 4

நின்னை மிகவும் விரும்பிநின்ற நின் மெய்யடியார்களின் நடுவே, என்னையும் விரும்பித், திருவருளினாலே, நீயும் அன்று ஆட்கொண்டனை! அடியனேனின் துன்பத்தை நீக்கியும் அருளினை! என் அமுதமே! கிடைத்தற்கு அரிதான சிறந்த மாணிக்கமே! முத்தே! தூண்டாவிளக்கின் சுடரினைப்போன்றவனே! விரும்பப் படாததாகிய ஒரு பொருளினையும் விரும்பாமல், மிகுதியான அன்பினைப் பொருந்தியிருத்தல், நின் தொண்டனாகிய எனக்கும் உண்டாகுமோ? ['இறைவனே! வேறெதனையும் விரும்பாமல், நினது திருவடிக்குமட்டுமே அன்பு செய்திருக்கின்ற நிலைமை, அடியனேனுக்கும் உண்டாகுமோ?' என்பது கருத்து. தூண்டாவிளக்கு-தூண்டுதலின்றித், தானே சுடரிட்டு எரிகின்ற விளக்கு.]

மேவும் உன்றன் அடியாருள் விரும்பி யானும் மெய்ம்மையே
காவி சேருங் கயற்கண்ணாள் பங்கா உன்றன் கருணையினால்
பாவி யேற்கும் உண்டாமோ பரமா னந்தப் பழங்கடல்சேர்ந்
தாவி யாக்கை யானெனதென் றியாது மின்றி அறுதலே. 5

*நீலோற்பல மலரினது தன்மையைப் பொருந்தியவும், கயல்மீனைப் போன்று நெடியவுமான கண்களை உடைய, உமாதேவியினை ஒருபாகத்தே உடையவனே! நினக்கு அன்பு பொருந்திய நின் அடியார்களின் நடுவிலே, யானும், மெய்ப் பொருளாகிய நின்னை அடைதலையே விரும்பியவனாக, அன்று நின்றேன். நின்றன் கருணையினாலே, பேரின்பமாகிய பழங்கடலினைச் சேர்ந்து, உயிரும் உடம்பும் என்பவைகள், யானெனவும் எனதெனவும் சொல்லுகின்ற தன்மைகளுள் யாதுமின்றி, அற்றொழிதலாகிய நிலையானது, பாவியேனாகிய எனக்கும் என்றுதான் உண்டாகுமோ? [காவி-நீலோற்பலம்.]*

அறவே பெற்றார் நின்னன்பர் அந்த மின்றி அகநெகவும்
புறமே கிடந்து புலைநாயேன் புலம்பு கின்றேன் உடையானே
பெறவே வேண்டும் மெய்யன்பு பேரா ஒழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடலே. 6

*உடையவனே! நிலைபெயராததும், அழிவற்றதும், பிரிவில்லாததும், மறவாததும், நினையாததும், அளவற்றதும், குறைவில்லாததும் ஆகிய, இன்பப் பெருங்கடலே! நின் அன்பர்கள், முடிவின்றி உள்ளம் உருகியவராக, நின்னையே முற்றவும் அடையப் பெற்றுவிட்டார்கள். புலையனேனான யானோ, நின் அன்பிற்குப் புறமாகி இவ்வுலகிற்கிடந்து புலம்புகின்றேன். யானும், நின் அன்பினைப் பெறுதல் வேண்டும்! ['அதற்கும் அருள்வாயாக' என்பது குறிப்பு.]*

கடலே அனைய ஆனந்தங் கண்டா ரெல்லாங் கவர்ந்துண்ண
இடரே பெருக்கி ஏசற்றிங் கிருத்த லழகோ அடிநாயேன்
உடையாய் நீயே அருளுதியென் றுணர்த்தா தொழிந்தே
[கழிந்தொழிந்தேன்
சுடரார் அருளால் இருள்நீங்கச் சோதீ இனித்தான்
[துணியாயே. 7

*முதல்வனே! கடலினைப்போன்ற நினது பேரின்பத்தினைக் கண்ட நின் அடியவர்கள் எல்லாரும், அதனைக் கவர்ந்து, அநுபவியா நின்றனர். அடிமையாகிய நாயினேன், துன்பத்தையே பெருக்கியவனாகத் துக்கித்து, இவ் வுலகத்திலேயே இருத்தல், நினக்கும் அழகாகுமோ? 'என்னை ஆளாக உடையவனாகிய நீயே அருளிச் செய்வாயாக' என்று, நினக்கு அறிவி*

*யாதே ஒழிந்து, யானும் கழிவுபட்டுக் கெட்டேன். சோதியே! அரிய நினது அருட்சுடரினால், என் அஞ்ஞான இருளானது நீங்குமாறு, இனியேனும், நீயும் துணிவாயாக! [துணிதல்-முடிவுக்கு வருதல். 'சுடர்' என்றது, ஞான ஒளியினை.]*

துணியா உருகா அருள்பெருகத் தோன்றுந் தொண்ட
[ரிடைப்புகுந்து
திணியார் மூங்கிற் சிந்தையேன் சிவனே நின்று தேய்கின்றேன்
அணியா ரடியா ருனக்குள்ள அன்புந் தாராய் அருளளியத்
தணியா தொல்லை வந்தருளித் தளிர்ப்பொற் பாதந் தாராயே. 8

*சிவ பெருமானே! நீயே ஆதரவென்று முற்றவும் துணிந்து உருகி, நின் அருள் பெருகும்படியாகத் தோன்றா நின்ற, நின் அடியவர்களின் நடுவே புகுந்து, திண்மை பொருந்திய மூங்கிலைப்போன்ற சிந்தையினை உடையவனான நானும், இவ்வுலகிடத்தே நின்று, தேய்ந்து கொண்டிருக்கின்றேனே! அழகுபொருந்திய நினது அன்பர்கள், நினக்குச் செய்கின்ற அன்பினைப்போன்ற அன்பினை, எனக்கும் தந்து அருள்வாயாக! காலத்தைத் தாழ்க்காமல், விரைந்து எழுந்தருளிவந்து, என்பால் அருள் கனியும்படியாகத், தளிர் போன்ற நின் பொன்னடிகளையும் தந்தருள்வாயாக! [திணி-திண்மை.]*

தாரா அருளொன் றின்றியே தந்தாய் என்றுன் தமரெல்லாம்
ஆரா நின்றார் அடியேனும் அயலார் போல அயர்வேனோ
சீரார் அருளாற் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை வைக்க வேண்டும் பெருமானே. 9

*சிறப்பினையுடைய நினது அருளினாலே, என் மனத்தைத் திருத்தி, என்னையும் ஆட்கொண்டு அருளின, சிவலோகனே! நின் தமரான அடியவர்கள் எல்லாரும், நீ அவர்களுக்குத் தருவதான அருளில் ஒன்றேனும் பாக்கியின்றி, முற்றவுமே தந்துவிட்டாயென்று சொல்லி, அதனிடத்தே அனுபவித்திருப்பவர்களாகத் தம்மையிழந்து நின்றார்கள். அடியனேனும், அவ்விடத்தே, அயலாரைப்போல வந்து நின்று, தளர்வேனோ? பெருமானே! நின் பேரின்பமானது நிலைபெயராதபடி, என்பாலும் நின் கருணையினை வைத்தருளுதல் வேண்டும். ['அயலார்' என்றது, அருளுக்குப் புறமானவர்களை.]*

மானேர் பங்கா வந்திப்பார் மதுரக் கனியே மனநெகா
நானேர் தோளாச் சுரையொத்தால் நம்பிஇத்தால் வாழ்ந்தாயே
ஊனே புகுந்த உனையுணர்ந்தே உருகிப் பெருகும் உள்ளத்தைக்
கோனே அருளுங் காலந்தான் கொடியேற் கென்றோ
[கூடுவதே. 10

மானைப்போன்ற விழிகளையுடைய உமையம்மையினை, நின் ஒருபாகத்தே உடையவனே! நின்னை வாழ்த்துபவராகிய அடியவர்களுக்கு, மதுரமான கனியைப்போன்று தித்திப்பவனே! மனம் நெகிழாத யான், ஒரு தொளைக்காத சுரையினைப்போன்று பயனற்றபடியே இருந்தால், அண்ணலே! நீ இதனால் நன்கு வாழ்ந்தனைபோலும்! என் உடலிடத்தே புகுந்து, நின்னை அறிந்து உருகி, அன்பு பெருகப்பெற்ற உள்ளத்தினைக், கோமானே! நீ எனக்கும் அருளிச்செய்கின்ற காலமானது, கொடியவனாகிய எனக்கு, அணுகவந்து கூடுவதுதான் எப்போதோ? [தோளாச் சுரைக்காய் எதற்கும் பயன் படுதல் இல்லாததுபோலத், தானும் இருந்தனைத், 'தோளாச் சுரையொத்தால்' என்றனர்.]

**கூடிக் கூடி உன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா**
**வாடி வாடி வழியற்றேன் வற்றல் மரம்போல் நிற்பேனோ**
**ஊடி ஊடி உடையாயொடு கலந்துள் ளுருகிப் பெருகிநெக்கு**
**ஆடி ஆடி ஆனந்தம் அதுவே யாக அருள்கலந்தே.** 11

நின் அடியவர்கள், கூடிக்கூடிக் கூத்தாடுபவர்களும்; சிரிப்பவர்களும், களிப்பவர்களும் ஆகி நிற்க, யான் வாடி வாடி வழியற்றவனாகி, வற்றிப்போன ஒரு மரத்தைப்போலவும் நிற்பேனோ? உடையவனாகிய நின்னோடும், நான் பிணங்கிப் பிணங்கிக், கலந்துகூடி, உள்ளம் உருகப்பெற்று, அன்பு பெருகி, மனம் நெகிழ்ச்சிகொள்ளக் கூத்தாடிக் கூத்தாடிப், பேரானந்தம் அதுவேயாக ஆகும்படியாக, என்பாற்கலந்து, எனக்கும் நீ அருளிச் செய்வாயாக! [யானும், நின் அடியவனாக ஆகிடுமாறு எனக்கும் அருள்வாயாக' என்பது கருத்து]

# 33. குழைத்த பத்து

## (ஆத்தும நிவேதனம்)

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[திருப் பெருந்துறையிலே, அடிகள் அருளிச்செய்த செய்யுட்கள் இவை. இறைவனின் திருவருளை வேண்டி, ஆன்மாவை அவனடிகளிற் சமர்ப்பித்து நிற்கும், சிறந்த நிலையினைப் பொருளாகக் கொண்டன.]

குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய்
காவாய் உடையாய் கொடுவினையேன்
உழைத்தா லுறுதி யுண்டோதான்
உமையாள் கணவா எனைஆள்வாய்
பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ
பிறைசேர் சடையாய் முறையோவென்
றழைத்தால் அருளா தொழிவதே
அம்மா னேஉன் னடியேற்கே. 1

என்னை ஆளாக உடையவனே! பண்டைத் தீவினையாகிய வியாதியானது வந்து, என்னை வருத்தி மெலிவித்தால், அதனின்றும் நீ என்னைக் காப்பாற்றுவாயாக! கொடிய வினைகளைச் செய்தலை உடையவனான நான், முயற்சித்தால், அதனால் எனக்கும் உய்திபெறுவதற்கான உறுதியும் உளதாகுமோ? உமையாளின் கணவனே! என்னைக் கருணை காட்டி ஆண்டருள்வாயாக. நான் பிழைத்தால், நீ அதனைப் பொறுத்தருளுதலும் வேண்டாமோ? 'பிறையானது சேர்ந்திருக்கின்ற சடாபாரத்தை உடையவனே! இதுவும் முறையோ?' என்று ஓலமிட்டு அழைத்தால், நின் அடியவனாகிய எனக்கு, இரங்கி வந்து அருள்செய்யாது நீங்குவது, அம்மானே! நினக்கே ஒரு தகுதியாகுமோ? [உறுதி-நன்மை. குழைத்தல்-மெலிவித்தல்.]

அடியேன் அல்லல் எல்லாம்முன் அகல ஆண்டாய் [என்றிருந்தேன்
கொடியே ரிடையாள் கூறஎங் கோவே ஆவா என்றருளிச்
செடிசேர் உடலைச் சிதையாத தெத்துக் கெங்கள் சிவலோகா
உடையாய் கூவிப் பணிகொள்ளா தொறுத்தால் ஒன்றும் [போதுமே. 2

*'அடியனேனுடைய துன்பங்கள் எல்லாம் நீங்கும்படியாக, முன்னமே எழுந்தருளி வந்து, நீ ஆட்கொண்டாய்' என்று யானும் கருதியிருந்தேன். கொடிபோலும் அழகிய இடையினை உடையவளாகிய உமாதேவியை, நின் ஒரு பாகத்தே உடையவனே! எம் கோமானே! 'ஐயோ' வென்று அருளிச் செய்து, தீவினை சேர்வதற்கு இடமாகிய என் உடலினை, இதுகாறும் அழிக்காததுதான் எதற்காகவோ? எங்கள் சிவலோகனே! எம்மை அடிமையாக உடையவனே! என்னைக் கூவியழைத்து ஏவல் கொள்ளாது, நீயே என்னை இவ்வாறு வருத்தினால், அது ஒன்றே எனக்குப் போதும், பெருமானே! ['என்னையும் வருத்தாது ஆட்கொள்வாயாக!' என்பது கருத்து.]*

ஒன்றும் போதா நாயேனை உய்யக் கொண்ட நின்கருணை
இன்றே இன்றிப் போய்த்தோதான் ஏழை பங்கா எங்கோவே
குன்றே அனைய குற்றங்கள் குணமா மென்றே நீகொண்டால்
என்றான் கெட்ட திரங்கிடாய் எண்தோள் முக்கண் எம்மானே. 3

*ஏழை பங்காளனே! எம் இறைவனே! ஒன்றுக்கும் பற்றாத நாயினேனையும் உய்யுமாறு ஆட்கொண்டருளின நின் கருணையானது, இன்று எங்குப்போய்விட்டதோ? மலையைப்போன்ற பெருங்குற்றங்களையும் குணமாகுமென்று கருதி நீ ஏற்றுக் கொண்டால், நினக்கு என்னதான் கெட்டுவிடுமோ? எட்டுத் தோள்களையும், மூன்று கண்களையும் உடைய எம்மானே! எனக்கும் இரங்கி அருள்வாயாக!*

மானேர் நோக்கி மணவாளா மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகஎன் தனைநூக்கி உழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனால் அடியேன் அறியாமை அறிந்து நீயே அருள்செய்து
கோனே கூவிக் கொள்ளுநாள் என்றென் றுன்னைக்கூறுவதே. 4

*மானினது நோக்கினையொத்த பார்வையினையுடைய, உமையாளின் மணாளனே! இறைவனே! நின் மேன்மையினை மறக்கச்செய்து, இவ்வுடம்பின்கண்ணே சென்று புகுமாறு என்னைத் தள்ளி, அதிற்கிடந்து உழலுமாறுஞ் செய்வித்து விட்டனை! ஆனால், அடியேனின் அறியாமையினை அறிந்து, நீயே வந்து அருளிச்செய்து, கோமானே! என்னையும் நின்பால் அழைத்துக்கொள்ளும் நாள் என்று வருமோவென்றுதான், யானும் நின்னைப் புகழ்வதெல்லாம்! [நூக்கி-தள்ளி.]*

கூறும் நாவே முதலாகக் கூறுங் கரணம் எல்லாம்நீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதும்நீ [க்கில்
வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை உன்னை விரித்துரை
தேறும் வகைஎன் சிவலோகா திகைத்தால் தேற்ற
[வேண்டாவோ. 5

*சிவலோக நாதனே! நின்னைப் புகழுகின்ற நாவையே முதலாகக் கொண்டு, சொல்லுகின்ற பிற கரணங்கள் எல்லாமும் நீயே யாவாய்! என் திகைப்பிற்குக் காரணமும் நீயே! யான் தெளிவடையும் வழியும் நீயே! தீமை நன்மை ஆகியன முழுவதும் நீயே! நினக்கு வேண்டுவதோர் தன்மை என, யாதுமே இல்லை! உண்மையாக நின்னை விரித்து உரைக்கில், இன்ன தன்மையன் எனத் தெளியும் வகைதான் யாதோ? அதனைத் தெரியாது யாமும் திகைத்தால், நீ எம்மைத் தேற்றியருளல் வேண்டாமோ? [எல்லாம் நீயாயிருந்தால், யான் நின்னை யாதெனத் தெளிவேன்? யான் தெளியவியலாது திகைத்தால், நீயே என்னைத் தேற்றல்வேண்டாமா?' என்பது கருத்து.]*

வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி என்னைப்
[பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய் யானும் அதுவே
[வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில் அதுவும் உன்றன்
[விருப்பன்றே. 6

*ஆன்மாக்கள் விரும்புவதற்கு உரியன இவையென்று அறிவோனும் நீயே! அவ்வாறே அவை விருப்புற்று வேண்டுதலும், அவற்றால் வேண்டப்பெற்றன முழுவதையும் அவ்வாறே அவற்றுக்குக் கொடுப்பவனும் நீயே! நின்னைப் போற்றுகின்ற பிரம விட்டுணுக்களுக்கும் காண்பதற்கு அரியையாக இருப்பவனும் நீயே! அப்படிப்பட்ட பெருமையினை உடையையான நீ, என்னையும் விரும்பி வந்து, நினக்கு ஏவலும் கொண்டனை! நான் விரும்பி, நீ எதனை எனக்கு அருளிச் செய்தாய்? யானும், நீ கருதிய அதனையே விரும்புதல் அல்லாமல், வேறாக விரும்பும் தன்மையென ஒன்றும் உளதென்றால், அதுவும் நினது விருப்பமேயாகும் அல்லவோ? ['நின் விருப்பமே என் விருப்பமும் ஆகும்' என்பது கருத்து.]*

அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமுங்
குன்றே அனையாய் என்னைஆட் கொண்ட போதே
[கொண்டிலையோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ எண்தோள் முக்கண்
[எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே. 7

*எட்டுத் தோள்களையும், மூன்று கண்களையும் உடைய, எம் பெரியோனே! என்னை வந்து நீ அடிமைகொண்ட அந் நாளிலேயே, என் ஆவியும், உடலும், உடைமையும் ஆகிய அனைத்தையும், குன்றே அனையாய்! நீயும் ஏற்றுக் கொள்ள வில்லையோ? அங்ஙனமாக, இன்று எனக்கு ஓர் இடையூறு என்பதும் உளதாகுமோ? நன்மையே செய்வாய் ஆயினும், தீமையே செய்வாய் ஆயினும், இந்தக் காரியத்துக்குத் தலைவன் யானோ? ['அதுவும் நினது திருவுளக் கருத்தே அல்லவோ' என்பது கருத்து. அதனை மாற்றுவதற்கு யான் யாது செய்வேன் அப்பனே' என்பது முறையீடு.]*

நாயிற் கடையாம் நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான் என்ன தோஇங் கதிகாரங்
காயத் திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய்
[கண்ணுதலே. 8

*நாயினும், கீழ்ப்பட்டதான ஒரு நாயினைப் போல்பவனான என்னையும், விரும்பி வந்து, நீயே அந்நாளில் ஆட்கொண்டனை! மாயமான என் பிறவியினை, நின்வசமே வைத்துவிட்டு சும்மாவிருக்கின்ற அதனை அல்லாமல், அதனைப்பற்றி ஆராயக் கடவதும் யான்தானோ? இவ்விடத்தே, அதனை நிர்ணயிக்கின்ற அதிகாரமும் என்னுடையதோ? என்னை உடலிடத்தே இடுவாயோ? அன்றி நின் திருவடிக்கீழ் இருக்க வைப்பாயோ? நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானே! எதுவும் நின் விருப்பமே அல்லவோ? ['வினை வசத்தால் உயிர்கள் பிறவி எடுக்குமாயினும், அவற்றை விதிப்பவன் சிவனே என்பதனைக் குறிப்பிடுகிறது' இச் செய்யுள். 'பிறவியின் தோற்றமும் நீக்கமும் இறைவனின் திருக்குறிப்பின்படியே நடப்பன' என்பதனையும் இதனிடத்துக் கூறினார்.]*

கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர
எண்ணா திரவும் பகலும்நான் அவையே எண்ணும் அதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ அடிமைசால அழகுடைத்தே. 9

*கண்பொருந்திய நெற்றியினை உடையவனே! என் கண்கள் களிப்புக் கொள்ளும்படியாக நின் திருவடிகள் இரண்டையும் அன்று தரிசித்தேன். வேறொன்றையும் எண்ணாமல், இரவும் பகலும், யான் அவற்றையே எண்ணியும் இருந்தேன். அதுவுமல்லாமல், மண்ணின்மீது யாக்கையை விட்டு நீங்கும் வழியையும், நின்பால் வந்து, நின் திருவடிக்கீழ்ச் சேர்ந்திருக்கும் நெறியையும், அண்ணலே! நின் தொண்டனாகிய யான் நினைக்கவும் கடவேனோ? அங்ஙனம் யான் நினைப்பின், அதுவும் பெரிதும் அழகினை உடையதுதான்! ['அது அழகாகாது' என்பது கருத்து.]*

அழகே புரிந்திட் டடிநாயேன் அரற்று கின்றேன் உடையானே
திகழா நின்ற திருமேனி காட்டி என்னைப் பணிகொண்டாய்
புகழே பெரிய பதம்எனக்குப் புராண நீதந் தருளாதே
குழகா கோல மறையோனே கோனே என்னைக்
[குழைத்தாயே. 10

*உடையவனே! அழகனே! நின் அழகையே காண்பதற்கு விரும்பி, நின் அடிமையாகிய நாயினேனும் வாய்விட்டு அரற்றுகின்றேன். விளங்காநின்ற நின் திருமேனியினைக் காட்டி, நீ என்னையும் முன்னாளிலே தொண்டனாக்கிக் கொண்டனை. புகழாலே பெரியவான நின் திருவடிகளைப், பழையவனே! நீ எனக்குத் தந்தருளாமல், அழகான வேதியனே! கோமானே! என்னையும் மனம் குழையும்படியாகச் செய்தனையே? ['இதுவும் நினக்கு முறையோ?' என்பது முறையீடு.]*

# 34. உயிருண்ணிப் பத்து

## சிவானந்தம் மேலிடுதல்

(கலி விருத்தம்)

*[திருப் பெருந்துறையில், மணிவாசக அடிகளால் அருளிச் செய்யப்பெற்றது இப் பதிகம். சிவானந்தம் மேலிடுதலாகிய பொருண்மையினை உடையது.]*

**பைந்நாப்பட அரவேரல்குல் உமைபாகம தாய்என்**
**மெய்ந்நாள்தொறும் பிரியாவினைக் கேடாவிடைப் பாகா**
**செந்நாவலர் பரசும்புகழ்த் திருப்பெருந்துறை உறைவாய்**
**எந்நாட்களித் தெந்நாள்இறு மாக்கேன்இனி யானே. 1**

*செவ்விய நாவலர்கள் போற்றித் துதிக்கின்ற புகழினை உடைய, திருப்பெருந்துறையிலே வீற்றிருப்பவனே! பசிய நாவைக் கொண்ட, பாம்பினது படத்தைப்போன்ற அழகினை யுடைய அல்குலினை உடையவளான, உமையம்மையினை ஒரு பாகத்தேயாகக் கொண்டு எழுந்தருளிவந்து, எனது உடம்பை விட்டுத் தினந்தோறும் நீங்காத வினையினைத் தொலைத்து அருள்கின்றவனே! இடப ஊர்தியானே! இனி, யான், எந்த நாளிலே மகிழ்ந்து, எந்த நாளிலே இறுமாந்திருப்பேனோ? ['அதனை எனக்கும் அருளிச் செய்வாயாக!' என்பது முறையீடு. 'அல்குல்'-இடைநடுவாகத், தேர்த்தட்டுப்போல மேலும் கீழும் உள்ளடக்கியதான உடலின் பகுதி.]*

**நாஞரடி யணைவாஞெரு நாய்க்குத் தவிசிட்டிங்**
**கூஞருடல் புகுந்தான்உயிர் கலந்தான்உளம் பிரியான்**
**தேஞர்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை உறைவான்**
**வானோர்களும் அறியாததோர் வளமீந்தனன் எனக்கே. 2**

*வண்டுகள் மொய்க்கும் சடைமுடியினை உடையவனான, நிலைபெற்ற திருப்பெருந்துறையிலே வீற்றிருக்கும் சிவபெருமான், யான், தனது திருவடிகளை அடையும் பொருட்டாக, ஒரு நாயனையேனாகிய எனக்கும் இருக்கை அளித்து, இவ்விடத்தே, எனது புலால் நிறைந்த உடம்பிலும் புகுந்தவனாகி என் உயிரினோடும் அன்று கலந்தருளினான். எனக்கு, வானோர்களும் அறியாத ஒப்பற்ற தனது பேரின்பச் செல்வத்தையும் தந்தருளினான். அதனை அடைதற்கு, நான் என்னதான்*

தகுதி உடையேனோ? ['அவன், தன் கருணையினாலேயே எழுந்தருளி வந்து தமக்கும் அருளினான்' என்பது கருத்து.]

எனை நானென்ப தறியேன்பகல் இரவாவதும் அறியேன்
மனவாசகங் கடந்தான்எனை மத்தோன்மத்த னாக்கிச்
சினமால்விடை உடையான் மன்னு திருப்பெருந்துறைஉறையும்
பனவன்னெனைச் செய்தபடி றறியேன்பரஞ் சுடரே. 3

மனத்தையும் சொல்லையும் கடந்தவனான பெருமானும், வலிமையுடைய திருமாலைக் காளையூர்தியாகக் கொண்டவனும், நிலைபெற்ற திருப்பெருந்துறைக்கண்ணே வீற்றிருக்கும் வேதியனும், பரஞ்சுடரும் ஆகிய பெருமான் சிவனே ஆவான். அவன், என்னை மிகுதியான களிப்புடையவனாகச் செய்த சூழ்ச்சியினை, யானும் அறியேன். அதன்பின், என்னை 'நான்' என்பதனையும் அறியாதே போயினேன்! பகலும் இரவும் என் பவைகளையும் நான் அறியாமற் போயினனே! ['எனை நான் என்பதறியேன்' என்பதற்கு, 'ஆன்மா தன்னை உணராது இருந்த நிலையிலே யானும் இருந்தேன்' எனவும் பொருள் கூறுவர்.]

வினைக்கேடரும் உளரோபிறர் சொல்லீர்வியன் உலகில்
எனைத்தான்புகுந் தாண்டான்என தென்பின்புரை யுருக்கிப்
பினைத்தான்புகுந் தெல்லேபெருந் துறையில்உறை பெம்மான்
மனத்தான் கண்ணின் அகத்தான்மறு மாற்றத்திடை யானே. 4

திருப்பெருந்துறையிலே வீற்றிருக்கின்ற சிவபெருமான், தானே எழுந்தருளி வந்து என்னையும் ஆண்டுகொண்டனன். எனது என்பின் உட்டுளைகளையும் உருகச் செய்தனன். மேலும் வந்து, என் மனத்திடத்தானும், கண்ணிடத்தானும், மற்றும் சொல்லிடத்தானுமாக ஆயினான். இவனைப்போல, இப் பரந்த உலகின்கண், வினையை ஒழிப்பவர்களும் பிறர் யாரேனும் உள்ளனரோ? இருந்தால், உலகத்தீரே எமக்கு அதனைச் சொல்வீர்களாக!

பற்றாங்கவை அற்றீர்பற்றும் பற்றாங்கது பற்றி
நற்றாங்கதி அடைவோமெனிற் கெடுவீரோடி வம்மின்
தெற்றார்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை இறைசீர்
கற்றாங்கவன் கழல்பேணின ரொடுங்கூடுமின் கலந்தே. 5

இறைவனை நாடுதலின்றிக், கெட்டொழிகின்ற தன்மையரே! உலகப் பற்றுக்களாகிய அவைகளை ஒழித்தீராய், பற்ற வேண்டிய ஆதரவான இறையடியினையே பற்றிக்கொண்டவராய், நல்லதாகிய கதியினை நாமும் அடைவோம் என்பீர்களானால், இங்கே ஓடிவாருங்கள். அழகினை உடையதான சடை

முடியினை உடையவனும், புகழால் நிலைபெற்ற திருப் பெருந் துறைக்கு இறையவனும் ஆகிய, சிவபெருமானது சிறப்புக் களையே கற்று, அவ்வாறே. அவனுடைய திருவடிகளைப் பேணினவராகிய அடியவரோடும் கலந்து, நீங்களும் ஒன்று கூடுவீர்களாக! ['உய்யவேண்டுமாயின், இறைபுகழைப் பேசக் கற்றவராகி, இறைவனது அடியவரோடும் கூடுதல் வேண்டும்' என்பது கருத்து. தெற்று-அழகுடையது.]

கடலின்திரை யதுபோல்வரு கலக்கம்மலம் அறுத்தென்
உடலும்என துயிரும்புகுந் தொழியாவண்ணம் நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய திருப்பெருந்துறை உறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள் பரன்தான்செய்த படிறே. 6

ஒளிபரப்பும் கதிர்களையுடைய பிறையினைச் சூடியவனும், திருப் பெருந்துறையிலே வீற்றிருக்கின்ற, விரிந்த சடையினையே தனக்குரிய மகுடமாக உடைய, எங்கள் மேலோன் செய்த வஞ்சகமானதுதான் என்னே? கடலலைபோல ஓயாது வருகின்ற, கலங்குதற்கே ஏதுவாகிய என் மலத்தினைச் சேதித்து, எனது உடம்பினும் உயிரினும் உட்புகுந்து, அவற்றினின்றும் நீங்காதவண்ணமாக, அவன் நிறைந்தனனே! ['வஞ்சகம்' என்றது, இறைவன், தான் வேண்டாத அப்போதிலேயே வந்து, தன்னை அறியாதேயே அடிமை கொண்டதனை.]

வேண்டேன்புகழ் வேண்டேன் செல்வம் வேண்டேன் மண்ணும் [விண்ணும்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம் வேண்டார்தமை நாளும்
தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு திருப்பெருந்துறை [இறைதாள்
பூண்டேன்புறம் போகேன்இனிப் புறம்போகலொட் டேனே. 7

புகழினையும், செல்வங்களையும், மண்ணுலக வாழ்வையும் வானகத்துப் போகங்களையும், நான் அடைவதற்கு விரும்பிலேன். பிறப்பும், இறப்புமாகிய இவற்றையும் வேண்டிலேன். சிவத்தை விரும்பாதவர்களை எந்நாளும் யான் தொடக்கூட மாட்டேன். நிலைபெற்ற திருப் பெருந்துறை இறைவனது திருவடிகளைச் சென்று அடைந்தேனாகி, அவற்றை என் தலைமேற் பூண்டும் கொண்டேன். இனி அதனின்றும் புறம்போகவே மாட்டேன், அத்திருவடிகள், என்னைக் கைவிட்டுப் புறத்தே செல்லுவதற்கும் யான் விட மாட்டேன்!

கோற்றேன்எனக் கென்கோகுரை கடல்வாய்அமு தென்கோ
ஆற்றேன்எங்கள் அரனே அரு மருந்தேஎன தரசே
சேற்றார்வயல் புடைசூழ்தரு திருப்பெருந் துறை உறையும்
நீற்றார்தரு திருமேனிநின் மலனேஉனே யானே. 8

*எங்கள் சிவ பெருமானே! அரு மருந்தே! அரசே! சேறு நிறைந்த வயல்கள் பக்கங்களிலே சூழப்பெற்றுள்ள, திருப் பெருந்துறையிலே வீற்றிருக்கின்ற, திரு வெண்ணீற்றால் நிறைந்த திருமேனியினை உடைய, நின்மலனே! நீ எனக்குத் தந்தருளிய பேரின்பத்தினைக், கொம்புத்தேன் என்பேனோ? ஒலிக்கும் திருப்பாற்கடலிடத்தே அன்றெழுந்த அமுதம் என்பேனோ? எங்ஙனம் அதனைச் சொல்லுவதென, அதற்கும் ஆற்றாதவனாக, யானும் உள்ளேனே? ['ஆற்றேன்' என்பதற்கு 'நின்னைப் பிரிந்திருத்தற்கு ஆற்றேன்' எனவும் பொருள் கொள்வார்கள்.]*

எச்சம்அறி வேன்நான்எனக் கிருக்கின்றதை அறியேன்
அச்சோஎங்கள் அரனேஅரு மருந்தேஎன தமுதே
செச்சைமலர் புரைமேனியன் திருப்பெருந் துறை உறைவான்
நிச்சம்என நெஞ்சில்மன்னி யானாகிநின் றானே. 9

*வெட்சி மலரினைப்போன்ற சிவந்த திருமேனியினை உடையவனாகத், திருப்பெருந்துறையிலே உறையும் பெரு மானாக, என் நெஞ்சிடத்தே நிலைபெற்று, நானேயாகி நிற்பவனாக விளங்குபவனே! எங்கள் அரனே! எங்கள் அருமருந்தே! அமுதே! நான், இன்னமும் பெறுவதற்கான மிச்சத்தை நன்றாகவே அறிவேன், ஆனால், யான் இருக் கின்ற தீயதான தன்மையினையோ அறியேன். இதுவும் ஓர் அதிசயமே! ['யானாகி நின்றான்' என்றது, வேற்றுமையின்றிக் கலந்து நின்ற நிலையினை. 'எச்சம்' என்றது, முத்தியினை. இருக்கின்ற தன்மையாவது, பிறவி வந்து அடைந்த பழவினைப் பயன்.]*

வான்பாவிய உலகத்தவர் தவமேசெய அவமே
ஊன்பாவிய உடலைச்சுமந் தடவிமர மானேன்
தேன்பாய்மலர்க் கொன்றைமன்னு திருப்பெருந்துறை உறைவாய்
நான்பாவியன் ஆனால்உனை நல்காயென லாமே. 10

வானிடத்தே பரவிய உலகத்தே உள்ளவர்களும் தவத்தையே செய்யாநிற்க, யானோ, வீணாக ஊன்செறிந்த உடலினையே சுமந்தவனாகக், காட்டுமரத்தைப்போலப் பயனற்றவனும் ஆயினேனே! தேன் பெருகிப் பாயா நின்ற, கொன்றைமலர் நிலைபெற்றிருக்கும். திருப் பெருந்துறையிடத்தே வாழ்பவனே! 'நான் பாவியேனே யானாலும், எனக்கும் இரங்கி, நின்னைத் தந்தருள்வாயாக' என வேண்டுதல், எனக்கு என்றைக்குத்தான் கைகூடுவதோ? ['நான், பாவியேனே ஆயினும், எனக்கும் இரக்கங்காட்டி நீ அருளிச் செய்தல் வேண்டும்' என்பது முறையீடு.]

# 35. அச்சப் பத்து

## ஆனந்தம் உறுதல்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[மணிவாசக அடிகளால் தில்லைப்பதியில் வைத்து அருளிச் செய்யப் பெற்றது இது. சிவநேயத்திலே திளைத்த அடிகள், தாம் கண்டு அஞ்சிய சிலரைக் குறித்து, இதனிடத்தே கூறுகின்றார்,]*

**புற்றில்வாள் அரவும் அஞ்சேன் பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்**
**கற்றைவார் சடைஎம் அண்ணல் கண்ணுதல் பாதம் நண்ணி**
**மற்றும்ஓர் தெய்வந் தன்னை உண்டென நினைந்தெம் பெம்மாற்**
**கற்றிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 1**

*கற்றையான நெடிய சடையினை உடைய, எமது பெருமானாகிய கண்ணுதலின், திருவடிகளை அடைந்த பின்பும், வேறாக ஒரு தெய்வத்தினையும் உண்டென்று நினைத்து, எம் பெருமானை அறிந்திராதவர்களைக் காணின்,யான் அஞ்சுகின்ற வகையினைப் போலப். புற்றிடத்தே வாழுகின்ற ஒளியினையுடைய பாம்பினுக்கும் அஞ்சமாட்டேன்! பொய்ம்மையாளர்களது மெய்போலும் பசப்புக்களுக்கும் அஞ்சமாட்டேன்!*

**வெருவரேன் வேட்கை வந்தால் வினைக்கடல் கொளினும் அஞ்சேன்**
**இருவரால் மாறு காணா எம்பிரான் தம்பி ரானாம்**
**திருவுரு அன்றி மற்றோர் தேவரெத் தேவ ரென்ன**
**அருவரா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 2**

*பிரம விட்டுணுக்களாகிய இருவராலேயும், மாறுபாடுற்றுக், காண முயன்றும் இயலாதாகி நின்ற எம்பெருமானும், தனக்குத்தானே தலைவனுமாகிய, அவனது அருமையான திருவுருவத்தைக் கண்டு களிப்பதல்லாது, மற்றொரு தேவர் என்ன தேவர்கள் எனக்கூறி அருவருக்காத அறியாமை உடையவரைக் கண்டால், நான் அஞ்சுகின்றதனைப் போல, ஆசைவந்தாலும் அஞ்சேன்! வினைக் கடலானது என்னைச் சூழ்ந்து கொண்டாலும் அஞ்சமாட்டேன்!*

**வன்புலால் வேலும் அஞ்சேன் வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்**
**என்பெலாம் உருக நோக்கி அம்பலத் தாடு கின்ற**
**என்பொலா மணியை ஏத்தி இனிதருள் பருக மாட்டா**
**அன்பிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 3**

*அன்பர்களது எலும்புகள் எல்லாம் உருகும்படியாகத் திருநோக்கம் செய்து, அம்பலத்தே கூத்தியற்றி நிற்கின்ற, என் தொளைபடாத மாணிக்கத்தைத் துதித்து, அவனது அருளமுதினை இனிதாகப் பருகமாட்டாத அன்பற்றவர்களைக் கண்டால் யான் அஞ்சும்வகையாக, வலிய புலால் தங்கிய வேலினைக் காணினும் அஞ்சேன்! வளையணிந்த கைகளை யுடைய மாதரது கடைக்கண் நோக்கிற்கும் அஞ்சமாட்டேன்!*

கிளியனார் கிளவி அஞ்சேன் அவர்கிறி முறுவல் அஞ்சேன்
வெளியநீ றாடும் மேனி வேதியன் பாதம் நண்ணித்
துளியுலாம் கண்ண ராகித் தொழுதழு துள்ளம் நெக்கிங்கு
அளியிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 4

*வெண்மையான திருவெண்ணீற்றினை பூசிக்கொண்டுள்ள திருமேனியினையுடைய, அந்தணனது திருவடிகளை அடைந்து, நீர்த்துளிகள் சிந்துகின்ற கண்களை உடையவராகித், தொழுதும் அழுதும் மனம்நெகிழ்ந்து, இவ்விடத்தில் கனி வில்லாது இருப்பவர்களைக் கண்டால், நான் அஞ்சும் அளவிற்குக், கிளியைப்போன்ற சொற்களினரான மாதரது பேச்சிற்கும் அஞ்சேன்! அவரது வஞ்சகத்தோடும் கூடிய புன்முறுவலுக்கும் அஞ்சமாட்டேன்!*

பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியி னான்தன் தொழும்ப ரோடழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்துங் காணாச் சேவடி பரவி வெண்ணீறு
அணிகிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 5

*துண்டப் பிறையாகிய அணியினை உடையவனாகிய சிவபிரானது, தொண்டர்களோடும் பொருந்தி, அந்தத் திருமால், செறிந்த நிலத்தைப் பிளந்து சென்றும் காணாத செவ்விய திருவடிகளைத் துதித்துத், திருவெண்ணீற்றினை அணியாதவர்களைக் கண்டால் யான் அஞ்சும் அளவிற்கு, நோய்களெல்லாம் வந்தாலும் அஞ்சேன்! தொடர்ந்து வருகிற பிறப்பு இறப்பு ஆகியவற்றுக்கும் அஞ்ச மாட்டேன்!*

வாளுலாம் எரியும் அஞ்சேன் வரைபுரண் டிடினும் அஞ்சேன்
தோளுலாம் நீற்றன் ஏற்றன் சொற்பதம் கடந்த அப்பன்
தாளதா மரைக ளேத்தித் தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 6

*தோள்களிலே விளங்குகின்ற திருநீற்றினை உடையவனும் இடபவாகனத்தை உடையவனும், சொல்லினது அளவையும் கடந்தவனுமாகிய அப்பனது திருவடித் தாமரைகளைப் போற்றிப், பெருமை பொருந்திய மலர்களாலே அருச்சித்துப்*

புனைந்து, மனம் உருகுகின்ற அடிமைகளாகஇல்லாதவர்களைக் கண்டால் நான் அஞ்சும் அளவிற்கு, ஒளிவீசுகின்ற நெருப்புக்கும் அஞ்சேன்! மலையே புரண்டுவந்தாலும் அதற்கும் அஞ்சமாட்டேன்!

தகைவிலாப் பழியும் அஞ்சேன் சாதலை முன்னம் அஞ்சேன்
புகைமுகந் தெரிகை வீசிப் பொலிந்தஅம் பலத்து ளாடும்
முகைநகைக் கொன்றை மாலை முன்னவன் பாதமேத்தி
அகம்நெகா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே. 7

புகையைக் கொண்ட நெருப்பினைக் கைக்கொண்டு வீசி, விளங்கா நின்ற பொன்னம்பலத்திலே ஆடுகின்ற, முகையாகிய ஒளியோடுங் கூடிய கொன்றைமலர் மாலையினை அணிந்த, முன்னவனது திருவடிகளைத் துதித்து மனம் நெகிழாதவரைக் கண்டால், நான் அஞ்சும் அளவிற்குத், தடுத்தற்கரிய பெரும்பழியினுக்கும் அஞ்சேன்! இறப்பதற்கு முன்பும் பயப்படமாட்டேன்! [தகைவிலாப் பழி-பெரும் பழி.]

தறிசெறி களிறும் அஞ்சேன் தழல்விழி உழுவை அஞ்சேன்
வெறிகமழ் சடையன் அப்பன் விண்ணவர் நண்ண மாட்டாச்
செறிதரு கழல்கள் ஏத்திச் சிறந்தினி திருக்க மாட்டா
அறிவிலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 8

மணம் கமழுகின்ற சடாபாரத்தை உடையனும், என் அப்பனுமான சிவபிரானின், வானவரும் அடையமாட்டாதவும், நெருங்கிய கழல்களை உடையவுமான திருவடிகளைத் துதித்துச் சிறப்படைந்து, இனிதாக இருக்கமாட்டாத அறிவிலிகளைக் கண்டால், யான் அஞ்சுகின்ற அளவிற்குத், தறியிலே கட்டப்பெறுவதான களிற்றினிக்கும் அஞ்சேன்! நெருப்புக் கங்கினைப் போன்ற விழிகளையுடைய புலியினுக்கும் அஞ்சமாட்டேன்!

மஞ்சுலாம் உருமும் அஞ்சேன் மன்னரோ டுறவும் அஞ்சேன்
நஞ்சமே அமுத மாக்கும் நம்பிரான் எம்பி ரானாய்ச்
செஞ்செவே ஆண்டு கொண்டான் திருமுண்டம் தீட்ட மாட்டாது
அஞ்சுவா ரவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே. 9

பாற்கடலுள்ளே அன்று எழுந்த நஞ்சினையே அமுதமாக்கிக் கொண்டவனும், நமது பெருமானும், எம்பிரானாகிச் செம்மையாக என்னையும் ஆண்டு கொண்டவனும் ஆகிய சிவபிரானது, திருநீறாகிய செல்வத்தைத் தம் நெற்றியிலே தீட்டமாட்டாமல், அஞ்சுவோராகிய அவர்களைக் கண்டால் யான் அஞ்சும் அளவிற்கு, மேகத்திடத்தே

*உண்டாகி நிலவுகிற இடிக்கும் அஞ்சேன்! அரசருடைய நட்பினுக்கும் அஞ்சமாட்டேன்! [அரசரது நட்பு ஆபத்தானது; அதனால், அதற்கும் அஞ்சேன் என்றனர்.]*

**கோணிலா வாளி அஞ்சேன் கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்**
**நீணிலா அணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு**
**வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்த மாட்டா**
**ஆணலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே.** 10

*நீண்ட நிலவாகிய அணியினை உடையவனை எண்ணி, உள்ளம் நைந்து உருகாநின்று, ஒளி நிலைபெற்றிருக்கின்ற கண்கள் நீரினைச் சொரிய, வாழ்த்தியும் வணங்கியும் நின்று துதிக்கமாட்டாத ஆண்மை இல்லாதவர்களைக் கண்டால், யான் அஞ்சும் அளவிற்குக், கோணுதலில்லாத பாணத்தைக் கண்டும் அஞ்சேன்! கூற்றுவனது சீற்றத்தை கண்டும் அஞ்ச மாட்டேன்! [இறைவழிபாட்டினும் சிறந்த ஆண்மை யாதுமின்று என்பார், அவ்வாறு வழிபடாதவரை, 'ஆண் அல்லாதவர்' என்றனர்.]*

# 36. திருப் பாண்டிப்பதிகம்

## சிவானந்த விளைவு

(கட்டளைக் கலித்துறை)

*[இதுவும், அடிகளால் திருப் பெருந்துறையில் செய்யப் பெற்றதே யாகும். சிவபெருமான் ஒருவனையே உளங் கொண்டு நினைந்திருத்தலாகிய, சிவானந்தப் பேற்றின் விளைவுபற்றிக் கூறுவது இது.]*

**பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற் காரமுதாம்**
**ஒருவரை ஒன் றுமி லாதவ ரைக்கழற் போதிறைஞ்சித்**
**தெரிவர நின் றுருக் கிப்பரி மேற்கொண்ட சேவகனார்**
**ஒருவரை யன் றி உருவறி யாதென்றன் உள்ளமதே. 1**

*பெருமலையாகிய இமவானது புதல்வியைத் தமது இடப் பாகமாக உடையவரைப், பாண்டியனுக்குப் பெறுவதற்கு அரிதான அமுதமாகித் திகழ்ந்த ஒப்பற்றவரை, குறிகுணம் ஆகியன எதுவும் இல்லாதவரைத் திருவடிமலர்களை வணங்கித், தோன்றும்படியாக நின்று, மனத்தை உருகச்செய்து, குதிரை மேற்கொண்டு வந்த மாவீரராகிய ஒருவரை யல்லாமல், என் உள்ளமானது, பிற எவரின் உருவத்தையும் அறியவும் மாட்டாது! [பிற கடவுளரின் உருவினை அறியமாட்டாதெனவே, அவரை நினைத்தலும் போற்றுதலும் செய்யாதென்பதும் கூறினர்.]*

**சதுரை மறந்தறி மால்கொள்வர் சார்ந்தவர் சாற்றிச்சொன்னோம்**
**கதிரை மறைத்தன்ன சோதி கழுக்கடை கைப்பிடித்துக்**
**குதிரையின் மேல்வந்து கூடிடு மேற்குடி கேடுகண்டீர்**
**மதுரையர் மன்னன் மறுபிறப் போட மறித்திடுமே. 2**

*கதிரவனை ஒளி மழுங்கச்செய்து மறைத்தாற்போன்ற பேரொளியானது, மூவிலை வேலினைக் கைக்கொண்டதாகிக் குதிரையின் மேலாக எழுந்தருளிவந்து கூடிடுமாயின், நமது பிறப்பு நாசமாகும். அதனைக் கண்டவர்கள், தமது திறமையை மறந்து, ஞானப்பித்தும் கொள்ளுவார்கள். இதனைப் பறைசாற்றினாற்போல யாம் சொன்னோம், மதுரையார்களின் கோமானான அவன், மறுபிறப்பினை மேலும் நிகழ

*விடாதபடி தடுத்து விடுபவனும் ஆவான்! [குடி கெடும்-பிறப்புக் கெடும். கழுக்கடை-சூலம்.]*

**நீரின்ப வெள்ளத்துள் நீந்திக் குளிக்கின்ற நெஞ்சங்கொண்டீர்**
**பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்**
**ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு தொண்டரை உள்ளங்கொண்டார்**
**பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ லேசென்று பேணுமினே. 3**

*நீவிர், 'இன்ப வெள்ளத்தினுள்ளே நீந்திக் குளிக்க வேண்டும்' என்கின்ற மனத்தினை உடையவர்களானால், பூமியில் உள்ளவரை எல்லாமே தன் இன்பவெள்ளத்தே அகப்படுத்திக் கொள்ளும் வண்ணம், குதிரைமேல் அந்நாளிலே ஏறிவந்த பாண்டிப்பிரானின், ஒப்பற்ற ஆநந்தப் பெருக்கின் உருவங்கொண்டு தொண்டர்களை மனங்கவர்ந்து பெருக்கிய அந்தச் சிவானந்தப் பேரின்ப வெள்ளத்துள்ளேயே சென்று, அவனது கழல்செறிந்த திருவடிகளையே வழிபடுவீராக!*

**செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் தென்னன்நன்னாட்டு**
**இறைவன் கிளர்கின்ற காலமிக் காலம்எக் காலத்துள்ளும்**
**அறிவொண் கதிர்வாள் உறைகழித் தானந்த மாக்கடவி**
**எறியும் பிறப்பை எதிர்ந்தார் புரள இருநிலத்தே. 4**

*பாண்டியனது நல்ல நாட்டினிடத்தே, செறிகின்ற பிறவிக்கு நல்லவர்களாக இருப்பவர்கள் செல்லாதீர்கள். இக்காலமானது, இறைவன், அவ்விடத்தே அரசியற்றி விளங்குகின்ற நல்ல காலமாக உள்ளது. எக் காலத்தினும் அறிவாகிய ஒள்ளிய கதிரினைப் பொழிகின்ற வாட்படையினை உறையினின்றும் நீக்கி, ஆனந்தமாகிய குதிரையினைச் செலுத்திப், பெரிதான உலகிடத்தே பிறவியினை எதிர்த்தவர்கள் புரளும்படியாக, அவன் வீசிச் சேதிப்பான் என்பதனை நீங்கள் அறிவீர்களாக!*

**காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய**
**ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய**
**ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு**
**மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே. 5**

*உய்தி கூடுவதற்கான காலம் என்பது உண்டாகியிருக்கும் போதிலேயே, இறைவனுக்கு அன்புசெய்து நீங்களும் உய்தி பெறுவீர்களாக! கருதுதற்கும் அரிதான உலகத்தினை உண்டவனாகிய திருமாலோடும், நான்முகனும், மற்றைய தேவர்களும் நெருங்குதற்கும் அரிதாயிருந்த ஆலகால விடத்*

*தினை, அந்நாளிலே உண்டருளி, அவர்களைக் காத்தவன், எங்கள் பாண்டிப் பெருமானே யாவான்! அவன், தன் அடியவர்களுக்கு மூலநிதியான முத்திச் செல்வத்தினை இதோ வழங்குகின்றான். அனைவரும் வந்து அதனைப் பெறுவதற்கு முந்திக் கொள்ளுங்கள்!*

ஈண்டிய மாயா இருள்கெட எப்பொரு ளும்விளங்கத்
தூண்டிய சோதியை மீனவ னுஞ்சொல்ல வல்லன்அல்லன்
வேண்டிய போதே விலக்கிலை வாய்தல் விரும்புமின்தாள்
பாண்டிய னாருள் செய்கின்ற முத்திப் பரிசிதுவே. 6

*நெருங்கிய மாயா மலமாகிய இருளானது நீங்கவும், எல்லாப்பொருளும் விளங்கவும், குதிரையைத் தூண்டிச் செலுத்திவந்த சோதியைப், பாண்டியனும், இன்னதோர் தன்மையதென்று சொல்லுதற்கு வல்லவன் அல்லன்! அவனது திருவடிப்பேற்றினை விரும்பினபோதிலே, அதனை அடைதற்கு ஒரு தடையும் இல்லை! அவன் திருவடிகள் வந்து வாய்த்தலையே அனைவரும் விரும்புவீர்களாக. பாண்டியனாராகிய சிவபிரான் அருளிச்செய்கின்ற முத்தித் திறமும் இதுவே யாகும்.*

மாய வனப்பரி மேல்கொண்டு மற்றவர் கைக்கொளலும்
போயறும் இப்பிறப் பென்னும் பகைகள் புகுந்தவருக்
காய அரும்பெருஞ் சீருடைத் தன்னரு ளேஅருளுஞ்
சேய நெடுங்கொடைத் தென்னவன் சேவடி சேர்மின்களே. 7

*மாயமாகிய, அழகிய குதிரையின்மேலாக ஏறிவந்து, அவ்விறைவர் நம்மைக் கைக்கொள்ளுதலும், இப்பிறப்புக்குக் காரணமாகிய பகைகள் எல்லாமே அற்றுப் போய்விடும். தன்பால் அடைந்தவர்க்கு உண்டாகும், அரிய பெரிய சிறப்பையுடைய தன் அருட் செல்வத்தினையே, மற்றையவருக்கும் அருளாநின்ற, மிகப் பெரிதான கொடைத்திறனை உடையவனாகிய, அப் பாண்டிப் பெருமானது திருவடிகளையே நீங்களும் சென்று புகலாக அடைவீர்களாக!*

அழிவின்றி நின்றதோர் ஆனந்த வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக் கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன் பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை யேசென்று முந்துமினே. 8

*அழிவென்பதின்றி, நிலைபெற்றதாகிய ஒப்பற்ற பேரானந்த வெள்ளத்தின் கண்ணே நம்மை அழுந்துவித்து, ஒழிவற்ற கருணையினைக் காட்டிக், கடுமையான வினைகளை எல்லாம் நீக்கிப், பழைமையாகிய மலங்களைப் பற்றறுத்து*

*ஆண்டருளின இறைவனுகிய அவன், பாண்டி நாடாண்ட பெரும்பதம் மட்டுமன்றி, உலகம் முழுவதையுமே நாம் விரும்பினும் தரவல்லவன். அதனுல், அவனது முத்திக் கொடையினையே, முற்படச் சென்று அனைவீரும் பெற்றுக் கொள்ளுங்கள்!*

**விரவிய தீவினை மேலைப் பிறப்புமுந் நீர்கடக்கப்**
**பரவிய அன்பரை என்புருக் கும்பரம் பாண்டியனுர்**
**புரவியின் மேல்வரப் புந்திகொ ளப்பட்ட பூங்கொடியார்**
**மரவியன் மேல்கொண்டு தம்மையுந் தாம்அறி யார்மறந்தே. 9**

*உயிரிடத்தே கலந்துள்ள தீவினைகளால் உண்டாகிய மேலைப் பிறவியாகிய கடலைக் கடப்பதற்குத், தன்னை வழிபட்ட அன்பர்களது என்பினை உருக்குகின்ற, மேலான பாண்டிப் பிரான், குதிரையின்மேலாக அந்நாளிலே எழுந்தருளி வரவும், அவனைக் கண்டு அறிவு கவரப்பட்டுப் போன பூங்கொடி போல்பவரான மாதர்கள், மரத்தினது இயல்பினைத் தாமும் பெற்றவராகத், தம்மையும் மறந்தவராகத், தாம் தம்மை அறிந்திலராகியும் நின்றனரே! [மரவியல்-மரத்தினது அசைவற்ற தன்மை. 'பூங்கொடியார்' என்றது இறைவனைக் காதலிக்கின்ற அடியவர்களைப் பெண்களாகக் கொண்டு உவமித்துக் கூறியதாகும்.]*

**கூற்றைவென் றுங்கைவர் கோக்களை யும்வென் றிருந்தழகால்**
**வீற்றிருந் தான்பெருந் தேவியுந் தானும்ஓர் மீனவன்பால்**
**ஏற்றுவந் தாருயி ருண்ட திறலொற்றைச் சேவகனே**
**தேற்றமி லாதவர் சேவடி சிக்கெனச் சேர்மின்களே. 10**

*கூற்றுவனை வென்று, அவ்விடத்தே ஐம்புல அரசர்களையும் வென்றிருந்து, அழகோடும் வீற்றிருந்தவன் சிவபெருமான் ஆவான். பெருந்தேவியும் தானுமாக அவன் வந்து வீற்றிருந்தது, ஒப்பற்ற பாண்டியனிடத்தேயே ஆகும். எதிர்த்து வந்தவர்களது உயிரினை வாங்கின, வலிமையுள்ள ஒப்பற்ற மாவீரனும் அவனுவான்! ஆதலால், தெளிதல் இல்லாதவர்களே! அவனது திருவடிகளையே சிக்கெனப்பற்றிச் சேர்வீர்களாக! ['அதுவே நீர் தெளிவு பெற்று உய்வதற்கான வழி' என்பது கருத்து. மீனவன்-மீனக் கொடியினை உடைய பாண்டியன்.]*

# 37. பிடித்த பத்து

## முத்திக் கலப்பு உரைத்தல்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[திருத் தோணிபுரத்திலே, மணிவாசக அடிகளால் அருளி செய்யப் பெற்றவை இச் செய்யுட்கள். இறைவனோடு முத்தி பெற்றுக் கலக்கின்ற, அந்த அநுபவத்தினை வேண்டி உரைத் தல், இதன் கருத்தாகும்.]

உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 1

தேவர்களுக்கு அரசனே! எங்கும் நீக்கமற நிறைந்த அத்துவிதக் கலப்புடைய பொருளே! மனவழுக்கு உடைய லனுகிய எனக்குப், புதுமையானது என்று சொல்லும்படி யாகக் கனிந்து, என் குடும்பம் முழுவதையுமே ஆட்கொண் டருளிய, உடலோடும் கூடியதான இவ்வுலக வாழ்க்கை முற்றவும் அற்றுப்போமாறு சிவபுரவாழ்வினைத் தந்து வாழச் செய்த அமுதமே! செவ்விய நூற்பொருள்களின் முடிவாக இருப்பவனே! சிறப்பினையுடைய திருவடிகளை உடையவனே! எமது செல்வமே! சிவபெருமானே! யான் உய்யும்பொருட் டாக நின்னையே சிக்கெனப் பிடித்துக் கொண்டேன். இனி நீ எம்மைக் கைவிட்டு எவ்விடத்திற்கு எழுந்தருள்வதோ?

விடைவிடா துகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடையமெய்ப் பொருளே
முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய்
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணம் காத்தெனை ஆண்ட
கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 2

இடபத்தினைக் கைவிடாமல், ஏற்றருள விரும்பின தேவர் பெருமானே! தீவினையேனுடைய மெய்ப்பொருளே; முடைநாற்றத்தினையுடைய இவ்வுடம்பினைக் கழித்துவிடாமல், அடியனேன் முதிர்வடைந்து, முற்றவும் மண்ணாகிப் போயினேன். முழுவதும் புழுக்கள் செறிந்துள்ள, இந்த உடற்கூட்டிலே சிக்கிக் கிடந்து, யான் தடைப்பட்டுப் போகாதவண்ணம், என்னைத் தடுத்து ஆட்கொண்டருளிய கடவுளே! கருணைப் பெருங்கடலே! இடைவிடாமல், நின்னையே சிக்கெனப் பிடித்தேன்! இனி, நீயும் என்னைவிட்டுப் பிரிந்து எங்கு எழுந்தருளிச் செல்வதோ?

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 3

என் தாயே! என் தந்தையே! ஒப்பற்ற மாணிக்கமே! அன்பென்னும் கடலினிடத்தே உண்டான கிடைத்தற்கு அரிய அமுதமே! பொய்ம்மையினையே பெருகச்செய்து, பொழுதினைப் பயனின்றிக் குறைத்துக் கொண்டே போகின்ற, புழுப்பற்றி அலைபவனாகிய இழிதகையனேனுக்கும், பெருநன்மைக்கு ஏதுவாகிய சிவபதத்தினைக் கொடுத்தருளின, செல்வமே! சிவபெருமானே! நின்னையே சிக்கெனப் பிடித்தேன். இனி, நீ என்னைவிட்டு எங்குத்தான் எழுந்தருளிச் செல்வதோ?

அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 4

அருளினையுடைய சோதியே! கனிந்த நிலையிலேயுள்ள ஒப்பற்ற கனியே! பேராற்றலையுடைய அருந்தவத்தினை

உடையவர்களுக்கு அரசனே! பொய்ப்பொருளான சிறப்பினை உடைய நூலே! புகழ்ச்சியையும் கடந்ததாக விளங்குன்ற யோகமே! யோகத்தின் பொலிவாக இருப்பவனே! தெளி வெய்திய விடத்து, அடியவரின் சிந்தையினுள்ளே புகுந்து நிலைபெறுகின்ற செல்வமே! சிவபெருமானே! அஞ்ஞான இருளானது செறிந்திருக்கும் இவ்வுலகிலே, நின்னையே உறுதி யாக யானும் பற்றினேன். இனி, நீ என்னைவிட்டு எங்கு எழுந் தருள்வாயோ? [வீட்டு நெறிக்கான ஆகமநூல்களை இறை வனே குருபரனாக வந்தருளியதுபற்றி, அவனையே பொருளு டைக் கலை என்றனர்.]

ஒப்புனக் கில்லா ஒருவனே அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே
மெய்ப்பதம் அறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 5

நினக்கோர் உவமையாவது என்று ஏதுமில்லாத ஒப்பற் றவனே! அடியனேனின் உள்ளத்தே ஒளிசெய்து விளங்குகின்ற அறிவு ஒளியே! உண்மை நிலையினை அறியமாட்டாத, மேன்மை யில்லாதவனாகிய எனக்குச், சிறப்பான பதத்தினைக் கொடுத்ததாகிய ஒப்பற்ற அன்பே! சொல்வதற்கும் அரிய செழுமையான் ஒளியுருவினனே! நான் இளைத்தவிடத்தே, எனக்குத் துணையாக நின்னையே உறுதியாகப் பற்றிக்கொண் டேன். இனி, நீ எங்கே எழுந்தருள்வது? [சிறப்பான பதமாவது, முத்திப் பேறு ]

அறவையேன் மனமே கோயிலாக கொண்டாண்டு
அளவிலா ஆனந்த மருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியஎம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 6

திக்கற்றவனாகிய என் மனத்தையே கோயிலாகக் கொண்டு ஆண்டருளி, அளவிலாத ஆனந்தத்தையும் தந்து, என்பிறவியினையும் அடியோடு அறுத்து, என் குடும்பம் முழுவ தையுமே அடிமைகொண்ட பிஞ்ஞகனே! பெரிதாகிய எமது

*பொருளே! வெளிப்படையாகக் காணப்பட்ட காட்சியே! அடியனேனின் செல்வமே! சிவபெருமானே! முடிவாக, நின்னையே உறுதியாகப் பற்றினேன். இனி, நீ எங்கு எழுந்தருள்வதுவோ? [அறவை-அனைத்தும் அற்றவன். பிஞ்ஞகம்-தலைக்கோலம். திறவு-வெளிப்படை. இறவு-இறுதி.]*

பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை உகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 7

*உலகபாசத்தின் வேரினை அறுக்கின்ற, பழைமையாகிய பொருளினைப் பற்றும் வழியினை அடியனேனுக்கு அருளிச் செய்து, எனது பூசனையையும் விரும்பி, என் சிந்தையுள்ளும் புகுந்து, மலரடிகளையும் காட்டின மெய்ப்பொருளே! ஒளியுடைய விளக்கே! செழுஞ்சுடராகிய மூர்த்தியே! செல்வமே! சிவபெருமானே! ஈசனே! நின்னைச் சிக்கெனப் பிடித்தேன். இனி, நீ எங்கு எழுந்தருள்வதுவோ?*

அத்தனே அண்டர் அண்டமாய் நின்ற
ஆதியே யாதுமீ றில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே எல்லா உயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை அல்லையாய் நிற்கும்
எத்தனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 8

*அத்தனே! உலகத்தாரும் உலகங்களுமாய் ஆகிநின்ற முதற்பொருளே! முடிவில்லாத அறிவுருவனே! பக்தர்கள் உறுதியாகப் பற்றிக்கொண்ட செல்வமே! சிவபெருமானே! பித்தனே! உயிர்கள் எல்லாமுமாகத் தழைத்தும் பிழைத்தும் அவையனைத்தும் இல்லையாகியும் நிற்கின்ற வஞ்சகத்தை உடையவனே! நின்னைச் சிக்கனெப் பிடித்தேன். இனி, நீ எங்கு தான் எழுந்தருள்வதோ? [எல்லாவுமாயிருந்தும் அவற்றுக்கு அயலாகவும் இருப்பதனால் 'எத்தனே!' என்றனர்.]*

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 9

*ஊட்டுதற்கான காலத்தினை நினைவிலே கொண்டு, பாலினைத் தன் மகவுக்கு ஊட்டுகின்ற தாயினுங் காட்டில், மிகுதியாக என்பால் பரிவுகொண்டு, நீ, பாவியேனுடைய உடலினை உருக்கி, உள்ளத்தே அறிவொளியினையும் பரப்பி, அழிவற்ற ஆனந்தமாகிய தேனினையும் சொரிந்தனை! அடுத்துப், புறம்புறமாகவே திரிந்த, அதனையும் செய்த என் செல்வமே! சிவபெருமானே! யான் நின்னைத் தொடர்ந்து வந்து சிக்கெனப் பிடித்துக்கொண்டேன். இனி, நீ எவ்விடத்திற்கு எழுந்தருள்வாயோ?*

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதி
இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 10

*என் புன்மையுடையதான புலாலுடம்பினை, அதன் உட்டுளைதோறும் கனியும்படியாகச் செய்து, நினக்குரிய அழகிய நெடுங்கோயிலாகவும் ஆக்கிக்கொண்டு, என்னுள்ளேயும் புகுந்து, என் எலும்பினையெல்லாம் உருகச்செய்து, எளிதாகவே வந்து அந்நாளிலே ஆண்டு கொண்டருளிய ஈசனே! மாசில்லாத மாணிக்கமே! பிறப்பும் இறப்பும் மயக்கமும் ஆகிய, துன்பங்களின் சார்புகள் அனைத்தையும், அறுத்தருளிய நன்மையான சோதியே! எனக்குரிய பேரின்பமே! நின்னையே யானும் உறுதியாகப் பற்றிக் கொண்டேன்! இனி, நீயும் எங்குதான் என்னைவிட்டு எழுந்தருள்வாயோ?*

## 38. திரு வேசறவு

### சுட்டறிவு ஒழித்தல்

(கொச்சகக் கலிப்பா)

*[திருப் பெருந்துறையிலே, மணிவாசக அடிகளார் அருளிச் செய்த திருப்பதிகம் இது. தம் சுட்டறிவினை ஒழித்தருளுமாறு, இறைவனை வேண்டித் துதிப்பது இதன் நோக்கமாகும்.]*

**இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தென் என்புருக்கிக்**
**கரும்புதரு சுவைஎனக்குக் காட்டினைஉன் கழலிணைகள்**
**ஒருங்குதிரை உலவுசடை உடையானே நரிகளெல்லாம்**
**பெருங்குதிரை ஆக்கியவா றன்றேஉன் பேரருளே. 1**

*கங்கை நதியின் அலைகள் உலவியிருக்கின்ற தன்மையினைக் கொண்ட சடாபாரத்தை உடையவனே! இரும்பினது தன்மையைத் தருகின்றதான, மனத்தினை உடையவனாகிய என்னை, நின்பால் இழுத்திழுத்துக் கொண்டனை. என் எலும்பு களையும் உருகச் செய்து, கரும்பு தருகின்ற சுவையினைத் தருவதான நின் திருவடிகளின் காட்சியையும் தந்தருளினை. நரிகள் எல்லாம் பெரிய பெரிய குதிரைகளாக ஆகுமாறு அந்நாளிலே நீ செய்ததும், நினது பேரருளினாலே அன்றோ? ['நரியைப் பரியாக்கிக் கொணர்ந்தது, என்பால் நீ கொண்ட பெரிதான கருணையினாலே அல்லவோ? அத்தகையவனாகிய நீ, என்னை முற்றவுமே காத்தருளல் வேண்டாவோ?' என்பது கருத்து.]*

**பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் ஆளானார்க்கு**
**உண்ணார்ந்த ஆரமுதே உடையானே அடியேனை**
**மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாஎன்னக்**
**கண்ணார உய்ந்தவா றன்றேஉன் கழல்கண்டே. 2**

*பண்ணினைப் போன்ற இனிமை நிறைந்த பேச்சினளான உமையம்மையினை நின் இடப்பாகத்தே கொண்டிருப்பவனே! நினது அடியவராயினோருக்கு, உண்பதற்குரிய நிறைவான அரிய அமுதமே! என்னை அடிமையாக உடையவனே! மண்ணு லகத்தே வந்து பொருந்திய என் பிறவித் தளையினை அறுத்*

திட்டு, என்னையும் ஆட்கொள்பவனே! அந்நாளிலே, எழுந்தருளிவந்து, 'நீ வருக!' என்று சொல்லி என்னை அழைப்பவும், அப்போது, நின் திருவடிகளைக் கண்ணாரக் காணப்பெற்றல்லவோ, யானும் உய்தியடைந்தேன்! இதுவும் வியத்தற்கு உரியதே! ['நின் திருவடி தரிசனத்தாலேயே யான் உய்திபெற்றேன்! அதனை மாற்றிவிடாது என்றும் பேணுக' என்பது கருத்து.]

**ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னும் அருநரகில்**
**ஆர்தமரும் இன்றியே அழுந்துவேற் காவாவென்று**
**ஓதமலி நஞ்சுண்ட உடையானே அடியேற்குன்**
**பாதமலர் காட்டியவா றன்றேஎம் பரம்பரனே. 3**

எமது மேலோனே! யானோ ஆதரவு ஏதும் இல்லாதவன்! பிறப்பும் இறப்பும் என்கின்ற கடத்தற்கரிய நரகத்துயரிலே, உறவுஉடையார் யாருமற்றவனாகக் கிடந்து அழுந்துவதற்கும் உரியவன்! அத்தகைய எனக்கும், 'ஐயோ' வென்று இரங்கி அருளாயோ? கடலிடத்துப் பெருகி எழுந்த நஞ்சினை உண்டருளிய நாதனே! அடியேனுக்கும், நின் திருவடிமலர்களைக் காட்டுவாயாக!['விடமுண்ட நினக்கு, என்போலியரை ஏற்பதனால் ஏதும் குறைவு வராது' என்பது கருத்து.]

**பச்சைத்தாள் அரவாட்டீ படர்சடையாய் பாதமலர்**
**உச்சத்தார் பெருமானே அடியேனை உய்யக்கொண்டு**
**எச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோஎன்**
**சித்தத்தா றுய்ந்தவா றன்றேஉன் திறம்நினைந்தே. 4**

பசுமையான நாக்கினையுடைய பாம்பினை ஆட்டுபவனே! விரிந்த சடையினை உடையவனே! உயர்ச்சி பொருந்திய திருவடிமலர்களையும் உடைய பெருமானே! அடியேனையும். உய்திபெறுகின்ற வகையாக நீ ஆட்கொண்டு அருள்வாயாக! குறைபாடுகளையுடைய சிறுதேவதைகளைப் போற்றித் துதியாதே நின்னுடைய தன்மையினையே உள்ளத்துள் நினைத்தவனாகச், சித்தத்துத் தெளிவுகொள்ளுவதற்கான நெறிப்படியே யானும் உய்திபெற்றதுதான் என்ன அதிசயமோ? ['சிறுமையுடைய யான் சிறுதெய்வங்களை நாடுதல் கூடுமேனும், அதனையும் ஒழித்து, நின் நினைவு ஒன்றினையே என் சித்தத்துள் நிறைத்தனை' என்பது கருத்து. எச்சம்-குறை.]

**கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்**
**மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்**
**துற்றிறுமாந் திருந்தேன்எம் பெருமானே அடியேற்குப்**
**பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. 5**

இறைவனாகிய நினது அருளினைப் பேசுகின்ற அறிவு நூல்களை யான் கற்றும் அறிந்திலேன். நின்பால் எழுகின்ற அன்பினாலே கசிந்து உருகுதலையும் யான் செய்திலேன். ஆயினும், நின்னையன்றி வேறொரு தெய்வம் உளதெனவும் யான் துதித்தறியேன். நின் நீண்ட திருவடிகளை வந்தடைந்து அதனால் இறுமாப்புக் கொண்டவனாகவும் யான் இருந்தேன். எம் பெருமானே! அடியனேனுக்கு நின் பொன்போன்ற அருளானது வந்து வாய்த்தவாறும், நாயினேனுக்குப் பொற் பீடத்தினை இட்டாற்போன்றதான ஓர் அளப்பருங் கருணைச் செயலினாலேயே அல்லவோ? ['பிறதெய்வம்' என்றது, பதங்களுக்கு உரியவரான பிற கடவுளர்களை.]

பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவேன் நின்னருளால்
உய்ஞ்சேன்எம் பெருமானே உடையானே அடியேனை
அஞ்சேலென் றாண்டவா றன்றேஅம் பலத்தமுதே. 6

எமது பெருமானே! நாதனே! சிற்சபையிலே கூத்தியற்றுகின்ற அமுதனே! பஞ்சினைப்போன்ற பாதத்தினைக் கொண்டவரான மாதர்களுடைய கடைக்கண் பார்வையாலே துயரத்துட்பட்டு, நஞ்சினைப்போன்ற துன்பமானது மென்மேலும் மிகுதலினாலே நடுங்குவேனாயிருந்த நானும், நினது அருளினாலே அதனின்றும் தப்பிப் பிழைத்தேன். அடியனேனையும், 'அஞ்சேல்' என உரைத்து நீ ஆண்டருளியதான வகைதான் என்னே! ['நின்னைச்சாராது மாதர்மயக்கிடத்தே சிக்கிக்கிடந்த என்னையும், எழுந்தருளிவந்து ஆண்டருளிய, நின் கருணைத் திறந்தான் என்னேயோ?' என்பது கருத்து.]

என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கும் அறியவொண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்
அன்பால்நீ அகம்நெகவே புகுந்தருளி ஆட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேஎம் பெருமானே. 7

எமது பெருமானே! இமையவர்களுக்கும் அறிந்துணர்தற்கு ஒண்ணாதவனே! தென்திசைக் கண்ணதாகிய திருப்பெருந்துறையிலே தங்கியருளும், சிவபெருமானே! என்னிடத்தே நின்பாலுள்ள அன்பினாலே, நீ, என்மனம் நெகிழும் படியாக என்னுள் புகுந்து அருளினாய்! என்பாற்பட்ட பிறவித் தளையினையும் அறுத்தருளினாய்! என்னை வந்து நீ அவ்வாறு ஆட்கொண்டதும், என்னிடத்தேயே நீ திருநோக்கம் வைத்த முறையும்தான் என்னேயோ? ['நின்னிடத்து அன்பு காட்டுதல் இல்லாதிருந்த என்பால், நீ அன்புகாட்டிய அருள் தான் என்னேயோ?' என வியப்பது இது.]

மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா
ஓத்தானே பொருளானே உண்மையுமாய் இன்மையுமாய்ப்
பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்
பேர்த்தேநீ ஆண்டவா றன்றேஎம் பெருமானே. 8

எமது பெருமானே! எல்லாவற்றிற்கும் முற்பட்டவனே! மூப்பற்ற முதல்வனே! முடிவற்ற வேதப்பொருளாக இருப்பவனே! எல்லையற்ற மெய்ப்பொருளாக இலங்குபவனே! மெய்யடியவர்க்கு மெய்யாகியும், அல்லாதவர்க்கு அல்லாதாகியும் விளங்குபவனே! அனைத்துமாகி மலர்ந்தவனே! இவ்வுலக வாழ்விடத்தே கிடந்து புரள்வேனாகிய என்னையும், நின் கருணையினாலே எழுந்தருளிவந்து, இவ்வுலகப் பற்றுக்களினின்றும் விடுவித்து, நீ ஆட்கொண்ட முறைதான் என்னேயோ? ['உலகவாழ்வினை விரும்பி அதனிடத்தே கிடந்து புரளுகின்ற என்னையும், கருணையினாலே வந்து ஆட்கொண்டதுதான் என்னேயோ!' என வியந்தது இது.]

மருவினிய மலர்ப்பாதம் மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறும் மிகஅலறிச் சிவபெருமா னென்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமாறு
அருளெனக்கிங் கிடைமருதே இடங்கொண்ட அம்மானே. 9

திருவிடை மருதூரைத் தங்குமிடமாகக் கொண்டருளுகின்ற எம் அப்பனே! பிறர் பொருந்துதற்கு இனியவான நின் திருவடிமலர்கள், என் உள்ளத்திலே வந்து வளர்ந்து, அதனால் என் உள்ளம் உருகவும், யான் தெருக்கள்தோறும் மிகவும் ஓலமிட்டவனாகச் சுற்றிச், 'சிவபெருமானே!' என்று நின்னைப் போற்றினேன்! நின் மேலான அருளினைப் பருகியதும், பரந்த அந்தப் பெருங்கடலிலேயே முற்றவும் படியும் வண்ணமாக, இவ்விடத்தே, எனக்கும் நீ அருளிச் செய்வாயாக! ['சிவஞானத்தைத் திருவருள் வந்து கடைக்கூட்டப் பெற்றவர், தாம் அதனிடத்தேயே ஆழ்ந்து கிடக்கின்ற நிலையினையும் அருளுமாறு' வேண்டுகின்றனர்.]

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே. 10

தேனாகவும், இனிக்கும் அமுதம்ஆகவும், தித்திக்கின்ற பேரானந்தப் பொருளாகிய சிவபெருமானானவன், தானே எழுந்தருளிவந்து, என் உள்ளத்தேயும் அன்று புகுந்தனன். உடலோடு கூடியிருக்கும் உயிர்வாழ்வினை யான் மிகவும்

வெறுத்திடும் வண்ணமாக, அடியேனாகிய எனக்கும் அவன் அருள்புரிந்தனன். இங்ஙனம், அவனே வந்து அருளியதனால், 'சிவாயநம' என்னும் திருவைந்தெழுத்தின் உபதேசத்தினை யும், யான் அவனிடமிருந்து பெற்றுக்கொண்டேன். இது அவனருளே ஆகும். அல்லாமல், நானோ, அதற்கான பக்குவத்தை அடையும் பொருட்டுத், தவஞ் செய்து அதற்கு உரியவன் ஆகியவன்? ['தான் பெற்றதான அருள், அவனது கருணையினாலேயே வந்துற்றது' என வியப்பது இதுவாகும். 'சிவாயநம' என்பதனைச் சூக்கும பஞ்சாட்சரம் எனவும், 'நமசிவாய' என்பதனைத் தூல பஞ்சாட்சரம் எனவும் ஆன்றோர் உரைப்பார்கள். 'சிவாயநம' எனப் பெற்றேன்' என்றதனால், தாம், சூக்கும பஞ்சாட்சர உபதேசத்தினைப் பெற்றதனைக் கூறினர், அடிகள்.]

# 39. திருப் புலம்பல்

## சிவானந்த முதிர்வு

(கொச்சகக் கலிப்பா)

*[சிவானந்தம் முதிர்ச்சி பெற்றபோது, அடியவர்தம் நிலையினைக் குறிக்கும் பகுதி இது. இதனை, அடிகள், திருவாரூரிலே அருளிச் செய்தனர்.]*

**பூங்கமலத் தயனொடுமால் அறியாத நெறியானே**
**கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறுவெண் ணீறுடி**
**ஓங்கெயில்சூழ் திருவாரூர் உடையானே அடியேன்நின்**
**பூங்கழல்கள் அவையல்லா தெவையாதும் புகழேனே. 1**

*அழகிய தாமரை மலரிடத்தே இருக்கின்ற அயனோடு, திருமாலும், தேடியும் காண்பதற்கு அறியாதாக இருந்த தொரு தன்மையினை உடையவனே! கோங்கினது அரும்பினை நிகர்த்த, குவிந்த தனங்களை உடையாளான, உமையம்மை யினை நின்னில் ஒரு பாதியாகக் கொண்டிருப்பவனே! திருவெண்ணீற்றிலே திளைப்பவனே! உயரமான மதில்களாற் சூழப்பெற்றுள்ளதிருவாரூரிலே கோயில்கொண்டிருப்பவனே! அடியேன், நின்னுடைய மலரடிகளைப் போற்றுவதல்லாமல், வேறெவற்றையுமே புகழமாட்டேன்!*

**சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்**
**படையானே பரஞ்சோதி பசுபதீ மழவெள்ளை**
**விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய் அடியேன்நான்**
**உடையானே உனையல்லா துறுதுணைமற் றறியேனே. 2**

*சடாபாரத்தை உடையவனே! அழலிடத்தே நின்று கூத்தாடுகின்றவனே! மூவிலைச் சூலத்தினை ஏந்தியிருப்பவனே! பரஞ்சுடரே! பசுபதியே! இளமைகொண்ட வெண்ணிறமான இடபத்தை வாகனமாகக் கொண்டவனே! எங்கும் பரவிய பொழில்கள் சூழவிருக்கின்ற, திருப் பெருந்துறைப் பதிக்கு உரியவனே! என்னையும் அடிமையாக உடையவனே! அடியேனாகிய யான், நின்னையன்றி, எனக்குற்ற துணையாக வேறு எதனையுமே அறிந்திலேன்!*

**உற்ருரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்**
**கற்ருரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்**
**குற்ருலத் தமர்ந்துறையுங் கூத்தாஉன் குரைகழற்கே**
**கற்ருவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. 3**

*திருக் குற்ருலத்திலே விரும்பி வீற்றிருக்கின்ற கூத்தப் பெருமானே! இனி, யான், என்னுடைய உறவினரையும், ஊரினையும், எனது பேரினையும், கற்றவர் உறவினையும் வேண்டுவேன் அல்லேன். இனி, யான் கற்கவேண்டியனவும் நின் திருவருள் ஒன்றேயாக அமையும். அதனுல், கழல்கள் ஒலிமுழங்கும் நின் திருவடிகட்கே, கன்றையுடைய பசுவினைப் போலக் கசிந்து உருகியிருக்கும், அந்த ஒன்றினையே நின்னிடத்து யானும் இரக்கின்றேன். ['அதனை எனக்குத் தந்தருள்க' என்பது முறையீடு.]*

# 40. குலாப் பத்து

## அநுபவம் இடையீடுபடாமை

(கொச்சகக் கலிப்பா)

['குலாத் தில்லை' என, ஒவ்வொரு செய்யுளும் குறிப்ப தனால், இதனைக் 'குலாப் பத்து' என்றனர் போலும்! சிவப் பேரின்பத்தை அடைந்த அடிகள், அந்த அநுபவத்தே இடையீடு ஏதுமின்றித் திளைத்திருந்த தன்மை, இதனிடத்தே புலனாகின்றது. இது, தில்லையில் அருளப்பெற்றதாகும்.]

ஓடுங் கவந்தியுமே உறவென்றிட் டுள்கசிந்து
தேடும் பொருளுஞ் சிவன்கழலே எனத்தெளிந்து
கூடும் உயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 1

'திருவோடும் கோவணமுமே இனிப் பற்றுதற்கு உரியன வாகும்' எனக் கொண்டேன். உள்ளம் கசிந்து தேடுகின்ற பொருளும், சிவபெருமானது திருப்பாதங்களே எனத் தெளிந்தேன். உடற்கூடும், அதனிடத்தே இருக்கின்ற உயிரும் ஆனந்தத்தால் குதியாட, அடியேனும் கூத்தாடிய வாறே சென்று, விளங்குகின்ற தில்லையாண்டவனைப் பற்றினேன் அல்லவோ! [குமண்டை-கூத்துவகையுள் ஒன்று; நிறைவாலே தெவிட்ட எனவும் உரைப்பர்.]

துடியேர் இடுகிடைத் தூய்மொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவேன் எனைத்தனதாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 2

யான், உடுக்கையின் நடுப்போன்ற, நுணுகிய அழகி தான இடையினை யுடையவரான, இன்மொழி மாதரின் தோள்களைத் தழுவிக்கிடக்கும் விருப்பத்தாலே, பாவம் மிகுவதற்கு ஏதுவான தீமைகள் பலவற்றையும் செய்தேன். ஆனாலும், அடியனேன், இனியும் இறப்பும் பிறப்புமாகிய சுழலிலே சிக்கமாட்டேன். என்னைத் தனது திருவடிகளைக் கலந்திருக்குமாறு செய்தருளிய, விளங்கும் தில்லை ஆண்ட வனை யானும் விடாதே பற்றிக்கொண்டவன் அல்லேனோ! [எத்துணைப் பாவமே செய்திருப்பினும், தில்லையாண்டவனின்

*திருவடிகளைப் பற்றிக்கொண்ட யான், இனியும், பிறப்பிறப் பாகிய கடலுள் அழுந்தமாட்டேன்' என்பது கருத்து.]*

**என்புள் ளுருக்கி இருவினையை ஈடழித்துத்**
**துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து**
**முன்புள்ள வற்றை முழுதழிய உள்புகுந்த**
**அன்பின் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 3**

*என் எலும்புகளின் உள்ளேயும் புகுந்து என்னை உருகுமாறு செய்தனன். என் இரு வினைகளின் வலியினையும் அழித்தனன். என் துன்பங்களை எல்லாம் நீக்கினன். அவற்றின், இனிவரும் தொடர்புகளையும் தூய்மை செய்வித்தனன். இங்ஙனமாக, முன்புள்ளனவாகிய எனது இடர்கள் முழுவதும் அழியுமாறு, என்னுள்ளே புகுந்த அன்பினையுடைய, விளங்குகின்ற தில்லையாண்டானை, யானும் பற்றினேன் அல்லனோ! ['தில்லையாண்டவனைப் பற்றிய எனக்கு, இனி எந்தவிதத் துயரமுமே இல்லையாகும்' என்பது கருத்து.]*

**குறியும் நெறியும் குணமுமிலார் குழாங்கள்தமைப்**
**பிறியும் மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்**
**செறியுங் கருத்தில் உருத்தமுதாஞ் சிவபதத்தை**
**அறியுங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 4**

*தனக்கொரு குறியும், நெறியும், குணமும் இல்லாதவரும், மனைவிமக்கள் முதலாகிய பாசக் கூட்டத்தைவிட்டு நீங்குகின்ற எண்ணத்தினரும் ஆகிய, அடியவர்களை விட்டு, என்றும் பிறிவதற்கு அரியதாக விளங்கும் தன்மையினை உடையவனை, செறிவான மனத்திலே உருக்கொண்டு அமுதாக விளங்குகின்ற சிவபதத்தானை, அடியவரால் அறியப்படும் தகைமையுடைய, விளங்கும் தில்லைப்பதியின் கண் வீற்றிருக்கும் ஆண்டவனை, யானும், என்றனுக்கு உறுதுணையாகப் பற்றிக் கொண்டனே! ['குறியும், நெறியும், குணமும், பந்தபாச நீக்கமும் பெற்றவரே இறையடியார் ஆகுவதற்கு உரியவர். அவர்க்கே உரித்தான சிவபதத்தை, யானும் இறையருளால் பெற்றேன்' என்பது கருத்து. குறி-அடையாளம். குணம்-முக்குணம். நெறி-மார்க்கம்; சமயநெறிகள்.]*

**பேருங் குணமும் பிணிப்புறும்இப் பிறவிதனைத்**
**தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாஞ்**
**சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி**
**ஆருங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 5**

*பேரும், குணமும் தளைக்கின்ற இந்தப் பிறவியினைத், தூர்ந்து ஒழியும்படியாகப் பற்றறுத்துத், தொண்டர்கள்*

எல்லாருமே சென்று கூடுகின்ற வகையினாலே, சிவபெருமானது கருணையாகிய தேனினைப் பருகி, யாவரும் வந்து பொருந்துகின்ற விளக்கமிக்க தில்லையாண்டவனை யானும் துணையாகப் பற்றிக் கொண்டேனே! ['தொண்டர் சேரும் வகையால், சிவன் கருணைத்தேன் பருகி, யானும் அவனோடு சேர்தலைப் பெற்றேன்' என்பது கருத்து.]

**கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி**
**வம்பு பழுத்துடலம் மாண்டிங்ஙன் போகாமே**
**நம்புமென் சிந்தை நணுகும்வண்ணம் நானணுகும்**
**அம்பொன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 6**

மரக்கொம்பிலே அரும்பாகவும், குவிந்த மலராகவும், காயாகவும் ஆகி, வீணே பழுத்தும் உதிர்தல்போல; யானும் இவ்வுடம்பு முதிர்ந்து மடிந்து வீணே போகிவிடாதபடிக்கு, நம்புகின்ற என் சிந்தையானது சென்று சேரும்வண்ணமாக, நான் அணுகும் அழகிய பொன்விளங்கும் தில்லையாண்டவனை எனக்குத் துணையாகப் பற்றிக்கொண்டேனே! [அரும்பு மலர் காய் பழம் என்பன உடலினது பருவ வளர்ச்சியைக் குறிப்பன. 'என் மனம் நம்பிச் சேரும்படியாகத் தில்லையாண்டவனைத் துணையாகப் பற்றினேன்' என்பது கருத்து.]

**மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் தோள்நெரிய**
**மிதிக்குந் திருவடி என்தலைமேல் வீற்றிருப்பக்**
**கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம் எனக்களித்திங்**
**கதிர்க்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 7**

யாவரும் மதித்தற்குரிய ஆற்றலினை உடையவனாயிருந்த, வலிமையுள்ள இராவணனது தோள்கள் நெரியும்படியாக, அந்நாளிலே ஊன்றின நின் திருவடியானது, என் தலைமேலும் வீற்றிருக்க, யாம், பெருகுகின்ற பசுபாசங்களாகிய ஒன்றையும் உடையோம் அல்லோமென்று களிப்படைந்து, இவ்விடத்தே ஆரவாரித்தற்குக் காரணமான, விளங்கும் தில்லையாண்டவனையே, நானும் பற்றிக் கொண்டேனே! ['பசுபாசங்களை நீக்குகின்ற பெருமானின் திருவடிகளையே யானும் பற்றிக் கொண்டேன்' என்பது கருத்து. கதித்தல்- மேற்பட்டுத் தோன்றுதல். பசு-உயிரது பாசத் தொடர்பான தன்மை, பாசம், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும் மலங்கள்.]

**இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே**
**நடக்குந் திருவடி என்தலைமேல் நட்டமையால்**
**கடக்குந் திறல்ஐவர் கண்டகர்தம் வல்லாட்டை**
**அடக்குங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 8**

பூமியைத் தோண்டும் இயல்பினைக் கொண்ட கரிய முருட்டுப் பன்றியின் பின்னாகக், காட்டிடத்தே நடந்த தன் திருவடிகளைப், பெருமான், என் தலைமேலாகவும் ஊன்றினமை யால், என்னை வெற்றிகொள்ளும் திறனையுடைய ஐம்பொறி களாகிய கொடிய வேடர்களது வலிய கூத்தாட்டை எல்லாம் அடக்கியருளினன், விளங்கும் அந்தத் தில்லையாண்டவனையே, யானும் துணையாகப் பற்றிக்கொண்டேனே! [கண்டகர்-கொடியவர். 'இறைவன் வேட்டுவனாகி, மூகாசுரன் என்பவன் மேற்கொண்டிருந்த பன்றிவடிவின் பின்னர்ச் சென்றதனை இங்குக் கூறினர்.]

**பாழ்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்**
**கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்**
**தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்தலையால்**
**ஆட்செய் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 9**

பாழான வயலினிடத்தே சேர்ந்து, பயனற்றவனாகிக் கிடக்கின்ற எனக்கு, முன்னே செய்த தவத்தினாலே முடிந்து வைத்த நிதியும் வந்து கிடைத்தது. திருவடியாகிய செந்தாமரை மலரினையுடைய சைவனுக்கு, எனது புல்லிய தலையினாலே அடிமைத்தொழில் செய்வதற்கு, விளக்கம் மிக்க தில்லையாண்டவனாகிய கூத்தப் பெருமானையே, யானும் பற்றிக்கொண்டனே! ['கிழிஈடு-துணியில் கட்டிவைத்த சேமிப்பு நிதி. 'சைவன்' என்றது சிவபிரானை. 'அவனருள் தமக்குக் கிடைத்தது, தாம் முற்பட்ட பிறவிகளிற் செய்த தவப்பயன்' என்கிறார் அடிகள்.]

**கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்**
**செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்கு**
**இம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்**
**அம்மை குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே. 10**

திரட்சியும் வரிகளும் கொண்டுள்ள தனங்களையுடைய, பூம்கொம்பினைப் போன்றவளாகிய உமையம்மையின் பாகனுக்குச், செவ்விய மனத்தினாலே திருத்தொண்டுகள் செய்பவனாகிய எனக்கு, இப்பிறப்பில் உண்டாகின்ற வினைப் பயன்கள் அவ்வளவையும் இவ்விடத்தேயே ஒழிக்கவல்ல, தாயினைப் போன்ற கருணையாளனாகிய, விளக்கம் மிகுந்த தில்லையாண்டவனையே, துணையாகப் பற்றிக்கொண்டனே! ['என் வினைப்பயன்களை ஒழித்தற்குத் தில்லையாண்டவனைப் பற்றிக்கொண்டேன்' என்பது கருத்து.]

# 41. அற்புதப் பத்து

## அநுபவம் ஆற்றுமை

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[சிவானந்தமாகிய அந்த அநுபவம், தம்மால் ஆற்ற முடியாத அளவிற்குப் பேரின்பத்தை நிறைத்து நின்றதனை வியந்து, அடிகள் செய்தருளிய செய்யுட்கள் இவை. இதனைத் திருப் பெருந்துறையில் அருளினர் என்பர்.]*

**மைய லாய்இந்த மண்ணிடை வாழ்வெனும்**
**ஆழியு ளகப்பட்டுத்**
**தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான்**
**தலைதடு மாருமே**
**பொய்யெ லாம்விடத் திருவருள் தந்துதன்**
**பொன்னடி யிணைகாட்டி**
**மெய்ய ருய்வெளி காட்டிமுன் நின்றதோர்**
**அற்புதம் விளம்பேனே.** 1

*மயக்கவுணர்வினைக் கொண்டவனாக, இம் மண்ணகத்திடையே, வாழ்க்கை என்னும் கடலினுள்ளே சிக்கிக் கொண்டேன். 'மாதர்கள்' என்கின்ற சுழியிடத்தும் அகப்பட்டேன். அத் தகையவனாகிய யான், தலைதடுமாறிப் போகாதபடிக்கு, என்பாலிருந்த பொய்ம்மை எல்லாம் ஒழிந்துபோகத், திருவருளைக் கொடுத்தருளினான் சிவபெருமான். தன் பொன்போலும் திருவடிகளையும் காட்டியருளினான். மெய்யனாகி வந்து, தன்னை எனக்கும் வெளிபடக் காட்டியவனாக, அவன், என் முன்பாக நின்றது, தாகிய ஒப்பற்ற அந்த அதிசயத்தினை, யானும், சொல்ல இயலேனே! ['விளம்பேன்' என்றது, அது தம்மால் சொல்ல இயலாதபடித்தாய் இருந்தது எனற்பொருட்டு.]*

**ஏய்ந்த மாமல ரிட்டுமுட் டாததோர்**
**இயல்பொடும் வணங்காதே**
**சாந்த மார்முலைத் தையல்நல் லாரொடுந்**
**தலைதடு மாருகிப்**
**போந்து யான்துயர் புகாவணம் அருள்செய்து**
**பொற்கழ லிணைகாட்டி**
**வேந்த ருய்வெளி யேஎன்முன் நின்றதோர்**
**அற்புதம் விளம்பேனே.** 2

*ஏற்புடைத்தான சிறந்த மலர்களைத் தூவித் தடைபடாததாகிய முறைமையோடும் வணங்காது, சந்தனக் குழம்பு பூசப்பெற்ற தனங்களையுடைய அழகிய மாதரோடும் கலந்து, தலைதடுமாற்றம் கொண்டு, யான் துயரத்திலே புகுந்தழியாதபடிக்கு, எனக்கும் அருள்செய்து, தன் பொற்கழல் இணைகளைக் காட்டி, என் அரசனாக வெளிப்பட்டு, என்முன் இறைவன் நின்றதான அந்த ஒப்பற்ற அதிசயத்தை, இப்படிப்பட்டதெனச் சொல்லவும் யான் மாட்டேனே!*

நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து
நானென தெனும்மாயக்
கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக்
கழறியே திரிவேனைப்
பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய
அரும்பொருள் அடியேனை
அடித்த டித்துஅக் காரமுன் தீற்றிய
அற்புதம் அறியேனே. 3

*மண்ணுலகிலே, தகுதியாளனைப்போல நடித்துப், பல பொய்த் தொழில்களையும் செய்து, நான் எனது என்கின்ற மாயப்பாம்புகள் கடித்த இடத்திலேநின்று. முன்வினைப் பயனாகிய நஞ்சானது மிகுதிப்படவே, புலம்பித் திரிகின்ற வனாக யானும் இருந்தேன். அத்தகையனாகிய என்னையும் பற்றி, என் எதிரேயும் நின்று, அந்தப் பெரிய வேதங்களும் தேடுதற்குரிய அருமையாகிய மெய்ப்பொருள் ஆகியவன், அடியனேனை அடித்து அடித்துச், சர்க்கரைக் கட்டியை முற்படத் தின்பித்த அந்த அதிசயத்தினை, இன்னதெனவும் யான் அறியமாட்டேனே!*

பொருந்தும் இப்பிறப் பிறப்பிவை நினையாது
பொய்களே புகன்றுபோய்க்
கருங் குழலினார் கண்களால் ஏறுண்டு
கலங்கியே கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத்
திருவொடும் அகலாதே
அருந்து ணைவனாய் ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 4

*மாறிமாறி வந்து என்னைப் பொருந்துகின்ற, இந்தப் பிறப்பும் இறப்பும் என்னும் இவைகளைப்பற்றி எல்லாம் நினையாது, பொய்களையே விரும்பிச் சென்று, கருங் கூந்தலினரான பெண்களினாலே தாக்குண்டு, கலங்கியே கிடந்தவன் யான். என்னையும், தன் திருந்திய சேவடிகளில் விளங்கும் சிலம்பு*

களாகிய அவை ஒலிமுழங்க, உமையாகிய தேவியோடும் நீங்காமல், அருந் துணைவனாகி எழுந்தருளி, அவன், அந் நாளிலே, ஆண்டுகொண்டு அருளிச்செய்த, அந்த அற்புதத் தினை இத்தகையதெனவும் யான் அறியேனே! ['திரு' வென்றது, அருள் சத்தியாகிய அம்மையினை.]

மாடுஞ் சுற்றமும் மற்றுள போகமும்
மங்கையர் தம்மோடுங்
கூடி அங்குள குணங்களால் ஏறுண்டு
குலாவியே திரிவேனை
வீடு தந்தென்றன் வெந்தொழில் வீட்டிட
மென்மலர்க் கழல்காட்டி
ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோர்
அற்புதம் அறியேனே. 5

செல்வமும் உறவும் மற்றுமுள்ள போகங்களும், மாதர் களோடும் கலந்து, அங்கங்கேயுள்ள குணங்களாலே தாக் குண்டு, அவற்றையே கொண்டாடித் திரிபவனாக யானும் இருந்தேன். என்னையும், என் கொடுந்தொழில்களை அழிக்கும் படியான மென்மலர்போலும் தன் திருவடிகளைக் காட்டி இறைவன் ஆடுவித்தனன். என் மனத்தையும் புகுந்து ஆட் கொண்டனன். எனக்கு வீட்டின்பத்தையும் நல்கினன். அந்த அதிசயத்தை இன்னதன்மையதெனவும் யான் அறியேனே! [குலாவுதல்-கொண்டாடுதல்.]

வணங்கும் இப்பிறப் பிறப்பிவை நினையாது
மங்கையர் தம்மோடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்திநான்
பித்தனாய்த் திரிவேனைக்
குணங்க ளுங்குறி களுமிலாக் குணக்கடல்
கோமளத் தொடுங்கூடி
அணைந்து வந்தெனை ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 6

என்னை வளைந்துகொள்ளுகின்ற இந்தப் பிறப்பும் இறப்புமாகிய இவைகளைப்பற்றி நினையாதே, மங்கையர் களோடும் கலந்தவனாக, அவர்களது வாயிதழ்களிற் பெருகு கின்ற நீரினிடத்தேயே அழுந்திக் கிடந்து, பித்தனாகத் திரிபவன் யான் ஆயினேன். முக்குணச் சார்பாகிய இயல்பு களும், தத்துவச் சார்பாகிய அடையாளங்களும், தனக்கு ஏதும் இல்லாதவனாகிய சிவபெருமான், அம்மையோடுங் கூடியவனாக எழுந்தருளிவந்து, என்னைக் கலந்து ஆட்கொண் டருளின அந்த அதிசயத்தை, யான் இன்னதென்றும் அறிய மாட்டேனே!

இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான்
இயல்பொடஞ் செழுத்தோதித்
தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாதுநான்
தடமுலை யார்தங்கள்
மைப்பு லாங்கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை
மலரடி யிணைகாட்டி
அப்பன் என்னைவந் தாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 7

*இந்தப் பிறப்பிலே இசைவான மலர்களைப் பறித்து வந்து, முறையோடும் அஞ்செழுத்தினை ஓதிக், குற்றமில்லாமல், இறைவனின் பொற்கழல்களிலே அருச்சியாது, பருத்த தனங்களை உடைய மாதர்களது, அஞ்சனந் தீட்டிய கண்களாலே தாக்கப்பட்டுக் கிடப்பவனாய் யானும் இருந்தேன். அத்தகைய என்னைத், தாமரை மலரினைப் போன்ற தன் திருவடியிணைகளைக் காட்டி, என் அப்பனாகிய சிவபிரான், எழுந்தருளிவந்து ஆட்கொண்டருளினான். அந்த அதிசயத்தினை, யான் இன்னதன்மையதென்று அறியவும் மாட்டேனே!*

ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின
இருவினை அறுத்தென்னை
ஓசையா லுணர் வார்க்குணர் வரியவன்
உணர்வுதந் தொளியாக்கிப்
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன்
பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய
அற்புதம் அறியேனே. 8

*உடலும் உயிருமான இவற்றினை, ஊசலாட்டிக் களிக்கின்ற இருவினைத் தொடர்புகளையும் அறுத்து, என்னையும், ஒளியினாலே உணர்வார்க்கும் உணர்தற்கு அரியவனான பெருமான், அறிவைக் கொடுத்து, ஒளியுடையவனும் ஆக்கினான். என் பற்றுக்களை முற்றவும் அறுத்துச், சிறந்த தனது மேலான பெருங்கருணையினாலே, என் ஆசைகளையும் தீர்த்துத், தன் அடியவர்களின் திருவடிகளிலேயும் சேர்த்தருளிய, அந்த அற்புதச் செயலினை, யான் இவ்வாறானதெனவும் அறிய மாட்டேனே! [ஊசலாட்டல்-மேலும் கீழுமாக ஊக்கிச் செலுத்துதல்.]*

பொச்சை யானஇப் பிறவியிற் கிடந்துநான்
புழுத்தலை நாய்போல
இச்சை யாயின ஏழையர்க் கேசெய்தங்
கிணங்கியே திரிவேனை

இச்ச கத்தரி அயனுமெட் டாததன்
விரைமலர்க் கழல்காட்டி
அச்சன் என்னையும் ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 9

*காடுபோன்ற இந்தப் பிறவியிலே கிடந்து, யான், புழுத்தலைகின்ற வொரு நாயினைப்போல, மாதர்களுக்கே விருப்பமான செயல்களைச் செய்து, அவ்விடத்தேயே இசைவுற்றுத் திரிகின்றவனாகவும் இருந்தேன். என்னையும், இவ்வுலகிலே, திருமாலும் பிரமனும் எட்டமுடியாது போயின தன் மணம் பொருந்திய மலரடிகளைக் காட்டி, என் அப்பனாகிய அவன், ஆட்கொண்டருளினான். அந்த அற்புதம் இன்னதென்றுகூட யானும் அறியேனே! [பொச்சை-காடு.]*

செறியும் இப்பிறப் பிறப்பிவை நினையாது
செறிகுழலார் செய்யுங்
கிறியுங் கீழ்மையுங் கெண்டையங் கண்களும்
உன்னியே கிடப்பேனை
இறைவன் எம்பிரான் எல்லையில் லாததன்
இணைமலர்க் கழல்காட்டி
அறிவு தந்தெனை ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 10

*நெருங்கி, மென்மேலும் வந்துறுகின்ற, இந்தப் பிறப்பும் இறப்புமாகிய இவற்றைப்பற்றி நினையாது போயினேன். நெருங்கின கூந்தலையுடைய மாதர்கள் செய்கின்ற பொய்ம்மையினையும், கீழான தன்மைகளையும், கெண்டை மீனைப் போல விளங்கும் அழகிய கண்களையுமே மெய்யென நினைத்து மயங்கியும் கிடந்தேன். இறைவனாகிய எம்பெருமான், எல்லையற்ற சிறப்பினையுடைய இணைந்த மலர்களைப் போன்றவான தன் திருவடிகளைக் காட்டி, எனக்கும் அறிவினைத் தந்து என்னையும் ஆண்டுகொண்டு அருளினான். அந்த அற்புதத்தினை இன்னதென்றுகூட யானும் அறியேனே! ['அந்தச் சிவானந்தம் இன்னபடித்தென அறிந்து உணருதற்கும் இயலாதவொன்றாகச் சிறப்பு மிகுந்ததாக இருந்ததென்பது' இதனால் விளங்கும்.]*

# 42. சென்னிப் பத்து

## சிவ விளைவு

(ஆசிரிய விருத்தம்)

['தம் சென்னியானது இறைவனின் திருவடிமலர்களிடத்தே சென்று பொருந்தி ஒளிபெறும்' என உரைக்கும் இதனைச் 'சென்னிப் பத்து' என்றனர். சிவத்தொடர்பின் விளைவினைக்காட்டும்இச்செய்யுட்கள், மணிவாசக அடிகளால், திருப் பெருந்துறையிலே அருளப்பெற்றனவாகும்.]

தேவ தேவன்மெய்ச் சேவகன்
தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலும் அறியொ ணாமுத
லாய ஆனந்த மூர்த்தியான்
யாவ ராயினும் அன்பரன் றி
அறியொ ணாமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கண்நம்
சென்னி மன்னிச் சுடருமே. 1

தேவர்களுக் கெல்லாம் தேவனும், உண்மையான வீரனும், தென்னகத்துத் திருப் பெருந்துறைக்குரிய நாயகனும், மும் மூர்த்திகளாலும் அறியவொண்ணாத முழு முதலாகிய ஆனந்தமூர்த்தியும், யாவராயிருந்தாலும், அவர் அன்புடையவராக இருந்தாலன்றி அறியவொண்ணாதிருக்கும் பூவொளி மேனியனுமாகிய சிவபெருமானின், தூயதான பெருமை பொருந்திய தாமரையைப் போன்ற செவ்விய திருவடியினிடத்தே, எமது தலைகளும் பொருந்தி ஒளிபெற்று விளங்குமாக! [சென்னி சுடருதல், இறையடித் தொடர்பினாலே ஏற்படுகின்ற சிறப்பாகும்.]

அட்ட மூர்த்தி அழகன் இன்னமு
தாய ஆனந்த வெள்ளத்தான்
சிட்டன் மெய்ச்சிவ லோக நாயகன்
தென்பெ ருந்துறைச் சேவகன்
மட்டு வார்குழல் மங்கை யாளையோர்
பாகம் வைத்த அழகன்தன்
வட்ட மாமலர்ச் சேவடிக் கண்நம்
சென்னி மன்னி மலருமே. 2

அட்ட மூர்த்தியாகிய அழகனும், இனிய அமுதமயமான இன்பப் பெருக்கினனும், பெரியோனும், உண்மைப் பொருளான சிவலோகத்துக்கு நாயகனும், தென்னகத்துப் பெருந்துறையிடத்தே வீற்றிருக்கும் வீரனும், தேன் பொருந்திய நீண்ட கூந்தலை யுடையவளான உமையம்மையினைத் தன் ஒரு பாகத்தே வைத்திருப்பவனு மாகிய அழகனது, வட்டவடிவான தாமரை மலரினைப்போன்ற செவ்விய திருவடிகளிலே பொருந்தி, எமது தலைகளும் மலர்ச்சியடையுமாக! [அட்ட மூர்த்தம்: பஞ்சபூதங்களும், இரு கதிரும், ஆன்மாவுமாகி விளங்கும் இறைநிலை.]

நங்கை மீரெனை நோக்குமின் நங்கள்
நாதன் நம்பணி கொண்டவன்
தெங்கு சோலைகள் சூழ்பெருந் துறை
மேய சேவகன் நாயகன்
மங்கை மார்கையில் வளையுங்கொண்டெம்
உயிருங் கொண்டெம் பணிகொள்வான்
பொங்கு மாமலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி மன்னிப் பொலியுமே. 3

பெண்களே! என்னைப் பாருங்கள்! நமது தலைவனும், நம்மைத் தனக்குப் பணி கொண்டவனும், தென்னஞ் சோலைகளாற் சூழப்பெற்ற திருப் பெருந்துறையிலே வீற்றிருக்கும் சேவகனும், நாயகனும், நங்கைமார்களது கைவளைகளையும் எமது உயிரையும் கவர்ந்துகொண்டு எம்மைப் பணிகொள்பவனும் ஆகிய சிவபெருமானது, விளங்கும் தாமரை மலரினைப்போன்ற செய்ய திருவடிகளிடத்தே பொருந்தி நம் தலைகளும் விளக்கம் உறுவனவாக! [மங்கைமார் கைவளை கொள்வது, திருவீதிஉலா வருகையில் என்க]

பத்தர் சூழப் பராபரன்
பாரில் வந்துபார்ப் பானெனச்
சித்தர் சூழச் சிவபிரான்
தில்லை மூதூர் நடஞ்செய்வான்
எத்தனுகிவந் தில்புகுந்தெமை
ஆளுங் கொண்டெம் பணிகொள்வான்
வைத்த மாமலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி மன்னி மலருமே. 4

பக்தர்கள் சூழ்ந்த அந்தப் பராபரன், வேதியக் கோலத்தோடும் பாரிலே எழுந்தருளி என் பொருட்டாக வந்தனன், சித்தர்கள் சூழ்ந்த அந்தச் சிவபெருமான், தில்லையாகிய பழம் பதியில் கூத்தியற்றுபவனும் ஆயினன், அவனே, எத்தனைப்

போல வந்து, எமது வீடாகிய உடலிடத்தேயும் புகுந்து, எம்மை ஆட்கொண்டு, எம் தொண்டுகளையும் ஏற்றுக் கொள்பவன் ஆவான், அவனது, மாமலரினைப்போல வைக்கப் பெற்ற சேவடியின் கண்ணே, நமது தலைகள் பொருந்தி, மலர்ச்சிபெற்று விளங்குமாக! [சித்தர்-ஞானியர்.]

மாய வாழ்க்கையை மெய்யென்றெண்ணி
மதித்திடா வகை நல்கினான்
வேய தோளுமை பங்கன்எங்கள்
திருப்பெ ருந்துறை மேவினான்
காயத் துள்ளமு தூறஊறநீ
கண்டு கொள்ளென்று காட்டிய
சேய மாமலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி மன்னித் திகழுமே. 5

வேயினது தன்மையவாகிய தோள்களையுடைய உமாதேவியைப் பாகமாக உடைய அவனே, எங்கள் திருப்பெருந்துறையிடத்தேயும் வந்து பொருந்தியிருந்தனன். பொய்யாகிய உலகவாழ்க்கையினை மெய்யானதென்று கருதி, அதனைப் போற்றிடாத ஒரு தெளிவாகிய தன்மையினையும் எனக்கு அளித்தருளினான். என் உடலினிடத்தே அமுதம் ஊற்றெடுக்குமாறு நிலைபெற்றும் நின்றான். அவன், 'கண்டு கொள்க' எனக் காட்டிய, சிவந்த தாமரைமலரினைப் போன்ற திருவடியிடத்தேயே, நம் தலைகள் பொருந்தி விளக்கம் அடையுமாக! -[மாயம்-பொய், சூழ்ச்சி வேய்-மூங்கில்.]

சித்தமே புகுந் தெம்மையாட்கொண்டு
தீவினைகெடுத் துய்ய லாம்
பத்தி தந்துதன் பொற் கழற்கணே
பன்மலர் கொய்து சேர்த்தலும்
முத்தி தந்திந்த மூவுலகுக்கும்
அப்பு றத்தெமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி மன்னி மலருமே. 6

எம் சித்தத்தே புகுந்தருளி, எம்மை ஆட்கொண்டு, எம் தீவினைகளை எல்லாம் அழியச்செய்து, உய்தியடைவதற்கான பக்தியினையும் அவன் தந்தருளினான். தன் பொன்போலும் திருவடிகளிடத்தே, பலவான மலர்களைக் கொய்துவந்து நாம் தூவுதலும், அவன் நமக்கு முத்தியின்பத்தினையும் தந்தருளினான். நம்மை, இந்த மூவேழான உலகங்கட்கும் அப்புறமாக இருப்பதான பேரின்ப உலகத்தேயும் கொண்டு வைத்தான். அந்த அப்பனின் செவ்விய அடிகளிடத்தே நம்தலைகள் பொருந்தவும், அவை மலர்ச்சிபெற்று விளங்குமே!

பிறவி யென்னுமிக் கடலை நீந் தத்தன்
பேரருள் தந் தருளினான்
அறவை யென்றடி யார்கள் தங்கள்
அருட்கு ழாம்புக விட்டுநல்
உறவு செய்தெனை உய்யக்கொண்ட
பிரான்தன் உண்மைப் பெருக்கமாம்
திறமை காட்டிய சேவடிக்கண் நம்
சென்னி மன்னித் திகழுமே. 7

'பிறவி' என்கின்ற இந்தக் கடலினை நீந்திக் கடப்பதற்குத் தன் பேரருளினையே புணையாக அவன் தந்தருளினான். 'அநாதை' யென்று இரக்கங்கொண்டு, அடியவர்களின் அருட் கூட்டத்தோடும் என்னைப் புகுவித்தான். அவர்களையே என் நல்ல உறவினராகச் செய்து, என்னையும் உய்தி பெறுமாறு ஆட்கொண்டான். அந்த வள்ளலின், உண்மைப் பெருக்க மாகிய ஆற்றலினைக் காட்டின, சிவந்த திருவடிகளிலேயே நம் சென்னிகள் பொருந்தித் திகழ்வனவாக!

புழுவி னாற்பொதிந் திடுகுரம்பையிற்
பொய் தனையொழி வித்திடும்
எழில்கொள் சோதியெம் ஈசன்எம்பிரான்
என்னு டை யப்பன் என்றென்று
தொழுத கையின ராகித் தூய்மலர்க்
கண்கள் நீர்மல்குந் தொண்டர்க்கு
வழுவி லாமலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி மன்னி மலருமே. 8

'புழுக்களினாலே பொதியப்பெற்றுள்ள இந்த உடம்பிலே, கொண்டிருக்கும் பற்றுகிய பொய்ம்மையினை ஒழியச் செய்கின்ற, அழகினைக்கொண்ட சோதி அவன்! அவனே எம் ஈசன்! அவனே எம் தலைவன்! அவனே எம்முடைய அப்பன்!' இங்ஙனமெல்லாம் சொல்லி, அவனைத்தொழுகின்ற கைகளை உடையவராகத், தூய மலர்போன்ற கண்களிலே நீர் நிறையப்பெறுகின்ற தொண்டர்களுக்குத் தவறு தலில்லாத, தாமரை மலரினைப்போன்ற அவனது சேவடியிடத் தேயே, நம் தலைகள் பொருந்தி மலராநிற்பனவாக!

வம்ப னாய்த்திரி வேனைவாவென்று
வல்வி னைப்பகை மாய்த்திடும்
உம்ப ரான்உல கூட றுத்தப்
புறத்தனாய் நின்ற எம்பிரான்
அன்ப ரானவர்க் கருளி மெய்யடி
யார்கட் கின்பந் தழைத்திடுஞ்

செம்பொன் மாமலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி மன்னித் திகழுமே. 9

*வீணனாகித் திரிகின்ற என்னையும், தன்பால் வருக வென்று அழைத்து, என் வலிய பகையாகிய வினையினை அழிக்கின்றவன், மேலான உலகங்களையும் ஊடறுத்துச் சென்று, அவற்றுக்கு அப்பாற்பட்டவனாகவும் நின்ற எம் பெருமானே ஆவான்! அன்பரானவர்களுக்கு அருளிச்செய்து, தன் மெய்யடியார்களுக்குப் பேரின்பத்தைப் பெருகச் செய்யும், செம்பொன்னைப் போன்ற அழகிய மலரினை ஒத்த அவனது சேவடியிடத்தேயே, நம் தலைகள் பொருந்தி விளங்கா நிற்பனவாக!*

முத்த னைமுதற் சோதியைமுக்கண்
அப்பனை முதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோகனைத்திரு
நாமம்பாடித் திரிதரும்
பத்தர் காள்இங்கே வம்மின் நீர்
உங்கள் பாசந்தீரப் பணிமினோ
சித்த மார்தருஞ் சேவடிக்கண் நம்
சென்னி மன்னித் திகழுமே. 10

*இயல்பாகவே பாசநீக்கம் உள்ளவனை, ஆதியாகிய சோதியனை, முக் கண்களையுடைய அப்பனை, அனைத்திற்கும் முதலான வித்தினைப் போன்றவனை, ஞான சொரூபனை, சிவலோக நாதனை, 'அவனுடைய திருநாமத்தைப் பாடித் திரிகின்ற பக்தர்களே, இங்கே வாருங்கள். உங்கள் பாச மானது அறும்படியாகப் பணியுங்கள். உண்மையின் நிறைவாக விளங்கும் அவனது திருவடியிடத்தேயே நம் தலைகள் பொருந்தித் திகழ்வனவாக!' என்று யானும் நும்மை அழைப்பேனே!*

# 43. திரு வார்த்தை

## அறிவித்து அன்புறுதல்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[மணிவாசக அடிகளால், திருப்பெருந்துறையில் அருளிச் செய்யப்பட்டது இது. 'எமக்குத் தலைவராகுபவர் இவர்' என அடிகள் அறிவித்து, அவர்பால் அன்பு கொள்ளுதல் இதனிடத்துக் கூறப்படுகின்றது.]*

மாதிவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கரு ணையடியார்
குலாவு நீதிகுண மாகநல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்து
ஆதிப் பிரமம் வெளிப்படுத்த
அருளறி வார்எம் பிரானுவாரே. 1

*பேரரும்புகள் இதழ்விரியாநின்ற, சோலைகள் சூழ்ந் திருக்கும் திருப்பெருந்துறையிடத்தே, வீற்றிருக்கும் எமது புண்ணியமூர்த்தியானவன், பெண்ணாள் அமர்ந்திருக்கும் ஒரு பாகத்தினை உடையவன்; வேதங்களிற் பழகிய சொல்லினை உடையவன்; இதயமலர்களிலே வீற்றிருக்கின்ற சோதி யானவன்; குற்றமற்ற மேலான கருணை வடிவானவன்; அடியவர்கள் கொண்டாடும் நீதிப் பொருளாக விளங்கு பவன்; அவர்களது அந்த நியாயங்களையே குணமாகக் கொண்டு அவர்கட்கு அருள்செய்கின்றவன்! அவன், இம் மண்ணகத்திடையேயும் வந்திறங்கி, ஆதியாகிய பெரும் பொருளையும் எனக்கு வெளிப்படுத்தினான்! அவனுடைய அந்த அருளிச்செயலின் தன்மையினை அறிந்தவர் எவரோ, அவரே எமது எம்பிரான்மார் ஆவர்!*

மாலயன் வானவர் கோனும்வந்து
வணங்க அவர்க்கருள் செய்தஈசன்
ஞாலம் அதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலம்திகழுங்

கோல மணியணி மாடநீடு
குலாவு மிடைவை மடநல்லாட்குச்
சீல மிகக்கரு ணையளிக்குந்
திறமறி வார்எம் பிரானாவாரே. 2

*திருமாலும், பிரமனும், வானவர் கோமானும் வந்து பணிய, அவர்கட்கும் அருளிச்செய்தவன் ஈசன். அவன், இந்த உலகத்திடையேயும் இறங்கிவந்து, எனக்கும் நன்னெறியினைக் காட்டினான். நன்மை விளங்குகின்ற அழகிய மணிகளால் அலங்கரிக்கப்பெற்ற மாடங்கள் நெடிதாக விளங்குகின்ற, திருவிடை மருதூரினிடத்தே, ஒரு மங்கை நல்லாளுக்குச் சீலம் மிகுந்திருப்பக் கண்டு, அவளுக்குக் கருணை செய்தவனும் அவனே! இவ்வாறு கருணைபாலிக்கும் அவனது திறத்தினை அறிந்தவரே, எம் பிரான்மார் ஆவர்.*

அணிமுடி ஆதி அமரர்கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணிவகை செய்து படவதேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறையெம்
பேரரு ளாளன்பெண் பாலுகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகையறி வார்எம் பிரானாவாரே. 3

*அழகிய சடைமுடியினை உடைய முதல்வன் அவன்! அமரர்களின் கோமான் அவன். ஆநந்தக் கூத்தன் அவன்! அறுவகைச் சமயங்களும் தன்னையே வணங்கும்படி செய்து, படவேறிப் பாரோடு விண்ணும் வழிபட்டுத் துதிக்க, அனைவருக்கும் பிறவிப் பிணியானது நீங்குமாறு அருளிச் செய்பவனும் அவன்! திருப் பெருந்துறையிலே எழுந்தருளியிருக்கும், எமது பேரருளாளனாகிய அவன், ஒரு பெண் பாலிடத்தேயும் விருப்பங்கொண்டவனாகி, அழகிய வலையினைக் கையிடத்தே கொண்டு, பெரிய கெளிற்றுமீனை வலை வீசிப்பிடிக்கும் வகையினையும் செய்தனன். அந்த அருளிப்பாட்டினை அறிபவர் எவரோ, அவரே எம் பிரான்மார் ஆவர்! [வலைவீசின திருவிளையாடலைத் திருவிளையாடற்புராணம் கூறும். வான்மீன்-பெரிய கெளிற்று மீன்.]*

வேடுரு வாகி மகேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட இருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்களுய்ய

ஆடல் அமர்ந்த பரிமாஏறி
ஐயன் பெருந்துறை ஆதிஅந்நாள்
ஏடர் களையெங்கும் ஆண்டுகொண்ட
இயல்பறி வார்எம் பிரானுவாரே. 4

மகேந்திர மலையிடத்தே வேடனுருக்கொண்டு வந்து, மிகுந்த குறைகளையுடைய தேவர்களும் வந்து தன்னைத் தேடும்படியாக வீற்றிருந்த பெருமான் சிவன். அடியவர்களாகிய நாங்கள் பிழைக்கும் பொருட்டாகச், சிந்தனை செய்து, அவனே, வெற்றியமைந்த குதிரைமேலும் ஏறிக் கொண்டு வந்தனன்! ஐயனாகிய பெருந்துறைக்கு முதல்வன், அந் நாளிலே, தன்னுடைய நண்பர்களை எங்கும் ஆட்கொண்டருளின அந்த இயல்பினை அறிய வல்லவரே, எம்பிரான்மார் ஆவர். [ஏடர்கள்-நண்பர்கள்; ஏடா என உரிமையால் அழைக்குந் தகுதியினர், 'ஏடர்' எனப் பெற்றனர் ]

வந்திமை யோர்கள் வணங்கியேத்த
மாக்கரு ணைக்கட லாய்அடியார்
பந்தனை விண்டற நல்கும்எங்கள்
பரமன் பெருந்துறை ஆதிஅந்நாள்
உந்து திரைக்கட லைக்கடந்தன்
றோங்கு மதிலிலங் கைஅதனிற்
பந்தணை மெல்விர லாட்கருளும்
பரிசறி வார்எம் பிரானுவாரே. 5

விண்ணகத்தார்கள் வந்து தன்னை வணங்கித் துதிக்க, அவர்கட்குப் பெரிதான கருணைக்கடலாக விளங்கியவன் எங்கள் பெருமான்! அவனே, அடியார்களுடைய பாசப் பிணிப்பு நீங்கி யொழியும்படியாக அருள்செய்கின்ற மேலோனுமாவான். திருப் பெருந்துறை முதல்வனாகிய அவன், அந் நாளிலே, எழுகின்ற அலைகளையுடைய கடலினைத் தாண்டி, அக் காலத்திலே உயரமான மதிலாற் சூழ்ந்திருந்த இலங்கையினிடத்தே, பந்து தங்கிய மெல்லிய விரலை உடையாளான வண்டோதரிக்கும் அருளினன். அந்தத் திறத்தினை அறிபவரே எம்பிரான்மார் ஆவர்.

வேவத் திரிபுரஞ் செற்றவில்லி
வேடுவனாய்க்கடி நாய்கள்சூழ
ஏவற் செயல்செய்யுந் தேவர்முன்னே
எம்பெருமான்தான் இயங்கு காட்டில்
ஏவுண்ட பன்றிக் கிரங்கியீசன்
எந்தை பெருந்துறை ஆதியன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த
கிடப்பறி வார்எம் பிரானுவாரே. 6

திரிபுரங்களும் எரிந்து அழியும்படியாக, அவற்றைச் சினந்த வில்லாண்மையினை உடையவன் சிவபிரான். அவனே, வேட்டுவனாகவும் உருக்கொண்டு, கடிநாய்கள் சூழ்ந்துவர வந்தவன். தனக்கு ஏவற்றொழிலைச் செய்யும் தேவர்களுக்கு எதிரே, எம் பெருமானான அவன், தான் சஞ்சரிக்கின்ற அக் காட்டிலே, அம்புண்டு செத்த பன்றிக்கும் இரங்கியளினான். ஈசனும் எந்தையுமாகிய அவனே பெருந்துறை முதல்வனும் ஆவான். அந் நாளில், அற்பமாகிய பன்றியாகத் தானே ஆகி, அப் பன்றிக்குட்டிகளுக்குப் பாலருத்திய கிடப்பினையும் உடையவன் அவனே! அவனது அந்தக் கருணையினை அறிய வரே எம்பிரான்மார் ஆவர்.

நாதம் உடையதோர் நற்கமலப்
போதினில் நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த
ஒளிவளர் சோதியெம் ஈசன்மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதங் கெடுத்தருள் செய்பெருமை
அறியவல் லார்எம் பிரானாவாரே. 7

நாதத்தை உடையதாகிய, நல்ல தாமரைப் பூவினி டத்தே பொருந்திய, அழகிய நெற்றியினை உடையவரான திருமகளும் கலைமகளும், புகழ்ந்து உரைத்து வணங்கி, மலர் தூவிப் போற்ற, ஒளிமிகுகின்ற சோதிசொரூபமாக விளங்கு பவன் எம் ஈசன்! நிலைபெற்ற பேரரும்புகள் மலர்கின்ற, சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையின்கண் வீற்றிருக்கும், எம் புண்ணிய மூர்த்தியும் அவனே யாவான். இம் மண்ணுல கிடத்தே வந்து தோன்றி, அடியவரின் வேறுபாட்டை அழித்து, அருள்செய்கின்ற பெருமையினை உடையவனும் அவனே! அதனை அறியவல்லவரே எம்பிரான்மார் ஆவார்!

பூவலர் கொன்றையம் மாலைமார்பன்
போருகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாளுமை மங்கைபங்கன்
வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்
ஏதில் பெரும்புகழ் எங்களீசன்
இருங்கடல் வாணற்குத் தீயில்தோன்றும்
ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருவறி வார்எம் பிரானாவாரே 8

*மலர்கள் விரியாநின்ற அழகிய கொன்றை மாலையினை அணிந்த, மார்பினை உடையவன் எம்பெருமான்! போரிடு தற்கான வலிய நகங்களையுடைய ஆற்றலுள்ள புலியினைக் கொன்ற வீரனும் அவனுவான்! மாதருள் நல்லவளான உமைமங்கையின் பாகத்தை உடையவனும் அவனே! வளமான சோலைகள் சூழ்ந்திருக்க விளங்கும் திருப்பெருந் துறைக்கு நாயகனும் அவனே! குற்றமில்லாத பெரும் புகழினையுடைய எங்கள் ஆண்டவனும் அவனே! பெரிய வருணனுக்கு, நெருப்பிலே தோன்றிய, ஓவியத்தைப்போன்ற மங்கையரது தோள்களைத் தழுவிய, அவனது உருவத்தின் தன்மையினை அறிபவரே எம் பிரான்மார் ஆவர்.*

தூவெள்ளை நீறணி எம்பெருமான்
சோதி மகேந்திர நாதன்வந்து
தேவர் தொழும்பதம் வைத்தஈசன்
தென்னன் பெருந்துறை ஆளிஅன்று
காதல் பெருகக் கருணைகாட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக்
கேதங் கெடுத்தென்னை ஆண்டருளும்
கிடப்பறி வார்எம் பிரானுவாரே. 9

*தூய்மையுடையதான திருவெண்ணீற்றினை அணிகின்ற வனுகிய எம்பெருமான், ஒளியுருவாகிய மகேந்திர நாதனும் ஆவான்! அவன், தானே என் பொருட்டாக எழுந்தருளி வந்தனன். தேவர்களும் தொழுகின்ற திருவடியினை என் தலைமேல் வைத்து, என்னையும் ஆண்டனன். தென்னவனின் திருப் பெருந்துறையினை ஆள்வோனுகிய அவன், அந் நாளிலே, ஆசை பெருக்கெடுக்க எனக்குக் கருணையும் காட்டினன்! தன் கழலிணைகளையும் காட்டினன்! யான் கசிந்து உருகும் வண்ண மாக, என் துன்பத்தைக் கெடுத்து, என்னை ஆட்கொண்டும் அருளினன். அந்தக் கிடப்பினை அறிபவரே, எம் பெருமான் மார் ஆவர்.*

அங்கணன் எங்கள் அமரர்பெம்மான்
அடியார்க் கமுதன் அவனிவந்த
எங்கள் பிரான்இரும் பாசந்தீர
இகபரம் ஆயதோர் இன்பமெய்தச்
சங்கங் கவர்ந்துவண் சாத்தினோடுஞ்
சதுரன் பெருந்துறை ஆளிஅன்று
மங்கையர் மல்கும் மதுரைசேர்ந்த
வகையறி வார்எம் பிரானுவாரே. 10

அழகிய அருட்கண்ணினன் எங்கள் பெருமான்! எங்கள் தேவர்பெருமானும் அவனே. அடியார்கட்கு அமுதமயமாக விளங்குபவனும் அவனே. பூமியிலே குருபரனாகி எழுந்தருளி வந்தவனும் அவனே. அடியார்களுடைய பெரும் பாசம் அனைத்தும் நீங்கவும், இக பரங்களாகிய ஒப்பற்ற இன்பம் உண்டாகவும் செய்பவனும் அவனே. வளவிய தலையணியோடும், வளையல்களை எடுத்துவந்து விற்றருளிய சதுரப் பாட்டினை உடையவனும் அவனே! அந் நாளிலே மாதர்கள் நிறைந்த மதுரைப்பதியிடத்தே, அங்ஙனமாக எழுந்தருளிய அவனது வகையினை அறிபவரே, எம்பிரான்மார் ஆவர். ['சங்கம் கவர்ந்து' என்பது, 'தன் திருமேனியழகினால் பெண்களை வளைகழல நிற்குமாறு செய்து, மதுரைத் திருவீதி வழியாக வந்தவன்' எனப் பொருள் தருவதுமாகும். சாத்து- தலையணி; தலைப்பாகை.]

# 44. எண்ணப் பதிகம்

## ஒழியா இன்பத்து உவகை

(ஆசிரிய விருத்தம்)

*[மணிவாசக அடிகள், தில்லைப் பதியிடத்தே அருளிச் செய்த பதிகம் இது. நீங்காத பேரின்பத்தின் உவகையினைக் கூறி வியப்பது.]*

பாருரு வாய பிறப்பற வேண்டும்
பத்திமை யும்பெற வேண்டும்
சீருரு வாய சிவபெரு மானே
செங் கமல மலர்போல்
ஆருரு வாயஎன் னாரமு தேஉன்
அடியவர் தொகை நடுவே
ஓருரு வாயநின் திருவருள் காட்டி
என்னையும் உய்யக்கொண் டருளே. 1

*சிறந்த குருபரனாகிய உருவத்தை மேற்கொண்ட சிவபெருமானே! செங்கமல மலர்போன்ற அரிய மேனியினனாகிய, கிடைத்தற்கரிய அமுதம் போன்றவனே! நிலவுலகிலே உருவாகி வருகின்ற எனது பிறப்புத்துன்பம் முற்றவும் அற்றொழிய வேண்டும். அதன் பொருட்டாக, நின் அடியார்களின் கூட்டத்திடையே, ஒப்பற்ற உருவாகி எழுந்தருளி வந்து, நின் திருவருளைக் காட்டி, என்னையும், உய்திக்கு நீயும் ஏற்றருள்வாயாக.*

உரியேன் அல்லேன் உனக்க டிமை
உன்னைப் பிரிந்திங் கொருபொழுதும்
தரியேன் நாயேன் இன்னதென் று
அறியேன் சங்கரா கருணையினாற்
பெரியோன் ஒருவன் கண்டுகொள்
என்றுன் பெய்கழல் அடிகாட்டிப்
பிரியேன் என்றென் றருளியஅருளும்
பொய்யோ எங்கள் பெருமானே, 2

*யான், நினக்கு அடிமையாவதற்கு உரியதான தன்மையினன் அல்லேன்! எனினும், நின்னைப் பிரிந்து இங்குச் சிறிது நேரமும் தரித்திருக்கவும் மாட்டேன். இதற்குக் காரணம்*

இன்னதெனவும் நாயினேன் அறியமாட்டேன். சங்கரனே! கருணையினாலே என்முன்னர்த் தோன்றி, 'யான் பெரியவன், யான் ஒப்பற்றவன்; என்னைக் கண்டுகொள்க' என நீயும் கூறினாய்! நின் வீரக்கழல்கள் தரித்த திருவடிகளையும் எனக்குக் காட்டிப், 'பிரியேன்' என்றும் சொல்லி, நீ அந்நாளில் அருளிய அருளும் பொய்தானோ, எங்கள் பெருமானே! ['பொய் அன்றாயின் என்னையும் வந்து காத்தருள்க' என்பது கருத்து.]

என்பே உருகநின் அருள்அளித்துன்
இணைமலர் அடி காட்டி
முன்பே என்னை ஆண்டுகொண்ட
முனிவா முனிவர் முழுமுதலே
இன்பே அருளி எனையுருக்கி
உயிருண் கின்ற எம்மானே
நண்பே யருளாய் என்னுயிர்
நாதா நின்னருள் நாணுமே. 3

என்பெலாம் உருகும்படியாக, நின் அருளினை அந் நாளிலே எனக்குத் தந்தனை. நின் இணைமலர்போலும் திருவடிகளையும் காட்டி, முன்பே என்னை ஆண்டும் கொண்டனை! அத்தகைய முனிவனே! முனிவர்களது முழு முதலாகிய தன்மையனே! இன்பத்தையே அருளிச்செய்து. என்னை உருக்கி, என் உயிரினையும் பருகுகின்ற எம் பெரி யோனே! என் உயிருக்கு நாதனே! நின் அருளானதைக், கூச்சமின்றி நட்பாகவே எனக்கு நீயும் அருளிச் செய்வா யாக!

பத்தில னேனும் பணிந்தில னேனும்உன்
உயர்ந்தபைங் கழல் காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும்
பிறப்பறுப் பாய்எம் பெருமானே
முத்தனை யானே மணியனை யானே
முதல்வ னேமுறை யோஎன்று
எத்தனை யானும் யான்தொடர்ந் துன்னை
இனிப்பிரிந் தாற்றேனே. 4

"எம்பெருமானே! அடியேன் நின்பாற் பற்றில்லாதவன்; நின்னைப் பணிந்திடாதவன்; நினது மேலான பசுமை கொண்ட திருவடிகளைக் காண்பதற்கும் ஆசைப்படேன்; ஆனால், நின்னைத் துதித்திலேன், ஆயினும், நீ, என் பிறவிப் பிணியைக் களைந்தருளல் வேண்டும்!' முத்தினை ஒப்பவனே! மாணிக்கம் போன்றவனே! முதல்வனே! முறையோ?" என்று, யான், எவ்வளவாயினும் நின்னையே பின் தொடர்ந்து

*வருவேன். நின்னைப் பிரிந்து, இனி ஒரு நொடிகூடச் சகித்திருக்கவும் மாட்டேன்!*

காணும தொழிந்தேன் நின்திருப் பாதம்
கண்டுகண் களிகூரப்
பேணும தொழிந்தேன் பிதற்றும தொழிந்தேன்
பின்னைஎம் பெருமானே
தாணுவே அழிந்தேன் நின்னினைந் துருகுந்
தன்மைஎன் புன்மைகளால்
காணும தொழிந்தேன் நீயினி வரினுங்
காணவும் நாணுவனே. 5

*எம்பெருமானே! நின்னைத் தரிசிக்கும் அதனையும் கைவிட்டேன். நின்னைக் கண்டு கண்கள் களிகூரப் போற்றுவதனையும் ஒழிந்தேன். நின்னையே நினைந்து பிதற்றுவதனையும் விடுத்தேன். பின்னரும், தாணுவே! நின்னை நினைந்து உருகும் தன்மை இல்லாதவனும் ஆயினேன். என்னுடைய இழிதகைமையினாலே, நின்னைக் காணுகின்ற வாய்ப்பினையும் இழந்தேன். இனி, நீ என் முன்னர் எழுந்தருளி வந்தனையானாலும், நின்னைக் காண்பதற்குக்கூட நான் கூச்சப்படுவேன்! ['என் இத் தன்மைகளை எல்லாம் பாராட்டாது, எனக்கும் கருணை செய்தல் வேண்டும்' என்பது கருத்து.]*

பாற்றிரு நீற்றெம் பரமனைப்
பரங்கரு ணையோடும் எதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க் கருட்டுறையளிக்குஞ்
சோதியை நீதி யிலேன்
போற்றியென் அமுதே எனநினைந் தேத்திப்
புகழ்ந்தழைத் தலறியென் னுள்ளே
ஆற்றுவனாக உடையவ னேஎனை
ஆவஎன் றருளாயே. 6

*முதல்வனே! பால்போலும் திரு வெண்ணீற்றினை அணிந்து விளங்கும் பெரியோனாகிய நின்னை, நினது மேலான கருணையினோடும் எதிர்ப்பட்டுவந்து காட்சியளித்து மெய்யடியார்களுக்கு அருள்நெறியினை அளிக்கும் ஒளியான நின்னை, நீதியற்றவனாகிய யான், போற்றுதலைச் செய்து, 'என் அமுதமே' என நினைந்து, துதித்துப் புகழ்ந்து அழைத்தலையும் அறியமாட்டாதவன் ஆயினேன்! நின்னை நினைந்து கதறி என்னுள்ளே ஆறுதலுடையவனாக யானும் ஆகும்படியாக, 'ஐயோ' என எனக்கும் இரங்கி அருள்செய்வாயாக! [பால் வெண்மை குறித்தது. 'கருணை' என்றது, அருட்சக்தியினை.]*

# 45. யாத்திரைப் பத்து

## அநுபவ அதீதம் உரைத்தல்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[அடிகள், தில்லையில் அருளிய பதிகம் இது. 'இறைவனின் திருவடிகளைச் சென்றடைவதற்கு யாம் செல்வோமாக' என, அன்பர்களை யாத்திரைப்படுத்தும் இதனை. யாத்திரைப் பத்து என்றனர். சிவானுபவத்தின் மிகுதித் தன்மையினை இதனிடத்து அடிகள் உரைக்கின்றனர்.]

பூவார் சென்னி மன்னனெம்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளம் கலந்துணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா என்னப் பட்டன்பாய்
ஆட்பட் டீர்வந் தொருப்படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
பொய்விட் டுடையான் கழல்புகவே. 1

கொன்றை மலரினைப் பொருந்திய சடைமுடியினை உடைய எங்கள் மன்னவனும், எமது பாம்பணிந்த பெருமானும் ஆகியவன், சிறியோங்களாகிய எங்களை நீங்காமல், எங்கள் உள்ளத்தே கலந்து, எங்களின் உள்ளத்து உணர்வாகவும் நின்று, எங்களை உருகச்செய்கின்ற கருணைப்பெருக்கினை உடையவனும் ஆவான். அவனால், 'ஐயோ' என இரக்கங் காட்டபெற்று, அவனிடத்தேயே அன்புடையவராகி, அவனுக்கே அடிமைப்பட்ட தொண்டர்களே! நீங்கள் எல்லாரும் வந்து, இவ்விடத்து ஒருங்கே சேருங்கள்! பொய்யாகிய உடலினைக் கழித்து, நம்மை ஆளாக உடையானின் திருவடிகளையே அடைவதற்கான காலமும் வந்துள்ளது. நாம் அதனை நோக்கிச் செல்வோம் வாருங்கள்!

புகவே வேண்டா புலன்களில்நீர்
புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம்
வேண்டா போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து
நாயே அனைய நமையாண்ட

தகவே யுடையான் தனைச்சாரத்
தளரா திருப்பார் தாந்தாமே. 2

தன்னுடைய பழவடியார்கள் எல்லாரும் நகும்படியாக, இவ்வுலகிடத்தே போந்தருளினவன் சிவபிரான். நாயினைப் போன்ற நம்மையும் தன் கருணையினாலே ஆண்டருளினான். அந்தத் தகுதியுடையவனை அடைவதிலே தளர்ச்சியின்றி முயன்று வருபவர்களே! நீங்கள் எல்லாரும், இனி, ஐம்புலன் களில் புகுதல் வேண்டா! புயங்கப் பெருமானுடைய மலரடி களையே மிகுதியாக நினையுங்கள்! பிற எல்லாப் பொருள்களை யும் வேண்டாவென ஒதுக்கிப் போகவிடுங்கள்! ['இதனை நீங்கள் மேற்கொண்டால், உங்கள் முயற்சியிலே சித்தியடை வீர்கள்' என்பது கருத்து. புயங்கம்-பாம்பு.]

தாமே தமக்குச் சுற்றமுந்
தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசமார்
என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
அவன்தன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே. 3

தமக்கு ஓர் உறவும், தமக்கு ஒரு விதிமுறையும் தானே ஆகியவன் சிவபெருமான்! யாம் யார்? எமது என்பது எது? எம் பாசமாவது எத்தகையது? நம் உலக வாழ்வு எந்த மயக் கத்தால் அமைந்தது? இவை அனைத்துமே உங்களை விட்டு இனி அகலட்டும். நம் கோமானாகிய சிவபிரானது பழவடி யாரோடும், அவனது திருவுள்ளக் குறிப்பினையே உறுதிப் பொருளாகக் கொண்டு, பொய்ம்மையாகிய இவ்வுடலினை நீக்கிப், பாம்பாபரணனும், எம்மை ஆளாக உடையவனும், ஆகிய, அவனது பொன்னடிகளிடத்தேயே சென்று சேரு கின்ற, அந்த நெறியிலேயே இனிப் பொருந்துவீர்களாக!

அடியார் ஆனீர் எல்லீரும்
அகல விடுமின் விளையாட்டைக்
கடிசே ரடியே வந்தடைந்து
கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச்
செடிசே ருடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்தன்
பூவார் கழற்கே புகவிடுமே. 4

*அடியவராகிய அனைவரும், உலக விளையாட்டுக்களை எல்லாம் உங்களிடமிருந்து அகன்றுபோமாறு நீங்கிவிடுவீர்களாக? மணம்பொருந்திய இறைவனின் அடிகளையே வந்தடைந்து, அவன் திருக்குறிப்பினையே கடைக்கொண்டும் இருப்பீர்களாக! இங்ஙனம் நீங்கள் இருப்பீர்களாயின், திருநீறு பொருந்திய திருமேனியை யுடைய புயங்கப் பெருமான், பாவச் சேர்க்கையாகிய இவ்வுடம்பினைப் போகுமாறு அகற்றிச், சிவலோகத்தின் கண்ணேயும் நம்மைக் கொண்டு சென்று வாழவைப்பான். அல்லாமலும், தன் தாமரை மலர் போன்ற திருவடிகளினிடத்தேயும் நம்மைச் சேர்த்துக் கொள்வான்! ['அதனால், அவனையே விரும்புவீர்களாக' என்பது கருத்து.]*

விடுமின் வெகுளி வேட்கைநோய்
மிகவோர் காலம் இனியில்லை
உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோடு
உடன்போ வதற்கே ஒருப்படுமின்
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணியார் கதவ தடையாமே
புடைபட் டுருகிப் போற்றுவோம்
புயங்கன் ஆள்வான் புகழ்களையே. 5

*அடியவர்களே! வெகுளியையும் ஆசையாகிய நோயினையும் விட்டுவிடுங்கள். நீங்கள் மேன்மையடைதற்கான காலம் இதுவன்றி, இனி வேறில்லை! நம்மை ஆளாக உடையானின் திருவடிகளின் கீழேயே, பெருங் கூட்டத்துடன் சென்று சேர்வதற்கே, நீங்கள் ஒருப்படுவீர்களாக! ஒருப்படின் நாம் சிவபுரத்துள்ளும், சென்று சேர்வோம். அழகு பொருந்திய சிவலோகக் கதவினை அடையாமல், நம் பக்கத்தேயே இருத்து, நமக்காக உருகி, நம்மையும் ஆள்பவனாகிய புயங்கப் பெருமானின் புகழ்களையே, நாமும் எப்போதும் துதிப்போமாக!*

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்
டிகழ்மின் எல்லா அல்லலையும்
இனியோர் இடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்தாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே. 6

*அடியவர்களே! புயங்கப் பெருமானது திருவடிகளையே எப்போதும் போற்றுவீர்களாக! அவற்றையே எப்போதும்*

தொழுவீர்களாக! அவற்றையே மலரிட்டுப் புனைவீர்களாக! அவற்றையே நும் மனத்தில் வைத்து, எல்லாத் துன்பங்களையும் இகழ்ந்து நீக்குவீர்களாக! இனி, ஒருவித இடையூறும் நும்மைச் சேராமல், விளங்குகின்ற சிறப்பினைப் பொருந்திய சிவபுரத்திலே சென்று,சிவபெருமானின் திருவடிகளை வணங்கி, யாம் எல்லாம், அங்கே வாழும் பழவடியாரின் முன்னேயும் சென்று மனமுருகி நிற்போமாக! ['இதுவே நாம்' செயற்பாலதென்பது கருத்து.]

நிற்பார் நிற்கநில் லாவுலகில்
நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாந் திருமேனிப்
புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாந் தாழாதே
நிற்கும் பரிசே ஒருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தாற்
பெறுதற் கரியன் பெருமானே. 7

அடியவர்களே! நிலையில்லாததாகிய இவ்வுலகத்திலே, நிற்க விரும்புகின்ற பேதைமையினை உடையவர்கள் இங்கேயே நிற்பார்களாக! நாம், இங்கே இனியும் நிற்கமாட்டோம். இனிச் சிவனடிகளை நாடியே செல்வோம். அழகினால், தன்னையே தனக்கு ஒப்புடையதான திருமேனியினையுடைய புயங்கப்பெருமானும், நம்மை ஆள்பவனுமாகிய பெருமானின், அழகிய திருவடிகட்கே நாம் சென்று சேர்வோமாக! அங்ஙனம் செல்ல விரும்பி நிற்பவர்கள் எல்லாரும், காலத்தைத் தாழ்த்தாதே, அவனடிக்கண் நிற்பதற்கான அத்தன்மையினையே ஒருப்படுவீர்களாக! பின்னிடத்தே நின்று நீங்கள் விழித்தால், பெருமானை அவன், உங்களால் அடைவதற்கு அரியவனாகி விடுவான்!

பெருமான் பேரா னந்தத்துப்
பிரியா திருக்கப் பெற்றீர்காள்
அருமா லுற்றுப் பின்னை நீர்
அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவந்
திறந்த போதே சிவபுரத்துத்
திருமா லறியாத் திருப்புயங்கன்
திருத்தாள் சென்று சேர்வோமே. 8

அடியவர்களே! சிவனடிகளையே சேர்வதனைக் கருத்திற் கொண்டீர்களாக, உங்கள் சிந்தனையைத் திருத்தமான முறையிலேயே வைத்துக்கொண்டு சிந்திப்பீர்களாக. போரி

டத்தே பொலிவுற்றுத் தோன்றும், வேற்படையினைப் போல விளங்கும் கண்களை உடையவளான, உமாதேவியினைத் தன் பாகத்தே உடையவனும், புயங்கமென்னும் கூத்தினை உடைய வனுமான பெருமானின், அருளாகிய அமுதத்தினை நிறையப் பருகித், தெவிட்டாத அன்பு மிகுதியாக, அதனிடத்தே யாக மூழ்குவீர்களாக! பொய்யாகிய இவ்வுலகிலே கிடந்து புரளாமல், பிரானின் கழலுக்கே போய்ச் சேர்வதற்கும் முயல்வீர்களாக!

**சேரக் கருதிச் சிந்தனையைத்**
**திருந்த வைத்துச் சிந்திமின்**
**போரிற் பொலியும் வேற்கண்ணாள்**
**பங்கன் புயங்கன் அருளமுதம்**
**ஆரப் பருகி ஆராத**
**ஆர்வங் கூர அழுந்துவீர்**
**போரப் புரிமின் சிவன்கழற்கே**
**பொய்யிற் கிடந்து புரளாதே.** 9

அடியவர்களே! நிலத்தே புரள்பவராகவும், சிவனடி களையே வணங்குபவராகவும், அவன் புகழையே போற்றுபவ ராகவும் ஆகுவீராக! இன்றே வந்து அவனுக்கு அடிமை ஆகாதவர்களே! நீங்கள் எல்லாரும் மயங்கி நிற்பவர்கள்! உங்களைப் பின்னர் மதிப்பவர் தாம் யாவரோ? உள்ளத்துள்ளே கலக்கமடைந்து மயங்குபவர்களே! நீங்கள் எல்லாரும் தெளிவு கொண்டீர்களானால், அவனுக்கு ஆளாதலாகிய இதனையே செய்வீர்களாக! என்னெனின், அத்தகையோரன்றிச் சிவ லோகக் கோமானும், அழகிய பாம்பாபரணனு மாகிய பெருமானது அருளினை, இவ்வகன்ற பூமியிலே, பிறர் யார் தாம் பெறுவார்கள்? பெறுதவர்களின் நிலைமை, அந்தோ! அந்தோ! அந்தோ! ['அது மிகவும் பரிதாபத்திற்கே உரிய' தென்பது கருத்து.]

**புரள்வார் தொழுவார் புகழ்வாராய்**
**இன்றே வந்தாள் ஆகாதீர்**
**மருள்வீர் பின்னை மதிப்பாரார்**
**மதியுட் கலங்கி மயங்குவீர்**
**தெருள்வீ ராகில் இதுசெய்ம்மின்**
**சிவலோ கக்கோன் திருப்புயங்கன்**
**அருளார் பெறுவார் அகலிடத்தே**
**அந்தோ அந்தோ அந்தோவே.** 10

# 46. திருப் படையெழுச்சி

## பிரபஞ்சப் போர்

(கலி விருத்தம்)

*[தில்லைப்பதியிலே, அடிகளால் அருளிச் செய்யப்பட்டது இது. உலகத்தே, ஆன்மாவுக்கு எதிராகப் போரிடுகின்ற பொய்ம்மைச் சுழல்களை வென்று, சிவப் பேரின்பத்தை அடைதலைக் குறித்த, படைஎழுச்சி இதுவாகும்.]*

**ஞானவாள் ஏந்தும்ஐயர் நாதப் பறையறைமின்**
**மானமா ஏறும்ஐயர் மதிவெண் குடைகவிமின்**
**ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்**
**வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே. 1**

*சிவஞானமாகிய வாட்படையினைக் கையேந்திவரும் தலைவரது, நாதமாகிய பறையினை அடித்து முழக்குங்கள்! பெருமைபொருந்திய இடபத்தின் மீதாக ஏறிவருகின்ற நம் தலைவருக்குத், திங்களாகிய வெண்குடையினைக் கவியுங்கள்! நன்மை தருவதாகிய திருநீற்றுக் கவசத்தினை மேனிமுழுதும் இட்டுக் கொள்ளுங்கள்! இப்படிச் செய்துகொண்டால், நாம், மாயாகாரியமாகிய படைகள் வந்து நம்மை வெல்லாத படிக்கு, அவற்றை வென்றவர்களாக, வானவூராகிய சிவலோகத்தினையும் சென்று கைப்பற்றிக்கொள்லாம்!*

**தொண்டர்காள் தூசிசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்**
**ஒண்திறல் யோகிகளே பேரணி உந்தீர்கள்**
**திண்திறல் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்**
**அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே. 2**

*தொண்டர்களே! தூசிப்படையினைப் போல முற்பட விரைந்து செல்வீர்களாக! பக்தர்களே! நீங்கள் அத் தூசிப் படையினைச் புடைசூழ்ந்தவராகிச் செல்வீர்களாக! ஒளி மிகுந்த வலியினையுடைய யோகிகளே! நீங்கள் பேரணியினை நடத்திச் செல்வீர்களாக! திண்மையான ஆற்றலைக்கொண்ட சித்தர்களே! நீங்கள் பின்னணிப் படையாகச் செல்வீர்களாக! தேவரது நாட்டைக் கைப்பற்றித் துன்பப் படைகள் வராத படி காத்து, நாமே சென்று ஆள்வோம், வருவீர்களாக!*

# 47. திரு வெண்பா

## அணைந்தோர் தன்மை

(நேரிசை வெண்பா)

*[மணிவாசக அடிகளால், திருப்பெருந்துறையிலே அருளிச் செய்யப் பெற்றது இதுவாகும். சிவனடிகளைத் தம் உளத்தே கொண்டவரின் தன்மைவிளக்கமாக இது விளங்குவது.]*

**வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன்—செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து.** 1

*செவ்விய, அழகு நிறைந்த திருப்பெருந்துறைக்கு உரியானது, தேனைச் சொரிகின்றதும் செந்தீயினை நிகர்த்தது மான திருமேனியினை மனத்தகத்தே கொள்ளாதிருந்தவனாகிய யான், கொடிய வினைகளிரண்டும் என்னினின்றும் வெந்தொழியும் படியாகவும், என் உடல் உருகுமாறும் பொய் வாழ்வு பொடியாகிப் போகாதே, வேறு என்னதான் செய்வேனோ? ['அவன் திருவுருவினையே என் மனத்தகத்து நிலையாகக் கொள்வேன்' என்பது கருத்து.]*

**ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே என்செய்கேன்—தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்றும் அத்தன் பெருந்துறையான்
தானென்பார் ஆரொருவர் தாழ்ந்து.** 2

*'தலைவணங்கி நின்று, நீக்குதற்கரிய பேரின்பப் பித்தினை மிகுவிக்கின்ற அப்பனான பெருந்துறையான் இவன்' என்று காட்டிக் கூறுவார் யாரொருவரும் இல்லை. யாவர்க்கும் மேலானவனே! இனி, யான் ஆரவாரிப்பேனோ? அரற்றுவேனோ? ஆடுவேனோ? பாடுவேனோ? நின்னைக் காணவும் பெறுவேனோ? இனி, யான் யாதுதான் செய்வேனோ? ['அதனையும் நீயே வந்து அருளிச்செய்க' என்பது கருத்து.]*

**செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே
உய்யும் வகையின் உயிர்ப்பறியேன்—வையத்
திருந்துறையுள் வேல்மடுத்தென் சிந்தனைக்கே கோத்தான்
பெருந்துறையில் மேய பிரான்.** 3

திருப் பெருந்துறையிடத்தே எழுந்தருளியிருந்த பெருமான், இவ்வுலகிடத்தே வந்திருந்து, உறையுள் இருந்த வேலினை எடுத்து, என் உள்ளத்தேயும் சென்று அழுந்துமாறு ஏவிவிட்டனன். அதற்குக் காரணமாக, யான் செய்த பிழை தான் யாதெனவும் யான் அறியேன்? அவனது செவ்விய பாதங்களைக் கைதொழுது உய்யும்வகையின் உயிர்ப்பினையும் யான் இதுவரை அறியேனே? ['வேல்' சிவஞானத்தைக் குறித்தது. சிவனை நாடாதிருந்த என்னையும், அவன் வலிந்து வந்து கடைத்தேற்றினன்' என்பது கருத்து.]

முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—தென்னன்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன
வருந்துயரந் தீர்க்கும் மருந்து. 4

அழகிய, நல்ல திருப்பெருந்துறையிலே வீற்றிருந்த பேரருளாளன், என் முன்னைவினைகள் இரண்டினையும் அடியோடு அறுத்து, அந்நாளிலே, எனக்கு முற்பட்டு வந்தும் நின்றனன்! அவனே, என் பின்னைப் பிறப்புக்களையும் அவை தோன்றாவாறு அறுக்கின்ற பேராளன் ஆவான்! அவனே, எனக்கு வருகின்ற துயரங்களை எல்லாம் நீக்கும் மருந்தும் ஆவான்! ['அதனால், அவனையே யானும் போற்றியிருப்பேன்' என்பது கருத்து.]

அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற
மறையோனும் மாலுமால் கொள்ளும்—இறையோன்
பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா
திருந்துறையும் என்னெஞ்சத் தின்று. 5

உலகங்கள் அனைத்தையும் படைத்த மறையவனாகிய பிரமனும், அவனைப் பெற்றவனாகிய திருமாலும், அடிமுடி காணமாட்டாதாராக மயக்கங் கொள்ளுகின்ற இறைவனாகிய் பெருந்துறையுள் எழுந்தருளிவந்த பெருமான், என்னிலிருந்தும் பிரியாதிருந்து, இன்று என் நெஞ்சத்தேயே வாழ்கின்ற ஒருவனும் ஆவான். இதனை அறிவார்க்கு, அறையோ! ['அறையோ' என்பது, பந்தயத்திற்கு அழைத்து, இன்னார்க்குப் பரிசில் என அறைகூவும் சொல்லாகும். 'அறிவார்க்கே பரிசு' என்பது கருத்து.]

பித்தென்னை ஏற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை—அத்தன்
பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து. 6

அப்பனாகிய திருப் பெருந்துறையான், என்னையும் அடிமைகொண்டு, தன் பெருங்கருணையினாலே திருநோக்கமும் செய்தருளிய, என் பிறவிப்பிணிக்கு மருந்தும் ஆகின்றவன்! அவன், இவ்விடத்தே மீளவும் எழுந்தருளிவந்து என்னைப் பித்தும் ஏற்றுவான்; என் பிறவித்தளையினையும் சேதிப்பான்; எழுந்தருளிவந்து, என் மனத்தைச், சொல்லுதற்கும் அரிதாகின்றவோர் உன்மத்தம் கொள்ளவும் செய்வான்!

வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதாய் அமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. 7

சிறப்புப் பொருந்திய தென்னகத்ததாகிய திருப்பெருந்துறைப் பெருமான், எனது சிந்தைக்கண்ணே பொருந்திய ஒப்பற்றவனும் ஆவான்! அவன், என் சிந்தையிடத்தே பெருக்கும் ஒளியானது, பிறவிக்கு மீண்டும் வராத ஒரு வழியினையும் எனக்கு அருளியது; எனக்கு மாறுபாடின்றி வந்து, என்பால் தெவிட்டாத அமுதமாகவும் அது அமைந்தது!

யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழாம் அடியேனை—யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை. 8

எல்லார்க்கும் மேம்பட்ட எல்லையற்ற சிறப்பினை உடையவனே! யாவருக்கும் கீழ்ப்பட்ட அடியனேனையும், யாவரும் பெற்றறியாத பேரின்பத்துள் வைத்தனையே! அத்தகைய எம்பெருமானாகிய நினக்கு, யான் கைம்மாறு செய்வதற்கான ஒரு முறையினையும் அறிந்திலேனே?

மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்—மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்பம் மிகும். 9

மும்மூர்த்திகளும், முப்பத்து மூவரும், மற்றைய தேவர்களும் காணவொண்ணாத சிறப்பினனான சிவபெருமானின், இடபத்தின் மீது ஏறி இவ்வுலகிடத்தே வந்திறங்கின நெடிய திருவடிகளை யான் வணங்க, என் உடலகத்தே பேரின்பம் மிகுதியாகப் பெருகுமே! [முப்பத்து மூவர் என்றது, உருத்திரர் பதினொருவர், ஆதித்தர் பன்னிருவர், அசுவினிதேவர் இருவர், வசுக்கள் எண்மர் ஆகியோரை. 'மா' வென்றது, இடபத்தை.]

இருந்தென்னை ஆண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே எல்லாம்—தருங்காண்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து. 10

*நெஞ்சமே! சிறப்புப் பொருந்திய திருப்பெருந்துறையான், என்பால் பேரானந்தத்தைப் பெருகச்செய்து, என்னிடத்திருந்த அறியாமை இருளினையும் அகற்றி, எந்நாளும் தொடருகின்ற துன்பத் தொடர்ச்சியையும் ஒழித்து, ஒளியுருவாய், என்னுள்ளே அன்பினை நிறைத்து, என் மனத்தையே விரும்பித் தனது பதியாகவும் கொண்டு, என்பாலேயே நிலைபெற்றான்! ['அந்தப் பேற்றினை எங்ஙனம் புகல்வேன்' என்பது கருத்து.]*

இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. 11

*சிறப்பு நிறைந்த திருப்பெருந்துறையிலே வீற்றிருப்பவனான எங்கள் சிவபெருமான், என்னுள்ளத்தே, தன்பால் அன்புகொள்ளுவதற்கான நிலையினை அமைத்தனன்: இன்பத்தைப் பெருக்கினன்; கவிந்திருந்த அறியாமையாகிய இருளினை அகற்றினன்: எந்நாளும் என்னைத் தொடர்ந்து வருகின்ற இறப்பும்பிறப்புமாகிய துன்பத்தினையும் அறுத்தனன்; சிவசோதியாகவும் என்னுள் அவன் நிறைந்தனன். என்னுடைய சிந்தையினையே தான் நிலையாகத் தங்கியிருக்கும் இடமாகவும், உவப்புடன் அவன் ஆக்கிக்கொண்டனன். ['அவனுடைய கருணையினை எங்ஙனம் போற்றுவேன்' என்பது கருத்து.]*

# 48. பண்டாய நான்மறை

## அநுபவத்துக்கு ஐயமின்மை உரைத்தல்

(நேரிசை வெண்பா)

*[மணிவாசக அடிகளால், திருப்பெருந்துறையிலே செய்தருளப் பெற்றது இது. 'சிவாநுபவம் மெய்யடியார்களுக்கு வந்தடைவது உறுதி; அதற்கு ஓர் ஐயம் இல்லை' என்பதனை வலியுறுத்துவது இதுவாகும்.]*

**பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனுங்**
**கண்டாரு மில்லைக் கடையேனைத்—தொண்டாகக்**
**கொண்டருளுங் கோகழிஎங் கோமாற்கு நெஞ்சமே**
**உண்டாமோ கைம்மா றுரை.** 1

*நெஞ்சமே! பழையாகிய நான்கு வேதங்களும் தன்பால் அணுகமாட்டாத சிறப்பினன், சிவபெருமான். திருமாலும் பிரமனும் அவனைக் கண்டுவிட முயன்றும், கண்டவர்கள் அல்லாத ஒரு தன்மையனும் அவன் ஆவான். அவன், கடையனேனை என்னையும், எழுந்தருளிவந்து தன் தொண்டனாக ஏற்றுக் கொண்டு, அந்நாளிலே அருளிச் செய்தனன். திருப்பெருந் துறையானாகிய அந்த என் கோமானுக்கு, ஒ கைம்மாறு செய்வதற்கும் உளதோ? இருந்தால், அதனைச் சொல்வாயாக!*

**உள்ள மலமூன்றும் மாய உகுபெருந்தேன்**
**வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த—வள்ளல்**
**மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்**
**கருவுங் கெடும்பிறவிக் காடு.** 2

*உளதாகிய மும்மலங்களும் நீங்கியொழியச் சொரிகின்ற பெரிதான இன்பவெள்ளத்தினைத் தருபவன் சிவபிரான். குதிரையின் மேலாக அன்று எழுந்தருளிவந்த வள்ளலும் அவனாவான். அவன் வீற்றிருக்கும் திருப்பெருந்துறையினையே அனைவரும் வாழ்த்துங்கள்! அங்ஙனம் வாழ்த்தவும், உங்களது பிறவிக்காட்டின் மூலமும் வேரோடு அழியும் என்பதனை நீங்கள் அறிவீர்களாக!*

காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிப்பாகன் நம்வினையை—வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளுங் கெடநெஞ்சே வாழ்த்து. 3

*காட்டகத்தே வேடனாகியும், கடலிடத்தே வலைஞனாகியும், நாட்டகத்தே குதிரைப்பாகனாகியும் தோன்றியருளியவன் சிவபிரான். அவனே, நம் வினையைத் தொலைத்து, நமக்கு அருள்புரியும் பெருந்துறையானும் ஆவான்! அவனுடைய அழகிய மலரடிகளை, நெஞ்சமே! நின் மயக்கமும் கெடும்படியாக, நீயும் நினைந்து வாழ்த்துவாயாக!*

வாழ்ந்தார்கள் ஆவாரும் வல்வினையை மாய்ப்பாருந்
தாழ்ந்துலகம் ஏத்தத் தகுவாருஞ்—சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி ஏத்தும் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி ஏத்தும் நமர். 4

*அமரர்கள் சூழ்ந்துசென்று தலைவணங்கித் துதிக்கின்ற சிறப்பமைந்த திருப்பெருந்துறையானை நன்கு வணங்கித் துதிக்கின்ற நம்மவர்களே, உலகிற் பயனுற வாழ்ந்தவர்களும், வலிதான வினையினைத் தொலைப்பவர்களும், உலகனைத்தும் வணங்கி வாழ்த்தத் தகுதி பெறுகின்றவர்களும் ஆவார்கள்! ['பிறர் எல்லாம் பிறவியினை வீணுக்கே செல விட்டுத் துயரத்திற்கே ஆளாகும் பேதையர்கள்' என்பது கருத்து.]*

நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி எழுகோ கழிக்கரசைப்—பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண். 6

*நெஞ்சமே! நம் துன்பங்கள் எல்லாம் நீங்கிப்போகுமாறு, திருப் பெருந்துறையினை அடைந்து, கோகழி நாதனை எண்ணியபடியே நீயும் எழுச்சி பெறுவாயாக! பண்போலும் இனிதான மொழியினளான உமாதேவியோடும், திருவுத்தர கோச மங்கையிலே நிலைபெற்று, நீங்காதே இருந்தவனைத் தரிசித்தும் போற்றுவாயாக! [கோகழி-திருவாவடுதுறை.]*

காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு. 6

*நெஞ்சமே! காண்பதற்கு உரியவான கருவிகள் எல்லாமே பேரின்பமயமாகப் பேணி நிற்கும், அடியார்களுடைய*

பிறவிப் பிணி முற்றவும் அகலுமாறு கருணைத் திருநோக்கினைச் செலுத்தும் பெருமையினை உடையவனைப், பெருந்துறைப் பதியிலே நின்றும் என்றும் நீங்காது இருப்பவனை, நீயும் புகழ்ந்து, எப்போதும் வாயாரப் பேசுவாயாக!

பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி என்மனத்தே வைத்து. 7

பேசுகின்ற பொருளுக்கு எல்லாம் இலக்காகவும் இதமாகவும் இருக்கின்ற, பேச்சினைக் கடந்தவனுகவும் விளங்குகின்ற, மாசிலாமணியாகிய சிவபெருமானது திருவார்த்தையினையே யான் பேசினேன்! 'திருப் பெருந்துறையே' என்று புகழ்ந்து, நல்லதோர் மருந்துபோல்வானுன அப்பெருமானின் திருவடிகளையே என் மனத்தில் இருத்தி, என் பிறவிப் பிணியினையும் ஒழித்துவிட்டேன், ['இனி, எனக்கு ஒரு குறையும் இல்லை' என்பது கருத்து. இதம்—இனிமை. இலக்கு-குறி; லட்சியம்.]

# 49. திருப் படையாட்சி

## சீவ உபாதி ஒழித்தல்

(பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

*[மணிவாசகப் பெருமான், தில்லைப் பதியிலே அருளிச் செய்த பதிகம் இது. இறைவன் வந்து தன் காட்சியினைத் தந்தருளியதும், உயிர்களின் பலவகையான விவகாரங்களும் ஒழிந்துபோகின்ற அந்த அநுபவத்தை உரைப்பதும் இதுவாகும்.]*

**கண்க ளிரண்டும் அவன்கழல் கண்டு களிப்பன ஆகாதே**
**காரிகை யார்கள்தம் வாழ்விலென் வாழ்வு கடைப்படும் ஆகாதே**
**மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடும் ஆகாதே**
**மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும் வணங்குதும் ஆகாதே**
**பண்களி கூர்தரு பாடலொ டாடல் பயின்றிடும் ஆகாதே**
**பாண்டி நன் னாடுடை யான்படை யாட்சிகள் பாடுதும் ஆகாதே**
**விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படும் ஆகாதே**
**மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படும் ஆயிடிலே.** 1

*மீனின் பொருட்டாக அந்நாளிலே வலைவீசின திருவிளையாடலை நிகழ்த்திய, வேடனாகிய சிவபெருமான் வந்து, நமக்கும் வெளிப்பட்டுத் தோன்றினனாயின்--*

*நம் கண்கள் இரண்டும் அவன் திருவடிகளைக் கண்டு களிப்பனவாதலும் நிகழாது; மாதர்களது வாழ்விலே நம்முடைய வாழ்வு கலந்து கடைப்பட்டுப் போதலும் நிகழாது; உலகங்களிலே வந்து பிறந்திடுகின்ற தன்மையினை மறந்திடுதலும் நிகழாது; திருமாலும் அறியாத மலரடிகள் இரண்டினையும் வணங்குதலும் நிகழாது; பண்களின் களிப்பு மிகுந்த பாடலோடு ஆடலையும் பயின்றிடுகின்ற அதுவும் நிகழாது; பாண்டிநாடாகிய நன்மைபொருந்திய நாட்டினை உரிமையாக உடைய பெருமானின் படையாட்சிகளைப் பாடுதலும் நிகழாது; விண்ணுலகத்தார் களிப்புமிகுவதற்கு ஆகியதான ஒரு வேறுபாடு வந்து நமக்கு வெளிப்படுதலும் நிகழாது. ['படையாட்சி' என்றது, இறைவனின் வீரமிக்க வெற்றிச் செயல்களை. வேதகம்-வேறுபடுத்தல். 'மெய்யடியார்கள், இறைவனைக் கண்டபின்னர் வேறாகிய பற்பல விவகாரங்களிலும் ஈடுபடுதல் இலர்' என்பது கருத்து.]*

ஒன்றினொ டொன்றுமோ ரைந்தினொ டைந்தும் உயிர்ப்பறு
[மாகாதே
உன்னடி யாரடி யாரடி யோமென உய்ந்தன வாகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கது வாகாதே
காரண மாகும் அனாதி குணங்கள் கருத்துறு மாகாதே
நன்றிது தீதென வந்த நடுக்கம் நடந்தன வாகாதே
நாமுமெ லாமடி யாருட னேசெல நண்ணுது மாகாதே
என்றுமென் அன்பு நிறைந்த பராவமு தெய்துவ தாகாதே
ஏறுடை யான்எனை ஆளுடை நாயகன் என்னுள் புகுந்திடிலே. 2

*இடப வாகனத்தை உடையவனாகிய சிவபிரானும், என்னை அடிமையாக உடையவனுமாகிய பெருமானானவன், என்னறிவினுள்ளேயும் புகுந்து நிலைத்துவிட்டானென்றால்—*

*உயிரினோடும் உடம்பும், ஐம்பொறிகளோடு அவற்றின் உணர்வுகளாகிய ஐம்புலன்களும், பிழைத்திருத்தலும் நிகழாது; 'உன் அடியார்களுக்கு அடியோம் யாங்கள்' எனக் கூறி உய்வதற்கு ஏதுவாகிய செயல்களும் நிகழமாட்டா; கன்றினை நினைந்து எழுந்துசெல்லும் தாய்ப்பசுவென வந்த பாசமுறைமையும் நிகழாது; மனம் முதலியற்றிற்குக் காரணமாகிய முக்குண பேதங்கள் பொருந்துதலும் நடவாது; 'இது நல்லதோ இது தீயதோ' என ஒன்றினைக் குறித்து ஆராய்ந்த போது வந்த நடுக்கமானது நிகழ்தலும் நடவாது; நாமெல்லாம் அடியாரோடும் போவதற்குக் கருதுதல் என்பதும் நிகழாது; எக்காலத்தும் எனது நிறைந்த அன்பிற்குரிய, மேலான அமுதமானவனை அடைவதற்கு முயல்வதென்பதும் நடவாது! ['ஒன்றினொடொன்று' என்றது, உடம்பும் உயிரும் ஆகிய பிணைப்பினை; 'ஐந்தினொடு ஐந்தும்' என்றது, புலன்களும் பொறிகளும் ஆகியவற்றை.]*

பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த பராவமு தாகாதே
அந்த மிலாத அகண்டமும் நம்முள் அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர் அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்கள் அவன்திரு மேனி திளைப்பன வாகாதே
இந்திர ஞால இடர்ப்பிற வித்துய ரேகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய ஈசன் எதிர்ப்படு மாயிடிலே. 3

*என்னுடைய நாயகனாகிய ஈசுவரன், என் முன்பாகத் தோன்றி நின்றனன் ஆயின்—*

*பிறவித் தளைக்கு ஏதுவாகிய விகார குணங்கள் வெளிப்படுதலும், மறைதலும், மீளவும் வெளிப்படுதலும் ஆகியவை எல்லாம் நிகழமாட்டா; எண்ணங்கள் உண்டாகின்ற*

மனத்திலே தோன்றின, மேலான அமுதமும் அநுபவித்தற்கு ஆகாது; முடிவில்லாத அகண்டப் பொருள்கள் நம்முள்ளே அகப்படுதல் என்பதும் நிகழாது; ஆதிமுதலாகிய மேலான பரஞ்சோதி நம்மை வந்து அணுகுவதென்பதும் ஆகாது; செம்பவள வாயினையுடைய மாதரது துன்பங்களானவை கெடுவது என்பதும் நிகழாது; அவரது கெண்டைமீனைப் போன்ற கண்கள் அவனது திருமேனியினைக் கண்டு திளைப்பன வென்பதும் நிகழாது; இந்திர சாலத்தைப் போன்ற துன்பத்திற்கு இடமாகிய பிறவித் துன்பங்கள் எல்லாம் ஒழிந்து போதல் என்பதும் நிகழாது! ['இறைவனை அடைதற்கு முன்னாக நிகழும் இவை எல்லாம் அவனை அடைந்ததும் நிகழாமற் போவனவாகும்' என்பது கருத்து.]

**என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன் இன்புறு மாகாதே**
**எல்லையில் மாக்கரு ணைக்கடல் இன்றினி தாடுது மாகாதே**
**நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற நண்ணுவ தாகாதே**
**நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும் நண்ணுவ தாகாதே**
**மன்னிய அன்பரில் என்பணி முந்துற வைகுவ தாகாதே**
**மாமறை யும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே**
**இன்னியற் செங்கழு நீர்மலர் என்தலை எய்துவ தாகாதே**
**என்னை யுடைப்பெரு மான்அருள் ஈசன் எழுந்தரு ளப்பெறிலே. 4**

என்னை ஆளாக உடையவனும், எனக்கு அருள்செய்கின்ற ஈசனுமாகிய பெருமான், என் முன்னர் வந்து எழுந்தருளப் பெற்றனனாயின்—

எனது அழகுநிறைந்த தனங்கள் இறைவனது திருமார்பிடத்தே பொருந்திக் கலந்து இன்புறுதலென்பதும் ஆகாது; எல்லையற்ற பெருங்கருணைக் கடலிலே இன்று இனிதாக யாம் ஆடுதும்' என்பதும் நிகழாது; நல்ல நாதமானது ஒலித்து, என்னுள்ளத்தே பொருந்த, நான் அதனை அடைவதென்பதும் நிகழாது; நாதனது அழகான திருநீற்றினை நான் நாள்தோறும் பூசுதல் என்பதும் நிகழாது; நிலைபெற்ற அன்பருள் என் பணிவிடைகள் முற்பட்டு இருத்தல் என்பதும் நிகழாது! சிறந்தவான வேதங்களும் அறியவொண்ணாத மலரடிகளை யான் வணங்குவதென்பதும் நிகழாது; இனிய இயல்பினையுடைய செங்கழுநீர்ப் பூப்போன்ற திருவடிகள் எனது தலையிற் பொருந்துதல் என்பதும் நிகழாது! ['இறைவன் என்முன் எழுந்தருளப் பெற்றால், என்பால் வேறு விவகாரங்கள் எதுவுமே நிகழ்ந்தலில்லை என்பது கருத்து. பிறவெல்லாம் தத்துவச் சார்புடைய செய்திகள். 'என் அணியார் முலை ஆகம் அளைந்துடன் இன்புறுமாகாதே' என்றது, ஆன்மாவைக் காதலியாகக் கொண்டதொரு கூற்றாகும்.]

மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே
வானவ ரும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த கலக்கறு மாகாதே
காதல்செ யும்அடி யார்மனம் இன்று களித்திடு மாகாதே
பெண்ணலி ஆணென நாமென வந்த பிணக்கறு மாகாதே
பேரறி யாத அனேக பவங்கள் பிழைத்தன ஆகாதே
எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை எய்துவ தாகாதே
என்னையு டைப்பெரு மான்அருள் ஈசன் எழுந்தரு ளப்பெறிலே 5

*என்னை அடிமையாகவுடைய பெருமானாகிய, அருளாளனான ஈசன், என் முன்னர் வந்து எழுந்தருளப் பெற்றனனாயின்—*

*மண்ணுலகிலே மாயாகாரியங்களைப் பெரிதாகக்கொண்டு வகுக்கப்பெற்ற மயக்கமானது அறுதல் என்பதும் என்பால் நிகழாது; வானவர்களும் அறியாத மலரடிகளை வணங்குதல் என்பதும் ஆகாது; நினைத்தற்கும் அரியவான காலங்கள் அனைத்தினுமாய் வந்த கலக்கங்களை முற்றவும் அறுத்தல் என்பதும் நிகழாது; அன்பு செய்கின்ற அடியவர்களது மனமானது இன்று களித்திடுதல் என்பதும் ஆகாது; பெண் அலி ஆண் எனவும், நாம் எனவும் வந்த மாறுபாடுகள் எல்லாம் ஒழிதலென்பதும் நிகழாது; பேர்களையும் அறியவொண்ணாத பற்பல பிறவிகளினின்றுந் தப்புவது என்பதும் நிகழாது; எண்ணற்ற சித்திகள் வந்து என்னை அடைதல் என்பதும் என்பால் நிகழாது. ['இறைவன் எழுந்தருளப் பெற்றால், வேறான விவகாரங்கள் எதுவும் எம்மிடத்து நிகழலாகாது' என்பது கருத்து.]*

பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறு பொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே
மின்னியல் நுண்ணிடை யார்கள் கருத்து வெளிப்படு மாகாதே
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுத்திடு மாகாதே
தன்னடி யாரடி என்தலை மீது தழைப்பன ஆகாதே
தானடி யோம்உட னேயுய வந்து தலைப்படு மாகாதே
இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக இயம்பிடு மாகாதே
என்னைமுன் ஆளுடை ஈசன்என் அத்தன் எழுந்தரு ளப்பெறிலே.

*என்னை முன்னாளிலே ஆட்கொண்டருளிய முதல்வனும், என் அப்பனுமான இறைவன், வந்து எழுந்தருளப் பெற்றால்—*

*பொன்னின் தன்மையோடு விளங்கும் திருமேனிமீது வெண்ணீறு விளங்குதலும் ஆகாது; பெரிய தவசிகளுடைய கைகளானவை குவிந்து மலர்மாரியினைப் பொழிவதென்பதும் ஆகாது; மின்னலின் இயல்பினையுடைய நுண்மையான இடை*

யினையுடைய மாதர்களின் உள்ளக்கருத்து வெளிப்படுத்தல் என்பதும் ஆகாது; வீணை முழங்குதலால் உண்டாகின்ற ஓசையிலே இன்பம் மிகுந்திடுதல் என்பதும் ஆகாது; தன் அடியார்களுடைய பாதங்கள் என் தலையின்மீதாகத் தனழப்பன என்பதும் ஆகாது; அடியோங்கள் இப்பொழுதே உய்யும்பொருட்டாகத் தான் எழுந்தருளித் தோன்றுதல் என்பதும் நிகழாது; அவ்விடத்து இனிதான வாத்திய ஒலிகள் நிறைந்து இனிதாக ஒலித்தலென்பதும் நிகழாது.

சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னியசோதி தொடர்ந்தெழு மாகாதே
பல்லியல் பாய பரப்பற வந்த பராபர மாகாதே
பண்டறி யாதப ரானுப வங்கள் பரந்தெழு மாகாதே
வில்லியல் நன்னுத லார்மயல் இன்று விளைந்திடு மாகாதே
விண்ணவ ரும்அறி யாத விழுப்பொருள் இப்பொரு ளாகாதே
எல்லையி லாதன எண்குண மானவை எய்திடு மாகாதே
இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தரு ளப்பெறிலே. 7

சந்திரசேகரனாகிய மாணிக்கம் போல்பவன் எங்களை ஆண்டருளும் பொருட்டாக எழுந்தருளப் பெற்றால்—

சொல்லுதற்கும் இயலாதபடியாக உண்டாகின்ற தூய மணியோசை சுவைதருதல் என்பதும் ஆகாது; விரைவாக என் உள்ளத்திலே நிலைபெற்ற சோதியானது தொடர்ந்து எழுதலென்பதும் நிகழாது; பல்வகை இயல்புகளாய பரப்பெல்லாம் அறும்படியாக எழுந்தருளின பராபரம் தோன்றுதலும் நிகழாது; பண்டு அறிந்திராத பரம்பொருளின் அநுபவங்கள் விரிந்து மேம்படுதல் என்பதும் நிகழாது; வில்லை நிகர்த்த அழகிய நெற்றியையுடைய மாதரது மயக்கம் இப்போதுபோல உண்டாதலும் ஆகாது; தேவரும் அறியாத மேலான பொருளாகியது இவ்வடிவோடு தோன்றுதலும் நிகழாது; எல்லையற்றனவாகிய இறைவனது எண்குணங்களை அடைந்திடுதலும் நிகழாது! [இவற்றில் சொல்லப்பட்டன எல்லாம் சிவநெறி அநுபவங்கள் ஆகும் என்பார்கள்.]

சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன ஆகாதே
சாதிவி டாத குணங்கள்நம் மோடு சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனு மாயை அடங்கிடு மாகாதே
ஆசைஎ லாம்அடி யாரடி யோம்எனும் அத்தனை யாகாதே
செங்கயல் ஒண்கண்ம டந்தையர் சிந்தை திளைப்பன ஆகாதே
சீரடி யார்கள் சிவானுப வங்கள் தெரிந்திடு மாகாதே

எங்கும் நிறைந்தமு தூறு பரஞ்சுடர் எய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோனெனை ஆள எழுந்தரு ளப்பெறிலே. 8

முடிவறியப்படாத வேதியனாகிய சிவபிரான் என்னை ஆளும்பொருட்டாக எழுந்தருளப் பெற்றால்—

சங்குகள் திரண்டு சத்தித்து எழுகின்ற ஓசையானது மிகுவன என்பதும் ஆகாது: சாதியைப்பற்றி விடாதிருக்கின்ற குணங்கள் நம்மோடு வெறுத்திடுதலும் ஆகாது; அவ்விடத்தில் 'இது நன்று இது நன்று' என்னும் மயக்கம் அடங்கிவிடுதல் என்பதும் நிகழாது; 'எல்லாவகையானும் அடியார்க்கடியோம்' என்னும் விருப்பம் அவ்வளவே என்றலும் கூறவொண்ணாது; சிவந்த கயல்மீனைப்போன்ற ஒட்பமாகிய கண்களையுடைய மாதரது மனம் திளைத்தல் என்பதும் நிகழாது; சிறப்பினையுடைய அடியார்கள் சிவாநுபவங்களைத் தெரிந்திடுதல் என்பதும் நிகழாது; எவ்விடத்தும் நிறைந்து அமுதம் ஊறுகின்ற பரஞ்சோதியானது எமக்குக் கிடைப்பதென்பதும் நிகழாது! [இறைவன் எழுந்தருளப் பெற்றால் பிற விவகாரங்கள் நிகழாவென்பதே இதுவும்].

# 50. ஆனந்த மாலை

## சிவானுபவ விருப்பம்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

[அடிகளால், தில்லைப் பதியிடத்தே அருளிச் செய்யப் பெற்ற பதிகம் இது. சிவானுபத்தை விரும்பியவராக, இறைவனிடம் முறையிடுகின்ற அமைதியினை இச் செய்யுட்கள் கொண்டனவாகும்.]

மின்னே ரனைய பூங்கழல்கள்
அடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு
போற்று நின்றார் அமரரெல்லாம்
கல்நே ரனைய மனக்கடையாய்க்
கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக்
கூடும் வண்ணம் இயம்பாயே. 1

*பெருமானே! மின்னினது அழகினைப்போன்ற நினது மலரடிகளை அடைந்தவர்கள், பெரிதான இவ்வுலக மாயத்தையே வென்றவர்கள்ஆயினர்! பொன்போன்ற அழகிய மலர்களைத் தூவி, நின்னடிகளை வணங்குபவர்களே, தேவர்கள் அனைவரும் ஆவர். கல்லையொத்த மனத்தையுடைய கடைப்பட்டேனாகி, அறிஞராற் கழிக்கப்பட்டு, அவலக் கடலிலே வீழ்ந்த, என்னை யானே ஒப்பவனாகிய யானும், இனிமேல் நின்னை வந்தடைவதற்கான விதத்தை நீயே கூறுவாயாக!*

என்னால் அறியாப் பதம்தந்தாய்
யான தறியா தேகெட்டேன்
உன்னால் ஒன்றுங் குறைவில்லை
உடையாய் அடிமைக் காரென்பேன்
பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொடுங்கூடா
தென்நா யகமே பிற்பட்டிங்
கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே. 2

*என்னாலே அறியப்படாத பெரும்பதத்தினையும் எனக்குத் தந்தனை! யானோ, அதனை அறியாதேபோய்க் கெட்*

டொழிந்தேன். நின்னால் யாதொரு குறையும் எனக்கு ஏற்படவில்லை. உடையவனே! அடியனேனுக்குத் துணை யாவரென்று யான் சொல்லுவேன்? பலநாளும் நின்னைப் பணிந்து துதிக்கின்ற, நின்னுடைய பழைமையான அடிய வர்களோடும் கூடாமல், என் நாயகமே! நானும் பிறப்பட்டு, இவ்வுலகத்தே நோய்களுக்கு விருந்தாகியவனாக இருந்து விட்டேனே! ['இனி, யானும் பிழைப்பதற்கான வகையினை அருளிச் செய்வாயாக' என்பது கருத்து.]

சீல மின்றி நோன்பின்றிச்
செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்
சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி
வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக்
கொடியேன் என்றோ கூடுவதே. 3

நல்லொழுக்கம் என்பதும் இல்லாமல், நோன்புகளைக் கடைப்பிடித்தல் என்பதும் செய்யாமல், அன்புச்செறிவும் இல்லாமல், தோற்பாவையின் கூத்தாட்டைப் போலச் சுழன்றுவிட்டு, அதன்பின் வீழ்ந்து கிடக்கும் என்னைத், தன்பால் விருப்பம் உண்டாக்கித், தன்னை அடைவதற்கான வழியையும் காட்டி, மீளப் பிறந்து வருதலில்லாத உலகத் திற்கு முறையாக ஏறுவதற்கு உதவுமாறு தன் திருக்கோலத் தையும் காட்டி ஆண்டருளின சிவபெருமானைக் கொடியனேன் அடைவதும் எந்நாளிலோ?

கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடிலாதாய் பழிகொண்டாய்
படுவேன் படுவ தெல்லாம்நான்
பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றோ எங்கள் நாயகமே. 4

கெடுதியடைகின்ற தன்மையினனாகிய யான்; எவ்வாறு கெடலாமோ அவ்வாறெல்லாம் கெட்டு வருகின்றேன். கேடற்றவனே! அதனால், நீயே பழிகொண்டனை ஆவாய்! துயரப்படுவதற்கு உரியவனான யான், படவேண்டிய துயரங்கள் எல்லாமும் பட்டுவிட்டால், பிறகு, நீ காப்பதில்

*தான் பயன் என்னவோ? கொடிதான பெரிய நரகத்திலே சென்று அழுந்தாதபடிக்குத் தடுத்தாட் கொள்ளும் குருமணியே! நடுவு நிலைமையினை உடையையாய் நில்லாது, நீயே என்னைக் கைவிட்டுச் சென்றால், எங்கள் நாயகமே! அது நினக்கேதான் அழகாகுமோ?*

தாயாய் முலையைத் தருவானே
தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ
நம்பி யினித்தான் நல்குதியே
தாயே யென்றுன் தாளடைந்தேன்
தயா நீ என்பா லில்லையே
நாயேன் அடிமை உடனாக
ஆண்டாய் நான்தான் வேண்டாவோ. 5

*தாயாகிவந்து முலைப்பாலினை ஊட்டுபவனே! நீ வந்து அங்ஙனம் ஊட்டாது கைவிட்டனையானால், யான் சவலையாகிக் கழிந்து போவேனோ? அண்ணலே! இனியேனும் எனக்கு ஞானப்பாலினைத் தருவாயாக! தாயே என்று கொண்டு, யான், நின் திருவடிகளையே புகலாக அடைந்தேன். நீயோ, என்பால் தயவின்றி இருக்கின்றாய்! நாயினேனை நினது அடிமையாகுமாறு நீ எழுந்தருளி வந்தவுடனேயே ஆண்டுகொண்டனையே! இப்போது, நான்தான் நினக்கு வேண்டாவோ? [சவலை-தாய்ப்பாலற்று மெலிந்த குழந்தை.]*

கோவே யருள வேண்டாவோ
கொடியேன் கெடவே அமையுமே
ஆவா வென்று விடிலென்னை
அஞ்சேல் என்பார் ஆரோதான்
சாவா ரெல்லாம் என்னளவோ
தக்க வா றன் றென்னாரோ
தேவே தில்லை நடமாடி
திகைத்தேன் இனித்தான் தேற்றாயே. 6

*இறைவனே! நீ எனக்கும் அருள்செய்ய வேண்டாவோ? கொடியவனை யான் கெட்டுப் போதலேதான் பொருத்தமோ? ஐயோவென்று நீயே இரங்காவிட்டால், எனக்கும் 'அஞ்சாதே' என்று அபயந் தருபவர்தாம் யாவரோ? பயனின்றி இறப்பவர் எல்லாம் என்னோடுஞ் சரியோ? பயன் பெறாது யான் இறந்தால், 'அது தக்க முறையன்று' என்று நின்னன்பர்கள் சொல்லமாட்டார்களோ? தேவனே! தில்லைப் பதியிலே கூத்து இயற்றுபவனே! யான் மயங்கினேன்! இனியாயினும், என்னைத் தெளிவிப்பாயாக!*

நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞால மெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்ச தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவிநாசி
அப்பா பாண்டி வெள்ளமே
தெரிய அரிய பரஞ்சோதி
செய்வ தொன்றும் அறியேனே. 7

*நரிகளை, வாகனமாகத் தாங்கும் குதிரைகளாக ஆக்கி உலகமெல்லாம் சஞ்சரிக்கச் செய்து, பெரியதான பாண்டியனது மதுரைநகரம் முழுவதையுமே பித்தேற்றின திருப்பெருந்துறைக்கு உரியவனே! பெறுதற்கரிய மெய்ப்பொருளே! அவிநாசிப் பதியில் வீற்றிருக்கும் அப்பனே! பாண்டியனுன அருள் வெள்ளமே! தெரிவதற்கு அரிதாகிய பரஞ்சோதியே! வீடடைதற்குச் செய்வதற்கு உரியதுதான் இதுவென்பதனை யான் யாதும் அறியேனே! ['அதனை எனக்கு அறிவித்தருளி, என்னையும் கடைத்தேற்றி அருள்வாயாக' என்பது கருத்து.]*

# 51. அச்சோப் பதிகம்

## அநுபவவழி அறியாமை

(கலி விருத்தம்)

[மணிவாசக அடிகளால் தில்லையில் அருளிச் செய்யப் பெற்ற பதிகம் இதுவாகும். இறையனுபவத்தே திளைத்த அடிகள், பிறர் பெறுவதற்கரிதான அதனைத் தாம் பெற்ற பேற்றினை நினைந்து அதிசயித்து உரைத்தது இது. 'அச்சோ' என்ற வியப்புச்சொல்லால் முடிவதுபற்றி, 'அச்சோப் பதிகம்' என்றனர்.]

**முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்**
**பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்**
**சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட**
**அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.** 1

*முத்தி அடைவதற்கான சிவநெறியினை அறியாத மூர்க்கர்களோடுஞ் சேர்ந்து, அவரது நெறியினையே மேற்கொண்டு, உய்திபெறவும் முயல்கின்ற எனக்குப், பக்தி நெறியாகிய அதனை அறிவித்து, என் பழவினைகள் முற்றவும் அற்றொழியும் வண்ணமாக, என் மன மாசினையும் அறும்படி செய்து, என்னைச் சிவமயமாக்கி, ஆண்டருளின அப்பன் அவன்! அவன், எனக்கு அருளியவாறு, தாமும் பெறக் கூடியவர்கள் தாம் யாவரோ? இதுவும் ஓர் அதிசயமே!*

**நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்**
**சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்**
**குறியொன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தையெனக்கு**
**அறியும்வண்ணம அருளியவா றார்பெறுவார் அச்சோவே.** 2

*நன்னெறியல்லாத வழியினையே நன்னெறியாக நினைகின்ற என்னைச், சிறுநெறிகளைச் சென்று சேராமற் படிக்கும், திருவருள் நெறியிடத்தேயே சென்று சேரும் படிக்குப் பெயர் வடிவாகிய குறிகள் எதுவும் இல்லாத வனுகிய கூத்தப்பெருமான், அருளினான். அவன், தன் திருவருட்கூத்தினை யானும் அறியுமாறு அருளிய இந்த வகையாக, அதனை வேறு யார்தாம் பெறக்கூடியவர்? இதுவும் ஓர் அதிசயமே!*

பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 3

*பொய்யாகியன எல்லாவற்றையுமே மெய்யாயினவென்று கருதி, நெருங்கிய தனங்களை உடையவரான மாதர்களின் போகத்திலேயே மயங்கியிருக்கக் கடவேன் யான். என்னையும், அங்ஙனம் கிடந்து வீணே சாவாமற்படிக்குக் காத்தருளினான். பெண்ணை இடப்பாகத்தே கொண்ட பெருமானான அவன், என் அப்பன், தன் திருவடிகளை அடையும் வண்ணமும் எனக்கு அருளினான். இங்ஙனம், அவனருளைப் பெறுபவர் யார்? இதுவும் ஓர் அதிசயமே!*

மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீ றணிவித்துத் தூய்நெறியே சேரும் வண்ணம்
அண்ணல்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 4

*மண்ணுலகிலே பிறந்து இளைப்புற்றுச், செத்து விழுதற்கே உரியவனாக யானும் இருந்தேன். நினைப்பதற்கும் அரிதான தன் பேரன்பினை எனக்கு அருளிச் செய்தவனாக, அவன், என்னையும் வந்து அடிமை கொண்டான். என்னையும் தன் திருவெண்ணீற்றுப் பொடியினை அணிவித்துத் தூய நெறியினை அடையும்படியாகவும் அருளினான். அண்ணலாகிய அவன் எனக்குச் செய்ததுபோல, வேறு யார்தான் பெறக் கூடியவர்? இதுவும் ஓர் அதிசயமே!*

பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேன்உன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேன்நான் உடையானே அடியேனை வருகஎன்று
அஞ்சேல்என் றருளியவா றார்பெறுவார் அச்சோவே. 5

*பஞ்சினைப்போலும் பாதங்களையுடைய இளம் பெண்களின் கடைக்கண் பார்வையினாலே தாக்குண்டு, துன்பப் பட்டு, நெஞ்சிலே உண்டாகிய துயரம் மிகுதியாக, நின்றவன் யான். யானும் நின் அருளினைப் பெற்றேன். அதனால், பிழைத்தேன். என்னை அடிமையாக உடையவனே! என்னை 'வருக'வென்றும், 'அஞ்சேல்' என்றும் நீ அருள்செய்தவாறு பெறுபவர்கள்தாம் யார்? இதுவும் ஓர் அதிசயமே!*

வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழல் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு பரிசறஎன் துரிசுமறுத்து
அந்தமெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 6

*வெந்துவிழுகின்ற இயல்பினையுடைய உடம்பின் சார்பாகிய பிறப்பினை, மெய்யானதென்று எண்ணித், தீவினைகளையே பெருக்கிக்கொண்டு, பூங்கொத்துக்களை யணிந்த கூந்தலையும், சங்கினாலான வளையல்களையும் உடையவரான பெண்டிரது, குவிந்த முலைகளின் மேலாக விருப்புற்றுக் கிடந்தேன். அத்தகைய என்னையும், என் பாசத்தினை அறுத்து, ஆட்கொண்டு, என் குணம் அறுமாறு என் குற்றத்தையும் ஒழித்து, எனக்கு முடிவான பேற்றினையும் அருளிச் செய்தவன், சிவபெருமான். அவன் எனக்கு அருளியதுபோலப் பெறுபவர்தாம் யார்? இதுவும் ஓர் அதிசயமே!*

**தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்**
**பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி**
**உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை**
**ஐயனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 7**

*பெண்டிரது மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனாகிய என்னைப், பையவே கொண்டு வந்து, பாசம் என்கின்ற தாழினை உருவிவிட்டு, யான் உய்வதற்கான நெறியினையும் காண்பித்து, ஓங்காரமாகிய பிரணவத்தின் உட்பொருளினை யும், எனக்கு ஐயன் அன்று அருளிச்செய்தனன். இப்படிப் பெறக் கூடியவர்தாம் யார்? இதுவும் ஓர் அதிசயமே!*

**சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியில் தடுமாறிக்**
**காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை**
**மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்**
**ஆதியெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 8**

*இறப்பும் பிறப்பும் என்கின்ற பெரிய சுழியிலே அகப் பட்டுத் தடுமாற்றமடைந்து, காமம் மிகுந்து, மாதரது கலவியிலே விருப்புற்றுக் கிடக்கின்ற என்னையும், மாதினை ஒரு பாகமாக உடையவனான பெருமான், தன் திருவடிகளை வந்து அடையும்படியாக அருளினான். ஆதியாகிய அவன் எனக்கு அருளியபடியாக வேறு யார்தான் பெறுவார்கள்? இதுவும் ஓர் அதிசயமே!*

**செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை**
**மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்**
**நம்மையும்ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த**
**அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. 9**

*யாவற்றுக்கும் ஆதியாகிய பெருமான், செம்மையாகிய நன்னெறியின் சிறப்பினை அறியாத மூடர்களோடும் கூடித்*

திரிகின்ற இயல்பினனான என்னையும், எனது மூவகைப்பட்ட பாசங்களையும் அறுமாறு செய்து தனக்கு அடியவனாக்கி ஆண்டருளினான். ஒன்றுக்கும் பற்றாத நம்மையும், ஒரு பொருளாக மதித்து, 'நாயினைச் சிவிகைமேலே ஏற்று வித்தாற்போலச்' சிறப்புஞ் செய்தான். தாய்போல் வானாகிய அவன், எனக்கு அருளிய இந்தப்படியே அவனருளினைப் பெறுபவர்தாம் பிறர் யாரோ? இதுவும் ஓர் அதிசயமே! [செம்மை நலம்-செம்மையாகிய நலம்; அது சிவநெறி நிற்பதாகிய சிறந்த ஒழுக்கம். சிதடர்-அறிவற்றவர். அம்மை-தாயான தயாபரன்; அழகும் ஆம்.]

செத்திடமும் பிறந்திடமு மினிச்சாவா திருந்திடமும்
அத்தனை யுமறியாதார் அறியுமறி வெவ்வறிவோ
ஒத்தநில மொத்தபொருள் ஒருபொருளாம் பெரும்பயனை
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. 10

முற்பட்ட காலங்கள் பலவற்றினும் பிறவி எடுத்துத் தாம் வாழ்ந்திருந்த இடங்களைப் பற்றியும், வாழ்வின் இறுதியிலே சாவினை அடைந்து அந்தந்த உயிர்க்கூடுகளைத் தாம் கழித்ததான இடங்களைப்பற்றியும், இனிச் சாவென்பதும் நமக்கில்லை என்னும்படியாக இறைவனடிகளை முற்றவும் சார்ந்து தாம் சிவபுரத்தேயாக இருக்கும் அந்த முத்தியிடத்தைப் பற்றியும், ஆகிய இவை அனைத்தைப்பற்றியும் அறிகின்ற ஓர் அறிவும் அற்றிருப்பவரான சிவஞானிகளாலேயே முற்றவும் அறியப்படுகின்ற அறிவுருவனாக விளங்குபவன், சிவபெருமான்! 'எல்லா நிலமும் ஒப்புடையனவே, எல்லாப் பொருளும் ஒரு தன்மையனவே' என்ற உண்மையினை அறிவுறுத்தி, அனைத்தினும் ஒப்பற்ற பொருளாகிய பெரும் பயனாகவும் அமைகின்ற தன்னையே, அப்பனான அப்பெருமான், எனக்கும் எளிவந்து அந்நாளிலே அருளினான். அந்தக் கருணையினை, வேறு யார்தாம் இங்ஙனம் பெறக்கூடியவர்? அதுவும் ஓர் அதிசயமே? ['தம் அறிவனைத்தும் இழந்து நிற்கின்றதான சிவஞானக் கலப்பிலே திளைக்கின்ற நிலையினாலேயே இறையருள் வந்து கிட்டுவதாகும்' என்பது கருத்து.]

படியதனிற் கிடந்திந்தப் பசுபாசந் தவிர்ந்துவிடும்
குடிமையிலே திரிந்தடியேன் கும்பியிலே விழாவண்ணம்
நெடியவனு நான்முகனு நீர்கான்றுங் காணவொண்ணா
அடிகளெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. 11

உலகமாகிய இதனிடத்தே கிடந்து, இதற்கு உரித்தாக உள்ள பசுத் தன்மையினையும் பாசப்பிணிப்பினையும் நீக்கிக்

கொண்டு அடியவர்களின் கூட்டத்துடனேயே கலந்து இருந்து, ஆனால், உண்மையன்பு அற்றவனாக இருந்த யானும் நரகத் துயரிலே வீழ்ந்து துயரடையாதபடிக்கு, நெடியவனான திருமாலும் நான்முகனான பிரமனும் காண்பதற்குரிய தன்மையினை மேற்கொண்டவராக முயற்சி செய்தும் அவரால் காண வொண்ணாதவனாக நின்ற பெருமான், தன் அடியிணைகளை எனக்குத் தானே எழுந்தருளி வந்து காட்டியருளினான். அத்தகைய பெரும் பேற்றினை எவர்தாம் இவ்வுலகிலே பெறக் கூடியவர்? அதுவும் ஓர் அதிசயமே!

பாதியெனு மிரவுறங்கிப் பகலெமக்கே யிரைதேடி
வேதனையி லகப்பட்டு வெந்துவிழக் கடவேனைச்
சாதிகுலம் பிறப்பறுத்துச் சகமறிய வெனையாண்ட
ஆதியெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. 12

ஒரு நாளிலே ஒரு பாதி என்று கூறப்படுகின்ற இரவினிடத்தே செயலற்று யான் உறங்கிக் கிடப்பேன். அடுத்த பாதியான பகற்பொழுதிலேயோ வயிற்றுக்கு இரையினைத் தேடியவனாக யான் அலைவேன். இவ்வாறு, நித்தமும் உடலோடு கூடி வாழ்வதான அந்த வேதனையிலேயே அகப்பட்டுக்கொண்டு, முடிவிலே முற்றிக் கனியாது வெம்பி விழுகின்றதொரு காயினைப்போலச் செத்து விழுவதற்கும் உரியவனாகவே யானும் இருந்தேன். சாதி, குலம், பிறப்பு என்கின்ற உடற்கூட்டினை ஒட்டிவரும் பேதங்களை எல்லாம், அவை என்னைப் பற்றுமறப்படிக்கு அறுத்தருளி, உலகத்தார் அறியுமாறு, தானே எழுந்தருளி என்னையும் எம் பெருமான் அந்நாளிலே ஆண்டருளினான். அனைத்திற்கும் ஆதியான அப் பெருமான், என்னையும் வந்து ஆண்டருளின அந்தப் பேற்றினை, இனியும் என்போல யார்தாம் பெறுவார்களோ? அதுவும் ஓர் அதிசயமே! ['உடற்பற்றிலே மூழ்கி அறிவழிந்து கிடந்தவனாகிய என்னையும், தன் பெருங்கருணையினாலே எழுந்தருளிவந்து இறைவன் ஆண்டருளினான்' என்பது கருத்து.]

திருவாசகமும்

புலியூர்க்கேசிகன் தெளிவுரையும்

முற்றுப் பெற்றன.

## மிகைப் பாடல்கள்

திருத்தோணேக்கம் :

பிணக்கற்று அவாவற்றுப் பேதைமையும் பிணியுமற்று
உணக்கிப் பசையறுத் தான்உயிர் ஒன்றிநின்ற
குணக்குன்று வந்தென்னை ஆண்டதுமே என்னுடைய
கணக்கற் றவாபாடித் தோணேக்கம் ஆடாமோ. 1

திருக்கழுக்குன்றப் பதிகம் :

விடையனே விடமுண்டு வேதம் விளைந்த
விண்ணவர் வேந்தனே
இடையிலே உனக்கன்பு செய்து பெருந்துறைக்
கன்று இருந்திலேன்
சடையனே சைவ நாதனே உனைச்சாரும்
தொண்டைச் சார்கிலாக்
கடைய னேனையும் ஆட்கொள்வான் வந்து
காட்டினாய் கழுக் குன்றிலே. 2

நரியெலாம் தெரியா வணம் இந்த
நாடெலாம் அறியும்படி
பரிகளாப் படைத்துநீ பரிவாக
வந்துமெய்க் காட்டிடும்
புரிகொள் நூலணி மார்பனே புலியூர்
இலங்கிய புண்ணியா
கரிய மாலயன் தேடநீ வந்து
காட்டினாய் கழுக் குன்றிலே. 3

---

* இவையும், அச்சோப் பதிகத்து இறுதி மூன்று செய்யுட்களும் சில பிரதிகளுள் மிகையாகக் காணப்படுபவன.

# திருப்பதிகங்களின் பெயரும் தொகையும்

சிவபுரா ணங்கீர்த்தி திருவண்டப் பகுதி
திருப்போற்றி யுடனகவல் திருச்சதக நாரும்
நவநீத்தல் விண்ணப்ப மைம்பதாம் பாவை
நலந்திகழு மம்மானை நல்லபொற் சுண்ணம்
புவனமகிழ் கோத்தும்பி திருவார்தெள் ளேணம்
பொருவரிய திருச்சாழல் பூவல்லி யுந்தி
யிவையிருப தாமீரே ழாகுந்தோ ணோக்கம் [விவையே.
எழிற்பொன்னூ சலுமேயொன் பானென்ப 1

திருவன்னை குயிற்பத்துத் திருத்தசாங்கந்
திருப்பள்ளி யொடுகோயின் மூத்ததிருப் பதிகம்
அருட்கோயிற் றிருப்பதிகஞ் செத்திலடைக் கலமே
ஆசையதி சயம்புணர்ச்சி வாழாப்பத் தருட்பத்து
ஒருபதென வுரைசெய்வர் கழுக்குன்ற மேழாம்
உயர்பிரார்த் தனைகள்பதி னொன்றாகுங் காண்பத்து
இருமைபெறுங் குழைத்தபத் தியிருன்னி யச்ச
மெழிற்பாண்டி பிடித்தபத்தொ டேசறவு பத்தே. 2

திருப்புலம்பன் மூன்றுகுலா வற்புதமே சென்னி
திருவார்த்தை பத்தெண்ணப் பதிகமொரு வாறும்
பரற்குரிய யாத்திரைப்பத் தொருபதாம் மற்றைப்
படையெழுச்சி யிரண்டாகும் பதினொன்றும் வெண்பா
வருட்டவழும் பண்டாய நான்மறையே ழாகும்
வலியபடை யாட்சியெட் டானந்த மேழாம்
அருட்பெறுமச் சோவொன்ப தைம்பதொன்றும் பதிகம்
அகவலொடு செய்யுளறு நூற்றைம்பத் தெட்டே. 3

# செய்யுள் முதற்குறிப்பு

[எண் — பக்க எண்]